ஐயனை அகந்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கண்ணல் உணர்ந்தான்

# கம்ப ராமாயணம்

பால காண்டம் :: அயோத்தியா காண்டம்



பதிப்பாசிரியர் :

டி. கே. சிதம்பரநாத முதலியார்,

பி. ஏ., பி. எல்.

புதுமைப் பதிப்பகம்

3, கோவிந்தப்ப நாயக்கன் தெரு

சென்னை

1942

கம்பர் இதயத்தில்

உல்லாசமாய்த் திரிந்து களிக்கும்

கலை வள்ளல்

**வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார்**

**(அட்வொகேட்)**

அவர்களுக்கு இந்நூலை

உரிமையாக்குகிறேன்

- டி. கே. சி.

# முகவுரை

தமிழர்களாகிய நாம் பாக்கியசாலிகள்.

ஆயிரம் வருஷத்துக்கு முன்னுள்ள மகாகவி ஒருவரின் இதயத்தை அறியக் கொடுத்து வைத்திருக்கிறது நமக்கு. பாஷை, அனேகமாய் இன்று வழங்கும் பாஷையே. தாளஇயல்கள் நாம் பாடி அனுபவிக்கக் கூடியவைகளே. காட்சிகளும், தமிழ்நாட்டிலுள்ளவைகளே. எல்லாவற்றிலும் முக்கியமாக, பாத்திரங்கள் எல்லாம் நம்மவர்களே.

நாம் பாக்கிய சாலிகள்

ஆயிரம் வருஷத்துக்கு முன் இருந்த ஆங்கில நூல் எதையும் தற்காலத்து ஆங்கிலேயர் வாசிக்க முடியாது. அப்படியேதான் இத்தாலியர், லத்தீன் பாஷையைத் தாய் பாஷையாகக் கருதி வாசிக்க முடியாது. கிரேக்கர்களுக்கும் இதே சங்கடந்தான். வடமொழியைப்பற்றிச் சொல்லவே வேண்டாம்.

வழக் கொழியாத கன்னித் தமிழ்

மேலே சொல்லிய பூர்வமான பாஷைகளி லுள்ள நூல்களைச் சாமானிய மக்கள் அறிய முடியாது. அந்த பாஷைகளைப் பல வருஷங்களாக, இருபது முப்பது வருஷங்களாகவே, கஷ்டப்பட்டுக் கற்றிருந்தாலொழிய, அனுபவிக்க முடியாது. சாமானியப் பயிற்சியுள்ளவர்கள் அனுபவிக்கிற தெல்லாம், ஒரு புத்தகத்தைத் தலைகீழாகவைத்து வாசித்து அனுபவிக்கிற கணக்குத்தான்!

ஆயிரம் வருஷத்துக்கு முன் உள்ள கம்பர் கையாண்ட பாஷையோ, இப்பொழுதும் வழக்கி லிருக்கிறது. அது நம்முடைய பாக்கியமல்லவா?

## 2

கம்பர் ஆயிரம் வருஷத்துக்குமுன் இருந்தவர் தான். தற்காலத்திலுள்ள போக்குவரத்து வசதிகள் அவருக்குக் கிடையாது. ஆனாலும், அவர் கன்னியா குமரியிலிருந்து இமயமலை வரைக்கும் சஞ்சாரம் செய்திருக்கிறார்.

**கம்பரது உள்ளம் தமிழகத்ததே**

தற்போது திருநெல்வேலி ஜில்லாவிலே பொதி கைச் சாரலில் இருக்கிற பாவநாசம் என்ற ஸ்தலத் தில் அருவிகள் பல விழுகிற அழகும், அந்த அருவித் தண்ணீரின் இனிமையும், நேரில் அனுபவித்தவர் களுக்கே தெரியமுடியும். கம்பர் அப்படி நேரில்

அனுபவித்தவர். ராமன் லக்ஷ்மணன் சீதை மூவரும், அகத்திய முனிவரைப் பார்க்கப் பாவநாசத்திற்கு வருகிறார்கள்.

பிழியும் தேனில்
பிறங்(கு)அரு வித்திரள்
பொழியும் சாரல்
விரைவினில் போயினர்.

- அகத்தியப் படலம்

கம்பர் தெற்கே போனது இப்படி.

இனி, கம்பர் இமயமலைச்சாரலுக்குப் போயிருக்கிறார் என்பது எப்படித் தெரிகிறது ?

சூர்ப்பனகையின் காதல்வெம்மையைச் சொல்லும்போது, மென்மையான (ஐய) உறைபனியை எடுத்து மார்பில் போட்டாளாம் ; வெம்மையைத் தணிப்பதற்காகத்தான். ஆனால், அது, தீப்பட்ட பாறையில் வைத்த வெண்ணெய்போல, உருகி ஓடி விட்டதாம்.

கைக ளால்த்,தன்
கதித்துள கொங்கைமேல்
ஐய தண்பனி
அள்ளினள் அப்பினள் ;

மொய்கொள் தீயிடை
வெந்து முருங்கிய

வெய்ய பாறையில்
வெண்ணெய் நிகர்க்குமால் !

- சூர்ப்பனகைப் படலம்

பாவநாசத்துக்கும் இமயமலைச் சாரலுக்கும் போயிருந்தால்த்தான் மேலே சொன்ன வார்த்தைகள் வரக்கூடும். அதாவது, நேர் அனுபவத்தி லிருந்து வந்த வார்த்தைகள் அவை.

எவ்வளவோ தூரம் போய், எப்பேர்ப்பட்ட நாடெல்லாமோ பார்த்திருந்தபோதிலும், அவைகளை யெல்லாம், தாம் பிறந்து வளர்ந்ததும் தம் உணர்ச்சியோடு ஒட்டியதுமான சோழநாட்டில் நின்று கொண்டுதான் பார்க்கிறார்.

பரதன் அயோத்தியைவிட்டு, சித்திரகூட பர்வதத்திலிருந்த ராமனைத் தேடிப் புறப்படுகிறான். விசாலமான நன்செய் நிலங்களைக் (கழனிகளைக்) கடந்து செல்லுகிறான். இந்த இடத்தில், கம்பர், தம்மைச் சுற்றியுள்ள தமிழரைப் பார்த்தே பேசுகிறார் என்பது தெரியவரும்.

காவிரி நா(டு)அன்ன

கழனி நா(டு)ஒரீஇ -

—குகப் படலம் 1.

யாருக்கும் தம்முடைய சொந்த நாட்டின் முகவிலாசத்தைத்தான் பார்த்து அனுபவிக்க முடியும். கம்பரும் நாமும் அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்தான். இதர தேசங்களின் பண்பை அனுபவிக்கிறதெல்லாம், ஏதோ, வானலோகம், பிரும்ம லோகம், நாகலோகம் இவைகளை அனுபவிக்கிற கணக்குத்தான்.

3

பாத்திரங்கள் தமிழரே

ராவணன் என்றும், அனுமார் என்றும், தாடகை என்றும், ஜடாயு என்றும் பாத்திரங்களை வனைந்திருக்கிறார் கம்பர். எடுத்து விளக்கும் இந்தப் பாத்திரங்களையும் இதய பாவங்களையும், எத்தனை எத்தனையோ சந்தர்ப்பங்களில் நேர்நேராகவே கம்பர் பார்த்திருக்கிறார். அவைகளை மாத்திரமா? சத்தியத்தைவிட்டு ஒரு அங்குலம் அகல முடியாத தசரதர்களைப் பார்த்திருக்கிறார்; கிரீடம் என்றால், ஏதோ, மண் சுமக்கும் கூடைதான் என்று எடுத்து அப்புறம் வைக்கிற ராமர்களையும் பார்த்திருக்கிறார். உடுத்தின சேலையோடு அப்படியே காட்டுக்குப் புறப்பட நின்ற சீதைகளையும் பார்த்திருக்கிறார். இத்தனை பேரும், கம்பர் கண்ட தமிழர்களே. கம்பர் இவர்களை இனங் காட்டுகிறார்; இனங் கண்டு கொள்ள நமக்கும் முடிகிறது, இந்த இருபதாவது நூற்றாண்டிலுங்கூட.

மொய்கொள் தீயிடை
வெந்து முருங்கிய

வெய்ய பாறையில்
வெண்ணெய் நிகர்க்குமால் !

- சூர்ப்பனகைப் படலம்

பாவநாசத்துக்கும் இமயமலைச் சாரலுக்கும் போயிருந்தால்த்தான் மேலே சொன்ன வார்த்தைகள் வரக்கூடும். அதாவது, நேர் அனுபவத்தி லிருந்து வந்த வார்த்தைகள் அவை.

எவ்வளவோ தூரம் போய், எப்பேர்ப்பட்ட நாடெல்லாமோ பார்த்திருந்தபோதிலும், அவை களை யெல்லாம், தாம் பிறந்து வளர்ந்ததும் தம் உணர்ச்சியோடு ஒட்டியதுமான சோழநாட்டில் நின்று கொண்டுதான் பார்க்கிறார்.

பரதன் அயோத்தியைவிட்டு, சித்திரகூட பர்வ தத்திலிருந்த ராமனைத் தேடிப் புறப்படுகிறான். விசாலமான நன்செய் நிலங்களைக் (கழனிகளைக்) கடந்து செல்லுகிறான். இந்த இடத்தில், கம்பர், தம்மைச் சுற்றியுள்ள தமிழரைப் பார்த்தே பேசு கிறார் என்பது தெரியவரும்.

காவிரி நா(டு)அன்ன
கழனி நா(டு)ஒரீஇ -

—குகப் படலம் 1.

யாருக்கும் தம்முடைய சொந்த நாட்டின் முகவிலாசத்தைத்தான் பார்த்து அனுபவிக்க முடியும். கம்பரும் நாமும் அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்தான். இதர தேசங்களின் பண்பை அனுபவிக்கிறதெல்லாம், ஏதோ, வானலோகம், பிரும்மலோகம், நாகலோகம் இவைகளை அனுபவிக்கிற கணக்குத்தான்.

## 3

ராவணன் என்றும், அனுமார் என்றும், தாடகை என்றும், ஜடாயு என்றும் பாத்திரங்களை வனைந்திருக்கிறார் கம்பர். எடுத்து விளக்கும் இந்தப் பாத்திரங்களையும் இதய பாவங்களையும், எத்தனை எத்தனையோ சந்தர்ப்பங்களில் நேர்நேராகவே கம்பர் பார்த்திருக்கிறார். அவைகளை மாத்திரமா? சத்தியத்தைவிட்டு ஒரு அங்குலம் அகல முடியாத தசரதர்களைப் பார்த்திருக்கிறார்; கிரீடம் என்றால், ஏதோ, மண் சுமக்கும் கூடைதான் என்று எடுத்து அப்புறம் வைக்கிற ராமர்களையும் பார்த்திருக்கிறார். உடுத்தின சேலையோடு அப்படியே காட்டுக்குப் புறப்பட நின்ற சீதைகளையும் பார்த்திருக்கிறார். இத்தனை பேரும், கம்பர் கண்ட தமிழர்களே. கம்பர் இவர்களை இனங் காட்டுகிறார்; இனங் கண்டு கொள்ள நமக்கும் முடிகிறது, இந்த இருபதாவது நூற்றாண்டிலுங்கூட.

பாத்திரங்கள் தமிழரே

ராமாயணக் கதை, பூர்வமாய் எங்கிருந்தது என்று சொல்ல முடியாது. ஒரு தேசத்திலிருந்தே வந்தது என்றும் சொல்ல முடியாது. பிள்ளை இல்லாமல் தவித்தான் சக்கரவர்த்தி என்ற விஷயம் எதோ ஒரு தேசத்திலிருந்து வந்திருக்கலாம்; வேள்வி செய்து பிள்ளையைப் பெற்றான் என்பது வேறொரு தேசத்திலிருந்து வந்திருக்கலாம்; கூனிவந்து இளவரசைக் கலைத்த காரியம், ராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போன காரியம், வாலி சுக்கிரீவர்கள் போராடிய காரியம், எல்லாம் எங்கெங்கேயோ இருந்து வந்திருக்கலாம்.

**கம்பரது ராமாயணம் புதிய கதையே**

ஆனால், இப்படித் துண்டுபட்ட அம்சங்களையெல்லாம் ஒன்றுசேர்த்து அங்கமாக்கிய பெருமை வால்மீகி முனிவருக்கே உரியது. ஒரு பெரிய இதிகாசத்தைச் செய்து உலகத்துக்குத் தந்தார் வால்மீகி.

இரண்டாயிர மூவாயிர வருஷங்களுக்கு முன்னாலேயே வால்மீகிராமாயணம் பிறந்துவிட்டது. எத்தனை எத்தனையோ ஆசிரியர்கள், கதையையும், பாத்திரங்களையும், நெடுகிலும் அனுபவித்து, அவரவர்களுக்குத் தோன்றியவாறாகவும் அவ்வக் காலத்துக்கு ஏற்றவாறாகவும், கதைக்குப் புதிய புதிய உருவங்கள் கொடுத்திருக்கிறார்கள்.

கம்பரும், ராமாயணத்தின் கதை அம்சங் களிலும் பாத்திரங்களிலும் மிக ஈடுபட்டவர்; பக்தியோடு ஈடுபட்டவர். பாத்திரங்களையும், அவைகளின் செயல்களையும், தமிழ் நாட்டில் அனுபவித்த நேர்நேரான அனுபவங்களையும், ஒன்றாய்ச் சேர்த்துப் புதிய கட்டுக்கோப்பு, புதிய பாத்திரங்கள், புதிய உணர்ச்சிகள் எல்லாவற்றை யும் கம்பரது இதயம் அற்புதமாய் நிர்மாணிக்க முன் வந்தது. இதயத்திலுண்டான சிருஷ்டியானதால், ஒவ்வொரு அம்சத்திலுமே உயிர்நாடி பேசிக்கொண் டிருப்பதைப் பார்க்கலாம். வார்த்தைகளில், அவை கள் போடுகிற தாளத்தில் (ரிதும்), செய்யுள்க் கோப்பில் எல்லாம், உயிர் நாடி பேசும்.

## 4

*கவி எதற்கு?*

தற்காலத்தவர்கள், 'செய்யுள்! எதற்கு?' என்று கேட்கலாம். 'கம்ப ராமாயணக் கதையை வசனத்திலேயே படித்தால் போகி றது!' என்று சொல்லலாம். 'ஆங் கிலத்தில் மொழிபெயர்த்து வாசித்தால் போகிறது' என்றுகூடச் சொல்லலாம்.

இப்படியெல்லாம் சொல்லுவதற்குக் காரணம், கவி என்பது இன்னது என்று தெரிந்துகொள்ளா தது தான்.

ஆங்கில ஆசிரியர் ஒருவரைச் சமீபத்தில் கவியைப்பற்றிப் பேசும்படியாக அமெரிக்கர் அழைத்தார்கள். அவரும் அமெரிக்காவுக்குப் போனார். பிரசங்கத்தை ஆரம்பித்தார். 'உலகத்தில், கவியை ஏன் எழுதுகிறார்கள்? என்று கேள்வி கேட்கலாம். அதற்குப் பதில் இதுதான்: வசனம் என்பது அவ்வளவு இலேசான காரியம்!' என்றார். *

இதிலிருந்து, கவி எவ்வளவோ ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியதென்று தெரிகிறதல்லவா? ஆங்கிலக் கவியின் அமைப்பு ஒருவிதமாகத்தான் இருக்கும். அதைப்பற்றியே அவ்வளவு பாராட்டிப் பேசுகிறார் ஆசிரியர்.

தமிழ்க் கவியோ, இதரபாஷைக் கவிகள் எதோடும் சேராதபடி, தனித்த முறையிலிருக்கிறது.†

தமிழ்க் கவி

நமக்குத் தெரிந்தமட்டில், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய தமிழைச் சேர்ந்த பாஷைகளில் மட்டுமே கவிகள்

*ஆசிரியர் கெரார்ட்.

† 'ஒரு காரியம் நான் சொல்லவேண்டும். அது வெறும் படாடோப வின்னியாசம் அல்ல: கவி உருவத்தின் துள்ளிபத்தையும் பதனிட்ட நயத்தையும் பார்த்தால், தமிழ்ப் பாஷை, கிரேக்க பாஷையைவிட, நிச்சயமாய் மேலானதுதான்'—டாக்டர் வின்ஸ்லோ தொகுத்த தமிழ் அகராதியின் முகவுரை.

தமிழ்ப் பாவினங்களை யொட்டி யிருக்கின்றன. அவைகளும் சமீப காலத்திலுண்டானவையே.

தமிழ்க் கவிக்கு உரிய அங்கங்கள், முக்கியமாக சீர் என்றும், மோனையென்றும், எதுகையென்றும், உண்டு.

இவைகளையெல்லாம் கவிக்கு அலங்காரம் என்று கருதலாகாது; உண்மையில் அவை அலங்காரங்கள் அல்ல, அங்கங்களே.

அபிநயக் கலையில், கண்ணும் இதழும் கையும் காலும் எப்படி அங்கமாயிருந்து உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றனவோ, அப்படியே, கவியிலுள்ள சீர், மோனை, எதுகை ஆகிய எல்லாம் அங்கங்களாக இருந்து உணர்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றன. தமிழ்க் கவியென்றால், மேலே சொன்ன மாதிரி உணர்ச்சிகளை எடுத்துக் காட்ட வேண்டும். அப்படி உணர்ச்சிகளைக் காட்டாதபடி, ஏதோ அலங்காரத்துக்காக எதுகை, மோனை, சீர்களை உபயோகப்படுத்தினால், அது கவி அல்ல: அதனிடத்தில் உணர்ச்சியையோ உண்மையையோ காண முடியாது; **பா**வமில்லை, ரஸமில்லை என்று சொல்லிவிட நேரும்; ஏதோ, சொல்லை வைத்து விளையாடிய வெறும் செய்யுளாகத்தான் இருக்கும். அவைகளை அனுபவிக்க முடியாது. அவைகளை வாசிப்பதெல்லாம் ஆயாசந்தான், தொந்தரவுதான்.

ஆயிரக்கணக்கான வருஷமாகவே, மேலே சொன்ன கவிப் பண்புகளை நம்மவர்கள் ஆராய்ந்தறிந்து அனுபவித்திருக்கிறார்கள்; பாடியுமிருக்கிறார்கள்.

நந்திக் கலம்பகம் பாடிய ஆசிரியர்,

'தொல்லை நூல்வரம்பு
முழுது கண்டான் நந்தி'

என்று நந்திவர்மனைப்பற்றி (கி. பி. 9-வது நூற்றாண்டில்) சொல்லும்போது, நந்திவர்மனோடு ஆசிரியரும் உண்மையான தமிழ்ப் பண்பு வாய்ந்த தொல்லை நூல்களை எவ்வளவாகக் கற்றார், சுவைத்தார், கையாண்டார் என்பது நன்றாய் விளங்குகிறது.

## 5

**கம்பரது கவி**

கம்பருடைய கவிகளுக்குத் தனியான ஒரு சுவை யுண்டு. செய்யுளினங்கள் பூர்வ மானவை தான். ஆனால், இதய **பா**வத்தை உட்கொண்ட செய்யுள்கள் அடியெடுத்து வைக்கும்போது, தனியான கதிநயங்களைக் காண்கிறோம். அவைகளின் **பா**வமும் வேகமும், எங்கேயோ இருந்து வந்த மாதிரி, புத்தம் புதியவையாய் இருக்கும். ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு தனியான ரஸம். கவிக்கு ஏதோ நவ ரஸம் என்கிறார்கள்; ஆனால், கம்பருடைய கவிகளைப் பார்க்கும்போது, ஆயிரக்கணக்கான ரஸங்கள் உண்டென்று சொல்லவேண்டியிருக்கிறது.

இப்படித் தனித்த ரஸம் வாய்ந்த, உயிர்த்தத்துவம் வாய்ந்த கவிகளாய் இருப்பதாலேயே, கம்பருடைய கவிகளை இனங்கண்டுகொள்ள முடிகிறது.

## 6

செருகு கவிகள்

கம்ப ராமாயணத்தில் காண்கிற மாதிரி வேறு எந்த நூலிலும் காணமுடியாத வஸ்து ஒன்று: அது தான் செருகு கவி. கம்பராமாயண புஸ்தகம் செருகு கவி மயம் என்று சொன்னால் குற்றமில்லை. எப்படிச் செருகு கவிகள் வந்து சேர்ந்தன என்பதைப் பார்க்கலாம்.

கம்பர் பாடிய கவிகள் அபூர்வமான பாவங் கொண்டவையாய் இருந்ததனால், படிப்பவர்களுடைய இதயத்தைப் பற்றிக்கொண்டன. சதாபாடிக் கொண்டே இருக்கும்படித் தூண்டின. அதிலிருந்து ஒரு மயக்கம் உண்டாகி, போலிச் செய்யுள்களையும் இயற்றும்படி சிலரைத் தூண்டிவிட்டன. இப்படி இயற்றிய போலிச் செய்யுள்களைப் புஸ்தகத்திலே கட்டங் கட்டமாகப் பார்க்கலாம்.

ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்:

குடிகளைக் காப்பது பெரிய தர்மம் என்றே தசரதன் எண்ணுகிறான்; மிக்க சிரத்தையோடும் ஆர்வத்தோடும் தான் காத்துவந்ததாகவே சொல்லுகிறான். ஆனாலும், தனக்குக் கொஞ்சம் ஓய்வு

வேண்டுமென்றும், ராமன் அந்த உயரிய தர்மத்தை நடத்த வேண்டுமென்றும் சொல்லுகிறான். ராஜ்ய பரிபாலனத்தை இகழ்வது என்று ஏற்பட்டுவிட்டால், ராமனை ஏற்றுக்கொள்ளும்படி பரிவுடன் சொல்லுகிற வார்த்தை பொருந்துமா? பொருந்தவே பொருந்தாது. போலிக்கவி ஒன்று வந்து, தசரதனுடைய இதமான, நளினமான பேச்சை எப்படிக் கெடுக்கிறதென்று பாருங்கள் :

கச்சையங் கடகரிக்
    கழுத்தின் கண்ணுறப்
பிச்சமும் கவிகையும்
    பெய்யும் இன்னிழல்
நிச்சயம் அன்றெனில்
    நெடிது நாள்உண்ட
எச்சிலை நுகருவ(து)
    இன்பம் ஆகுமோ ?

- மந்திரப் படலம்

இது மாதிரிப் போலிக் கவிகளை இயற்றிய ஆசாமி, இந்தக் கட்டத்தில் ஏழோடு விட்டுவிட்டார். எழுபது எழுநூறாகக் கயிறுவிட்டிருக்கலாம் : ஏதோ கருணையினால் அப்படிச் செய்யவில்லை !

செருகு கவி வந்து விழுவதற்கு இன்னொரு காரணம். அதுவும் விசித்திரமானதே. யோசித்துப் பார்க்கும்போது, எல்லோருக்கும் தெரிந்தகதையைக் கம்பர் ஏன்தான் கையாண்டாரோ என்று வருந்த

வேண்டியிருக்கிறது. ராமாயணக் கதையை, வால்மீகி ஒரு விதத்தில் நடத்தினர். வேறு பலரும் வேறு வேறு விதமாக நடத்தினர்கள். இந்தக் கதைகளை யெல்லாம் கேட்டு வந்த ஆசாமிகள் கம்பராமாயணத்தை வாசிக்க நேர்ந்தது. கம்பர் தம்முடைய பாத்திரங்களுக்கும், லட்சியங்களுக்கும் தக்கவாருக, ஆங்காங்குக் கதையையும், போக்கையும் மாற்றியிருக்கிருர். அப்படி மாற்றியதன் காரணமாகவே, பாத்திரங்களுக்குத் தனியான வேகமும், கட்டங்களுக்குத் தனியான தெளிவும் ஏற்படுகின்றன. இதையெல்லாம் கண்டாரா அந்த ஆசாமி ? தம்முடைய ஏதோ கோணலான, குறுகிய அளவு கோலைக்கொண்டுவந்து, கம்பர் போட்ட பாதையில் வைத்தார். பொருந்தவில்லை. அப்படியே, கட்டத்தை மாற்றி, எதுகை மோனைகளோடு, செய்யுள்களாகக் கொட்டி நிரப்பிவிட்டார்.

மிதிலைக் காட்சிப் படலத்தில், ராமன், லக்ஷ்மணன், விசுவாமித்திரர் மூவரும், ஜனகனது அரண்மனைக்குப் போகிருர்கள். அவர்களைச் சதானந்த முனிவர் வரவேற்கிருர். அவர்களும் உட்காருகிருர்கள். முதலில் ராமனைப்பற்றி விசுவாமித்திரர் புகழ்ந்து பேசி விடுகிருர். அப்பாவி சதானந்தர், பேச்சுக்கு விஷயம் அகப்படாமல், திண்டாடுகிருர். ராமனைப் பார்த்தே, விசுவாமித்திரரைப்பற்றி (இத்தனை நாளும் உடன்வந்த விசுவாமித்திரரைப் பற்றி !) ஒரு புராணமே பாடித் தீர்த்துவிடுகிருர்.

மிதிலைக் காட்சி 91 முதல் 137 வரையுள்ள புராணங் தான் அது (பழைய பதிப்புகளின்படி). இந்த அருமையான கைங்கரியத்தைச் செய்தவர், கம்ப ருடைய உண்மையான பாட்டுகள் அடங்கிய எத்தனை ஓலைகளைக் கிழித்தெறிந்தாரோ சொல்ல முடியாது. நமக்கு வருத்தமெல்லாம், இப்படித் தொலைந்துபோன கவிகளைப் பற்றித்தான். போலிக் கவிகளையோ, சுண்டிப் பார்த்து, மட்டம் என்று தள்ளி விடலாமே!

செருகு கவிகள் வந்து புகுவதற்கு, இன்னொரு காரணம்: கம்பரது காவியத்தை ஆயிரம் வருஷத் துக்கு முன் ஓலைச்சுவடிகளில் எழுதிவைத்தார்கள். சுவடிகளை வைத்த இடம், மண் தளம் மண்சுவர் கூரை மோடு இவைகளாலாகிய சாமானியக் கட்டி டங்கள்தான். மழை காலத்தில் மேலே இருந்து ஒழுகும்; கீழேயிருந்து ஈரமும் கறையானும் ஏறும். இது காரணமாக, எத்தனையோ ஏடுகள் கெட்டுப் போயிருக்கவேண்டும்.

மேலும், சுவடிக்காக அவ்வப்போது சேர்த்த ஓலைகளில்ச் சில,பதனுக்குவராத குருத்தோலைகளாக வும் முற்றிய ஓலைகளாகவும் இருந்திருக்கக்கூடும். அந்த ஓலைகளெல்லாம் மட்கி உதிர்ந்து போயிருக்க லாம். இத்தகைய ஓலைகளின் காரணமாகவும், கறை யான் ஈரம் இவைகளின் காரணமாகவும், எத்தனை எத்தனையோ கவிகளும், படலங்களுமே ஒழிந்து போய்விட்டன. கம்பராமாயணத்தைப் பாடிப்பாடி

அதில் ஈடுபட்ட சிலர், தொலைந்து போனவைகளுக்குப் பதிலாக, செய்யுள்களை ஏதோ எழுதிச் சேர்த்தார்கள். இப்படிச் சேர்த்ததில், மனப்பாடமாயிருந்த சில செய்யுள்களை அங்கொன்று இங்கொன்ருக அப்படியே வைத்தும் இருக்கிருர்கள்.

எல்லாம் சேர்ந்து, எப்படியோ, கம்பரது உண்மையான பாடல்களைக் குறைத்துவிட்டன.

இந்த விஷயங்களை யெல்லாம் பிற்காலத்தவர் ஒருவர் கண்டு, ஒரு கதை கற்பித்தார். அது தமிழ் நாடெங்கும் வழங்குகிற கதை.

கம்பர் ஏதோ ஒதுங்கலான ஒரு குக்கிராமத்தில் ஒரு பிரபுவோடு தங்கியிருந்தார். மாலையில், ஒரு புலவர், கோயிலில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்யப் போவதாகவும் அதற்குப் போய்வரலாமென்றும் கம்பரிடம் சொன்னுர். கம்பரும் இசைந்தார். இருவருமாகப் போனுர்கள். புலவர் வெகு தடபுடலாய்ப் பிரசங்கம் செய்தார். அனேக பாடல்களை அபாரமாக அனுபவித்துப் பாடினுர். பிரசங்கம் முடிந்ததும், புலவருக்குக் கம்பரை அறிமுகப்படுத்தினுர் பிரபு. புலவர், ரொம்ப ரொம்ப சந்தோஷப்பட்டவராய்க் கம்பரைப் பார்த்து, 'அடாடா, தங்கள் கவிகள் அனைத்தும் அற்புதமாய் அமைந்திருக்கின்றன. அன்னை கலைமகளின் அருள் கொழித்த அருமைக் கவிகள் தான் அவை' என்று பாராட்டினுர். அதற்குக் கம்பர், 'தாங்கள் பாடிய

பாடல்களில் ஒன்றிரண்டு என்னுடையதாகவும் இருக்கின்றன. ரொம்ப சந்தோஷம்' என்று பதில் சொன்னார்!

இதிலிருந்து, செருகு கவிகள் எவ்வளவோ கம்ப ராமாயண ஏட்டுக்குள் முன்னமேயே புகுந்து விட்டன என்று தெரிகிறதல்லவா?

கவியுலகத்தில் கம்பர் பறக்கிறார். எத்தனையோ இறக்கைகள் அவருக்கு. அநாயாசமாக உலகம் எங்குமே சுற்றுவார். சிறு விஷயம் ஆனாலும் சரி, தத்துவங்கள் பற்றிய உயர்ந்த விஷயமானாலும் சரி, எல்லாவற்றுக்குள்ளும், ஒரு தனியான வேகத்தோடு புகுந்து ஒரு சுற்றுச் சுற்றி வெளியே வருவார். அப்படி வருவதைப்பார்த்தால், அற்புதமாகவேயிருக்கும். செய்யுள்களிலிருந்து உண்மையும் உணர்ச்சியும் வரும்போது, எங்கும் காணாத பரிமளம் வெளிவரும. இதெல்லாம், கம்பருக்குச் சாமானியமாகக் கை வருவது. மற்றவர்களுக்கு, அப்படிச் சாமானியமாகக் கை வருவது அல்ல.

செருகு கவிகளை உதவிய ஆசாமிகளுக்கு, இதெல்லாம் முடியவேமுடியாது. செருகல்களையும்சேர்த்துக் கொண்டு கம்பராமாயணத்தை வாசிப்பது என்றால், வானத்தில் வட்டமிடும் கருடனை, பாராங்கற்களைச் சேர்த்துக் கட்டிப் பறக்கவிட்ட கணக்குத்தான்.

கம்பனையும் அவரது கவிதா சக்தியையும் நேர் முகமாகப் பார்க்க வேண்டுமானால், செருகு கவி

களை யெல்லாம் அறவே களையவேண்டும். செருகு கவிகளை உடன்கலந்து, நூலையோ கட்டத்தையோ பார்ப்போமானால், அப்படியும் இப்படியுமாகக் கோடும் பட்டையும் கிழித்த சித்திரத்தைப் பார்க்கும் லக்ஷணம் தான்.

இந்தப் புத்தகத்தில் (பாலகாண்டம்-அயோத்தியா காண்டம்: புதுமைப் பதிப்பக வெளியீடு) அடங்கிய பாடல்களெல்லாம் கம்பரது உண்மையான பாடல்கள். ஏதோ கம்பர் பாடல்களிலிருந்து பொறுக்கின **கோவையென்று கொள்ளலாகாது.** இவை ஒழிந்த மற்றப் பாடல்களெல்லாம், செருகு கவிகள் என்றும், கட்டத்துக்கும் பாத்திரத்துக்கும் ஒவ்வாத கவிகள் என்றும், உயிர் நாடி பேசாத கவிகள் என்றும் கருதியே ஒதுக்கியிருக்கிறது.

ஒதுக்கப்பட்ட பாடல்களில் ஏதோ சிலவற்றில் நயமுள்ள கருத்துக்கள் இருக்கலாம். ஒன்றிரண்டு அடிகள் வாய்ப்பாய்க்கூட இருக்கலாம். ஆனால், கூர்ந்து பார்த்தால், உண்மையும் ஆர்வமுமில்லாமல் வெறும் செய்யுள் சிலம்பந்தான் அவை என்று தெரிந்துவிடும்.

ஒரு உதாரணம்.

காதலருக்குக் காதலிகளின் பேச்செல்லாம் அபூர்வ ரஸம் படைத்ததாய்த் தோன்றும் என்பது உண்மைதான். இதைத் தமிழ்க் கவிஞர்கள் ரொம்ப

ரொம்ப அனுபவித்திருக்கிறார்கள். அருமையான பாடல் மூலமாக வெளியிட்டுமிருக்கிறார்கள்.

கலிங்கத்துப் பரணியில் ஒரு செய்யுள் :

தமிழ் நாட்டின் எல்லைப்புறத்தில் உள்ளது குருநாடு. அங்கேயுள்ள பாஷை தமிழோடு கொஞ் சம் தெலுங்கும் கலந்த பாஷை. பெண்களின் இனிய பேச்சில் இரண்டு பாஷையுமே கலந்து சுகமாய் வருகிறதாம். அப்படி வருகிற பேச்சை, கலிங்கத்துப் பரணி ஆசிரியர் (நல்ல இலக்கணப் புலவர்தான்) ரொம்ப ரொம்ப அனுபவித்திருக் கிறார். இந்த அனுபவத்தை ஒரு துறையில் வைத் தார் : - 'கலிங்கதேசத்தில் நடந்த போரில்ச் சோழ னுக்குப் பெரிய வெற்றி. அந்த வெற்றியைக் கொண்டாடி நல்ல பாடல்களும் பாடியிருக்கிறது. பெண்களே, நீங்கள் பாடலாம் ; கதவைத் திறந்து வாருங்கள் !' என்று விளம்பரப்படுத்தும் துறை யில்த்தான்.

மழலைத்திரு மொழியில்ச்,சில
வடுகும்சில தமிழும்,
குழறித்தரு குருநாடியர் !
குறுகிக்கடை திறமின்.

இந்தச் செய்யுள், மகளிர் பேச்சிலுள்ள இனி மையை அழகாய் வெளியிடுகிறது. ஒவ்வொரு வார்த்தையிலும் எதுகை மோனைகளிலும் ஆசிரிய ரது அனுபவம் வெளியாகிறது.

இந்தப் பாடலோடு ஒட்டி, பூக்கோய் படலத்திலுள்ள (வழக்கத்திலுள்ள ராமாயண புத்தகம், ஏடு) ஒரு செய்யுளைப் பார்க்கலாம்.

செய்யிற் கொள்ளும்
தெள்ளமு தச்செஞ் சிலையொன்று
கையிற் கொள்ளும்
காமனும் நாணும் கவினோர்,தம்
மையற் பேதை
மாதர்மி ழற்றும் மழலைச்சொல்
தெய்வப் பாடல்
சொற்கலை என்னத் தெரிவாரும்.

இதிலும், பெண்களது இனிய பேச்சை அனுபவிப்பதுதான் விஷயம். எப்படி அனுபவிக்கிறார்கள்? தெய்வப் பாடலில் உள்ள சொல்லின் நயங்களைப் புலவர்கள் அனுபவித்த மாதிரி, என்று சொல்லுகிறது செய்யுள். இது ஒரு நல்ல உவமானந்தான். ஆனால், பெண்கள் பேச்சிலுள்ள ரஸம் அதனால் ஏற்படக்கூடிய மயக்கம், செய்யுளின் உருவத்தில் வெளியாகவில்லை. முக்கியமாய் வெளியாவது: கரும்பு நன்செயிலிருந்து வந்தது; அதை வில்லாக வளைத்துக் காமனவன் கையில் வைத்திருந்தான்; அந்தக் காமனைப்போல் அழகு வாய்ந்தவர்களாய் இருந்தார்கள் இளைஞர்கள். இத்தகைய அழகு வாய்ந்த இளைஞர்கள், யாப்பியலைக் கொண்டு ஒரு அருமையான கவியை அலசி எடுத்த

மாதிரி, அந்தப் பெண்களின் பேச்சை அலசி எடுத்தார்கள் - இவைகள்தான் முக்கியமாய் வெளியாவது. கவியை வாசிக்கிறவர் மனசில், மேலே சொன்ன விஷயங்கள் எல்லாம் வந்து, சப்பணம் போட்டு உட்கார்ந்துகொள்ளுகின்றன ; மாதர் மிழற்றும் மழலைச் சொல்லுக்கு இடமில்லை. ஆனால், கலிங்கத்துப் பரணியாசிரியர் பாடிய கவியிலோ, வடுகும் சில தமிழும் குழறித் தருவது ஒரேபடியாய்க் கேட்கிறது நம் காதுக்கு. உண்மைக் கவிக்கும் சாதாரண செய்யுளுக்கும் இதுதான் வித்தியாசம்.

பூக்கொய் படலத்துச் செய்யுளில் ஏதோ ஓசை இருக்கிறது. சமத்காரம் இருக்கிறது. ஒரு உண்மை கூட இருக்கிறது. இதயத்தில் தட்டும்படியான பாவமும் உருவமும் இல்லை.

இப்போது வழங்குகிற கம்பராமாயண புத்தகங்களும் ஏடுகளும், கம்பரது நீண்டு பரந்த விசுவரூபத்தைக் காண்பதற்குக் கருவிகளல்ல. ரூபத்தைச் சின்னபின்னப்படுத்தியே காட்டுகின்றன. மேலே சொல்லியபடி கம்பர்து கவிகள் எத்தனை எத்தனையோ ஒழிந்துபோய்விட்டன. கம்பர் பாடிய அத்தனை பாடல்களும் நமக்கு மறுபடி கிட்டும் என்று சொல்ல ஏதுவில்லை. அப்படிப் பூரணமாயுள்ள ஒரு ஏடு கிடைத்து விட்டால், யாருக்குமில்லாத யோகம் தமிழருக்குக் கிட்டியது என்று சொல்லலாம். கலைமகள் கருணைதான் அது !

## 7

பாடலைப் பாடவேண்டுமே ஒழிய, வசனத்தைப் போல வாசிக்கக் கூடாது. நாட்டியத்துக்கும் சாதாரண நடைக்கும் எவ்வளவு வித்தியாசமோ அவ்வளவு வித்தியாசம் பாடலுக்கும் வசனத்துக்கும் இருக்கிறது.

**பாடலைப் பாடும் விதம்**

நடனஜதி வரிசைகளைப் பார்த்து 'இதென்ன நடை, ஒழுங்காகவே இல்லை, காலும் கையும் எங்கேயோ போகிறது. முன்னுக்கும் பின்னுக்கும் போகிறது, என்ன போக்கு! வலப்புறமும் இடப் புறமும் தாவுகிறது. இதெல்லாம் நடையா? வெறும் கோணல், அவலக்ஷணம்!' என்று, நடனத்தைப் பற்றி யாதொரு விவரமும் தெரியாத ஒருவன் சொல்லலாம். அது போலத்தான், அற்புதமான கவியை வசனமாக வாசித்துவிட்டு, 'இதெல்லாம் வெறுங் கோணல், கவியாவது ஒன்ருவது' என்று, கவிப்பண்பைத் தெரியாத ஒருவர் சொல்லலாம். அப்படிச் சொல்லுகிறவர்களையும் பார்த்திருக் கிறேம்.

இப்படிச் சொல்லுகிறவர்கள் ஆங்கிலப்பழக்கம் உடையவர்கள்தான் என்று சொன்னல் குற்ற மில்லை.

தமிழ்நாட்டிலுள்ள ஆங்கிலப் பள்ளிக்கூடங் களில், ஆங்கிலக் கவிகளையெல்லாம் வசனமாகவே வாசிக்கிருர்கள். அந்தக் கவிகளுக்குள்ளே, தாளம்

இருக்கிறது, இசைப் பண்பிருக்கிறது என்பதை ஞாபகத்துக்குக் கொண்டு வருவதே இல்லை. கார்லைல் என்ற ஆங்கிலப் பேராசிரியர், நூறு வருஷத்துக்கு முன்பு, இது விஷயமாக மிச்சம் ஏதும் வையாமல், ஒரே போடாய்ப் போட்டிருக்கிறார்.

'மனிதர்களுக்குள் வீரன் தனிப்பட்டு விளங்குகிறான்: அப்படியேதான், பேச்சுக்குள்த் தனிப்பட்டு விளங்குவது பாடல்! - பூர்வ காலத்துக் கவிகள் எல்லாம் பாடல்களே. பாடப் படாதது கவியே அல்ல: வசனத்தை ஏதோ இப்படியும் அப்படியுமாகத் திருக்கி மடக்கிச் சடசட என்ற சத்தம் ஒன்றை யுண்டாக்கும் காரியந்தான்; இலக்கணத்துக்கும் வாசிக்கிறவனுக்கும் அதுகாரணமாக ஏற்படுகிற புண்பாடு கொஞ்ச நஞ்சம் அல்ல.'*

கார்லைல் பேராசிரியர் எவ்வளவோ சொல்லியும், பிற்காலத்து ஆங்கில ஆசிரியர்கள், அனேகமாய் எல்லோரும், கவிகளைப் பாடவே மாட்டோம் என்று சாதித்துவிட்டார்கள். வசனத்திலேயே கவியெழுதலாம் என்றுகூடச் சொல்லி விட்டார்கள்! பூவும் மணமும் வர்ணமும் எதற்கு! கடைந்து வைத்த கீரையே மேலானது என்று சொல்லத் தலைப்பட்டு விட்டார்கள். இதிலிருந்து விளைந்தது

*ஹீரோ ஓர்ஷிப் (வீர வழிபாடு): கவிஞர்: 20-வது யாரா (1840).

என்ன? கவிகளைக் கண்டால் ஆங்கிலேயருக்கு வெறுப்புத்தான்; பயமும் கூடத்தான்.

ஆங்கிலக் கவி சம்பந்தமாக ஆங்கிலேயர் பாடு இது. ஆங்கில சங்கீதத்துக்கும் நமக்கும் ஸ்நானப் பிராப்தி கூட இல்லாதபோது, ஆங்கிலக் கவியை அனுபவிப்பதில் நமக்கு எவ்வளவு கஷ்டம் என்பதை எடுத்துச்சொல்லவா வேண்டும்?

ஏதோ புண்ணியவசத்தால், தமிழ்ப் புலவர்கள் தமிழ்க் கவிகளைப் பாடியே வந்தார்கள். ஆங்கிலப் பழக்கமில்லாத புலவர்கள் எல்லோரும் பாடல்களைக் கற்பிக்கும்போது, பாடியே கற்பித்து வந்தார்கள். புராணிகர்களும், கதை பண்ணுகிறவர்களும், பாடல்களைச் சொல்லும்போது, பாடியே விளக்கினார்கள். அப்படிப் பாடியதால், அவர்களுக்கு யாதொரு குறைவும் ஏற்பட்டுவிடவில்லை.

ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் ஓதுங்க நேர்ந்த காரணத்தால், ராகங்கள் வராது, பாடவராது என்றெல்லாம் சொல்லலாம். இதெல்லாம் உத்தியோக தோரணை காரணமாக வருகிற பேச்சுத்தான். ஆங்கிலப் பழக்கத்தினால் அனேகமாய் ராகம் வரவில்லை தான்; ராகத்தின் இனமும் தெரியவில்லைதான். ஆனால், தமிழ்ப் பாடல்களைச் சவுக்கத்தில்ப் பாடுவதற்கான ஒரு வகையான ராகம் தமிழர் ஒவ்வொருவருக்குமே இருக்கிறது. யுனிவெர்ஸிடி பட்டம் பெற்றவர்களுக்குங்கூட இருக்கிறது. தமிழ்ப்

பாடல்களுடைய அமைப்பையும் அழகையும் அனுபவிக்க வேண்டுமானல், பாடவே வேண்டும். எந்த ராகத்தைக் கொண்டாவது பாடவேண்டும். இந்த விஷயத்தில் ஆங்கில ஹோதா, உத்தியோக ஹோதா முதலியவை வந்து குறுக்கிட்டு நிற்கக் கூடாது.

ஒரு விஷயத்தை இங்கே ஞாபகமூட்டலாம். ஆங்கிலக் கல்விமுறை வருவதற்கு முன்பு, தமிழ் நாட்டில், எங்குமே தான், பலரும், தமிழ் கற்று வந்தார்கள். கற்றுவந்தார்கள் என்ருல், தமிழ்ப் பாடல்களைச் சீரோடும் பாவத்தோடும் ஒட்டிப் பாடுவதற்கே கற்ருர்கள்; பிறருக்கு விளக்கிச் சொல்லவும் கற்ருர்கள். மற்ற வேண்டாத விஷயங்களைக் கற்கவில்லை. ஆங்கிலப் பழக்கம் ஒன்று வந்த பின்பு தான், மேலே சொன்ன காரியங்கள் ஒன்றும் வேண்டாம், பரீக்ஷையில், கடுதாசியில், பேனவைக் கொண்டு பதவுரை எழுதினல் போதும்; கால வரையறை சம்பந்தமாக ஆசிரியரை மேலும் கீழுமாகப் புரட்டியெடுத்தால் போதும் என்றெல்லாம் ஏற்பட நேர்ந்தது.

அந்தக் காலத்தில், புராணிகர் யாராவது நம்முடைய ஊருக்கு வந்தால், பத்து இருபது பேர் கூடி, திருவிளையாடற் புராணத்தை எடுத்துச் சொல்லச் சொல்லுவார்கள்; புத்தகத்தையும் அவர் முன் கொண்டுவந்துவைப்பார்கள். பக்கத்திலுள்ள இளைஞன் யாரையாவது பார்த்து, ஏதாவது ஒரு

படலத்தை வாசிக்கச் சொல்லுவார் புராணிகர். புராணிகர் பக்கத்தில் வந்து உட்கார்ந்து, இளைஞன் பாடலை வாசிப்பான். ஆங்கிலம் மாத்திரியல்ல; தமிழாகவே, இசையோடு வாசிப்பான். புராணிகர் பொருளை விளக்குவார்; வந்தவர்களும் அனுபவிப்பார்கள்.

தற்கால முறைப்படித் தமிழைக் கற்ருல், புராணத்திலுள்ள பாடலை வாசிக்கமுடியுமா, பாடமுடியுமா? அப்படிச் செய்வதற்கு, ஒருவிதமான பயிற்சியும் கிடையாதுதானே?

தமிழ்ப் பாடலைப் பாடக்கேட்டுப் பழக்கமில்லாததால், ஆங்கிலம் கற்ற நம்மவருக்கு, பாடல் என்ருலே வெறுப்பாய்ப் போய்விடுகிறது. எவ்வளவாகவோ அனுபவிக்கவேண்டிய தமிழ்க் கவிகள் எல்லாம் அனுபவத்துக்கு வராமல் வீணுகப் போய்விட்டன. மிக்க வருத்தத்துக்கு உரியது இது.

தமிழ்க் கவிகளைப் பாடுவது லகுவான காரியமே. அதற்காக யாப்பியலோ, காரிகையோ, ஒன்றையும் கற்கவேண்டாம்.

**தமிழ்க் கவியின் தனிப் பண்பு**

தமிழ்ப் பாடல்களெல்லாம் நடனத்துக்கும் தாளத்துக்கும் இசைக்குமாக ஆதியில் ஆக்கப்பட்டன. அடி என்கிற வார்த்தையானது, நடனத்திலிருந்தே செய்யுள் பிறந்தது என்பதைக் காட்டும். சீர் என்பது, தாளத்தைக் காட்டும். ஆகவே, நடனமும், தாளமும்

எந்தத் தமிழ்ச் செய்யுளுக்குப் பின்னும் இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுவது அவசியம்.*

8

இந்தப் புத்தகத்தில், கம்பர் பாடிய பாடல்களால் ஆகிய பாலகாண்டமும், அயோத்தியா காண்டமும் அடங்கியிருக்கிறது. எத்தனையோ பாடல்கள் தொலைந்து விட்டன தான். தொலைந்ததைப்பற்றி நாம் கவலைப் பட்டுப் பிரயோசனமில்லை. புத்தகத்தில் அடங்கிய பாடல்களில் ஏதோ சிலவற்றைக் கம்பரது முத்திரையில்லை யென்ற காரணத்தால் ஒதுக்க நேர்ந்தாலும் குற்றமில்லை. ஆனல், கவித்துவமில்லாத, ரஸமில்லாத, செருகுகவிகளைச் சேர்த்தல் கூடவேகூடாது. அப்படி இளக்காரம் கொடுத்துச் சேர்ப்போமானல், காவியத்தின் கதிகெட்டுவிடும். அதைவிட, கம்பரது கவிதா சக்தியின் அற்புதமான வேகமும், அழகும் கெட்டுவிடும். பாலில்த் தண்ணீரை விட்டால், பாலும் அல்ல, தண்ணீரும் அல்லதானே?

**பாலில்த் தண்ணீரைக் கொட்டக் கூடாது**

பாலகாண்டம் 169 பாடல், அயோத்தியா காண்டம் 553 பாடல், ஆகமொத்தம் 722 பாடல்களாகின்றன. இவைகளோடு, வேறு செய்யுள்களைச் சேர்க்கிறதென்றால், தண்ணீரையோ வேறு

*குறிப்பு: செய்யுளின் உறுப்புக்களை முதல் அனுபந்தத்தில் பார்க்கலாம்.

வேண்டாத வஸ்துவையோ நல்ல பாலில்க் கொட்ட வில்லையா என்று நன்றாய் யோசித்துப் பார்க்க வேண்டும். அல்லாத பட்சம், கம்பருக்கு இதுவரை ஏற்பட்டுள்ள அநீதியை உறுதிப்படுத்துகிறோம் என்றுதான் ஏற்படும். கம்பரைப் பற்றிப் புகழ்கிற தெல்லாம் விருதாவான விஷயம் என்று சிலர் சொல்லுகிறார்கள்; அவர்கள் வார்த்தைக்கு வலி ஏற்பட்டுவிடும். ஆகையால், கம்பரிடம் அபிமான முள்ள நண்பர்கள் இது விஷயத்தில் வேண்டிய ஜாக்கிரதையுடன் இருப்பார்கள் என்று நம்பு கிறோம்.

செருகு கவிகளாகவுள்ள பாடல்களில்ச் சில அனுபவிக்கக் கூடியவையாய் இருக்கலாம்; உயர்ந்த பொருளுடையனவாய் இருக்கலாம்; கவி உருவம் கூட அமைந்தனவாக இருக்கலாம். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் அவை, கம்பரது காவிய லக்ஷணத்துக்கு ஒத்தவையாய் இல்லை; கட்டம், பாத்திரம் இவைகளுக்கும் ஒத்தவையாய் இல்லை, என்று தான் சொல்லுகிறோம்.

பாடல்கள் மாற்று உரைத்துப் பார்த்தவை

சென்ற ஏழு வருஷங்களாக, திருநெல்வேலி வட்டத் தொட்டி, மாம்பலம், கோகலே ஹால் முதலிய இடங்களில், கம்ப ராமா யணத்தை வாசிக்கும்போது, இந்தப் புத்தகத்தில் கண்டபடி செருகு கவி களை ஒதுக்கியே வாசித்து வந்தேன். நண்பர்கள் பலர் ஒழுங்காகக் கேட்டு வந்தார்கள். ஒதுக்கிய செய்யுள்களைக் கவனித்தும்

குறித்தும் வந்தார்கள். ஒதுக்கியது அவசியம் என்றும் அவர்களுக்குப் பட்டது. ஒதுக்கிய காரணத்தினுலேயே கம்பரது கவிதா உருவம் துலாம்பரமாயிற்று என்றும் அபிப்பிராயப்பட்டார்கள்.

எல்லாவற்றிலும் முக்கியமான விஷயம் ஒன்று.

**கவி உருவம்**

கம்பருடைய கவிகளைக் கற்க முன் வரும்போது, விஷயம் எவ்வளவோ உயர்ந்ததாய் இருக்கும்; அருமையாய் இருக்கும். அவைகளை அனுபவிக்கவேண்டியதுதான். 'கம்பர் கல்வியில் பெரியவர்' அல்லவா? ஆனுலும், விஷயத்தைவிட, அந்த விஷயத்தை எடுத்துச்சொல்லும் முறைதான் முக்கியமானது. சொல்லும் முறை என்ருல், செய்யுளில் உண்டாகும் **பா**வ உருவந்தான். விஷயத்திலுள்ள உணர்ச்சி விம்மியே செய்யுளுக்கு **பா**வ உருவம் கொடுக்கிறது. அப்படிக் கொடுத்து வந்த செய்யுளே கவி.

சீதை, ராமனைக் கண்டதுமுதல், அவனது அழகில் ஒரேபடியாய் ஈடுபட்டு, அதன் காரணமாக, ராமனது இருண்ட முடி, சந்திர வதனம், கைகள், தாள்கள், புன்னகை, எல்லாம் மனசில் நிற்கின்றன. இது உண்மைதான். இதைவிடப் பெரிய உண்மை, அவனுடைய கம்பீரமான நடையானது, சீதையின் மனக்கண்முன் சதா நிற்பதுதான். இந்த அரிய உண்மையை நன்ருய் அனுபவிக்க வேண்டும். வார்த்தை, எதுகை, மோனை, தாளம் (ரிதும்) இவைகளால் இந்த உண்மை **பா**வ உருவம் பெறுகிறது என்பதைத்தான் அதிகமாக அனுபவிக்கவேண்டும். **பா**வ உருவம் எப்படி வருகிறதென்று பாருங்கள்.

சீதை சொல்லிக் கொள்ளுகிறாள் :

படர்ந்(து),ஒளி பரந்(து),உயிர்
பருகும் ஆகமும்,
தடம்தரு தாமரைத்
தாளு மேஅல ;
கடம்தரு மாமதக்
களிநல் யானைபோல்
நடந்தது கிடந்த(து)என்
உள்ளம் நண்ணியே.

—மிதிலைக்காட்சிப் படலம்-கீ

ராமனுடைய நடையின் அழகு, சீதையின் மனசை விட்டுப்போகவில்லை என்ற உண்மை இந்தக் கவியில் ஒரு அதிசயமான உருவத்தை அடைகிறது. தாமரை வித்துக்குள் இருக்கும் ஒரு உண்மை (ஆத்திரம் அல்லது சக்தி) தாமரை மலராக அற்புதமாய் மலர்வதுபோலத்தான். தாமரை வித்திலுள்ள உண்மை தாமரை மலராக உருவெடுக்கிறது. இது ஒரு சிருஷ்டி அற்புதம். கம்பர் கவிகளும் சிருஷ்டி அற்புதங்களே. ஏன், உலகத்திலுள்ள கவிகள் எல்லாமே, அதாவது, உண்மையான கவிகள் எல்லாமே, சிருஷ்டி அற்புதங்கள்தான்.

இதையெல்லாம் கருதியே, கவியென்றால் மிக மிக அரிய வஸ்துவென்றும், கவிஞர் ஆயிரம் வருஷத்துக்கு ஒரு தடவை உலகத்தில் வந்து பிறக்கிறார் என்றும், நிபுணர்கள் சொல்லி

யிருக்கிறார்கள். அப்படிப் பிறக்கிற வர்க்கத்தைச் சேர்ந்தவர் கம்பர்.*

## 9

கம்பரது சரித்திரக் குறிப்புகள்

கம்பர் சம்பந்தமாகவும், அவர் ஊர் சம்பந்தமாகவும், ராமாயணத்தை அவர் அரங்கேற்றிய நாள் சம்பந்தமாகவும், அரங்கேற்றும்போது உடனிருந்த ஒரு புலவர் முறையே மூன்று பாடல்களைப் பாடினார்.

கம்பர் பிறந்த ஊர், தஞ்சாவூர் ஜில்லாவில் குற்றாலம் ஸ்டேஷனுக்குத் தெற்கே மூன்று மைலி லுள்ள திருஅழுந்தூர்.

அரங்கேற்றிய இடம், சடையப்ப வள்ளல் இருந்த வெண்ணெய் நல்லூர் (திரு அழுந்தூரி லிருந்து ஆறு மைல்) என்றும் தெரிகிறது. அரங் கேற்றிய தினம் - சாலிவாகன சகாப்தம் 807, பங் குனி மாசம் அஸ்த நக்ஷத்திரம் (கி. பி. 885 : 9-வது நூற்றாண்டு.) அரங்கேற்றும்போது தக்க மனுஷர் கள் வந்திருந்தார்கள் என்பதும் தெரியவருகிறது.

(1) நாரணன் விளையாட்(டு)எல் லாம்
நாரத முனிவன்கூ ற,
ஆரணக் கவிதைசெய் தான்
அறிந்தவான் மீகியென் பான்;

---

* 'இதய ஒலி'யில் கவியும் உருவமும் என்னும் கட் டுரையைப் பார்க்க. பக்கம் - 195.

சீரணி சோழநாட் டுத்
திருஅழுந் தூருள்வாழ் வோன்
கார்அணி கொடையான்கம் பன்,
தமிழினுற் கவிசெய் தானே.

(2) அம்பிலே சிலையைநாட் டி
அமரர்க்(கு)அன்(று) அமுதம்ஈந் த
தம்பிரான் என்னத்,தா னும்
தமிழிலே தன்னைநாட் டிக்,
கம்பநா டுடையவள் ளல்
கவிச்சக்ர வர்த்தி,பார் மேல்
நம்புபா மாலையா லே
நரருக்(கு)இன்(று) அமுதம்ஈந் தான்.

(3) எண்ணிய சகாத்தம்எண் ணூற்(று)
ஏழின்மேல்ச், சடையன்வாழ் வு
நண்ணிய வெண்ணெய்நல் லூர்
தன்னிலே, கம்பநா டன்,
பண்ணிய இராமகா தை
பங்குனி அத்தநா ளில்,
கண்ணிய அரங்கின்முன் னே,
கவியரங்(கு) ஏற்றினு னே.

* * *

பல நூல்களையும், ராமாயணங்களையுமே வாசித்துப் பார்த்த ஒருவர், கம்பர் பாடல்களை வாசித்தவுடன் என்னவிதமான அனுபவம் பிறந்தது என்பதைச் சொல்லுகிறார் :

இம்பர் நாட்டில்ச் செல்வமௌ லாம்
எய்தி அரசாண் டிருந்தா லும்,
உம்பர் நாட்டில்க் கற்பகக் கா
ஓங்கும் நீழல் இருந்தா லும், -
செம்பொன் மேரு அனையபு யத்
திறல்சேர் இராமன் திருக்கதை யில்க்
கம்ப நாடன் கவிதையில்ப் போல்க்
கற்றோர்க்(கு) இதயம் களியா தே.

*  *  *

கம்பர் காலத்திலும் அவருடைய கவியின் அருமையை அறியாதவர்கள் இருந்தார்கள். அவரும் எத்தனையோ ஊருக்கெல்லாம் போய், அனுபவிப்பதற்கு மனுஷர் உண்டா என்று பார்த்தார். உண்டு என்று சொல்லுவதற்கு இடமில்லாமல்த்தான் போயிற்று. கடைசியாகத் தம் ஊருக்குத் (திருவழுந்தூருக்குத்) திரும்பும்போது, இரவாய்விட்ட காரணத்தால், ஆமூர் என்ற ஊரில்த் தங்க நேர்ந்தது. ஒரு வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்தார். உள்க் கட்டில் ஒருவர், கம்பர் பாடிய பாடல்களை ஆனந்தமாய்ப் பாடி நண்பர்கள் சிலரோடு அபாரமாக அனுபவித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரம் கழித்து, பாடி அனுபவித்துக் கொண்டிருந்த முதலியாருக்குக் கம்பர், தாம் வந்திருப்பதாகச் சொல்லிவிட்டார். ஆமூர் முதலியாரும் நண்பர்களும் வெளியே வந்து என்னென்னவோ உபசாரம் எல்லாம் சொல்லி, கவிஞரை உள்ளே அழைத்துச் சென்றார்கள். தம் ஊருக்கு (திருவழுந்தூருக்கு), அருகாமையிலேயேயுள்ள ஆமூரில், தம் கவிகளை அனுபவிக்கும்படியான ரசிகர்கள்

இருக்க, வேறு எங்கே எங்கே எல்லாமோ நடந்து தொலேந்தோமே என்ற **பாவத்தில்**, கவி ஒன்று சொல்லுகிருர்.

வெண்பா

உள்ளங்கால் வெள்ளெலும்
பாக, ஒருகோடி
வெள்ளங்கா லம்திரிந்து
விட்டோமே ! - உள்ளபடி
ஆமூர் முதலி
அரசர்கோன் இங்கிருக்கப்,
போமூர் தெரியாமல்ப்
போய்.

* * * *

திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளல், கம்பரது கவிகளேத் தெய்வப் பாடல்கள் என்றே அனுபவித்து வந்தார். அடுத்த ஊரானதால் அவருடன் அடிக்கடி பொழுதுபோக்கிக்கொண்டிருப்பது வழக்கம். சேர்ந்தால்ப்போல் நாலு நாள் சந்திக்கவில்லேயானுல் வள்ளலுக்கு ஒருபடியாய் வந்து விடும் ; வண்டியனுப்பிப் புலவரைக் கூட்டி வந்து விட வேண்டியதுதான். புலவர் வந்ததும், மாம் பழம் என்ன, பலாப்பழம் என்ன, வாழைப் பழம் என்ன எல்லாம் வந்து விடும் ; பாலும் தேனும் வேறே. சாப்பிடவேண்டும், சாப்பிட வேண்டும் என்று ஒரே தொந்தரவுதான். பதார்த் தங்களேயும், அன்பையும் அனுபவியாமல் என்ன செய்வார் கம்பர் !

இப்படியெல்லாம் நிகழ்ந்துவரும் நிலைமையில், ஏதோ தூரமான ஊருக்குக் கம்பர் போகநேர்ந்தது. ஒரு மாச காலம் அங்கேயே தங்க நேர்ந்துவிட்டது. பிறகு, தம் ஊருக்குத் திரும்பினர். உடனேயே, திருவெண்ணெய்நல்லூருக்குப் போய்ச் சடையப்ப வள்ளலையும் பார்த்தார். இதுவரையும் ஏக்க முற்றிருந்த வள்ளல் புலவரைப்பார்த்து, 'ஏது இத்தனை நாள்த் தாமசம்? என்னை மறந்துவிட்டீர்களோ' என்று மிக்க பரிவுடன் கேட்டார். இப்படிக் கேட்ட கேள்வியைக் கம்பரது இதயம் தாங்க முடியுமா?

வெண்பா

ஆன்பாலும் தேனும்
அரம்பைமுதல் முக்கனியும்
தேம்பாய உண்டு
தெவிட்டுமனம், - தீம்பாய்
மறக்குமோ? வெண்ணெய்
வருசடையா! கம்பன்
இறக்கும்போ தேனும்
இனி.*

* * *

*அரம்பை-வாழை. தேம்பாய-இனிமையானது உடலுக்குள் முழுதும் பாய்ந்து, கடைசியில் மனசுக்குள்ளும் பாய்ந்துவிட்டது என்பது குறிப்பு. இனிமேல் நான் இறக்க நேரிடும்போது என்பது பொருள். கம்பன் என்று பெயர் வராமல் இருந்தால், தனிப்பாடல்த் திரட்டைத் திரட்டிய ஆசிரியர், இந்தப் பாடலையும் காளமேகப்புலவர் பாடியது என்று சேர்த்திருப்பார்.

கம்பர் சமாதி, நாட்டரசன் கோட்டையில் (செட்டி நாட்டில்) இருக்கிறது. கம்பர் பிறந்த இடம், திருவழுந்தூர் என்பதுபற்றி யாதொரு சந்தேகமும் கொள்ள இடமில்லை. தமிழ் நாட்டில் கம்பர் பிறந்தார் என்பதுபற்றியே தமிழர்கள் பெருமை பேசிக்கொள்ளலாம் என்றால், தம் ஊரில் பிறந்ததுபற்றித் திருவழுந்தூர் வாசி ஒருவர் பெருமை கொள்வதில் யாதொரு வியப்பும் இல்லை. கம்பரது பாடல்களை நன்றாய் அனுபவித்த வர் ஒருவர். அந்த ஊரில்க் கோயில் கொண்டருளிய சிவபெருமானிடத்தும் மிக்க பக்தியுள்ளவர். அவரது எக்களிப்பு எப்படி வருகிறது பாருங்கள்.

வெண்பா

கம்பன் பிறந்தவூர்,
    காவேரி தங்கும்ஊர்,
கும்பமுனி சாபம்
    குலைந்தவூர், - செம்பதுமத்
தாதகத்து நான்முகனும்
    தாதையும்தே டிக்காணு
வேதவித்து மேவும்அழுந்
    தூர்.*

*  *  *

*காவேரி தங்கும் - காவேரியானது குளங்களைப் பெருக்கி நிற்கும். கும்பமுனிசாபம் குலைந்த ஊர்: அகத்திய முனிவருக்குத் திருவழுந்தூரில் வந்ததும் சாபம் நீங்கிய தாகப் புராணக்கதை. வேதவித்து - சிவபெருமான். இதைக் காளமேகப் புலவர் பாட்டு என்று கொள்ள வேண்டியது அவசியமில்லை.

மகா கவியை அனுபவிப்பதற்குக் கவித்துவமே இருக்கவேண்டும், ஒருவருக்கு. கவித்துவம் இருப்பவர்தான், உயர்ந்த உண்மையான கவிகளை அனுபவிக்கக் கூடும். அவரோ வெறி கொள்பவர் என்றால் மிகை அல்ல.

ஒரு புலவர், நுட்பமான அறிவும் உணர்ச்சியும் படைத்த புலவர். பழைய அருமையான தனிப் பாடல்களைப் பாடி, அவற்றிலே திளைத்து வந்தவர். தம்முடன் இருந்த புலவர் பலர், கவிகள் என்று பல செய்யுள்களை இயற்றிவந்தார்கள்; அவை ஒன்றும் கவிலக்ஷணத்துக்கு வரவில்லை. தாம் ஏதோ சில கவிகளைப் பூர்வமான கவிகளின் சட்டத்தில் வைத்து இயற்றினார். இயற்றிய அந்தக் கவிகளைப் புலவர்களும் அரசனுமே, ரொம்பவும் பாராட்டி அனுபவித்தார்கள்.

இந்த நிலைமையில், கம்பர் வந்து சேர்ந்தார் அங்கே. கம்பரது கவிகளைப்பார்த்தார் புலவர். அபாரமாய் இருந்தன. யாராலும் பாடமுடியாதபடி, கலைமகள் கடாக்ஷத்தினாலே வந்தன என்று சொல்லும்படி யிருந்தன. அந்தக் கவிகளில் வெறிகொண்டுவிட்டார் புலவர். தெய்வம் என்றே கம்பரை எண்ணினார். தம் கவிகளை யாரிடத்திலும் பாடுவதில்லை, ராஜ சபைக்கு ஏற்கவே ஏற்காது, என்றும் தீர்மானித்துவிட்டார்.

இப்படியெல்லாம் தமிழிலும், கம்பர் கவிகளிலும் திளைத்து, ஒரே ஆனந்தத்தில் மூழ்கியிருந்த

புலவருக்கு, வந்துவிட்டது தாங்கமுடியாத துக்கம். கம்பர் இறந்து போய்விட்டார்! புலவர் மனசுக்கு இந்தச் செய்தியை நம்பவே முடியவில்லை. அவருக்கு அவ்வளவு ஒட்டிய அங்கமாயிருந்தார் கம்பர். மெள்ள மெள்ள உண்மை அவர் உள்ளத்தைக் தாக்க நேர்ந்தது. சோகவெறி அவரைப் பிடித்து ஆட்டுகிறது, அப்படியும் இப்படியுமாக ஆட்டு கிறது. அப்பாவி என்ன செய்வார்!

இன்றல்லோ கம்பன்
இறந்த நாள்!

பூர்வகாலத்தைப் பார்க்கிறார், எதிர்காலத்தை யும் எட்டிப் பார்க்கிறார். 'நெடுகிலும் கம்பன் வாழ்ந்து கொண்டிருப்பவன் தானே? இது என்ன, இன்று இறந்துவிட்டான் என்று சொல்லுகிறார் களே! சரி, சரி, இனிமேல் என்னுடைய புன் கவிகளுக்கு நல்ல காலம் பிறந்துவிட்டது' என்று மனங் கசந்த ஒரு எக்களிப்பில் சொல்லுகிறார் புலவர்.

என்கவிதை
இன்றல்லோ ராஜசபைக்(கு)
ஏற்கு நாள்!

மேலும் சொல்லுகிறார்: கம்பர் காரணமாக வியாபாரிகள் தங்கள் மளிகைகளுக்குப்போகவில்லை. மிராசுதார்கள் வயல்வட்டங்களுக்குப் போகவில்லை. கம்பரது பேச்சையும் பாட்டையும் கேட்டுக் கொண்டிருக்க நேர்ந்தது பல நாளும். இனிமேல்,

மாளிகைகளுக்கும் வயல் வட்டங்களுக்கும் ஒழுங் காய்ப் போவார்கள். இன்று முதல் பூமடந்தைக் கும் நல்லகாலந்தான். ஆனால், கலையையும் கவியை யும் அனுபவிப்பதற்கு இனி யார் கூடப்போகிறார் கள்?

வெண்பா

**இன்றல்லோ கம்பன்**
**இறந்த நாள்! என்கவிதை**
**இன்றல்லோ ராஜசபைக்(கு)**
**ஏற்குநாள்!- இன்றல்லோ**
**பூமடந்தை வாழப்,**
**புவிமடந்தை வீற்றிருக்க,**
**நாமடந்தை நூல்வாங்கும்**
**நாள்! ***

**முடிவுரை**

சுமார் முப்பது முப்பத்தைந்து வருஷங்களாகத் தமிழ் நூல்களைப் பொதுவாகவும் கம்பரது கவி களைச் சிறப்பாகவும் கற்று அனு பவித்ததிலிருந்து செருகு கவிகளைத் தாக்ஷண்யமில்லாமல் ஒதுக்கி, கம்ப ராமாயணத்தை வெளியிடவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று.

---

*இந்தக்கவி அற்புதமான, சோக பாவம் வாய்ந்தது. கம்பரே கூடுவிட்டுக் கூடு பாய்ந்து எழுதினாரோ என்று சொல்லத் தோன்றுகிறது. மேலே காட்டிய பாவத்துட னேயே கவியைப் பார்க்கவேண்டும். வெறும் விளையாட் டாகத் திரித்துச் சொல்லும் கதையையெல்லாம் மறந்து விடவேண்டும்.

இந்த நிலையில், புதுமைப் பதிப்பகத்தார் இந்தப் புஸ்தகத்தை வெளியிட முன்வந்தது, எவ்வளவு பாராட்டிற்கு உரியது என்று வாய்விட்டுச் சொல்ல வேண்டாம். செய்யுள்களைப் புதுமுறையில் பொறிக்க நேர்ந்ததுபற்றி, அச்சுத் தாள்களைப் பரிசோதிப்பதில் எவ்வளவோ கஷ்டம் ஏற்பட்டது. புதுமைப் பதிப்பக நிர்வாகி அ. லெ. நடராஜன் அவர்கள் மிக்க சிரத்தையெடுத்துப் பரிசோதித்து உதவிய நன்றியை ரொம்பவும் பாராட்டுகிறேன்.

டி. கே. சிதம்பரநாத முதலியார்

## பதிப்புப் பற்றிய குறிப்புகள்

புத்தகத்துக்கு இரண்டு அனுபந்தங்கள் சேர்த்திருக்கின்றன. முதலாவது அனுபந்தத்தில், செய்யுளைப் பாடுவதற்கு உதவியாயுள்ள செய்யுள் அமைப்பின் அம்சங்களையும், பொருள் அமைப்புக்கான அடையாளங்களையும் விளக்கியிருக்கிறது.

இரண்டாவது அனுபந்தத்தில் பாடம் சம்பந்தமான குறிப்புக்களைக் கொடுத்திருக்கிறது.

செய்யுள்களுக்குக் கொடுத்திருக்கிற முன்னுரை, **பா**வங்களைச் சுட்டிக் காட்டுவதற்கான கைகாட்டிகள்தான். பொருள் விளக்கத்தை அடிக் குறிப்பில்ப் பார்க்கவேணும். அடிக் குறிப்பிலேயே செய்யுளின் **பா**வ லக்ஷணங்களுக்கு விளக்கம் கொடுத்திருக்கிறது. பொருள் கோளுக்கு இணங்க அடையாளங்கள் கொடுத்துப் பாடல்களை அச்சிட்டிருப்பதால், பாடுவதும் அர்த்தம் தெரிந்து கொள்வதும் எளிதாக இருக்கும். கதை நிகழுகிற களத்தையும், பாத்திரங்களையும் மனக்கண் முன் வைத்து, மெள்ளப் பாடிவந்தால், **பா**வம், உருவம் எல்லாம் எளிதாய் விளங்கிவிடும்.

# பொருள் அடக்கம்

பக்கம்

## அயோத்தியா காண்டம் 131-547

# கடவுள் வாழ்த்து

1. உலகங்கள் எல்லாவற்றையும் இறைவன் உண்டாக்குகிறான், கொஞ்சகாலம் நிலைபெறச் செய்கிறான், பிறகு அவைகளை மறைக்கிறான். இது அவனுக்கு விளையாட்டு. இந்த விளையாட்டானது காலத்தால் ஒரே தொடர்ச்சியாயும், இடம் என்றால் எங்கும் வியாபித்ததாயும் நடக்கிறது. நம்முடைய செயல் ஒவ்வொன்றும் அந்த விளையாட்டுக்குள் அடங்கியுள்ளதுதான். அவனே நமக்குத் தலைவன் ; நமக்குப் புகலிடமும் அவனுடைய சரணங்களே.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன.

உலகம் யாவையும்
    தாம்உள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும்
    நீக்கலும், நீங்கலா
அலகி லாவிளை
    யாட்டுடை யார்அவர்
தலைவர் : அன்னவர்க் -
    கேசரண் நாங்களே.

1. நீங்கலா - காலத்தால் ஒரே தொடர்ச்சியாயுள்ள. அலகு இலா - இடம் சம்பந்தமாக வரம்பு இல்லாமல் எங்கும் வியாபித்த. சரண் - அடைக்கலம்.

## 2. அவையடக்கம்

2. மலைபோல் அலைவந்து மோதுகிற பாற்கடலுக்குள் இறங்கி ஒரு பூனை பாலை முற்றும் பருகிவிட நினைப்பதுபோலத்தான், நான் இராமனுடைய கதையைப்பாட ஆரம்பிப்பதும்.

ஓசை பெற்றுயர்
 பாற்கடல் உற்(று)ஒரு
பூசை முற்றவும்
 நக்குபு புக்கென,
ஆசை பற்றி
 அறையல்உற் றேன்,மற்(று)இக்
காசில் கொற்றத்(து)
 இராமன் கதை,அரோ. உ

3. என்னுடைய தாழ்ந்த செய்யுளோடு ஒப்பிட்டுப் பார்த்தால்த்தானே தெய்வப்பாடலின் உயர்வு தெரியும்?

வையம் என்னை
 இகழவும், மா(சு)எனக்(கு)
எய்த வும்இ(து)
 இயம்புவ(து) யாதெனில் :

2. பூசை - பூனை. நக்குபு - நக்கும்பொருட்டு. காசில் கொற்றம் - குற்றம் இல்லாத வீரம்.

3. வையம் - உலகத்தார். இயம்புவது - பாடுவது.

பொய்யில் கேள்விப்
புலமையி னோர்புகல்
தெய்வ மாக்கவி
மாட்சி தெரிக்கவே. ௩

4. அசுணப் பறவையானது யாழிலிருந்து வரும் இனிய இசையைக் கேட்டு மயங்கியிருக்கும்போது, திடீரென்று பறையோசையைக் கேட்டுவிட்டால், அதைச் சகிக்க முடியாமல் அப்படியே இறந்து கீழே விழுந்துவிடுமாம். பலவகைப்பட்ட அருமையான செய்யுள்களைக் கேட்ட உங்கள் செவிகளுக்கும் என் பாடல்களைக் கேட்டால் சகிக்க முடியாதுதான்.

துறைய டுத்த
விருத்தத்தொ கைக்கவிக்(கு)
உறைய டுத்த
செவிகளுக்(கு) ஓதில், - யாழ்
நறைய டுத்த
அசுண நன் மாச்செவி
பறைய டுத்தது
போலுமென் பா,அரோ

---

3. புகல் - பாடும்.

4. துறை - செய்யுள்வேறுபாடுகள். அடுத்த - அமைந்த. உறை - உறைவிடம். நறை - தேன்: இங்கே இசை. மாச்செவி - தெய்விகமானசெவி. பறை - பறைக்கொட்டின் சத்தம். அரோ - அடடா!

5. கவிஞர்கள் விஷயங்களைப் பாவனை உலகத்தில் ஏதோ ஒரு வெறிமயக்கத்தில் கண்டு பாடுவார்கள். அந்தப் பாவனை உலகத்தில் பிரவேசிக்க முடியாத சாமானிய மக்களுக்கு, எல்லாம் பைத்தியம் என்று தோன்றலாம். ஆனால், உண்மையில் அவை பக்தியி லிருந்தே உண்டானவை. அதைப்பற்றிக் குற்றங்கூற யாருக்கும் பாத்தியதை இல்லை.

முத்த மிழ்த்துறை -
யின்முறை போகிய
உத்த மக்கவி -
ஞர்க்(கு)ஒன்(று) உணர்த்துவன் :
பித்தர் சொன்னவும்
பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும்
பன்னப் படுபவோ ? ரு

6. குழந்தை ஏதோ செங்கல்த் துண்டை வைத்துக்கொண்டு தரையில் கோடு இழுத்து வீடு கட்டினதாகப் பாவிக்கும். பாவிக்கும்போது, அதன் உள்ளத்தில் உண்மையான வீடு, படுக்கையறை, நடன கூடம் எல்லாம் அப்படி அப்படியே இருக்கின்றன.

---

5. முத்தமிழாகிய, எடுத்துரைக்கும் பண்பு, நாடகப் பண்பு, கவிப் பண்பு, இவைகளையறிந்தவர் தான் கவிஞர். பித்தனாகவும் பேதையனாகவும் தோற்றலாம்: உண்மை யில் பக்தனே என்கிறார் தம்மைக் குறித்து.

சிற்பத்தில் தேர்ந்தவர்கள் குழந்தையின் மனப்பாங்கே சிற்பத்துக்குச் சிறந்த பாங்கென்று கண்டு அனுபவிப்பார்கள். நானும் என் கவி சம்பந்தமாக அந்தக் குழந்தை நிலையில்தான் இருக்கிறேன்.

அறையும் ஆடரங் -
  கும்படப், பிள்ளைகள்
தறையில்க் கீறிடில்
  தச்சரும் காய்வரோ :
இறையும் ஞானம்
  இலாதஎன் புன்கவி
முறையில் நூல்உணர்ந் -
  தோரும் முனிவரோ ?

6. பட - அமையும்படி. தச்சர் - சிற்பம் வல்லார். இறையும் - சிறிதும். முனிவரோ - கோபிப்பாரோ.

# 3. கோசல நாட்டின் வளம்

1. நாட்டுக்கு உரிய நதி சரயு; சூரிய குலத்து அரசரைப் போல எப்பொழுதும் நன்மையே செய்வது.

இரவி தன்குலத்(து)
எண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்ஒழுங்-
கின்படி பூண்டது
சரயு வாம்நதி ;
தாய்முலை அன்னதால்
உரவு நீர்நிலத்(து)
ஓங்கும் உயிர்க்கெலாம். எ

2. எருமைகளின் வளம்.

ஈர நீர்ப்படிந்(து)
இந்நிலத் தே,சில
கார்கள் என்ன
வருங்கரு மேதிகள்,
ஊரில் நின்றகன்(று)
உள்ளிட, வண்முலை
தாரை கொள்ளத்,
தழைப்பன சாலியே. அ

---

1. இரவி - சூரியன். பரவு - புகழப்படும். படி - முறை. உரவு - பரவி ஓடும்.

2. ஈர - குளிர்ந்த. மேதி - எருமை. கன்று உள்ளிட - கன்றை நினைத்த மாத்திரத்தில். தாரைகொள்ள - பாலைச் சொரிய. சாலி - நெல்வயல்.

3. தயிர் வளம்: தயிர் கடைகிற சித்திரம்.

தோயும் வெண்தயிர்
    மத்தொலி துள்ளவும்,
மாய வெள்வளை
    வாய்விட்(டு) அரற்றவும்,
தேயும் நுண்ணிடை
    சென்று வணங்கவும்,
ஆயர் மங்கையர்
    அங்கை வருந்துவார். ௯

4. பெண்களுக்குக் கல்வியும் செல்வமும் வாய்த்திருந்தன.

பெருந்த டங்கண்
    பிறை நுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும்
    கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்(கு)
    ஈதலும், வைகலும்
விருந்தும் அன்றி
    விளைவன யாவையே. ௧௦

---

3. தோயும் - பக்குவமாக உறைந்திருக்கும். மாய - விசித்திரமான சத்தத்தை உண்டாக்குகிற. தேயும் - வளைய வளையத் தேய்கிறதாகத் தோன்றும். ஆயர் மங்கையர் - இடைச்சியர்.

4. பிறை நுதலார் - பிறைபோன்ற நெற்றியையுடைய பெண்கள். வைகலும் - ஒவ்வொரு நாளுமே. விளைவன - விரும்புவன.

**5.** மரக்கலங்களில் இறக்குமதியாகும் செல்வம், நிலத்தில் விளையும் செல்வம், பூமியில் தோண்டி எடுக்கும் இரத்தினம், இவைகளின் வளம்.

கலம்சு ரக்கும்
    நிதியம், கணக்கிலா
லம்சு ரக்கும்
    நிறைவளம், நன்மணி
பிலம்சு ரக்கும்,
    பெறுதற் கரியதாய்க்
குலம்சு ரக்கும்
    ஒழுக்கம் குடிக்கெலாம் ௫

**6.** ஊர் ஊராய்க் கதைகள் நடத்திக்கொண்டிருப்பார்கள். இடையிடையே அருமையான பாடல்களைப் பாடி எல்லாரையும் பரவசமாக்குவார்கள்.

சந்தம்

தானன தனனன தனனன தனன.

கோதைகள் சொரிவன
    குளிர்இள நறவம்
பாதைகள் சொரிவன
    பருமணி கனகம்

---

5. கலம் சுரக்கும் - கப்பலில் வந்து இறங்கும். நிறை வளம் - தானிய வளம். நல்மணி - நல்ல இரத்தினங்களை. பிலம் - சுரங்கம். பரம்பரையான குடிப்பிறப்புக் காரணமாக எல்லாக் குடிகளிலும் நல்லொழுக்கம் கைகூடும்.

6. கோதை-பூங்கொத்து. நறவம் - தேன். பாதை-மரக்கலம். கனகம் - பொன்.

ஊதைகள் சொரிவன
உறையுறும் அமுதம்
காதைகள் சொரிவன
செவி நுகர் கவிகள். கஉ

7. பெண்கள் நடந்து செல்லும்போது நாணம், உல்லாசம், சாகசம் முதலான எத்தனையோ சாயல்கள் (பாவங்கள்) வெளியாகின்றன. இவற்றின் பேதங்களையும் வேகங்களையும் அனுபவித்து முடியவில்லை. ஆகையால், ஆடவர் கண்ணும் மனமும் அந்தப் பெண்களைத் தொடர்ந்து செல்கின்றன.

சந்தம்

தான தன்னன தனன தன்னன

இடங்கொள் சாயல்கண்(டு),
இளைஞர் சிந்தைபோல்,
தடங்கொள் சோலைவாய்
மலர்கொய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை
மடந்தை மாரொடும்,
தொடர்ந்து போவன
தோகை மஞ்ஞையே. கந

6. ஊதை - குளிர்ந்த காற்று. உறை உறும் - நுண்ணிய மழை நீர்த்துளிகளில் அமைந்த. அமுதம் - உடலின் தளர்ச்சியை நீக்கக்கூடிய உயிர்ச்சத்து.

7. இடங்கொள் சாயல் - வரம்பில்லாத பலவகைப் பட்ட பாவங்கள். தடம் - தடாகம். சாயல்களைக் கற்பதற்காக மயில்கள் பின்தொடர்ந்தன என்பது குறிப்பு. மஞ்ஞை - மயில்.

8. கஷ்டத்தைக் கண்டு கொடை கொடுக்கும் போதுதான் இதயம் உருகுகிறது; எதிரியோடு எதிர்த்துப் போர் செய்யும்போதுதான் உண்மையான வீரம் பிறக்கிறது. எல்லோரும் பொய்யே சொல்லாதிருந்துவிட்டால், சத்தியவான் என்று ஒருவனைக் குறித்துச் சொல்லுவதில் பொருளில்லை. அப்படியே, சகல கலைகளையும் எல்லோரும் கற்று நுட்பங்களை அறிந்துவிட்டால், ஒருவரைப் பார்த்து இவர் மேதாவி என்று சொல்ல இடமிராது தானே ?

வண்மை இல்லை ஓர்
  வறுமை இன்மையால்,
திண்மை இல்லைநேர்
  செறுநர் இன்மையால்,
உண்மை இல்லைபொய்
  உரையி லாமையால்,
ஒண்மை இல்லைபல்
  கேள்வி ஓங்கலால். கஅ

8. ஒண்மை - பேரறிவு.

# 4. நகரப் படலம்

1. மாளிகைகளில்ச் சில வெண்ணிற மாளிகை-கள். அவைகளை அழகாகச் சிப்பிச் சுண்ணும்பினால் தீற்றி யிருந்தார்கள்.

சந்தம்

தானன தானன தான தன்னன

திங்களும் கரிதென
வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத்
தவள மாளிகை,
வெங்கடுங் கால்பொர
மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடல்த்
தரங்கம் போலுமே. கரு

2. அத்தகைய வெண்மையான மாளிகைகளுக்-குப் பொன்மயமான ஓடு வேய்ந்திருந்தது. மோட்டின்

---

1. சங்கம் - சிப்பி. சுதை - சுண்ணும்பு. தவள மாளிகை - வெண்ணிற மாளிகை. கால் பொர - புயற் காற்று மோதி அடிக்க. மேக்கு - வானம். இரும் - பெரிய. தரங்கம் - அலை.

இறப்பில் புறுக்கள் தங்கியிருந்தன; இறப்பும் அவ் வளவு உயரத்தில் இருந்தது.

புள்ளியம் புற(வு)இறை
    பொருந்தும் மாளிகை
தள்ளரும் தமனியத்
    தகடு வேய்ந்தன:
எள்ளரும் கதிரவன்
    இளவெ யிற்குழாம்
வெள்ளியங் கிரிமிசை
    விரிந்த போலுமே. கசு

3. கட்டிடங்களுக்கு வெள்ளியினாலும் தங்கத்தினாலும் ரேகையும் பட்டையும் பலவிதமாகக் கொடுத்திருந்தார்கள்.

மின்என விளக்கென
    வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத்
    தொழில்த ழைத்த,அக்
கன்னிநல் நகர்நிழல்
    கதுவ லால்அரோ
பொன்னுல காய(து)அப்
    புலவர் வானமே. கஎ

---

2. புறவு - புறு. இறை - இறப்பு. தமனியம் - பொன். கதிரவன் - சூரியன். இளவெயிற் குழாம் - காலையில் சூரியன் பரப்பும் கிரணத் தொகுதி.

3. தமனியம் - தங்கம் முதலிய உலோகங்கள். கன்னி நல் நகர் - கன்னிப் பெண்களைக் காத்த மாதிரி காத்த நகர். நிழல் - பிரதிபலித்த ஒளி. கதுவல் - பற்றுதல். புலவர் - தேவர்கள்.

# 5. அரசியற் படலம்

தசரத மன்னன் அரசு புரிந்த விதத்தைக் கூறும் படலம்.

1. அயோத்தி நகரத்துக்கு நாலுபுறத்திலும் மதிலும், மதிலுக்கு வெளியில் அகழியும், உள்ளே மாளிகைகளும் இருக்கின்றன. தசரத மன்னன் இந்த அயோத்தியை ஆளுகிறான். அப்படியே உலகம் முழுவதையும் சக்கரவர்த்தியாக ஆளுகிறான். அயோத்தியைப்போல உலகத்துக்கும் சக்கரவாளகிரி மதில், அதற்கு வெளியிலுள்ள நாற்கடலும் அகழி, இடையிலுள்ள விந்தியம், பொதிகை முதலான குலமலைகள் மாளிகைகள்போல் அமைந்திருக்கின்றன என்பது விஷயம்.

நேமிமால் வரைமதில்
ஆக, நீள்புறப்
பாமமா கடல்கிடங்(கு)
ஆகப், பன்மணி
வாமமா ளிகைமலை
யாக, மன்னற்குப்
பூமியும் அயோத்திமா
நகரம் போலுமே. கஅ

1. நேமிமால்வரை - சக்கரவாளகிரி. பாம - பரந்து விசாலமான. வாம - அழகிய.

2. எதிராளி சரியான பலமுள்ளவனு என்று அறிந்துதான் தசரதன் போர்க்குப் புறப்படுவான். எல்லாருமே இவன் காலில் விழுந்து வணங்குவார்கள்.

ஆவரும் வன்மைநேர்
 அறிந்து நீட்டலால்
மேவரும் கையடை
 வேலும் தேயுமால் ;
கோவுடை நெடுமணி
 மகுட கோடியால்
சேவடி அணிந்தபொற்
 கழலும் தேயுமால். கக

3. வெண்கொற்றக் குடையானது ஆட்சியின் அடையாளம். ஆட்சியானது சந்திரனைப்போல உட்பகையாகிய இருளை நீக்கும். வெளியிலிருந்து ஏற்படுகிற பயமாகிய வெப்பத்தைத் தடுக்கும். ஏகசக்கராதிபத்தியம் ஆனதால், உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் குடை பாதுகாப்பா யிருந்தது.

மண்ணிடை உயிர்தொறும்
 வளர்ந்து நேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவும்
 இருளைத் தள்ளவும்

—

2. ஆவரும் - தன் பராக்கிரமத்துக்குத் தக்க. நேர் - பகை. மகுடகோடி - கிரீடத்தின் சிகரம். கழல் - தசரதன் காலில் அணியும் வீரத் தண்டை.

3. வளர்ந்து - நாலா பக்கமும் விரிந்து.

அண்ணல்தன் குடையது
அமையும் ; ஆதலால்
விண்ணிடை மதியினை
மிகையி தென்பவே. உ0

4. உடலை, அதனுள்ளிருக்கும் , உயிரானது பாதுகாக்கிறது. தசரத மன்னனும், கடவுள் தத்துவம் போல, உயிருக்குள் உயிராகி நின்று பாதுகாத்தான்.

வயிரவாள் பூண்அணி
மடங்கல் மொய்ம்பினன்,
உயிரெலாம் தன்னுயிர்
ஒப்ப ஓம்பலால்,
செயிரிலா உலகினில்
சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர்
உயிரும் ஆயினன். உக

---

3. மிகை - வேண்டாதது.

4. மடங்கல் - சிங்கம். மொய்ம்பு - பலம். ஓம்பல் - பாதுகாத்தல். செயிர் - குற்றம். சென்று நின்று வாழ் உயிர் - பிராணிகள் போல இடம்விட்டுப் பெயர்ந்தும், பூண்டுகளைப்போல இடம்விட்டுப் பெயராமலும் வாழும் உயிர்வர்க்கங்கள். உயிரெலாம் - ஜீவன்களுக்கெல்லாம். உயிரும் - பரமாத்மாவும்.

# 6. கையடைப் படலம்

1. மேலே சொன்னபடி அரசாண்ட காரண மாக, உலகெங்குமே தசரதனுடைய பாதுகாப்பை (குடையைப்) பாராட்டுகிறார்கள். அவனுடைய வெற்றிமுரசு உலகெங்கும் ஒலிக்கிறது. இந்த நிலைமை யில், ஆனந்தமாயிருக்கும் ஒரு நாள் :

அரசர்தம் பெருமகன்,
அகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை
விளங்க, வென்றிசேர்
முரசொலி கறங்கிட,
முனிவர் ஏத்துறக்
கரைசெயல் அரியதோர்
களிப்பின் வைகுநாள். உஉ

2. தேவலோகத்திலிருந்து எல்லோரும் வந்து சேர்ந்தார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். ஒரே சந்தேகம் உண்டாய்விடும் அவர்களுக்கு. இது தேவ லோகத்து மண்டபமோ என்ற சந்தேகம்தான். சிற்பி மண்டபத்தை எப்படிக் கட்டினான் என்ற விஷய மும் விளங்காது. உயரமும் ஆகாயத்தை அளாவி

---

1. விரசுறு - வியாபித்துள்ள. கறங்கிட - ஒலிக்க. ஏத்துற - புகழ. கரை - எல்லை.

இருந்தது. இத்தகைய அருமையான வேலைப்பாடு அமைந்த மண்டபத்தில் வந்து சேர்ந்தான் சக்கரவர்த்தி.

நனைவரு கற்பக
நாட்டு வானவர்
அனைவரும் அனைதர,
அயிர்க்கும் சிந்தையால்
நினையவும் அரியது,
விசும்பின் நீண்டதோர்
புனைமணி மண்டபம்
பொலிய எய்தினான். ௨௩

3. வானுலகத்திலிருந்து புறப்பட்டு ஆகாயத்தில் திரிந்துவரும் சாரணர்கள் பார்த்துத் தேவேந்திரன் தானோ என்று சந்தேகிப்பார்கள்.

தூயமெல் அரியணைப்
பொலிந்து தோன்றினான்,
சேயிரு விசும்பிடைத்
திரியும் சாரணர்
நாயகன் இவன்கொல்என்(று)
அயிர்த்து, நாட்டம்ஓர்
ஆயிரம் இல்லையென்(று)
ஐயம் நீங்கவே. ௨௪

---

2. நனைவரு - தேன் சொட்டுகிற. அயிர்க்கும் சிந்தையால் - (இது தேவலோகந்தானோ என்று) சந்தேகிக்கும் மனசினால். விசும்பு - வானம். பொலிய : அரசன்வந்தது காரணமாகவே மண்டபத்துக்கு ஒரு விளக்கம் உண்டாயிற்று.

3. நாயகன் - தேவேந்திரன். நாட்டம் - கண்.

4. இப்படி வீற்றிருந்த அரசன்முன்னே ஒரு முனிவர் வந்தார். அவர் யார்? மக்கள் சமுதாயத்தையும் தேவர்கள் என்னும் ஜீவராசிகளுக்குள்ளிருக்கும் எண்ணிறந்த தத்துவங்களையும், - ஏன், பேரண்டம் முழுதும் வியாபித்திருக்கும் சிருஷ்டி தத்துவத்தையுமே - சீர்திருத்தி அமைக்கவேண்டும் என்ற எண்ணங்கொண்ட விசுவாமித்திர முனிவர் தான்.

மடங்கல்போல் மொய்ம்பினன்
முன்னர், மன்னுயிர்
அடங்கலும் உலகும்வே(று)
அமைத்துத், தேவரோ(டு)
இடங்கொள்நான் முகனையும்
படைப்பன் ஈண்டெனுத்
தொடங்கிய கோசிக
முனிவன் தோன்றினன். உரு

5. முனிவரைப் பணிவதற்காக அரசன் எழுந்தான். எழும்போது, மார்பிலுள்ள ஆரமும் பதக்கமும் பிரகாசித்தன.

சந்தம்

தான னன தன்ன னன தன்ன னன தன்ன.

வந்துமுனி எய்துதலும்
மார்பில்அணி ஆரம்
அந்தரத லத்(து)இரவி
அஞ்சஒளி விஞ்சக்

4. மொய்ம்பு - பலம். இடங்கொள - எங்கும் வியாபித்த. கோசிகன் - விசுவாமித்திரர்.

5. அந்தர தலத்து இரவி - வானிலுள்ள சூரியன்.

கந்தமல ரிற்கடவுள்
தன்வரவு கா ணும்
இந்திரன் எனக்கடி(து)
எழுந்தடி பணிந் தான். உசு

6. முனிவரை ஆசனத்திருக்கச் செய்கிருன்.

பணிந்து,மணி செற்றுபு
குயிற்றிஅவிர் பைம் பொன்
அணிந்ததவி சிட்(டு),இனி(து)
அருத்தியொ(டு) இருத் தி,
இணைந்தகம லச்சரண்
அருச்சனைசெய்(து) இன் றே
துணிந்த(து)எம் வினைத்தொடர்(பு)
எனத்தொழுது சொல் லும். உஎ

7. அரசன் தன் ஆனந்தத்தை வெளியிடுகிருன் :

நிலம்செய்தவம் என்றுணரின்
அன்று : நெடி யோய் ! என்
நலம்செய்வினை உண்டெனி னும்
அன்(று) : இந்நக ரே, யான்

5. கந்த மலரிற் கடவுள் : பிரமதேவன். கடிது - அவசரமாக.

6. செற்றுபு - நெருங்கலாக. குயிற்றி - பதித்து. அவிர் - பிரகாசிக்கும், அணிந்த - அழகிய வேலைப்பாடுடைய. தவிசு - ஆசனம். அருத்தி - அன்பு. இணைந்த - அழகாகச் சேர்ந்துள்ள. சரண் - பாதங்களை.

7. நிலம் - நாட்டிலுள்ள குடிகள். நெடியோய் - பெரியோய். நலம்செய் வினை - நன்மையைத் தரக்கூடிய தருமச்செயல்.

வலம்செய்து வணங்கஎளி
வந்தஇது, முந்(து) எம்
குலம்செய்தவம் என்றினிது
கூற,முனி கூறும். உஅ

8. முனிவர் பதில் சொல்கிறார்.

சந்தம்

தானன தானன தானன தானன
தானன தன்.

என்அனைய முனிவரரும்
இமையவரும் இடையூ(று)ஒன்(று)
உடையரானல்,—
பல்நகரும் நகுவெள்ளிப்
பனிவரையும், பாற்கடலும்,
பதுமபீடத்(து)
அந்நகரும், கற்பகநாட்(டு)
அணிகவரும் மணிமாட
அயோத்திஎன்னும்
பொன்நகரும் அல்லாது,
புகலுண்டோ ! இகல்கடந்த
புலவுவேலோய் ! உகூ

---

7. வலம்செய்து - பிரகாரம் வந்து. எளிவந்த - என் முயற்சி இல்லாமல் எளிதாக வந்த. முந்து - பூர்வத்தில்.

8. பல்நகரும் - வேறு பல மலைகளையெல்லாம். நகு - ஏளனம்பண்ணிச் சிரிக்கிற. வெள்ளிப் பனிவரை - கைலையங்கிரி. பதும பீடத்து அந்நகர் - தாமரையாசனம் அமைந்துள்ள பிரமலோகம். தேவேந்திர லோகத்தின் அழகைக் கவர்ந்து வைத்துக்கொண்டிருக்கிற அயோத்தி என்றார். பொன் நகர் - அழகிய நகர்.

9. தேவேந்திரனே தசரதனுக்குக் கடமைப் பட்டவன் என்று முனிவர் மறுபடியும் புகழ்கிறார்.

இன்தளிர்க்கற் பகநறுந்தேன்
இடைதுளிக்கும் நிழல்இருக்கை
இழந்துபோந் து,
நின்தளிக்கும் தனிக்குடையின்
நிழல்ஒதுங்கிக் குறையிரந்து
நிற்ப,நோக் கிக்,
குன்(று)அளிக்கும் குலமணித்தோள்ச்
சம்பரனைக் குலத்தோடும்
கொன்று,போ ரில்
அன்(று)அளித்த அரசன்றோ
புரந்தரன்இன்(று) ஆள்கின்ற(து)
அரச!என் றான். ௩௦

10. முனிவரது புகழ்ச்சியைக் கேட்ட அரசன் அப்படியே ஆனந்தத்தில் முழுகிவிடுகிறான்.

உரைசெய்யும் அளவில்,அவன்
முகம்நோக்கி, உள்ளத்தில்
ஒருவரா லும்
கரைசெய்ய அரியதொரு
பேர்உவகைக் கடல்பெருகக்
கரங்கள்கூப் பி,

---

9. இருக்கை - ஆசனம். தளிக்கும் - குளிர்ச்சியைச் செய்யும். போரில் - யுத்த களத்திலேயே.

அர(சு)எய்தி இருந்தபயன்
எய்தினன் மற்(று) இனிச்செய்வ(து)
அருளுகென் று,
முர(சு)எய்து கடைத்தலையான்
முன்மொழியப், பின்மொழியும்
முனிவன்ஆங் கே. ௰௧

11. வேண்டியதைச் சொல்லியருள வேண்டும் என்று அரசனே முதலில் சொல்ல, அதன் பிறகு முனிவர் பேச ஆரம்பிக்கிறார் :

தருவனத்துள் யான்இயற்றும்
தவவேள்விக் கிடையூறாத்,
தவஞ்செய்வோர் கள்
வெருவரச்சென்(று) அடைகாம
வெகுளியென, நிருதர்இடை
விலக்காவண் ணம்
செருமுகத்துக் காத்தி !என,
நின்சிறுவர் நால்வரினும்
கரியசெம் மல்
ஒருவனைத்தந் திடுதியென
உயிர்இரக்கும் கொடுங்கூற்றின்
உளையச்சொன் னான். ௰௨

---

10. கடைத்தலை - ஆசார வாசல்.

11. தரு - மரம் அடர்ந்த. வேள்வி - யாகம். வெருவர - பயப்பட. அடை - தொகுதியாகச் சேர்ந்து வருகிற. காமம் - ஆசை. வெகுளி - கோபம். நிருதர் - அரக்கர். செருமுகத்து - போர் முனையில். காத்தி - காப்பாயாக. கரிய செம்மல் - கருநிறத்தோடு கூடிய வீரனான ராமன். உளைய - வருந்தும்படி.

12. அரக்கர்களோடு போர்செய்ய வேண்டியிருக்கிறது; பிள்ளையைத் தன்னோடு அனுப்பு என்றால் தந்தைக்கு எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும்! இதை எண்ணவில்லை விசுவாமித்திரர்.

எண்ணிலா அருந்தவத்தோன்
இயம்பியசொல், மருமத்தின்
எறிவேல்பாய்ந் த
புண்ணில்ஆம் பெரும்புழையில்க்
கனல்நுழைந்தால் எனச்,செவியில்ப்
புகுதலோ டும்,
உள்நிலா விய துயரம்
பிடித்துந்த, ஆருயிர்நின்(று)
ஊசலா டக்,
கண்இலான் பெற்றிழந்தான்
எனஉழந்தான் கடுந்துயரப்,
கால்வே லான். ௩௩

13. ராமனை யுத்தத்துக்கு அனுப்பமாட்டேன் என்று சொன்னால் முனிவருக்கு வருத்தம்

---

12. மருமம் - மார்பு. புழை - துவாரம். நிலாவிய - நிலையாய்ப் பொருந்திய. உந்த - வெளியே தள்ள. உழந்தான் - வருந்தினான். காலவேல் - எமன்போன்ற வேல்.

உண்டாகும் என்று எண்ணி, ஒரு யுக்தி பண்ணு கிறான் தசரதன் :

தொடையூற்றில்த் தேன்துளிக்கும்
நறுந்தாரான் ஒருவண்ணம்
துயரம்நீங் கிப்,
'படையூற்றம் இலன்,சிறியன்
இவன் ;பெரியோய் ! பணியிதுவேல்,
பணிநீர்க்கங் கை
புடையூற்றும் சடையானும்
நான்முகனும் புரந்தரனும்
புகுந்துசெய் யும்
இடையூற்றுக்(கு) இடையூருய்
யான்காப்பன் பெருவேள்விக்(கு)
எழுக',என் ருன். ௩௪

14. ராமனை அனுப்ப மனமில்லாமல், தானே வந்து உதவுவதாகச் சொல்லி ஏமாற்றப் பார்க்கிருன் அரசன் என்று, முனிவருக்கு அபாரமாய்க் கோபம் வந்துவிடுகிறது. பக்கத்திலிருந்த அரசனது குருவான வசிஷ்ட முனிவர், விசுவாமித்திரரின் கோபத்தைத் தணித்து, அரசனிடம் சொல்லுகிருர் : " ராமன் எல் லாக் கலைகளையும் கற்று, கலைக்கடலாக விளங்குகிருன் என்பது உண்மையே. ஆனாலும் இப்போது, அவனுக் குப் பெரிய யோகம் கிட்டுகிறது. விசுவாமித்திரரிட மிருந்து எத்தனையோ புதிய வித்தைகளைக் கற்கப்

13. தொடையூற்றில் - தேன் கூட்டில் துளிப்பது போல. நறும் - வாசனையுள்ள. படை ஊற்றம் - படையை உபயோகிப்பதில் தேர்ச்சி. பணி - கட்டளை. புடைஊற்றும் - பக்கத்தில் எல்லாம் பாய்ந்து வடியும்.

போகிறான். அவனை அவருடன் அனுப்புவது ரொம்ப நல்ல காரியம் " என்பதாக.

சந்தம்

தான தன்னன தான தன்னன.

பெய்யும் மாரியால்ப்
பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய்
முடுகும் ஆறுபோல்,
ஐய ! நின்மகற்(கு)
அளவில் விஞ்சைவந்(து)
எய்து காலம்இன்(று)
எதிர்ந்த(து) என்னவே. ௧௫

15. ராமனை அனுப்ப அரசன் சம்மதிக்கிறான். ராமனும் யுத்தத்துக்கு வேண்டிய ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளுகிறான்.

வென்றி வாள்புடை
விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுறுத்
தூணி யாத்(து),இரு

14. மாரி - மழை. மொய்கொள்-ஏகமாக நிறைந்த. வேலைவாய் - கடலிடத்து. முடுகும் ஆறுபோல் - மண்டுகிற விதம்போல. விஞ்சை - வித்தை. எய்து காலம் - அடையும் யோக காலம்.

15. வென்றி வாள் - எந்த இடத்திலும் வெற்றியைத் தரவல்ல வாள். புடை - பக்கம். விசித்து - கட்டி. மெய்ம்மை : கடவுளின் மூலதத்துவப் பொருள் ; அதிலிருந்தே எல்லாச் சிருஷ்டிப் பொருள்களும் வந்தன. தூணி - அம்பு வைக்கும் கூடு.

குன்று போன்றுயர்
தோளில் கொற்றவில்
ஒன்று தாங்கினான்,
உலகந் தாங்கினான். ௩௬

16. அப்படியே ராமன், போர்க்கோலம் கொண்ட தம்பியும் தானுமாக, தந்தையிடம் விடைபெற்று விசுவாமித்திரர் பின் போகிறான்.

அன்ன தம்பியும்
தானும், ஐயனும்
மன்னன் இன்னுயிர்
வழிக்கொண் டால்எனச்,
சொன்ன மாதவற்
தொடர்ந்து, சாயைபோல்
பொன்னின் மாநகர்ப்
புரிசை நீங்கினான். ௩௭

---

15. கொற்றம் - வெற்றி. உலகத்தையே தாங்கிய கடவுளின் அவதாரமான ராமனே இப்படிப் போர்க் கோலம் கொண்டான் என்று சொல்லுகிறார் கவிஞர்.

16. அரசனிடம் ராமன் விடைபெற்றுச் சென்றது, அரசனுடைய உயிரே அவனைவிட்டுப் போனதுபோல் இருந்தது. வழிக்கொண்டால்-விடைபெற்றுச் சென்றால். சொன்ன - பின்னே வரும்படி சொன்ன. புரிசை - கோட்டை மதில்.

17. விசுவாமித்திரர் ராம லட்சுமணர் ஆகிய மூவரும் தவம்செய்கிற யோகிகள் வாழும் ஆசிரமங்கள் சூழ்ந்த பிரதேசங்களைக் கடந்து போய், மலைச் சாரல்களில் சிற்றருவிகளாக விழும் சரயுநதிப் பக்கத்தை அடைந்தார்கள்.

வரங்கள் வாய்ந்திடத்
தவஞ்செய் வோர்கள்வாழ்
புரங்கள் சூழ்தரு
புலங்கள் நீங்கிப்போய்,
அரங்கின் ஆடுவார்
சிலம்பின், நின்றுநின்(று)
இரங்கு வார்புனல்ச்
சரயு எய்தினர். ௬அ

17. புரம் - ஆசிரமம். அரங்கு - நடன மண்டபம். சிலம்பில் - பாதசரம் போல. வார் - பொழியும்.

# 7. தாடகைவதைப் படலம்

1. விசுவாமித்திரர் ராமன் லட்சுமணன் ஆகிய மூவரும் நாட்டைவிட்டு வெளியே போகும்போது ஒரு பாலைவனப் பக்கமாக வந்தார்கள். அந்தப் பாலைவனத்தில் ஈரப்பசை என்பது கொஞ்சமும் இல்லை. எதுபோல? நல்வினை தீவினை ஆகிய வேறுபாடற்று விட்டால், ஒருவருக்கு ஆசைகிடையாது கோபம் கிடையாது, எல்லாம் கடவுள் ஒருவன் செயல்தான் என்ற துணிவு ஏற்பட்டுவிடும். மேலேசொன்ன இருவினையாகிய அகழிகளைத் தூர்த்துவிட்டு, காமம் வெகுளி மயக்கம் ஆகிய மூன்று மதில்களையும் இடித்துத் தள்ளிவிட்டு,கருவூலம் இருக்கும் முத்திக்கு அப்படியே வேகமாய்ப் போகிறவர்கள்தான் யோகிகள். அவர்கள் மனசில் ஈரப்பசை கிடையாதுதானே?

சந்தம்

தானன தானன தான தன்னன

தாவரும் இருவினை
செற்றுத், தள்ளரும்
மூவகைப் பகையரண்
கடந்து, முத்தியில்ப்

---

1. தாவரும் - தாண்டமுடியாத. செற்று-தூர்த்து. தள்ளரும் - தள்ளமுடியாத. அரண் - மதில்.

போவது புரிபவர்
மனமும், பொன்விலைப்
பாவையர் மனமும்போல்ப்
பசையும் அற்றதே. ௩௯

2. இந்தப் பாலைவனத்தில் ஒரு கொடிய அரக்கி யிருக்கிறாள் என்று விசுவாமித்திரர் ராமனுக்குச் சொல்லுகிறார்.

மண்உருத்(து) எடுப்பினும்,
கடலை வாரினும்,
விண்உருத்(து) இடிப்பினும்,
வேண்டிற் செய்கிற்பாள் :
எண்,உருத் தெரிவரும்
பாவம் ஈண்டிஓர்
பெண்உருக் கொண்டெனத்
தெரியும் தோற்றத்தாள். ௪0

3. அவள் பெயர் தாடகை என்கிறார்.

காடுறை வாழ்க்கையள்,
கழலின் காலினள்,
சூடக அரவுழல்
சூலக் கையினள்,

---

1. பொன் விலைப் பாவையர் - பரத்தையர்.

2. மண் - பூமி. உருத்து - கோபித்து. பாவங்களின் எண்ணிக்கையும் தெரியாது, அவைகளின் உருவமும் தெரியாது. அந்தப் பாவங்கள். ஈண்டி - திரண்டு. பெற்றி - தன்மை.

3. சர்ப்பம் போன்ற சூடகம் நெளிந்து பயத்தை உண்டாக்கும்படியாகக் கையில் கிடக்கிறது என்றார்.

ஆடவர் பெண்மையை
    அவாவும் தோளிஞய் !
தாடகை என்பது
    சழக்கி நாமமே. சக

4. " ராமனே, நீ சாட்சாத் திருமால் அல்லவா ! அனைத்தியான உலகத்தை நீ பாதுகாத்து, அதிலுள்ள உயிரினங்கள் எல்லாவற்றையும் முறைப்படி வாழச்செய்தாய். ஆனுல், தாடகையின் காரியத்தைச் சொல்லவேண்டும் என்ருல், அத்தனை உயிரினங்களும் தனக்காகவே ஏற்பட்ட உணவுப்பொருள்கள் என்று கொன்று வருகிருள். இனிமேல் நம்முடைய கதி என்னகுமோ ?" என்று முனிவர் தம் ஆத்திரத்தை வெளியிடுகிருர்.

சந்தம்

தானனன தன்னனன தன்னனன தன்ன.

மூன்உல(கு)அ ளித்துமுறை
    நின்றஉயிர் எல் லாம்
தன்உணவெ னக்கருது
    தன்மையவள், மைந் த !
என்இனிஉ ணர்த்துவ(து)
    இனிச்சிறிது நா ளில்
மன்உயிர்அ னைத்தையும்
    வயிற்றில்இடும் என் ருன். சஉ

3. சழக்கி - அக்கிரமக்காரி.

4. மைந்த - ராமனே.

5. குருமூர்த்தியான விசுவாமித்திரர் இவ்வளவு சொல்லவும், ராமனுக்கும் ஆங்காரம் பிறந்துவிட்டது. தலையை ஒரு அசைவு அசைத்துக்கொண்டு பேசுகிறான்.

அங்கிறைவன் அப்பரி(சு)
உரைப்பஅது கேளா,
கொங்குறை நறைக்குல
மலர்க்குழல்து ளக்கா,
'எங்குறைவ(து) இத்தொழில்
இயற்றுபவள்' என்றான்,
சங்குறைக ரத்தொரு
தனிச்சிலைத ரித்தான். சுரு

6. 'இந்த மலையில்த்தான் அவள் இருக்கிறாள்' என்று முனிவர் சொன்னாரோ இல்லையோ, உடனே கன்னங்கரிய மலையின் உச்சியில் நெருப்பு எரிவது போல ஒரு தோற்றம் வந்தது.

கைவரை எனத்தகைய
காளைஉரை கேளா,
ஐவரை அகத்திடை
அடைத்தமுனி, 'ஐய!

---

5. கேளா - கேட்டு. கொங்கு - வாசனை. நறை - தேன். குழல் - குடுமி. துளக்கா - அசைத்து. விஷ்ணு மூர்த்தியாய் இருந்தபோது கையில் சங்கு, இப்போது வில் என்கிறார்.

6. கைவரை - கையைஉடைய மலை, அதாவது யானை. காளை - ராமன். கேளா - கேட்டு. ஐந்து புலன்களையும் (ஐவரை) வெளியே பிரவேசிக்காமல் உள்நோக்கிச் செலுத்திய யோகி.

இவ்வரை இருப்ப(து)அவள் '
என்பதனின் முன்(பு)ஓர்
மைவரை நெருப்பெரிய
வந்ததென வந்தாள்.

7. தலைதான் நெருப்புப்போல் இருந்தது. மற்றப்படி, புருவம், பல், வாய், கண் இவையெல்லாம் எப்படி இருந்தன?

இறைக்கடை துடித்தபுரு
வத்தள்,எயி(று) என்னும்
பிறைக்கடை பிறங்கிட
மடித்தபில வாயள்,
மறக்கடை அரக்கி,வட
வைக்கனல்இ ரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென
நெருப்பெழ விழித்தாள். சரு

6. மை வரை - கருமலை. செம்பட்டை ரோமமானது பரட்டையாய்ச் சிதறி நின்றது, நெருப்புப்போல இருந்தது என்கிறார்.

7. இறைக்கடை - கடைசியான சிறு பாகம்; அது மாத்திரம் துடிக்கும்போது அடங்காத கோபக்குறி. எயிறு - பல். பிலம் - குகைபோன்ற பெரிய துவாரம். மறக்கடை அரக்கி - கொடுமைக்கு இதற்குமேல் இல்லை என்று சொல்லும்படி இருந்த அரக்கி; அபாரமாகப் பெருத்து விரிந்த அவளுடைய கரிய உருவம் கடல்போல இருந்தது; கண்கள் கடலிலுள்ள வடவாமுகாக்கினி போல இருந்தன.

8. கழுத்தில் போட்டிருந்த ஆபரணமும் பயத்தை உண்டுபண்ணக் கூடியதாய் இருந்தது. மதம் பிடித்த யானைகள் கையோடுகை கோத்தமாதிரி ஆபரணம் செய்யப்பட்டிருந்தது. போதாக்குறைக்கு, அவள் கர்ச்சிக்கவும் செய்தாள்.

கடம்கலுழ் கடுங்களிறு
கையொடுகை தெற்று
வடங்கொள, நுடங்கும்இடை
யாள்; மறுகும் வானோர்
இடங்களும், நெடுந்திசையும்,
ஏழுலகும், எங்கும்
அடங்கலும் நடுங்க,உரு(மு)
அஞ்சநனி ஆர்த்தாள். ௭௬

9. என்ன வார்த்தை சொல்லிக் கர்ச்சித்தாள்? 'எல்லா உயிர்களையும் தின்று கருவறுத்துவிட்டேன். அதனால், ஐயோ போகட்டும் என்று கருதி, எனக்கு ஆகாரமாக வந்தீர்களோ?' என்றுதான்.

'கடக்கரும் வலத்தெனது
காவல்இது! யாவும்
கெடக்கரு அறுத்தனன்:
இனிச்சுவை கிடக்கும்

8. கடம் - மதம். கலுழ் - பொழிகிற. தெற்று - தெற்றி, பொருத்தி. மறுகும் - கஷ்டப்படும். உருமு - இடி. ஆர்த்தாள் - கர்ச்சித்தாள்.

9. காவல் - காவலுக்கு உட்பட்ட இடம். கெட - அழிந்துபோக.

விடக்(கு)அரி தெனக்கருதி
    யோ,விதிய(து) உந்தப்
படக்கருதி யோ,பகர்மின்
    வந்தபரி(சு)' என்றே. ௭௭

10. 'யாரையும் அப்படியே விழுங்கிவிடுவேன்' என்ற தோரணையைக் காட்ட மேகங்களைப் பிடித்துப் பிழிந்து வாயில் பெய்தமாதிரி, முதலில் ஒரு பயங்கர மான அபிநயம் பிடித்தாள்.

மேகம்அவை பற்றுபு
    பிழிந்தனள்வி ழுங்கா,
மாகவரை அற்றுக
    உதைத்தனள், மதித்திண்
பாகம்எனும் முற்றெயி(று)
    அதுக்கி,அயில் பற்று
ஆகமிடை உய்த்தெறிவன்
    என்றெதிர் அழன்றாள். ௭௮

11. முனிவருக்கு அவளை அப்படியே கொன்று விடவேண்டும் என்ற கருத்துத்தான். ஆனாலும்,

---

9. விடக்கு - மாமிச உணவு. உந்த - தள்ள. பட - சாக. இது வீரமும் ஹாஸ்யமும் கலந்த பாவ முடைய பாடல்.

10. பற்றுபு - பற்றி. விழுங்கா - விழுங்கி. மாக - பெரிய. மதித்திண்பாகம்-பிறைச்சந்திரன். முற்றெயிறு- விளைந்த பல். அதுக்கி - சத்தம் உண்டாகும்படி கடித்து. அயில் - வேல். ஆகம் - மார்பு.

அவள்மேல் அம்பை ஏவி உயிரை வாங்க ராமனுக்கு மனமில்லை.

அண்ணல்முனி வற்கது
கருத்தெனினும், ஆவி
உண்என வடிக்கணை
தொடுக்கிலன் : உயிர்க்கே
துன்எனும் வினைத்தொழில்
தொடங்கியுள ளேனும்,
பெண்என மனத்திடை
பெருந்தகை நினைந்தான். ௪௯

12. 'நம்மைக் கொல்லவே எத்தனித்துநிற்கிறாள் அவள். ராமன் என்ன, இப்படி நினைக்கிறானே!' என்று எண்ணி முனிவர் சொல்லுகிறார்.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

வெறிந்த செம்மயிர்
வெள்எயிற் றாள்,அயில்
எறிந்து கொல்வன்என்(று)
ஏற்கவும், பார்க்கிலாச்
செறிந்த தாரவன்
சிந்தைக்க ருத்தெலாம்
அறிந்து, நான்மறை
அந்தணன் கூறுவான். ௫௦

---

11. தொடுக்கிலன் - எய்யவில்லை. துண் - ஆபத்து.
12. வெறிந்த - படர்ந்த. அயில் - வேல். ஏற்கவும்- ஆயத்தமாய் நிற்கவும். செறிந்த தாரவன் - அடர்ந்த மாலையைச் சூடிய ராமன்.

13. 'இவள் எல்லா அக்கிரமமும் பாக்கியில்லாமல் செய்தவள். என்னை வெறும் சக்கை என்று எண்ணித்தான் இதுவரை சாப்பிடவில்லை' என்று முனிவர் கூறுகிறார்.

'தீதென்(று) உள்ளவை
 யாவையும் செய்(து),எமைக்
கோதென்(று) உண்டிலள்,
 இத்தனை யேகுறை ;
யாதென்(று) எண்ணுவ(து)
 இக்கொடி யாளையும்
மாதென்(று) எண்ணுதி
 யோ ?மணிப் பூணினாய் ! ருக

14. 'இவளை என்ன, சடை பின்னிவிட்ட அறியாப்பெண் என்றா நினைக்கிறாய் ?' என்கிறார்.

மன்னும் பல்உயிர்
 வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையில்
 தீமைஎ தோ,ஐய !
பின்னும் தாழ்குழல்ப்
 பேதைமைப் பெண்இவள்
என்னும் தன்மை
 எளிமையின் பாலதே. ருஉ

14. புன்மை - கேடு. எளிமை - பைத்தியக்காரத்தனம்.

15. 'இனிமேல் விளையக்கூடிய எல்லாக்கேட்டையும்பற்றித் தீர ஆலோசித்துத்தான் சொல்லுகிறேன். ஏதோ கோபத்தில் சொல்லுகிறேனென்று நினையாதே' என்கிறார்.

ஈறில் நல்லறம்
பார்த்(து)இசைத் தேன் ;இவள்ச்
சீறி நின்றிது
செப்புகின் றேன்அலேன் ;
ஆறி நின்ற(து)
அறன்அன்(று) ; அரக்கியைக்
கோறி' என்(று)எதிர்
அந்தணன் கூறினன். ௫ந

16. முனிவர் வார்த்தையைக் கேட்ட ராமன் தன்னைக் கொல்லத் துணிந்துவிட்டான் என்பதை அரக்கி அறிந்துகொண்டாள். உடனே சூலம் ஒன்றை வீசினள்.

கங்கைத் தீம்புனல்
நாடன் கருத்தை,அம்
மங்கைத் தீஅனை
யாளும் மனக்கொளா,

---

15. ஈறு இல் நல் அறம் - என்றென்றும் நிலைத்து நிற்கவேண்டிய தருமம். இசைத்தேன் - சொன்னேன். இவள்ச் சீறி - இவளைச் சீறி. ஆறி - கோபாவேசம் இல்லாமல். கோறி - கொல்லுதி, கொல்வாயாக.

16. மங்கைத் தீ - மங்கையாக உருவெடுத்த தீ. மனக்கொளா - எண்ணி.

செங்கைச் சூலவெந்
தீயிணை, வாம்பொரி
வெங்கண் தீயொடு
மேற்செல வீசினுள். ருச

17. அதற்கு ராமன் செய்த பரிகாரம்.

மாலும் அக்கணம்
வாளியைத் தொட்டதும்,
கோல விற்கால்
குனித்ததும், கண்டிலர் :
காலனைப்பறித் (து)
அக்கடி யாள்விட்ட
சூலம் அற்றுவீழ்
துண்டங்கள் கண்டனர். ருரு

18. சூலம் துண்டு துண்டாய்ப் போய்விழவும், அரக்கி அரிய வேலை ஒன்று செய்தாள்.

அல்லின் ஆய(து)
அனையநி றத்தவள்,
சொல்லின் மாத்திரை
யிற்கடல் தூர்ப்பதோர்

16. வாம்பொரி - தாவி விழும் தீப்பொரி. வீசிய சூலமும் தீமயமா யிருந்தது.

17. மால் - திருமால் அவதாரமான ராமன். வாளி - அம்பு. விற்கால் - வில்லின் தண்டு. சூலம் காலன்போல இருந்தது.

18. அல் - இருள்.

கல்லின் மாரியைக்
கைவகுத் தாள், அது
வில்லின் மாரியின்
வீரன்வி லக்கினன். ருசு

19. கல்லுகளை விலக்கிவிட்டுப் பின்பு, ஆதிக்கத் தோடு கூடிய அரசனது கட்டளை எவ்வளவு வேகமாக நிறைவேற்றப்படுமோ, அவ்வளவு வேகம்கொண் டுள்ள அம்பொன்றை விட்டான்.

சந்தம்

தானன தானன தன் தானன தானன தன்

சொல்ஒக்கும் கடியவேக கச்
சுடுசரம் ஒன்றைச்செம் மல்
அல்ஒக்கும் நிறத்தினள் மேல்
விடுதலும், வயிரக்குன் றக்
கல்ஒக்கும் நெஞ்சில்த்தங் கா(து)
அப்புறம் கழன்று,கல் லாப்
புல்லர்க்கு நல்லோர்சொன் ன
பொருள்எனப் போயிற்றன் றே. ருஎ

20. அம்பு அரக்கியின் மார்பை ஊடுருவிப் போனதும், புண்ணிலிருந்து பெருகிய இரத்தம் நிலம் எல்லாம் பரந்தது. அந்த இரத்தப் பெருக்கானது,

---

18. கல்லின் மாரி - கல்லுகளால் ஆகிய மழை.

19. சரம் - அம்பு. செம்மல் - வீரன். அல் - இருள். பொருள் - நன்மையைத் தரக்கூடிய பொருள். (மதுபானத்திலேயே மூழ்கியுள்ள ஒருவனுக்கு, மதுவிலக் கைப்பற்றி ஒருவர் சொன்னால், சொன்னவருக்கு விஷயம் தெரியாது என்று அவர் வார்த்தையை அப்படியே தள்ளி விடுவது சாமானிய உண்மை.)

செவ்வானம் எப்படியோ மண்ணில் வந்துகிடந்த மாதிரி தோன்றிற்று.

கான்(று)எரி தலையள்ஆ ய
 அரக்கிதன் கடினமார் பத்(து)
ஊன்றிய பகழிவாய் ஊ(டு)
 ஒழுகிய குறுதிவெள் ளம்,
ஆன்றஅக் கானம்எல் லாம்
 பரந்ததால் : அந்திமா லைத்
தோன்றிய செக்கர்,வா னத்
 தொடக்கற்று வீழ்ந்ததொத் தே. ௫அ

21. இதுதான் ராமன் முதல்முதலாகச் செய்த போர். அரக்கர்களுடைய உயிரைக் குடிக்கவேண்டும் என்று வெகுநாளாகக் காத்துக்கொண்டிருந்த எமனுக்கு இப்போது கொஞ்சம் சுவைதெரிய நேர்ந்தது என்கிறார் கவிஞர்.

வாசநாள் மலரோன்அன் ன
 மாமுனி பணிமரு த
காசுலாம் கனகப்பைம் பூண்
 காகுத்தன் கன்னிப்போ ரில்,

20. கான்று - வேகத்தோடு பரந்து. பகழி - அம்பு. குருதி - இரத்தம். ஆன்ற - அகன்ற. செக்கர் - செவ்வானம்.

21. வாச நாள் மலரோன் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். அன்ன - போன்ற. காசு - பதக்கம். பைம் பூண் - அழகிய ஆபரணம். காகுத்தன் - ககுத்ஸ்தன் என்ற அரசன் வமிசத்தைச் சேர்ந்த ராமன். கன்னிப்போர் - முதல்ப்போர். (ஆங்கிலத்திலும் இப்படி வழக்குண்டு.)

கூசிலா அரக்கர்தங் கள்
குலத்துயிர் குடிக்களண் ணி
ஆசையால் உழலும்கூற் றும்
சுவைசிறி(து) அறிந்ததன் றே. ௫௧

22. இந்த விதமாகக் கன்னிப்போர் நடந்தது பற்றி மங்களகரமான ஒரு கொண்டாட்டம். தேவர்களே வந்து விசுவாமித்திரரிடம் பேசுவதாகக் கவிஞர் கூறுகிறார்.

'யாமும்எம் இருக்கைபெற் றேம்,
உனக்(கு)இடை யூறும்இன் றால்,
கோமகற்(கு) இனிநீதெய் வப்
படைக்கலம் கொடுத்தி!' என் று
மாமுனிக்(கு) உரைத்துப்,பின் னர்
விற்கொண்ட மழையனுன் மேல்
பூமழை பொழிந்துவாழ்த் தி
விண்ணவர் போயினு ரே. ௫௦

21. கூசிலா - கூசுதல் இல்லாத, பயம் யார் பற்றியும் இல்லாத. கூற்றும் - எமனும்.

22. இருக்கை - வாழ்வதற்கு ஒரு இடம்; தேவலோகந்தான். கோமகன் - அரசிளங்குமரனுன ராமன். வில்லோடு கூடிய மழைமேல் பூமழை பொழிந்தார் என்பதில் ஒரு நயம்.

# 8. வேள்விப் படலம்

1. விசுவாமித்திரர் ராம லட்சுமணர் ஆகிய மூவரும் தாடகைவதம் முடிந்ததும், அவள் இருந்த பாலை வனமான பிரதேசத்தைக் கடந்துபோய், வளமும் அழகும் வாய்ந்த ஒரு பிரதேசத்தை அடைந்தார்கள். இந்தப் பிரதேசம் யாருடையது என்று ராமன் கேட்டான். அதற்கு முனிவர் சொல்லுகிறார் : 'தேவேந்திரனும் தேவர்களும் இங்கே ஆனந்தமாய் வாழ்ந்து வந்தார்கள். அப்போது மகாபலி என்னும் பெயருடைய மகா சக்திவாய்ந்த அரசன் ஒருவன் இந்தப் பிரதேசத்தை ஆண்டுகொண்டிருந்தான். அவனுடைய சக்தியை எடுத்துச் சொல்லவேண்டும் என்றால், ஒரு தந்தத்தினாலேயே பூமியைத் தூக்கிய வராகமூர்த்தியைத்தான் சொல்லவேண்டும். அவனுடைய உயர்ந்த சீலம் காரணமாகவே, வானுலகம் பூவுலகம் எல்லாம் அவனுடைய ஆளுகைக்குள் வந்துவிடும்போலத் தோன்றியது.

சந்தம்

தானன தன்னன தன்னன தன்ன.

ஆனவன் இங்(கு)உறை -
நின்றஅந் நாள்வாய்,
ஊனம்இல் ஞாலம்
ஒடுங்கும்எ யிற்றின்

---

1. ஆனவன் - இந்திரனானவன். நாளவாய - காலத்தில். ஊனம் இல் - குற்றமில்லாத, அற்புதமாய் அமைந்துள்ள. ஒடுங்கும் எயிறு,- தாங்கிவைத்துள்ள தந்தம்.

ஏனம்ள னும்திறல்
மாவலி என்பான்
வானமும் வையமும்
வெளவுதல் செய்தான். கூக

2. வானத்தையும் பூமியையும் கைப்பற்றிய மகா பலி அரிய யாகம் ஒன்றைச் செய்யவும் முற்பட்டு விட்டான். மேலும், நாட்டின் நன்மையை உத்தேசித்து ராஜ்யத்தைச் சிறந்த பண்புடையாளரிடமே ஒப்பு வித்துவிடவேண்டும் என்றும் தீர்மானித்தான்.

செய்தவன், வானவ-
ரும்செயல் ஆற்ரு
நெய்தவழ் வேள்வியை
முற்றிட நின்ருன்,
ஐயமில் சிந்தையன்
அந்தணர் தம்பால்
வையமும் யாவும்
வழங்க வலித்தான். கூஉ

3. அடடா, இப்படியெல்லாம் செய்துவிட்டால் மகாபலிக்கு எவ்வளவோ சக்தி வந்துவிடுமே, நம்மு டைய பாடு மோசமாய்ப் போய்விடுமே என்று பயந்து,

1. ஏனம் - பன்றி, வராகாவதாரம். வையம் - பூமி. வெளவுதல் - கைக்கொள்ளுதல்.

2. செய்தவன் - மேலே சொன்னபடி வெளவுதல் செய்தவன். முற்றிட - செய்து முடிக்க. ஐயம் இல் சிந்தையன் - ராஜ்யம் சரியாக நடக்கும் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லாதவனுய். வழங்க - ஒப்பு விக்க. வலித்தான் - தீர்மானித்தான்.

வானவர்கள் போய்த் திருமாலிடம் விண்ணப்பித்தார்கள். (இந்தவிதமாகச் சிறந்த காரியங்களை அரசர்கள் செய்வார்களாயின், அவர்களுக்கு அபார பலம் உண்டாகும் என்ற உண்மையைக் கவிஞர் ஹாஸ்யபாவத்தோடு காட்டுகிறார்.)

ஆய(து)அ றிந்தனர்
　　வானவர் ; அந்நாள்
மாயனை வந்து
　　வணங்கிஇ ரந்தார் ;
தீயவன் வெந்தொழில்
　　தீர்என நின்றார் ;
நாயக னும்அது
　　செய்யந யந்தான். ௩

4. வானவர்கள் மனுச்செய்துவிட்டார்கள் என்றால், திருமால் வாய்தாப்போடுகிற வியாபாரம் கிடையாது. மேலே சொன்ன சகிக்க முடியாத 'வெந்தொழிலை' ஒருவன் செய்து கொண்டிருக்கும்போது தாமதிக்கலாமா! உடனே என்ன செய்தார்? சோதிடம் வல்லவரான காசிப முனிவருக்கு அவருடைய மனைவி அதிதி என்பவள் வயிற்றில் வந்து அப்படியே அவதரித்தார். பிறந்தபோது ரொம்பவும் குள்ளமான

3. மாயனை - வைகுந்தத்திலுள்ள திருமாலை. தீயவன் வெந்தொழில் என்றது ஹாஸ்ய ரஸத்தில் சொல்லுவது. (பேத்திப் பெண்கள் வந்து இலைபோட்டுப் பரிமாறி உபசாரப்படுத்தும் போது, 'அட பாதகத்திகளா! என்ன அக்கிரமங்கள் எல்லாம் செய்கிறீர்கள்' என்று பாட்டனார் சொல்லுவதிலுள்ள அருமையைக் காட்டும் ஹாஸ்ய பாவம்.)

வடிவத்தோடு பிறந்தார். அந்தக் குள்ள வடிவத்துக் குள் வரம்பில்லாத பூரண தத்துவங்கள் எல்லாமே அடங்கியிருந்தன. எதுபோல: கோடிகோடி வரு ஷங்களாக ஆலமரத்திலுள்ள அற்புதத் தத்துவங்கள் எல்லாம் பரம்பரையை ஒட்டி, விடாமல் வந்திருக்கின் றன; இனியும் எத்தனையோ கோடி வருஷங்கள் தலை முறை தலைமுறையாய் நிற்கப் போகின்றன; அற் புதத்தில் அற்புதம் என்னவென்றால், எவ்வளவோ விரிவாயும் ஆதிஅந்தம் இல்லை என்றும்கூடச் சொல் லக்கூடிய ஆலின் தத்துவங்கள் எல்லாம் ஒரு வித்துக் குள்ளேயே தங்கிக் கிடப்பதுதான். குறள் வடிவமும் அப்படித்தான். பேரண்டத்திலுள்ள தத்துவங்களைத் தனக்குள் அடக்கிக்கொண்டிருந்தது,அந்த வாமனனது வடிவம்.

காலம்நு னித்(து)உணர்
காசிப னுக்கும்
வால்அதி திக்கும்ஓர்
மாமக வாகி
நீலநி றத்து
நெடுந்தகை வந்(து)ஓர்
ஆல்அமர் வித்தின்
அருங்குறள் ஆனான். ௬௪

4. நுனித்து - நுட்பமாகக் கணிக்கும். மா மகவு - தெய்வத்தன்மை பெற்ற குழந்தை. நீல நிறத்து நெடுந் தகை - நீல மேனியோடு கூடிய திருமால்; அதாவது இறுதியற்ற மேனியோடு கூடிய கடவுள் தத்துவம். ஆல் - ஆலமரத்துக்குரிய அற்புதத் தத்துவம். அமர் - தங்கிக் கிடக்கிற. வித்தின் - வித்தைப்போல.

5. இப்படிக் குள்ள வடிவமான அவன், சகல வித்தைகளையும் கற்று, ஒரு யோகியாய் இருந்தான். பூணூலை அணிந்து, அரையில் புல்லினால் திரித்த அரைஞாணையும் அணிந்து, வாயில் ஒரு மந்திரத்தைச் சதா உச்சரிப்பவனாய்ப் புறப்பட்டான். எங்கும் நிறைந்த அறிவை (சிற்பதத்தை) அடைந்த ஞானிகளிடத்துக் காணும் ஒளியும் ஆனந்தமும் அவன் மேனியில் காணக் கிடந்தன.

முப்புரி நூலினன்,
முஞ்சியன், விஞ்சை
கற்பதோர் நாவன்,
அனற்படு கையன்,
அற்புதன், அற்புத
ரேஅறி யுந்தன்
சிற்பதம் ஒப்பதோர்
மெய்க்கொடு சென்றான். ௬௫

6. இப்படி முனிவேடம் தரித்து வந்தவனை மகாபலி வரவேற்கிறான்.

அன்றவன் வந்த(து)
அறிந்(து),உல கெல்லாம்
வென்றவன் முந்தி
விரைந்தெதிர் கொண்டான் :

5. அனலைச் சதா கையில் ஏந்தியுள்ளவன் ; நெருப்புப் பெட்டி இல்லாத காலத்தில் அனலேந்துவது ஒரு தருமம். அற்புதன் - கடவுள் அவதாரமாகவுள்ள குள்ளன். அற்புதர் - ஜீவன்முத்தர்கள். சித் - அறிவு. சிற்பதம் - பேரறிவை அடைந்த நிலை. மெய் - உடல்.
6. அன்று - அங்கே.

நின்தனில் அந்தணர்
இல்லை, நிறைந்தோர்
என்தனில் உய்ந்தவர்
யார்இனி ' என்றான். ௬௬

7. இப்படி அரசன் சொல்லவும், முனிவர் உபசாரம் சொல்லுகிறார் : ' உன்னுடைய கையானது யாசித்து வந்தவர்கள் விருப்பத்துக்கு மேலாகவே பொருளை வீசி வீசிக் கொடுத்த காரணத்தால் நீண்டு போய்விட்டது ; உன்னிடம் வந்தவர்கள் வேண்டியதை அடைந்து உயர்ந்தவர் ஆகிவிடுகிறார்கள் ; உன்னிடம் வரத் தெரியாதவர்கள் ஒன்றுக்கும் உதவாதவர்களாவர். '

ஆண்தகை அவ்வகை
கூற, அறிந்தோன்,
' வேண்டினர் வேட்கையின்
மேற்பட வீசி
நீண்டகை யாய் ! என
நின்உழை வந்தோர்
மாண்டவர் ; அல்லவர்
மாண்பிலர் ' என்றான். ௬௭

---

6. நிறைந்தோர் - பாக்கியம்பெற்றவர்கள். நின்தனில் - உன்னைப்போல. உயர்ந்தவர் - மேலான பதவி அடைந்தவர்கள்.

7. ஆண்தகை - அரசன். நின் உழை - உன்னிடம். மாண்டவர் - சிறந்தவர். மாண்பிலர் - சிறப்பொன்றும் இல்லாதவர்.

4

8. முனிவர் இப்படிப் புகழ்ந்ததில், மகாபலிக்கு மிக்க சந்தோஷம் உண்டாகி, 'என்ன செய்யக் கட்டளை இடுகிறீர்கள் ?' என்ருன்.

சிந்தை உவந்(து)எதிர்
என்செய என்ருன் :
அந்தணன் 'மூவடி
மண்அருள் ; உண்டேல்,
வெந்திற லாய் ! இது
வேண்டும்' எனுமுன்,
தந்தனன் என்றனன் :
வெள்ளித டுத்தான். ௯அ

9. தடுத்ததோடு நிற்காமல், 'இதெல்லாம் ஏமாற்றம்' என்று சுக்கிராசாரி சொல்லுகிருர்.

'கண்டதி றத்(து)இது
கைதவம், ஐய !
கொண்டல்நி றக்குறள்
என்பது கொள்ளேல் :
அண்டமும் முற்றும்
அகண்டமும் மேனுள்
உண்டவன், நீயி(து)
உணர்ந்துகொள்' என்ருன். ௯௯

8. அருள் - கொடு. வெள்ளி-மகாபலியின் குருவும் மந்திரியுமாகிய சுக்கிராசாரி. குறிப்பு : கடைசி இரண்டடியில், எல்லாம் வேகமாய் நிகழ்ந்தது என்று சொல்லுகிற பாவ உருவத்தைப் பார்க்கலாம்.

9. கைதவம் - ஏமாற்றம். அண்டம் - வானவட்டத்தில் அடங்கிய உலகங்கள். அகண்டம் - இறுதி இல்லாத வெளி.

10. மகாபலி பதில் சொல்லுகிறான் : 'ரொம்ப நல்லதாய்ப் போய்விட்டது. யாசிக்க வந்தவன் விஷ்ணுமூர்த்தியே என்றால், என்னுடைய யோகத்தை என்ன என்று சொல்லுவது!'

'நினைக்கிலை, என்கை
நிமிர்ந்திட வந்து
தனக்(கு)இய லாவகை
தாழ்வது, தாழ்வில்
கனக்கரி யானது
கைத்தலம், - என்னில்,
எனக்(கு)இதன் மேல்நலம்
யாதுகொல் ?' என்றான். ௧0

11. மேலும், ஒருவனுக்கு இருக்கவேண்டிய இலட்சியத்தைப் பற்றியும் எடுத்துச் சொல்லுகிறான் மகாபலி.

'மாய்ந்தவர் மாய்ந்தவர்
அல்லர்கள் : மாயா(து)
ஏந்திய கைகொ(டு)
இரந்தவர், எந்தாய் !

---

10. 'எனக்கு ஏற்படும் பெருமையை நீ நினைக்கவில்லை. ஏற்கும்போது தாழ்வது யாருடைய கை? மகா விஷ்ணுவின் கை. மேலே நிமிர்ந்துநிற்பது என்னுடைய கை அல்லவா !' என்பது பொருள்.

11. மாய்ந்தவர் - இறந்தவர். இரந்தவர் - யாசித்தவர். எந்தாய் - என் குருவே.

வீந்தவர் என்பவர் :
வீந்தவ ரேனும்,
ஈந்தவர் அல்ல(து)
இருந்தவர் யாரே ? ' எக

12. இப்படியாக, கொடை கொடுப்பதனால் உண்டாகும் பயனை எடுத்துச்சொல்லி, தன் குரு சொன்ன வார்த்தையைத் தட்டிவிட்டு, 'மூன்று அடி மண் விரும்பின், அளந்தெடுத்துக்கொள்' என்று சொல்லிவிட்டான். தத்தம் பண்ணுவதற்காகத் தண்ணீரும் எப்போதும் தயாராய் மகாபலி பக்கத்தில் இருந்தது.

சந்தம்

தானன தானன தான தன்னன

முடியஇம் மொழிஎலாம்
மொழிந்து, மந்திரி
கொடியன்என்(று), உரைத்தசொல்
ஒன்றும் கொண்டிலன் ;
'அடியொரு மூன்றும்நீ
அளந்து கொள்'கென
நெடியவன் குறியகை
நீரில் நீட்டினன். எஉ

11. வீந்தவர் - இறந்தவர். குறிப்பு : விஷயத்தை அழுத்துகிற பாவம் செய்யுளில் ரொம்ப அருமையாய் வந்திருக்கிறது.

12. என்று - என்று நினைத்து. உரைத்த - மந்திரி உரைத்த. கொள்கென - கொள்க என. நெடியவன் - நெடுமால். கொடுத்ததை உறுதிப் படுத்துவதற்காகத் தண்ணீர் வார்த்தல் சம்பிரதாயம்.

**13.** பெற்றோருக்குத் தங்கள் பிள்ளை எவ்வளவு கேவலமாய் இருந்தாலும் அழகாய்த் தோன்றுவது இயல்பு. ஆனால், இந்தக் குள்ளவடிவம் பெற்றோருமே பார்த்து இகழும்படி அவ்வளவு கேவலமாய் இருந்ததாம். தண்ணீர் தன் கையில் பட்டதும் குள்ளன் வளர்ந்துவிட்டான். அந்த வளர்ச்சியைப் பார்க்க முதலில் வியப்பாய் இருந்தது. பிறகு, பயமாகவே போய்விட்டது.

கயந்தரு நறும்புனல்
  கையில்த் தீண்டலும்,
பயந்தவர் களும்இகழ்
  குறளன், பார்த்(து)எதிர்
வியந்தவர் வெருக்கொள
  விசும்பின் ஓங்கினன் :
உயர்ந்தவர்க்(கு) உதவிய
  உதவி ஒப்பவே ! எங

---

13. கயம் - தாமரைத் தடாகம். நறும்-மணமுள்ள. பயந்தவர் - பெற்றோர். வெருக்கொள - அச்சம்கொள்ள. விசும்பு - வானம். கடைசி அடி, திருவள்ளுவர் திருக்குறள் ஒன்றை அடிப்படையாகக் கொண்டது : ஒருவர் பத்துப்பத்து ரூபாயாக நாலுபேருக்குத் தருமம்செய்கிறார் என்று வைத்துக் கொள்ளுவோம். 'என்ன கொடுத்தார், அப்பா ?' என்று எதிரில் வந்தவன் நாலு பேரையும் கேட்கிறான். முதலாவது பேர்வழி, பத்துக்காசு என்னமோ கொடுத்தான் என்கிறான். அடுத்தவன், பத்து ரூபாய் கொடுத்தான் என்கிறான். மூன்றாவது ஆசாமி, இந்தப் பத்து ரூபாயும் எனக்கு நூறு ரூபாய் ; புண்ணியவான் கொடுத்தான் என்கிறான். நாலாவது மனுஷன் உயர்ந்த பண்புடையவன். தாராளப் பிரபு ! கொடுத்தது பத்தா,

14. குள்ள மூர்த்தியின் வேலையை நாம் மனக் கண்முன் பாவனைசெய்து பார்க்கவேண்டும். பூமியை மிதித்துள்ள பாதம் பூமி முழுவதையும் மூடி அப் படியே விரியாது நின்றுவிடுகிறது. எடுத்த காலோ, வானுலகத்தையெல்லாம் தனக்குள் அடக்கிக்கொண்டு, பேரண்டத்தில் வேறு இடம் இல்லை என்று தெரிந்து கொண்டு திரும்பிவருகிறது.

நின்றகால் மண்எலாம்
நிரப்பி, அப்புறம்
சென்றுபா விற்றிலே
சிறிது பார்எனா :
ஒன்றவா னகம்எலாம்
ஒடுக்கி, உம்பரை
வென்றகால், மீண்டது
வெளிபெ றாமையால் ! எச

15. இந்த விசித்திரமான காரியத்தைச் சொல்லி விட்டு, விசுவாமித்திரர் ராமனைப் பார்த்துச்

---

ஆயிரம் ஐயா ! என்று மிக்க உணர்ச்சியோடு பாராட் டிச் சொல்லுகிறான். ஆகவே, உயர்ந்தவருக்குச் செய்த உதவி அப்படியே மதிப்பில் ரொம்ப உயர்ந்துபோய் விடுகிறது. குறள் : ' உதவி வரைத்(து) அன்று உதவி, உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து.' திருக்குற ளில் உள்ளீடாகக் கிடக்கும் உண்மையை எவ்வளவாக அனுபவித்திருக்கிறார் கம்பர் !

14. பார் - பூமி. ஒன்ற - ஏகமாக. உம்பரை - விண்ணை. எனா - என்று.

சொல்லுகிருர் : 'ஒரு பாதம் உலகங்களை யெல்லாம் தனக்குள் அடக்கிவிட்டது. மற்றைய பாதம் பக்த னுடைய உடலோடு கலந்து ஐக்கியமாய் விட்டது. (எங்கும் நிறைந்த கடவுள், பக்தருக்குள் அடக்கம் அல்லவா !) துளசிமாலையை அணிந்துள்ள விஷ்ணு மூர்த்தியைப் பார்த்தாயா, ரொம்ப ரொம்பச் சிறியன் அல்லவா !' வியப்பும் ஹாஸ்யமும் கலந்த பாவம் இது.

உலகெலாம் உள்ளடி
அடக்கிற்(று) ஓர்அடி ;
அலகிலா ஏனைய(து)
அன்பன் மேயதால் ;
இலகுலாம் துழாய்முடி
ஏக நாயகன்,
சிலகுலாம் தோளினுய்,
சிறியன் சாலவே ! எரு

16. இப்படிச் சாதுரியமாய் நடத்திய குட்டிக் கதையை கம்பர் எப்படிப் பூர்த்திபண்ணுகிருர் பாருங் கள் ! தம் திருவடியோடு மகாபலி ஐக்கியமாய் விட்டபடியால், அவன் கைவசம் இருந்த இந்தப் பிரதேசத்தை இந்திரனுக்குக் கொடுத்துவிட்டு, அப் படியே தம் இருப்பிடமாகிய திருப்பாற்கடலுக்குப் போய்விட்டார் திருமால். அவருடைய திருவடிகள்,

---

15. அலகு இலா - வரம்பில்லாமல் எட்டக் கூடிய. ஏகநாயகன் - எல்லாம் தானேயாய் இருக்கிற கடவுள். சிலகுலாம் தோளினுய் - வில் ஏந்திய ராமனே.

நாம் பார்த்தோமே, எவ்வளவோ கஷ்டப்பட்டு விட்டன அல்லவா ?

உரிய(து)இந் திரற்கிதென்(று)
உலகம் ஈந்துபோய்,
விரிதிரைப் பாற்கடல்ப்
பள்ளி மேவினன்
கரியவன் ; உலகெலாம்
கடந்த தாளிணை,
திருமகள் கரந்தொடச்
சிவந்து காட்டிற்றே ! எகூ

---

## வேள்வி காத்த கதை

இவ்விதமாகக் கதையை முடித்துவிட்டு, 'இந்த இடமே நம்முடைய யாகத்தைச் செய்வதற்குச் சரியான இடம்' என்று விசுவாமித்திரர் சொல்லுகிறார். சொல்லிவிட்டு, யாகசாலையை விஸ்தாரமாகக் கட்டி, யாகத்துக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தயாரித்து வைத்துக்கொண்டார். ராம லட்சுமணர்கள் ஆயுதபாணிகளாய் இமை கொட்டாத மாதிரியாக யாகசாலையைக் காத்துநிற்கிறார்கள். 'அரக்கர்கள் இன்னும் ஏன் வரவில்லை?' என்று ஆத்திரமாக ராமன் அடிக்கடி முனிவரைக் கேட்டுக்கொண்டிருக்கிறான்.

இப்படிக் கேட்டுக்கொண்டிருக்கும் தருணத்தில், திடீரென்று ஆகாயத்தில் அரக்கர்களுடைய இடிமுழக்கம் போன்ற ஆரவாரம் கேட்டது. உடனே அவர்களுடைய கொடிய தொழிலைச் செய்ய ஆரம்

பித்து விட்டார்கள். அம்புகளை வீசி எறிந்தார்கள். கொதிக்கக் கொதிக்க வெந்நீரை அருவிபோலக் கொட்டினார்கள். மலைகளையே பிடுங்கி, அவைகளைக் கொண்டு மோதினார்கள். மேலும், அவர்கள் வைத வசவோ சகிக்கமுடியாது. அதட்டுகிற சத்தம் யாரையும் நடுங்கச் செய்துவிடும்.

இப்படியெல்லாம் ஆர்ப்பாட்டம் பண்ணிக் கொண்டு, அரக்கர்களுடைய சேனையானது வானத்தை ஒரேபடியாய் மூடிக்கொண்டது. ராமனும் லட்சுமணனும் அவர்கள்மேல் அம்புகளைச் சரமாரியாய் எய்தார்கள். அம்புகள் தைத்து அரக்கர்களுடைய உடலிலிருந்து இரத்தம் மழையாய்க் கொட்டிற்று. அரக்கர்களில் முக்கால்வாசிப் பேர் இறந்துபட்டார்கள். அவர்களுக்குத் தலைவரான இருவரில், சுபாகு இறந்தான். மற்றவனை மாரீசன் மாத்திரம் எப்படியோ தப்பிக் கடலில்போய் வீழ்ந்தான். மிஞ்சிய அரக்கர்களோ இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போய் விட்டார்கள்.

அரக்கர்கள் வமிசமே தொலைந்தது என்று எண்ணிய வானவர்கள் வந்து பூமழை பொழிந்து, ராம லட்சுமணர்களை வாழ்த்திவிட்டுப் போனார்கள். வானவர்களைப் பார்த்து அங்குள்ள மரங்களுமே புஷ்பங்களைச் சொரிந்தன. இந்தச் சந்தர்ப்பத்தில் விசுவாமித்திரரும் யாகத்தைத் திருப்தியாக முடித்துக் கொண்டார்.

ராமனைப் பார்த்து 'அப்பா, ராமா, நீ பேரண்டத்தையே வயிற்றில் வைத்துக் காப்பாற்றின திருமால் அல்லவா! சரி, இந்த யாகமும் காப்பதற்கு

உனக்கு ஒரு பொருளாய் விட்டது. இந்த உண்மையை அறிந்து கொண்டேன். என்னைப் போல பாக்கியசாலி யார்!' என்று விசுவாமித்திர முனிவர் உடல் புளகிக்கக் கூறுகிறார்.

அப்பால், 'இனிச் செய்யவேண்டிய பணி ஏதேனும் உண்டா' என்று இராமன் கேட்டான். அதற்கு, 'மிதிலையில் ஜனகன் என்று ஒரு அரசன் இருக்கிறான்; அவன் ஒரு வேள்வி செய்யப்போகிறான்; நாம் அதற்காக அங்கே போகவேண்டும்' என்று முனிவர் சொல்லுகிறார்.

## அகலிகை கதை

விசுவாமித்திர முனிவர், ராமன் லட்சுமணன் ஆகிய மூவரும் மிதிலையை நோக்கிச் செல்லுகிறார்கள். மிதிலா நகரத்துக்கு வெளியேயுள்ள முனிவர்கள் வசிக்கும் ஆசிரமங்களுக்கு ஊடே, நிலங்கீறிய நேரத்தில், நடந்து போகிறார்கள். ராமனுடைய பாதம் வழியில் கிடந்த ஒரு கல்ச்சிலையில் பட்டு இடறவும், அந்தக் கல்ச்சிலையானது மூவரும் அதிசயிக்கும்படி ஒரு அழகிய பெண்ணாக எழுந்து ஒதுங்கி நின்றது. 'இது என்ன விஷயம், ஒன்றும் தெரியவில்லையே!' என்று ராமன் முனிவரைப் பார்த்துக் கேட்கிறான். அதற்கு முனிவர் சொல்லுகிறார்:

'கௌதமர் என்ற முனிவர் இங்கே வசிக்கிறார். அவருடைய மனைவியாகிய அகலிகையை, தேவேந்திரன் இச்சித்து, ஒரு நாள் இரவு கௌதமர் இல்லாத நேரம் பார்த்து, அவரைப் போலவே மாறுவேடம் பூண்டு ஆசிரமத்துக்குள் வந்தான். அகலிகையும் தன் கணவரே

வந்தார் என்று நினைத்து தேவேந்திரனோடு சல்லாப மாய் இருந்தாள். அப்போது கணவர் வந்து இருவரை யும் பார்த்துவிட்டு, இந்திரனுக்கு உடம்பெல்லாம் கண்ணாகக் கடவது என்று சாபம் இட்டார். மனைவி யையும், கல்லாகக் கடவது என்று சபித்தார். அகலிகை, மிகவும் மனம் வருந்தி, சாபத்துக்கு விமோசனம் அருள வேண்டும் என்று கணவரைப் பிரார்த்தித்தாள். அதன் பேரில், இராமனுடைய திருவடிபடும், அப்போதுதான் விமோசனம், என்றார் கௌதமர். ராமா, இப்போது உன் திருவடிபட்டது. விமோசனமும் ஏற்பட்டது. கல் மறுபடியும் தன் பூர்வமான உருவம் பெற்று, அகலிகை அதோ நிற்கிறாள் பார்' என்று சொன்னார்.

அகலிகையை உடன் கூட்டிக்கொண்டு, கௌதமர் ஆசிரமத்துக்கு மூவரும் போகிறார்கள். விசுவாமித்திர ரின் வேண்டுகோளுக்கிணங்கி, கௌதமரும் அகலி கையை அங்கீகரிக்கிறார். பிறகு மூவரும் மிதிலா நகரத்துக்கே செல்லுகிறார்கள்.

# 9. மிதிலைக் காட்சிப் படலம்

1. மிதிலை நகரத்துக்குள் மூவரும் பிரவேசித்து அதன் அழகைப் பார்த்து அனுபவித்துக் கொண்டு போகிறார்கள். ராமன் முன்னாலே போகிறான். லட்சுமணனும் விசுவாமித்திரரும் பின்னாக நின்றுநின்று போகிறார்கள்.

போகிற வழியை ஒட்டி நீர் நிறைந்த அகழி கிடந்தது. அதில் ஆண் அன்னங்களும் பெண் அன்னங்களும் நீந்தி விளையாடிக் கொண்டிருந்தன. அவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான் ராமன். அப்போது அந்தத் தண்ணீரில் பெண்ணின் சாயல் ஒன்று தெரிந்தது. ஏறிட்டுப் பார்த்தான். அகழியின் எதிர்ப்புறத்தில் நின்ற மாளிகையின் மாடியில், எங்கும் காணாத அழகோடு கூடிய ஒரு பெண் நின்றாள். அவளுடைய அழகு எப்படி இருந்தது?

அழகுத் தெய்வம் என்பது ஒன்று. அது உடலுக்குள் ஊடுருவி அழகு மயமாய் நிற்பது. உடலை விட்டு வெளியிலும் உலவக் கூடிய மென்மையான ஒளியினால் ஆகிய உருவம். அது, பெண்கள் உலகத்தில் தோன்றிய நாள் தொட்டு அவர்கள் உடலின் சாயலோடெல்லாம் ஒட்டிப் பழகி, ஆங்காங்கு கிடைத்த அழகை யெல்லாம் தன்னோடு சேர்த்து ஒரு மயமாய் ஆக்கிக்கொண்டது. அந்த உருவத்தில் ஒளிசெய்யும் ஆபரணங்களின் காந்தியையும், காதை

ஒட்டிய குழைகளையும் பார்க்கலாம். கறுத்த விழிகளை யும் துலாம்பரமாய்ப் பார்க்கலாம். மற்ற உறுப்பெல் லாம் மெல்லிய ஒளிரேகை கொண்டு கோடிட்டுக் காட்டிய மாதிரிதான் இருக்கும். இப்படியாக அழகுத் தெய்வத்தை உருவாக்கிக் காட்டுகிறார் கம்பர்.

இழைகளும் குழைகளும்
மின்ன, முன்னமே
மழைபொரு கண் இணை
மடந்தை மாரொடும்
பழகிய தெனினும்,இப்
பாவை தோன்றலால்,
அழகெனும் அழகும்ஓர்
அழகு பெற்றதே. எஎ

2. இப்படி அற்புதமாய் அழகு வாய்ந்த சீதையை ராமன் நோக்கினான். அதே சமயத்தில் அவனைச் சீதை யும் நோக்கினாள். சீதை கண்கள் ராமன் கண்களை உண்ணப் பார்க்கின்றன. அப்படியே ராமன் கண் களும் அவளுடைய கண்களை உண்ணப் பார்க் கின்றன. இந்த நிலையில் உணர்ச்சி ஓய்ந்துவிடுகிறது.

---

1. இழை - ஆபரணம். குழை - காதில் அணியும் தூக்கு. மின்ன - கிரணங்கள் பாயும்படி. மழைபொரு- நீலமேகம் போன்ற; பார்ப்பதற்கு அவ்வளவு குளுமை யான. மடந்தைமார் - உலகத்தில் அறுதியாகவே வந்து நிலவிப்போன பெண் இனம். இப்பாவை - சீதை. அழகும் - அழகுத் தெய்வமும். ஓர் அழகு - என்றும் இல் லாத புதிய அழகை.

இருவருக்கும் அந்த அனுபவத்தைத் தாங்க முடிய வில்லை என்ற முறையில்.

எண்அரும் நலத்தினாள்
இனையள் நின்றுழி,
கண்ணொடு கண்,இணை
கவ்வி ஒன்றைஒன்(று)
உண்ணவும், நிலைபெறு(து)
உணர்வு ஓய்ந்திட, -
அண்ணலும் நோக்கினான்
அவளும் நோக்கினாள். எஅ

3. ஒவ்வொருவர் உள்ளமும் ஒரு பாசக் கயிற் றைக் கண் வழியாக வெளியே வீசி மற்றவரைக் கட்டிப் பிடித்தது ; பிறகு கயிற்றை இழுத்தது.

பருகிய நோக்(கு)எனும்
பாசத் தால்பிணித்(து),
ஒருவரை ஒருவர்தம்
உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை அண்ணலும்
வாள்க்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்(கு)
இதயம் எய்தினார். எகூ

---

2. நலம் - அழகு. இனையள் - இப்படிப்பட்டவள்.

3. பார்வையே கயிறு ; உணர்ச்சி மேலீட்டோடு கூடிய பார்வை அது. அதிசயத்தைக் காட்டுவதற்காக ஒரு விசித்திரமான காரியத்தைக் கையாளுகிறார் கவிஞர்.

4. இருவருக்கும் தங்கள் உடல்கள் இரண்டும் ஒன்றாய்விடப் பார்க்கின்றன ; ஆனால், அது இயலவில்லை ; உயிரோ ஒன்றாகத்தான் இருக்கிறது. பாற்கடலில் முன்னம் ஒன்றாய்ச் சயனித்தவர்கள் தானே அவர்கள்? மறுபடியும் உடல் உயிர் எல்லாம் ஒன்றாய்ச் சேர எத்தனிப்பதில் அதிசயம் என்ன ?

மருங்கிலா நங்கைக்கும்
வசையில் ஐயற்கும்
ஒருங்குறும் இரண்(டு)உடல்,
உயிர்ஒன்(று) ஆயதே ;
கருங்கடல் பள்ளியில்க்
கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால்ப்
பேசல் வேண்டுமோ ? அ0

5. இந்தச் சந்தர்ப்பத்தில் லட்சுமணனும் முனிவரும் அந்த இடம் வந்துசேர்ந்துவிட்டார்கள். அவர்களோடு ராமனும் போய்விட்டான்.

அந்தமில் அழகனை
அடைகி லாமையால்,
பைந்தொடி ஓவியப்
பாவை போன்றனள் :

---

4. சீதைக்கு இடை இல்லை ; சரி, ராமனுக்கும் வசை என்பது இல்லைதானே என்பது பாவம்.

5. உயிர் உணர்ச்சி இல்லாத பதுமையைப்போல் நின்றுவிட்டாள் சீதை. ஆனால், அவளது மனமும், தன் வசத்ததான அறிவும் (நிறை), உடலின் மேம்பாடும் எங்கேயோ போய்விட்டன. எங்கே ? ராமனுக்குப் பிறகே தான்.

சிந்தையும் நிறையும்மெய்ந்
நலனும் பின்செல,
மைந்தனும் முனியொடு
மறையப் போயினான். அ௫

6. ராமனுடைய கடைக்கண்கள் சீதையைப் பார்த்துக்கொண்டு போகும்வரை அவளுக்கு மன ஏக்கத்தை ஒருவாறு சகிக்கமுடிந்தது. கண்களாகிய அந்த லட்சியம் மறையவும், மனமானது வசமழிந்து அப்படியே ராமன்பின் போய்விட்டது. நாணம் அழிந்த நிலைமை அவளுக்கு வந்துவிட்டது.

பிறையன நுதலவள்
பெண்மை என்படும்!
நறைகமழ் அலங்கலான்
நயன கோசரம்
மறைதலும், மனம்எனும்
மத்த யானையின்
நிறைஎனும் அங்குசம்
நிமிர்ந்து போயதே. அ௬

5. மைந்தன் - வீரனான ராமன்.

6. பெண்மை - பெண்ணுக்கு இயற்கையாக அமைந்த காதல் தத்துவம். நறை - தேன். அலங்கல் - மாலை. நயனம் கோசரம் - கண்ணாகிய இலட்சியம். மனம், மதம் பிடித்த யானை; அதை அடக்குவதற்கு நாணமே (நிறை) அங்குசம். ராமனுடைய கண் மறையவும் அங்குசத்தின் துறட்டி நிமிர்ந்து போய்விட்டது; பிறகு யானையை அடக்குவது என்பது ஏது!

7. இந்த வசமழிந்த நிலையில் சீதை புலம்பு கிருள்.

இந்திர நீலம்ஒத்(து)
இருண்ட குஞ்சியும்,

சந்திர வதனமும்,
தாழ்ந்த கைகளும்,

சுந்தர மணிவரைத்
தோளு மேஅல ;

முந்திஎன் உயிரைஅம்
முறுவல் உண்டதே. அ௩

8. மேலும் புலம்புகிருள்.

படர்ந்(து)ஒளி பரந்(து)உயிர்
பருகும் ஆகமும்,

தடம்தரு தாமரைத்
தாளு மேஅல ;

கடம்தரு மாமதக்
களிநல் யானைபோல்

நடந்தது கிடந்த(து)என்
உள்ளம் நண்ணியே. அ௪

7. இந்திர நீலம் - உயர்ந்த சாதி நீலக்கல். முறுவல் - புன்சிரிப்பு.

8. ஆகம் - மார்பு. கடம் தரு - மதம் பொழிகிற. மதம் - வெறி. களி - உற்சாகமாய் உள்ள. நண்ணி - வந்து.

9. இப்படியெல்லாம் சீதை புலம்பிக்கொண்டிருக்கும்போது, சந்திரனும் உதயமாய்விட்டான். சந்திரனிடமிருந்து உதித்துவந்த நிலவொளியானது, இரவை அழகுபடுத்தும்பொருட்டு இருளையெல்லாம் விழுங்க எண்ணி, எங்கும் பரவிற்று. எதுபோல: சடையப்ப வள்ளலது புகழ், விண்ணுலகத்தையும், மண்ணுலகத்தையும் எல்லாத் திசைகளையுமே விழுங்கிக்கொண்டு பரவியதுபோல.

சந்தம்

தான தான தானன தான தான தானன

**வண்ண மாலை எழில்பரப் ப,**
**உலகை வளைந்த இருளைஎல் லாம்**
**உண்ண எண்ணித், தண்மதி யத்(து)**
**உதித்(து)எ ழுந்த நிலாக்கற் றை,**
**விண்ணும் மண்ணும் திசையனைத் தும்**
**விழுங்கிக் கொண்ட, விரிநன் னீர்ப்**
**பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன்**
**புகழ்போல், எங்கும் பரந்துள தால்.** அ௫

10. நிலவு புறப்பட்டமாத்திரத்தில் சீதைக்கு உடம்பெல்லாம் கொதிக்க ஆரம்பித்துவிட்டது. அதனால், அவள் படுத்திருந்த கட்டிலில் பரப்பியிருந்த

---

9. மாலை - இராப்பொழுது. நிலாக்கற்றை - நிலவின் நெருங்கிய கிரணங்கள். விழுங்கிக்கொண்ட என்பதைப் 'புகழ்' என்பதோடு கூட்டவேண்டும்.

தாமரை இதழ்கள் வாடின. அவை வாடினமாதிரியே தான், அவளும் வாடினாள்.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

நீக்கம் இன்றி
நிமிர்ந்தநி லாக்கதிர்
தாக்க, வெந்து
தளர்ந்துச ரிந்தனள் :
சேக்கை யாகி
அமர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்ட(து), அப்
பூவையும் பட்டனள். அ௬

11. குளிர்ச்சி உண்டாவதற்காகச் சந்தனத்தைப் பூசினார்கள். விசிறிகொண்டு வீசினார்கள். எல்லாம் வெப்பத்தைத்தான் உண்டாக்கின.

வாச மென்கல -
வைக்களி வாரிமேற்
பூசப் பூசப்
புலர்ந்து புழுங்கினள்,
வீச வீச
வெதும்பினள், மெல்லியல்
ஆசை நோய்க்கு
மருந்தும்உண் டாங்கொலோ? அஎ

---

10. சேக்கை - படுக்கை. பட்டது - பட்ட கஷ்டம். பூவை - பெண் ; சீதை.

11. கலவைக் களி - சந்தனக் குழம்பு. புலர்ந்து - காய்ந்து. மெல்லியல் - பெண். ஆசை - காதல்.

12. சீதை நிலைமை இப்படியாக, ராமனுடைய செய்தியைப் பார்ப்போம். ராமன், தம்பி, முனிவர் ஆகிய மூவரும், மிதிலாநகரத்து அரசன் ஜனகனது அரண்மனைக்குப் போகிறார்கள். போனபோது, ஜனகன் அங்கில்லை. அரண்மனைக் காரியங்களை மேற் பார்க்கும் முனிவர் ஒருவர், அவர்களை வரவேற்கிறார். விருந்து முதலிய உபசாரங்களெல்லாம் நடக்கின்றன. சாப்பாடு முடிந்ததும் படுக்கை ஏற்பாடாகிறது. விசுவாமித்திரருக்கும் லட்சுமணனுக்கும் நெருங்கிய தோழமை; பாட்டன் பேரன்மாதிரி உறவு. அதனால், அவர்கள் இருவருக்கும் ஒரு அறையில் படுக்கை போட்டிருந்தது. ராமனுக்குத் தனியாக வேறொரு மாடி அறையில் போட்டிருந்தது; கிழக்கு தெற்கு மேற்கு ஆகிய மூன்று புறமும் பெரிய ஜன்னல்கள் வைத்துத் திறப்பாயிருந்த ஒரு அறை.

முனியும் தம்பியும்
மொய்ம்முறை யால்த்தமக்(கு)
இனிய பள்ளிகள்
எய்திய பின்,இருள்க்
கனியும் போல்பவன்,
கங்குலும் திங்களும்
தனியும் தானும்அத்
தையலும் ஆயினன். அஅ

---

12. மொய்ம்முறை - நெருங்கிய உறவு. இருள்க் கனி - இருளாகிய மரம் பிஞ்சு விட்டு, காய்த்து, பிறகு அது பழமாயிற்று என்று வைத்துக்கொண்டால் அந்தப் பழம் எவ்வளவு அழகாயிருக்கும்? அப்படி அழகு

13. சீதையைத் தவிர்த்து வேறொன்றையும் சிந்திக்க முடியவில்லையே என்று வருந்துகிறான்.

விண்ணில் நீங்கிய
மின்னுரு, இம்முறை
பெண்ணின் நல்நலம்
பெற்றதுண் டேகொலோ ;
எண்ணின் ஈதல(து)
ஒன்றறி யேன் : இரு
கண்ணின் உள்ளும்
கருத்துள்ளும் காண்பனால். அசு

---

வாய்ந்தவன் ராமன். அன்றுதான் முதல்முதலாகக் காதல் நோய் வந்து, ராமனைத் தாக்குகிறது. படுத்ததும், முதலில் இருட்டு ; இது விடியாதா என்று சிந்திக்கிறான். சிறிது நேரத்தில் சந்திரனே உதித்துவிடுகிறது ; நிலவு நீங்குகிறது ஏது என்ற சிந்தனை. யாராவது உடனிருந்தால், மனசு சீதைபால் இவ்வளவாகப் போகாதே என்ற சிந்தனை. இதுவரை ஒரு காரியமும் என்னைத் தாக்கினதில்லையே ; ஏன் இப்போது வசமழிந்து கிடக்கிறேன் என்ற சிந்தனை. இந்த நான்கு காரியங்களோடு, சீதையைப்பற்றி, விடாத சிந்தனை. ஆகவே, ராமனும் தனியாகப் படுக்கவில்லை, ஐந்து துணைகளோடு படுத்திருந்தான் என்றே சொல்லலாம்.

13. மின் உரு - மின்னலின் உருவமானது. இம்முறை - இந்த விதமாக. நலம் - உறுப்புக்களோடு கூடிய அழகை.

14. 'உயிரை வாங்குவதற்குக் கூற்றுவன், அடடா, என்ன கருவிகளையெல்லாம் கையாளுகிறான்!' என்று மயங்குகிறான்.

வண்ண மேகலைத்
தேர்ஒன்று, வாள்நெடும்
கண்இ ரண்டு,
கதிமுலை தாம்இரண்(டு),
உள்நி வந்த
நகையெனும் ஒன்றும்உண்(டு), -
எண்இல் கூற்றினுக்(கு)
இத்தனை வேண்டுமோ?

15. இப்படி யெல்லாம் கஷ்டத்துக்கு உள்ளானது போதாதென்று, கீழ் ஜன்னல் வழியாகச் சந்திரன் உதித்துவருவதும் தெரிந்துவிட்டது.

கொள்ளை கொள்ளக்
கொதித்தெழும் பாற்கடல்ப்
பள்ள வெள்ளம்
எனப்,பட ரும்நிலா:

---

14. மேகலைத் தேர்: ஆடையானது சுற்றி ஓடி, அதன்மேல் மேகலாபரணத்தை அணிந்து, தேர்த்தட்டைப் போல, கீழே ஒடுங்கியும், மேலே அகன்றுமுள்ள அடிவயிறு தனித்த அழகு வாய்ந்தது. உள்நிவந்த நகை - உள்ளுக்குள்ளேயே ஆனந்தத்தோடு சிரிக்கும் சிரிப்பு. எண் இல் - இரக்கம் இல்லாத.

15. பாற்கடல்ப் பள்ள வெள்ளம் - பாற்கடலாகிய சமுத்திரத்தின் பிரவாகம். கொள்ளை கொள்ள-உயிரைக் கொள்ளைகொள்ள. கொதித்து - கோபித்து. படரும் - படருகின்றது.

உள்ள உள்ள
உயிரைத் துருவிட
வெள்ளை வண்ண
விடமும்உண் டாங்கொலோ? கரு

16. இருளோடும் அதன்பின் நிலவோடும் கஷ்டப்பட்டுக்கொண்டு படுத்திருக்கிறான் ராமன். இரவானது விடியவே விடியாதோ என்றும் எண்ணுகிறான். இந்த வேளையில் சூரியன் உதயமாகிறது. சூரியனுடைய பொன்னிறக் கிரணங்கள் நாலாதிக்கிலும் பரவி ஓடுகின்றன. பறவைகள் பாடுகின்றன. சூரிய நமஸ்காரம் செய்கிறவர்கள் உலகெங்குமே ஆங்காங்கு நின்றுகொண்டு,துதிப்பாடல்கள் பாடுகிறார்கள். சமுத்திரத்தினுடைய சத்தமானது, தாள நிரவல்களோடு பிரம்மாண்டமான மத்தளம் ஒன்றை வாசித்துக்கொண்டிருக்கிறது. இதையெல்லாம் கவனித்தால், அக்கினி சொரூபியாகிய நடராஜமூர்த்தி, கீழ்த்திசை வானமாகிய அரங்கில், நடனம் புரிகிறான் என்றே சொல்லத் தோன்றுகிறது.

சந்தம்

தானன தானன தானன தானன தானன தன.

எண்ணரிய மறையினொடு
கின்னரர்கள் இசைபாட,
உலகம்ஏத் த,
விண்ணவரும் முனிவர்களும்
வேதியரும் கரங்குவிப்ப,
வேலையென் னும்

---

16. கின்னரர் - தேவலோகத்துப் பாடகர்கள். வேலை - சமுத்திரம்.

மண் ணுமணி முழ(வு)அதிர,
வான்அரங்கின் நடம்புரி,வான்
இரவிஎன் னும்

கண் நுதல்வா னவன்கனகச்
சடைவிரிந்தால் என,விரிந்த
கதிர்கள்எல் லாம். கூஉ

17. சூரியனும் உதித்தது. கீழ் ஜன்னல் வழியாகப் பிரவேசித்த இளங்கதிர்கள் (இரவெல்லாம் கடலுக்குள்ளாக முழுகி வந்தமையால்) குளிர்ச்சியே பெற்றிருந்தன. கால்களைத் தொட்டுவருடி, ராமனை எழுப்பின. கண்ணை மூடிக்கொண்டு தூங்காமலே படுத்திருந்த அவனும் கண்ணை விழித்து, 'ஒரு மட்டுக்கும் இரவு கழிந்ததப்பா!' என்று சோர்வு தெளிந்தான். திருப்பாற்கடலில் ஆதிசேஷசயனத்தில் ஆனந்த நித்திரையில் அமர்ந்திருந்த மூர்த்தியே, அதை விட்டுவிட்டுத் துன்பக் கடலில் மூழ்கினன்; இப்போது சோர்வு தெளிந்தான்.

சொல்ஆழிப் பரவையிடை,
வெம்மைபோய்த் தண்மைபெறத்,
தோய்ந்(து)எழுந் த

எல்ஆழித் தேர்இரவி
இளங்கரத்தால் அடிவருடி
அனந்தல்தீர்ப் ப,

---

16. மண்ணுதல் - நாதம் கொடுப்பதற்காக மத்தளத்துக்குப் பசை பூசுதல். முழவு - மத்தளம். வாள் - பிரகாசம். கண்ணுதல் - நெற்றிக் கண்ணோடு கூடிய. வானவன் - அம்பலத்தான்; நடராஜமூர்த்தி.

17. சொல் ஆழிப் பரவை-எல்லாராலும் வழங்கப்படுகிற வட்டமாய்க் கிடக்கும் சமுத்திரம். எல் ஆழி-பிரகாசம் பொருந்திய சக்கரம். கரம்-கிரணம். அனந்தல்-உறக்கம்.

அல்ஆழிக் கரைகண்டான் ;
ஆயிரவாய் மணிவிளக்கம்
அழலும்சேக் கைத்

தொல்ஆழித் துயிலாதே,
துயர்ஆழி இடைக்கிடந்து
துயில்வான்தா னே. கஎ

17. அல் ஆழி - இரவாகிய கடல். ஆதிசேஷனது ஆயிரம் தலைகளிலும் மாணிக்கக் கற்கள் இருந்துகொண்டு ஒளிவிடும் என்பது கொள்கை. அழலும் - ஜொலிக்கும். சேக்கை - படுக்கை. தொல் ஆழி - பூர்வமான பாற்கடல். துயர் ஆழி - துயர்க்கடல்.

# 10. குலமுறை கிளத்து படலம்

1. அடுத்த காட்சி, ஜனகமகாராஜனுடைய சபாமண்டபம். மங்களகரமான காலை நேரம். முதல் முதலாக ஜனகன், ராம லட்சுமணர்களையும் விசுவா மித்திர முனிவரையும் சந்திக்கிருன். இவர்கள் யார் என்று கேட்கிருன். முனிவர் பதில் சொல்லுகிருர்.

இருந்தகுலக் குமரர்தமை,
இருகண்ணும் முகந்(து)அழகு
பருகநோக்கி,

அருந்தவனை அடிவணங்கி
யார்இவர்என்(று) உரைத்திடுமின்
அடிகள்!என்ன,

விருந்தினர்கள், நின்னுடைய
வேள்விகாணியவந்தார்,
வில்லும்காண்பார்,

பெருந்தகைமைத் தசரதன்தன்
புதல்வர்,என அவர்தகைமை
பேசல்உற்ருன். கூச

1. குலக்குமரர் - பெருங்குடிப் பிறப்பில் உள்ளவர்கள் என்ற தோற்றத்தோடு இருந்த குமரர். வில்லும் காண்பார் : வில்லில் வல்ல வீரர்கள் ஆவர். (சிவ தனுசைக் குறித்துச் சொல்லுவதல்ல.)

2. விசுவாமித்திரர் சொல்லுகிறார் : ஜனகமகாராஜனே! இவர்களுடைய மிகப் பூர்வமான குலத்தைப் பற்றிச் சொல்லுகிறேன், கொஞ்சம் கேள். ஆதிகர்த்தா பிரமதேவனே. பிரமன், பன்னிரண்டு புத்திரரை (உபபிரமர்களை) மனசினாலேயே நினைத்து உண்டாக்கினான். அவர்களில் ஒருவனுக்குச் சூரியன் பிறந்தான். சூரியனுடைய மகன்தான் மனுச்சக்கரவர்த்தி. அந்த மனுவினுடைய மகன் பிருது சக்கரவர்த்தி. அவன் என்ன செய்தான் என்றால் : இந்தப் பூமண்டலம் ஒரு காலத்தில் சக்கரவர்த்திக்கு விரோதமாய்த் தொழில் செய்ய ஆரம்பித்தது. எப்படி : சகல பூண்டுகளையும் தனக்குள்ளே இழுத்துக்கொண்டது. உயிர்களெல்லாம் நசித்துப்போகிற நிலைமைக்கு வந்துவிட்டது. பிருது சக்கரவர்த்திக்குக் கோபம் உண்டாகி வில்லை எடுத்து, அம்பைப் பூமிமேல் பிரயோகிக்க ஆரம்பித்தான். உடனே, பூமியானது தனக்குப் பெரிய ஆபத்து வந்துவிட்டது என்று கண்டுகொண்டு, சக்கரவர்த்தியையே சரணடைந்து, மேடு பள்ளங்களைச் சமப்படுத்திக் கொடுத்தால், வேண்டும் உணவுப் பொருள்களைத் தான் தருவதாகச் சொல்லிற்று. சக்கரவர்த்தியும், அப்படியே, தன் வில்லின் நுனியால் அனேக மலைகளைக் கீழே தள்ளி, நிலத்தைச் சமப்படுத்தினான். பசுவின் மடுவிலிருந்து பால் சுரந்தது போல, பூமியும், பூண்டுகளுக்கு வேண்டிய சத்தையெல்லாம் கொடுத்தது. நிலமெல்லாம் வளம்பட்டுக் குடிமக்கள் செழித்தோங்கினார்கள். பிருதுவின் அரிய செயலால் வளம்பட்டதுபற்றி பூமிக்குப் பிருதுவி என்னும் பெயர் ஏற்பட்டது. மனுச்சக்கரவர்த்தி பிருதுசக்கரவர்த்தி இவர்களுடைய பெருமை இப்படி இருக்கிறது.

இவர்கள் வமிசத்தைச் சேர்ந்தவன் இடசுவாகு மன்னன். அவன் செய்த காரியம் என்ன? ஜட உலகத்தைச் சிருஷ்டித்துச் சிருஷ்டித்து, பிரமதேவனை யும் பிடித்துக்கொண்டது கர்மம். ஆணவம் வந்து அவனையும் மூடிக்கொண்டது. கடவுள் தத்துவத் தோடு தானும் ஒன்றுதான் என்கிற விஷயமே மறந்து போய்விட்டது. அதற்காக ஆதிசேஷ சயனத்தில் நித்திரை செய்பவனான விஷ்ணுமூர்த்தியைப் பல யுகங்களாக வழிபட்டுவந்தான். அப்பேர்ப்பட்ட மூர்த்தியை, இந்த உலகத்தில் நாமும் கண்டு உய்யும் வண்ணம், திருவரங்கக் கோயிலுள் எழுந்தருளச் செய்தான் இட்சுவாகு மன்னன். இந்தப் பேருபகாரம் செய்த மன்னனை அறியாதவர்கள் உண்டா உலகில்?

சந்தம்

தானன தானன தானன தானன.

பிணிஅரங்க வினைஅகலப்
பெருங்காலம் தவம்பேணி,
மணிஅரங்கு நெடுமுடியோய்!
மலர்அயனே வழிபட்ட
பணிஅரங்கப் பெரும்பாயல்ப்
பரஞ்சுடரை, - யாம்காண
அணிஅரங்கம் தந்தானை
அறியாதார் அறியாதார். கூரு

2. பிணி அரங்க - ஆணவத்தோடு வந்த பிறவிப் பிணி நீங்க. மணி அரங்கு - ரத்தினங்களை நன்றாய்ப் பதித்த. நெடுமுடியோய் - ஜனகனே. பணி அரங்கம் - பாம்பாகிய விசாலமான இடம். பரஞ்சுடரை - ஒளி மயமாகிய இறைவனை. அணி அரங்கம் - அழகிய ஸ்ரீரங்கம்.

3. மேலும் ககுத்ஸ்தன் என்ற அரசன் ஒருவன் இருந்தான். தேவேந்திரனுக்கு அசுரர்களால் ஆபத்து வந்துவிட்டது. ககுத்ஸ்தன் உடனே யுத்தத்துக்குப் புறப்பட்டான். யுத்தகளத்தில் யாதொரு வாகனமும் இல்லாததால், இந்திரனே எருதுபோலக் ககுத்ஸ்தனைச் சுமந்து நின்றான். ககுத்ஸ்தனும் தன் வில்லைப் பிரயோகித்து அசுரர்களை அழித்தான். இந்த வீரச் செயல் செய்த ககுத்ஸ்தன் மரபில் வந்த காரணமாக, ராமனுக்குக் காகுத்தன் என்னும் பெயர் வழங்கலாயிற்று.

சிபிச் சக்கரவர்த்தியைப் பற்றியோ சொல்ல வேண்டாம். யாரோ ஒரு வேடன் எங்கேயோ காட்டிலுள்ள ஒரு புறாவைப் பார்த்து அம்பு எய்தான். புறா பறந்தோடி, சிபிச்சக்கரவர்த்தியின் மடியில் வந்து உட்கார்ந்தது. அவனும், தன் அடைக்கலப் பொருள் என்று அதை எண்ணிவிட்டான். புறாவின் பயமும் துன்பமும் அரசனைப் பற்றிக்கொண்டன. வேடனும் அரசனிடம் வந்து, 'புறா தன்னுடைய சொத்து, சட்டம் அப்படியே இருக்கிறது, புறாவைத் தன்னிடம் கொடுத்துவிட வேண்டும்' என்று சொன்னான். சட்டத்தை அரசனும் ஒப்புக்கொண்டான். ஆனால், புறாவின் மாமிசமே விஷயமானதால், புறாவின் நிறை எவ்வளவோ, அவ்வளவுக்குத் தன் தசையை அறுத்துத் தருவதாகச் சொன்னான். வேடனும் ஒப்புக்கொண்டான். தராசு வந்தது. புறாவை ஒரு தட்டில் வைத்து, எதிர்த்தட்டில் அரசன் தன் தசையை அறுத்து வைத்தான். புறா, அவனைச் சோதிக்கவந்த தெய்வப் புறாவாய் இருந்ததனால், எவ்வளவு தசை அறுத்து வைத்தும், நிறை சரிவந்தபாடாக இல்லை. கடைசியில் சிபி, மிச்சமிருந்த தசை எலும்போடு, தானாகவே

தட்டில் ஏறிஉட்கார்ந்தான். நிறையும் சரியாயிற்று. சாட்சாத் கடவுளே வந்து சிபிச்சக்கரவர்த்திக்கு என்றும் அழியாத முத்தியைக் கொடுத்தார். இந்தச் சிபிச்சக்கரவர்த்தியும் ராமனுடைய மூதாதையே.

சகரன் என்ற அரசன் அசுவமேதயாகம் செய்ய ஏற்பாடு செய்தான். யாகத்துக்கு உரிய குதிரையைப் பகைவன் ஒருவன் எப்படியோ திருடி, பூமியின் கீழே கொண்டுபோய் மறைவாகக் கட்டிவிட்டான். சகரனுடைய குமாரர்கள், குதிரைக்காக ரொம்பவும் வருந்தி, எத்தனையோ மலைகளைப் பிடுங்கி எறிந்து, பூமியை ரொம்ப ஆழமாகவும் அகலமாகவும் தோண்டி யெடுத்துக் குதிரையை மீட்டார்கள். சகரர்கள் தோண்டிய பெரும்பள்ளத்தில் கங்கை முதலான எண்ணிறந்த ஆறுகள் பாய்ந்து சமுத்திரமாயிற்று. சகரர் தோண்டிய காரணத்தால், சாகரம் என்ற பெயர் வந்தது. இந்தச் சகரரும் ராமனுக்கு மூதாதைகள்தான்.

இதோடு, பகீரதனைப் பற்றியும் சொல்லவேண்டும். கங்கா நதியானது கைலையங்கிரியின் உச்சியிலிருந்தது. பூமியிலுள்ளவர்களுக்குப் பயன்படாமல் இருந்தது. பகீரதன் எவ்வளவோ அபாரமான மராமத்துவேலை செய்து நதியைப் பூமிக்குக் கொண்டு வந்து பூமியை வளம்படுத்தினான். இந்தப் பகீரதனும் ராமனுடைய மூதாதையே.

ரகு என்ற அரசனே, 'தேவர்கள் அசுரர்கள் எல்லோரையும் போரில் வென்று யாருக்கும் கிட்டாத வெற்றியும் புகழும் படைத்தவன். அந்த ரகுவை வைத்தே ராமனுடைய வமிசத்துக்கு ரகுவமிசம் என்றும், ராமனுக்கு ராகவன் என்றும் பெயர்வந்தது.

இப்படியே இவர்கள் மூதாதைகளின் பெருமையைப்பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம். அதெல்லாம் வேண்டாம். அஜன் என்ற அரசனைப்பற்றி மாத்திரம் சொல்லுகிறேன், கேட்கவேணும்.

இந்துமதி யென்னும் அபூர்வமான அழகு படைத்த ராஜகுமாரிக்குச் சுயம்வரம் ஏற்படுத்தினார்கள். பல தேசத்து அரசர்களும் அவளைக் காதலித்துச் சுயம்வர மண்டபத்தில் வந்து வீற்றிருந்தார்கள். இந்துமதி, எல்லாரையும் புறக்கணித்துவிட்டுத் தன் கையிலிருந்த மாலையை அஜன் கழுத்தில் போட்டாள். இது காரணமாக மற்ற அரசர்களுக்குப் பொறாமையும் கோபமும் ஏற்பட்டு அஜனை எதிர்த்தார்கள். அவர்களையெல்லாம் முறியடித்து, வெற்றிக்கு அறிகுறியாக இந்துமதியைத் தோளில் வைத்துக் கம்பீரமாய் நடந்தான் அஜன்.

வில்லென்னும் நெடுவரையால்
வேந்தென்னும் கடல்கலக்கி,
எல்லென்னும் அணிமுறுவல்
இந்துமதி எனும்திருவை
அல்லென்னும் கருநிறத்த
அரிஎன்ன அயன்என்பான்
மல்லென்னும் திரள்புயத்துக்(கு)
அணியென்ன வைத்தானே. ௩௩

3. வேந்து - அரசர். எல் - சூரிய ஒளி. அணி முறுவல் - அழகிய பற்கள். அல் - இருள்மயம்; லட்சுமியைத் திருமால் மார்பில் ஏந்தியதுபோல அஜனும் இந்துமதியைத் தோளில் வைத்தான். குறிப்பு: கவியில் வெற்றியின் ஒலி தெரிகிறது.

4. இந்த அஜனது மகன்தான் தசரதன். தசரத னுக்கு எல்லாச் சம்பத்தும் இருந்தது. ஆனாலும் ஒரு குறை.

துனியின்றி உயிர்செல்லச்,
சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்ன
பகைவென்று படிகாப்போன்,
தனுவன்றித் துணையில்லான்
தருமத்தின் கவசத்தான்
மனுஎன்ற நீதியான்
மகவின்றி வருந்துவான். கூஎ

5. புதல்வர் உண்டாவதற்காகக் கலைக்கோட்டு மாமுனியைக் காட்டிலிருந்து அழைத்துவந்து அவரைக் கொண்டு யாகம் செய்வித்தான். ஓமகுண்டத்தி லிருந்து வந்த அமுதை முனிவன் தசரதனுக்குக் கொடுத்தான். தசரதனும், அதைத் தன் மனைவிகளான கோசலை, கைகேசி, சுமித்திரை ஆகிய மூவருக்கும் பகிர்ந்து கொடுத்தான். அவர்கள் அதை உட்கொண்டு, நாளடைவில் கருத்தரித்தார்கள்.

முதலில் கோசலை ராமனைப் பெற்றாள். ராமன் அவதரித்த காரணமாகப் பாவமெல்லாம் அதோகதி யாய் ஒழியப்போகின்றன. அப்படி ஒழிவதற்குக் கார ணம் என்ன? அந்தப் பாவங்கள் முன்ஜன்மத்தில்

---

4. துனி - துன்பம். உயிர் செல்ல - மக்கள் வாழ்க்கை நடத்த. ஆழி - சூரியனது சக்கரம். படி - பூமி. தனு - வில். மனுச் சக்கரவர்த்தியின் நீதியின்படி நடப்பவன்.

கொடிய பாதகங்களைச் செய்திருக்கவேண்டும். அப்படியே, தர்மமும் முன்ஜன்மத்தில் பெரிய பெரிய புண்ணியங்கள் செய்ததால், அதற்கும் நல்ல காலம் பிறந்துவிட்டது.

விரிந்திடுதீ வினைசெய்த
வெவ்வியதீ வினையாலும்,
அருங்கடையில் மறைஅறைந்த
அறம்செய்த அறத்தாலும்,
இருங்கடகக் கரதலத்(து)இவ்
எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
கௌசலைஎன் பாள்பயந்தாள். ௫அ

6. பிறகு பரதனைப்பற்றிப் பேசுகிறார் விசுவாமித்திரர்: பொதுவாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் நீதிபற்றி நிற்பார்கள்; மற்றத் துறையில் சாதாரணமாய் அநீதியைக் கையாளுவார்கள். ஆனால்,

---

5. விரிந்திடு - உலகெங்குமே பரவிய. செய்த - முன் ஜன்மத்தில் செய்த; மனிதர்களுக்குப் பெருங்கேடு வந்தால், முன் ஜன்மத்தில் செய்த தீவினையின் பயன் என்று சொல்லுகிற வழக்கம்பற்றி. அருங்கடையில் அறைந்த - கடைசியாக முடிபுகட்டிச் சொன்ன. இருங்கடகம் - பெரிய பொற்காப்பு. கருங்கடல் - ராமன்; பெருமையும் அழகும் சேர்ந்து, கடலைப்போல வியந்து அனுபவிக்கத்தக்கவன் ராமன். பயந்தாள் - பெற்றாள்.

பரதனே எல்லாத் துறைகளிலுமே நீதி நோக்கி நிற்பான்.

தள்ளரிய பெருநீதித்
தனியாறு புகமண்டும்
பள்ளம்எனும் தகையானைப்,
பரதன்எனும் பெயரானை,
எள்ளரிய குணத்தாலும்
எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக்
கேகயர்கோன் மகள்பயந்தாள். கூகூ

7. பிறகு லட்சுமணனையும் சத்துருக்கனையும் சுமித்திரை பெற்றாள். பிள்ளைகள் நால்வரும் சகல கலைகளையும் பயின்று அபூர்வமான தேர்ச்சி அடைந்தார்கள்.

ராமனுடைய வில்த்திறம் மிகவும் விசித்திர மானது. தாடகையைக் கொன்ற விதத்தைக் கேட்க வேணும் என்கிறார் முனிவர்.

அலைஉருவக் கடல்உருவத்(து)
ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலைஉருவப் புயவலியை
நீஉருவ நோக்கையா!

---

6. தள்ளரிய - அணைகட்டியெல்லாம் தடுக்க முடியாத. தனியாறு - பல கிளைநதிகளையும் தன்னிடத்தே கொண்டுள்ள பெரிய நதி. பள்ளம் - சமுத்திரம். எழில் - உருவம். வள்ளல் - ராமன்.

7. ஆண்தகை : ராமன். நிலை உருவ : என்றும் நிலைத்துள்ள தத்துவம்.

உலைஉருவக் கனல்உமிழ்கண்
    தாடகைதன் உரம்உருவி,
மலைஉருவி, மரம்உருவி,
    மண்ணுருவிற்(று) ஒருவாளி! ௧௦௦

8. கடைசியாக, விசுவாமித்திரர் ராமனுடைய தயாளகுணம் இன்னது என்று சொல்லுகிறார்.

கோதமன்தன் பன்னிக்(கு)
    முன்னைஉருக் கொடுத்த(து),இவன்
போதுவென்ற தெனப்பொலிந்த
    பொலன்கழற்கால்ப் பொடிகண்டாய்!
வேதம்என்ற உருவுடையாய்,
    மிதிலையர்தம் உயிர்அனையாய்!
ஈ(து)இவன்தன் வரலாறும்
    புயவலியும் எனஉரைத்தான். ௧௦௧

---

7. உலை உருவக்கனல் உமிழ்கண்: தாடகையின்கண் கொல்லுலைபோல் கோபமும் பயங்கரமும் கொண்டது. உரம் - மார்பு. முதலில் மார்பை உருவியது, பிறகு அவள் நின்ற மலைச்சிகரத்தை உருவியது, அப்புறம் பின் சரிவில் நின்ற மரத்தை உருவிக் கடைசியாக பூமியில்ப் பாய்ந்தது. பாடலின் உருவத்திலேயே அம்பின் விசித்திர வேகம் கிடக்கிறது.

8. கோதமன்தன் பன்னி - அகலிகை. போது - பூ. பொலன் - பொன்.

# 11. கார்முகப் படலம்

1. விசுவாமித்திரர் இவ்விதமாக ராமனைப்பற்றிச் சொல்லவும், ஜனகராஜனுக்குப் பல எண்ணங்கள் தோன்றின. 'என்ன சொல்லுவதென்று எனக்குத் தெரியவில்லை. ஏதோ என் குலத்தின் பெருமையை உத்தேசித்து, என் மகள் சீதையை மணக்க விரும்புகிறவன், நான் வைத்திருக்கிற சிவதனுசை வளைத்து நாணேற்றிவிட வேண்டும் என்ற ஒரு ஏற்பாட்டைப் பண்ணிவிட்டேன். பிறகு அந்த ஏற்பாட்டை ஏன் பண்ணினேன் என்று வருந்தும்படியாகத்தான் நேர்ந்துவிட்டது' என்றெல்லாம் வெளிவிட்டே சொல்லுகிறான்.

சந்தம்

தானன தானன தான தன்னன

**மா**ற்றம்யா(து) உரைப்பது :
மாய விற்குநான்
தோற்றவா றெனமனம்
துளங்கு கின்றதால் ;

---

1. மாற்றம் - சொல், மாயவில்-சிவதனுசு, துளங்குகின்றது - தடுமாறுகிறது.

நோற்றனள் நங்கையும் ; -
நொய்தின் ஐயன்,வில்

ஏற்றுமேல், இடர்க்கடல்
ஏற்றும் எங்களை. க0உ

2. அப்படியே எதிரில் நின்றவர்களைப் பார்த்து வில்லைக் கொண்டுவரும்படி சொல்லுகிறான்.

என்றனன், அங்குதன்
எதிர்நின் றுரைஅக்

குன்(று)உறழ் வரிசிலை
கொணர்மின் ஈண்டென,

நன்றென வணங்கினர்
நால்வர் ஓடினர்,

பொன்திணி கார்முகச்
சாலை புக்கனர். க0௩

3. வில் மிகப் பளுவாய் இருந்ததால், தேக பலம் படைத்தவர் பலர், தூண்களைக் குறுக்கே

---

1. நோற்றனள் - விரதங்கள் அனுஷ்டித்து வருகிறாள். நொய்தின் - இலகுவாகத் தானே ; தனக்கு யாதொரு சேதமும் ஏற்படாமல். ஏற்றுமேல் - நாண் ஏற்றுவானாகில். இடர்க்கடல் - துன்பக்கடலிலிருந்து. ஏற்றும் - கரை ஏற்றுவான்.

2. குன்று உறழ் - குன்று போன்ற. வணங்கினர் - வணங்கி. வரி சிலை - உறுதியாகக் கட்டிய வில். கார்முகச் சாலை - வில் வைத்திருந்த தனியான சாலை.

கொடுத்து நீளத்தில் தண்டும் போட்டுத் தாங்கி வந்தார்கள்.

உறுவலி யானையை
ஒத்த காட்சியர்,
செறிமயிர்க் கல்எனத்
திரண்ட தோளினர்,
அறுபதி னுயிரர்
அளவில் ஆற்றலர்,
தறிமடுத்(து) இடைஇடை,
தண்டில்த் தாங்கினர். ௧0௪

4. வில் எப்படி வந்தது?

நெடுநில மகள்முது(கு)
ஆற்ற, நின்(று)உயர்
தடநிமிர் வடவரை
தானும் நாணுற,
இடம்இலை உலகென
வந்த(து), எங்கணும்
கடல்புரை திருநகர்
இரைத்துக் காணவே! ௧0௫

3. அறுபதினுயிரர் : அதிகப்பேர் என்பது கருத்து ; குறியீடான எண் 60,000 அல்ல. தறி - தூண்.

4. முதுகு ஆற்ற - முதுகு வலி தீர. வடவரை - மேருமலை. கடல்புரை - கடலை ஒத்த. திருநகர் - நகரத்து ஜனங்கள்.

5. வந்துகொண்டிருந்த வில்லைப் பார்த்து ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

திண்ணென மேருவைத்
    திரட்டிற் றேஎன்பார்,
வண்ணவான் கடல்பண்டு
    கடைந்த மத்தென்பார்,
அண்ணல்வாள் அரவினுக்(கு)
    அரச னேஎன்பார்,
விண் இடு நெடியவில்
    விழ்ந்த தோளன்பார். ௧0௬

6. பொருட்காட்சிக்குப் போகிற வில் அல்ல: மாப்பிள்ளையாய் வருகிறவன் இதை வளைக்கவேண்டுமாம். எப்படியிருக்கிறது காரியம்!

என்! இது கொணர்கென
    இயம்பி னன்என்பார்,
மன்னவர் உளர்கொலோ
    மதிகெட் டார்என்பார்,
முன்னை ஊழ் வினையினால்
    முடிக்கில், ஆம்என்பார்,
கன்னியும் இச்சிலை
    காணுமோ என்பார். ௧0௭

---

5. அண்ணல் - பெருமை பொருந்திய. வாள் - வலியுள்ள. அரவினுக்கு அரசு: ஆதிசேஷன். விண் இடு நெடிய வில்: வான வில்.

6. ஆம் - சித்தியாகும்; பூர்வவினை பக்கத்திலிருந்து வளைக்கச் செய்தால் ஒருவருக்குச் சித்தியாகும். சீதை இந்த வில்லைப் பார்த்திருந்தால், தந்தை மோசக்காரரே என்று எண்ணிவிடுவாள்.

7. வில்லை ஜனகன்முன் கொண்டு சேர்த்தார்கள்.

மொய்த்தனர் இன்னணம்
மொழிய, மன்னன்முன்
உய்த்தனர், நிலமுது(கு)
உளுக்கிக் கீழுற
வைத்தனர், வாங்குநர்
யாவ ரோ,எனுக்
கைத்தலம் விதிர்த்தனர்
கண்ட வேந்தரே. ௧0அ

8. ஜனகன் ராமனையும் வில்லையும் பார்க்கிருன். உடனே சீதையைப்பற்றிய கவலை வந்துவிட்டது. திகைத்து நிற்கிருன். இதையெல்லாம் பார்த்து, கௌதம ரிஷியின் புதல்வரான சதானந்தர் பேசுகிருர்.

போதகம் அனையவன்
பொலிவை நோக்கி,அவ்
வேதனை தருகின்ற
வில்லை நோக்கித்,தன்
மாதினை நோக்குவான்
மனத்தை நோக்கிய
கோதமன் காதலன்
கூறல் மேயினுன். ௧0௯

---

7. மொய்த்தனர் - மொய்த்து வந்தவர்கள். இன்னணம் - இப்படி. உய்த்தனர் - உய்த்துக்கொண்டு போய். உளுக்கி - கஷ்டப்பட்டு. வாங்குநர்-வளைப்பவர்.
8. போதகம் - யானை. மாதினை நோக்குவான் : 'சீதையின் நிலை என்ன ஆகும், வில்லை வளையாமற் போனுல் ?' என்ற சிந்தனைக்குள்ளான ஜனகன்.

9. சீதை அவதரித்த விஷயத்தைக் கேட்பாயாக: பூமாதேவி என்கிற தெய்வமானது, உழுது வழிபடுபவர்களுக்குமுன் அருள்வடிவமாய்த்தெரிசனம்கொடுப்பவள் ; அவள் மேனியிலிருந்து நெற்கதிராகிய பச்சைப் பசுங்கதிர்கள் வெளிவந்து பிரகாசிக்கும். ஆனால் அவளது சுயரூபத்தை யாரும் பார்த்ததில்லை. பூமிக்குள் மறைந்துகிடந்த சுயரூபம் வெளிப்பட்டது என்று சொல்லும்படியாகச் சீதை பிறந்தாள். பூமாதேவியின் அருளையும் சக்தியையும் பார்த்தால், பணம் என்று சொல்லுகிற லட்சுமியின் அருளும் சக்தியும் சாமானிய காரியங்கள்தான். ஆகவே, எங்கள் சீதையின் அபூர்வ குணங்களைக் காணும்போது, அவளை லட்சுமி என்று சொன்னால் போதாது, பூமாதேவி என்றுதான் சொல்லவேண்டும்.

சந்தம்

தானன தானன தானன தானனன

உழுகின்ற கொழுமுகத்தின்
உதிக்கின்ற, கதிரின்ஒளி
பொழிகின்ற புவிமடந்தை
உருவெளிப்பட் டெனப், புணரி
எழுகின்ற தெள்ளமுதோ(டு)
எழுந்தவளும் இழிந்(து)ஒதுங்கித்
தொழுகின்ற, - நன்னலத்துப்
பெண்ணரசி தோன்றினாள். கக0

---

9. கதிரின் ஒளி - கதிரினாலாகிய பச்சைக்கிரணம். புவிமடந்தை - பூமாதேவி ; பூமிக்குள் கிடக்கும் அற்புதமான சிருஷ்டி சக்தி. புணரி - பாற்கடல். தெள்ளமுது - கடைந்து வந்த தேவாமிர்தம். நன்னலத்து - எல்லா அழகும் வாய்ந்த. பெண்ணரசி - சீதை.

10. சீதையின் அழகையும் குணங்களையும் கண்டு, அரசர்கள் எல்லோரும் வந்து, ஒவ்வொருவரும் தனக்கே அவளைக் கலியாணம் செய்து கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். இது என்ன, கஷ்டமாயிருக்கிறதே, என்று எண்ணி ஒரு யுக்தி செய்தோம். யார் ஒருவன் இந்தச் சிவதனுசை வளைத்து நாணேற்றுகிறானே, அவனுக்கே சீதையைக் கொடுப்போம் என்று சொன்னோம். அவ்வளவுதான். அரசர்கள் எல்லோரும் போன இடந்தெரியாமல் ஓடிப்போய் விட்டார்கள். இது அவ்வளவு அசாத்தியமான காரியம் என்று அவர்களுக்குப் பட்டுவிட்டது. பிறகு வில்லுக்குப் பக்கத்தில் ஒருவருமே வரவில்லை. வருஷங்கள் ஆகிவருகின்றன. சீதைக்கு, ஏது, கலியாணமே நடக்காதோ என்ற கவலைதான் எங்களுக்கு. இந்த ராமன் வில்லை வளைத்து நாணேற்றினால், சீதையின் அழகு பழுதாகாது. வேறு என்ன நாங்கள் சொல்ல இருக்கிறது, என்றார் சதானந்தர்.

இதையெல்லாம் கேட்ட விசுவாமித்திரர் ராமனைப் பார்த்தார்; ராமனும் வில்லைப் பார்த்தான்; அப்படியே எழுந்தான்: ஓமகுண்டத்தில் நெய்யை ஊற்றும்போது, நெய்யை நோக்கி அக்கினி எழுகிறது போல.

சந்தம்

தானன தன்னன தன்னன தன்ன

பொழிந்தநெய் ஆகுதி
 வாய்வழி பொங்கி
எழுந்தகொ ழுங்கனல்
 என்ன,எ ழுந்தான்:

10. நெய் ஆகுதி - அக்கினிக்கு இடுகிற நெய்யாகிய ஊட்டம். வாய் - நெய்த்தாரையின் வழியாக.

அழிந்தது வில்என
விண்ணவர் ஆர்த்தார்,
மொழிந்தனர் ஆசிகள்
முப்பகை வென்றார். கககக

**11.** ராமன் எழுந்ததைப் பார்த்தார்கள் பெண்கள், அவ்வளவுதான் : விசுவாமித்திரர் ஏவி வில்லை முறிப்பதற்கு முன், வேறொருவனது வில்லுகள் முறிந்தன.

தூயதவங்கள்
தொடங்கிய தொல்லோன்
ஏய்,அவன் வல்வில்
இறுப்பதன் முன்னம்,
சேயிழை மங்கையர்
சிந்தைதொ றெய்யா,
ஆயிரம் வல்வில்
அனங்கன் இறுத்தான். ககஉ

**12.** பெண்கள் பேசுகிற பேச்சு :

காணும்நெ டுஞ்சிலை
கால்வலி தென்பார் ;
நாணுடை நங்கை
நலம்கிளர் செங்கேழ்ப்

---

10. முப்பகை வென்றார் - முனிவர்.

11. தொல்லோன் - விசுவாமித்திரர். அவன் - ராமன். சேயிழை - ஆபரணம் அணிந்த. எய்யா - எய்து. வல்வில் : கருப்பு வில். அனங்கன் - மன்மதன். இறுத்தான் - முறித்தான். காதல் உணர்ச்சியால் பெண்கள் அவ்வளவு செயலழிந்தார்கள்.

12. கால் - தண்டு. நலம் - அழகு. செங்கேழ் - செந்நிறம்.

பாணி,இ வன்படர்
செங்கைபு காதேல்,
வாள் நுதல் மங்கையும்
வாழ்விலள் என்பார். கக௩

13. ஜனகன் சுத்தப் பைத்தியக்காரன் என்கிறார்கள்.

வள்ளல் மணத்தை
மகிழ்ந்தனன் என்றால்,
கொள்ளென முன்பு
கொடுப்பதை அல்லால்,
வெள்ளை மனத்தவன்
வில்லைஎடுத்(து)இப்
பிள்ளைமுன் இட்டது
பேதைமை என்பார். கக௪

14. வில்லைநோக்கி ராமன் நடந்துசெல்கிறான்.

தோகையர் இன்னன
சொல்லிட, நல்லோர்
ஓகைவி ளம்பிட,
உம்பர்உ வப்ப,-

12. பாணி - கை. படர் - அகன்ற

13. வள்ளல் - ராமன். மகிழ்ந்தனன்-விரும்பினான். வெள்ளை மனத்தவன் - விவேகமில்லாத ஜனகன்.

14. நல்லோர் - கற்றோர். ஓகை விளம்பிட - பலே பலே என்று ஆர்ப்பரிக்க.

மாக மடங்கலும்,
மால்விடை யும்,கைந்
நாகமும் நாணிட
அண்ணல் நடந்தான். ககரு

15. மேருகிரிக்குச் சமானமாகக் கிடக்கும் வில்லை ராமன் கையில் எடுத்தான்.

ஆடக மால்வரை
அன்னது தன்னைத்,
தேடரு மாமணி
சீதைஎ னும்பூந்
தோடலர் கொம்பினைச்
சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலைஇ(து)
என்னஎ டுத்தான். ககசு

16. வில்லை ராமன் என்ன செய்யப் போகிறானோ, பார்ப்போம், என்று இமைகளைக் கொட்டாதபடி தடுத்து ஒரே பார்வையாய்ப் பார்த்துக்கொண்டிருந் தவர்களது நிலைமை :

---

14. மாக மடங்கல் - கம்பீரத்தோடு கூடிய சிங்கம். விடை - காளை. கை நாகம் - யானை. குறிப்பு : நடையின் கதியைச் செய்யுளின் உருவத்திற் காணலாம்.

15. ஆடக மால்வரை : பொன்மயமான மேரு மலையை ஒத்த வில்லை, சீதையை மாலையிடுவதற்காக மாலை ஒன்றை எப்படி எடுப்பானோ, அப்படி எடுத்தான்.

தடுத்(து)இமை யாமல்
இருந்தவர், தாளில்
மடுத்ததும், நாண்நுதி
வைத்ததும், நோக்கார் :
கடுப்பினை யாரும்
அறிந்திலர் ; கையால்,
எடுத்தது கண்டனர்
இற்றது கேட்டார். கசஎ

17. வில் ஒடிந்ததோ இல்லையோ, நாலா பக்கத்திலுமிருந்து பூமாரி, பொன்மாரி, மேலும் முத்துமாரி எல்லாமாய் விழுந்தன.

சந்தம்

தானன தானன தன் தானன தானன தன்

பூமழை சொரிந்தார்விண் ணோர்,
பொன்மழை பொழிந்தமே கம்,
பாமமா கடல்கள்எல் லாம்
பன்மணி தூவிஆர்த் த,
கோமுனிக் கணங்கள்எல் லாம்
கூறின ஆசி,கொற் ற
நாமவேல்ச் சனகற்கின் று
நல்வினை பயந்ததென் று. கசஅ

16. தாளில் - பாதத்தில். மடுத்தது - அழுத்தியது. நுதி - தண்டின் முனை. கடுப்பு - வேகம். எடுத்ததைக் கண்டதுண்டு, பிறகு ஒன்றையும் பார்க்கவில்லை ; சடார் என்று முறிந்த சத்தம் மாத்திரம் காதில் விழுந்தது.

17. பாம - பரந்த. பன்மணி - முத்து பவளம் போன்ற மணிகள். ஜனங்களைக் கடல்கள் என்று உவமிக்கிறார். ஆசி - வாழ்த்து. கொற்றம் - வெற்றி. நாமம் - பயம்.

18. ஜனகனுடைய கொலுமண்டபத்தில் ராமன் வில்லை முறித்து நிற்கிறான். இந்த விஷயம் ஒன்றும் தெரியாமல், சீதை தன் அறையில் இருந்துகொண்டு காதல் நோயால் வருந்துகிறாள். தான் உப்பரிகையி லிருந்து பார்த்த வீரனுடைய உருவமும் கோலமும் மனசில் வந்துவந்து தொந்தரவுசெய்கின்றன. இந்தத் தொந்தரவை அவளால் சகிக்கமுடியவில்லை.

சந்தம்

தானநன்ன தன்னநன்ன தன்னநன்ன தன்ன தன்

நாண்உ லாவு வில்லி னோடு
பூண்உ லாவு பாணி யும்,
தூண்உ லாவு தோளும், வாளி
யோடு லாவு தூணி யும்,
வாள்நி லாவின் நூல்உ லாவு
மாலை மார்பும் மீள வும்
காண லாகும் ஆகின், ஆவி
காண லாகும் ஆகு மே. கக௯

19. வானத்திலிருந்து நீலமேகம் ஒன்று கீழே இறங்கியது. அதனிடத்தே சந்திரன் இருந்தது. சந்திர னுக்கு மேலே அழகிய குழல் முடிந்திருந்தது. அதைச்

---

18. பூண் - கைக்கடகம். பாணி - கை. தூண் உலாவு - தூண் கிடந்தமாதிரிக் கிடந்த. தூணி - அம் பறாத் தூணி. வாள் நிலாவின் - பிரகாசமான சந்திர கிரணம் போன்ற. நூல் - பூணூல். குறிப்பு : பாட்டினால், சீதைக்கு வந்த மயக்கம் வாசிப்பவருக்கே வந்துவிடும் ; ரொம்ப சவுக்கத்தில் பாடவேண்டும்.

சுற்றி மாலையும் மாலையைச் சுற்றி ரீங்காரம் செய்யும் வண்டுமாய் இருந்தது.

விண்த லம்க லந்தி லங்கு
திங்க ளோடும், மீது சூழ்
வண்(டு)அ லம்(பு)அ லங்கல் தங்கு
பங்கி யோடும், வந்த தண்
கொண்டல் ஒன்(று)இ ரண்டு கண்ணின்
மொண்டு கொண்(டு)என் ஆவி யை
உண்ட துண்(டு),என் நெஞ்சில் இன்னும்
உண்ட துண்ட(து) உண்ட ரோ. கஉ

20. இத்தகைய அழகனைக் கிட்ட நேர்ந்தது, கிடைக்காத பெரும்பாக்கியம். ஆனால், அப்படிக்கிட்டியும், இப்போது போன இடம் தெரியாமல் போயிற்றே! தேவாமிர்தம் கிடைத்தும் பாத்திரத்தோடு அதைக் கை நழுவவிட்ட பைத்தியக்காரத் தன்மைபோல் அல்லவா இருக்கிறது ?

பெய்க டல்ப்பி றந்த யல்ப்
பிறக்கொ ணும ருந்து பெற்(று),
ஐய ! பொற்க லத்தொ டங்கை
விட்டி ருந்த ஆதர் போல்,

---

19. விண்தலம் - வானம். வண்டு அலம்பு - வண்டு ரீங்காரஞ்செய்கிற. அலங்கல் - மாலை. பங்கி - கூந்தல் முடி. கொண்டல் - மேகம். உண்டதுண்டு - சாப்பிட்ட துண்டு. நெஞ்சில் இன்னும், உண்டு அது, உண்டு அது, உண்டு அரோ : அதாவது, ஒரே படியாய்த் தங்கியிருக்கிறது, மறக்க முடியவில்லை.

20. பெய் - பெய்துவைத்த. மருந்து - தேவாமிர்தம். ஐய - அடடா ! ஆதர் - யோசனை இல்லாதவர்.

மொய்கி டக்கும் அண்ணல் தோள்
முயங்கி டாது முன்ன மே,
கைக டக்க விட்டி ருந்து
கட்டு ரைப்ப(து) என்கொ லோ. கஉக

**21.** இப்படியாகத் தனியே இருந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாள் சீதை. அப்போது அங்கே நீலமாலை என்கிற தோழிப்பெண் விரைவாக வருகிறாள்.

சந்தம்

தானன தானன தான தன்னன

வடங்களும் குழைகளும்
வான வில்லிட,
தொடர்ந்தபூங் கலைகளும்
குழலும் சோர்தர,
நுடங்கிய மின்என
நொய்தின் எய்தினாள் :
நெடுந்தடம் கிடந்தகண்
நீல மாலையே. கஉஉ

---

20. மொய் - பலம்.

21. கழுத்தில் அணிந்த பொன்னாரங்களிலும் குழைகளிலும் நவரத்தினங்கள் பதித்திருந்தன ; அவைகளின் கிரணங்கள், நாலாபக்கத்திலும் வானவில்லைச் செய்தன ; வஸ்திரமும் கூந்தலும், எங்களைவிட்டுப் போகிறாயே என்று சோர்ந்து பின்னே தொடருகின்றன ; இது அவள் வேகமாய் வந்ததுபற்றி. நொய்தின் - அதிவேகமாக. நெடுந்தடம் - நீண்ட நீலத்தடாகம்.

22. சீதையைக் கண்டவுடன் மரியாதையாக வணங்குகிறவள்தான் நீலமாலை. இப்பொழுதோ?

வந்தடி வணங்கிலள்,
வழங்கும் ஓதையள்,
அந்தமில் உவகையள்,
ஆடிப் பாடினள்;
சிந்தையுள் மகிழ்ச்சியும்,
புகுந்த செய்தியும்,
சுந்தரி, சொல்எனத்,
தொழுது சொல்லுவாள. கஉரு

23. நீலமாலை, நடந்த செய்தியைச் சொல்லுகிருள்.

கயரத துரகமாக்
கடலன், கல்வியன்,
தயரதன் எனும்பெயர்த்
தனிச்செல் நேமியான்
புயல்பொழி தடக்கையான்
புதல்வன், பூங்கணை
மயல்விளை மதனற்கும்
வடிவின் மேன்மையான். கஉச

---

22. வழங்கும் ஓதையள் - ஓரேபடியாய், அடடா ஆகா என்று கத்திக்கொண்டேயிருக்கிருள். சுந்தரி: சீதை. வார்த்தை சொல்லும்படியாக உணர்ச்சி தெளிந்த பின்பே வணங்கினுள்.

23. கயம் - யானை. துரகம் - குதிரை. கடலன் - கடல்போன்ற பெரிய சேனையை உடையவன். தனிச்செல் நேமியான் - ஏக சக்ராதிபதி. நேமி - சக்கரம்;

24. இனி, அவனது தோள் இப்படி, சக்தி இப்படி, பெயர் இன்னது என்கிறான்.

மராமரம் இவையென
வளர்ந்த தோளினன்,
அராவணை அமலன்என்(று)
அயிர்க்கும் ஆற்றலான்,
இராமன்என் பதுபெயர்,
இளைய கோவொடும்
பராவரும் முனியொடும்
பதிவந்(து) எய்தினன். ௩௨௫

25. சிவதனுசையும் ஒருகை பார்க்க வந்தவன் தான் அவன்.

பூண் இயல் மொய்ம்பினன்,
புனிதன் எய்தவில்
காணிய வந்தனன்
என்னக், காவலன்

---

ஆளுகையின் அடையாளம். புயல் - மேகம்போல் கொடை கொடுக்கிற. பூங்கணை மயல்விளை-புஷ்பபாணங்களால் காதல் மயக்கத்தை உண்டுபண்ணுகிற.

24. அராவணை அமலன் - ஆதிசேஷ சயனனான விஷ்ணு. அயிர்க்கும் - சந்தேகிக்கும். பராவரும் - யாவராலும் பூசிக்கப்படும். பதி - இந்த மிதிலை.

25. பூணியல் மொய்ம்பினன் - ராமன். தேக உறுப்புக்களின் சக்தியைத் தோள்வளையம் முதலிய ஆபரணங்கள் எடுத்துக் காட்டுகின்றன. புனிதன் - சிவபெருமான். காணிய - காணும்பொருட்டு. வில்லை முறிக்க வந்ததாக நீலமாலை எண்ணிக்கொள்ளுகிறாள். காவலன் - ஜனகன். குறிப்பு : இந்தப் பாடலில் தரிதபாவம் விளங்குகிறது.

ஆணையின் அடைந்தவின்
அதனை, ஆண்தகை
நாண்இனி தேற்றுவான்
நண்ணினன்அரோ. கஉசு

26. காலில்வைத்து வளைத்த காரியம் முதலியவை களை அதிவேகமாகவே சொல்லுகிருள்.

மாத்திரை அளவில்த்தாள்
மடுத்து, முன்பயில்
சூத்திரம் இதுவெனத்
தோளின் வாங்கினன் ;
ஏத்தினர் இமையவர்,
இழிந்த பூமழை,
வேத்தவை நடுக்குற
முறிந்து வீழ்ந்ததே ! கஉள

27. சீதைக்குச் சந்தேகம் தீருகிறது.

கோமுனி யுடன்வரு
கொண்டல் என்றபின்,
தாமரைக் கண்ணினன்
என்ற தன்மையால்,

---

26. மாத்திரை - கண் மூடிவிழிக்கும் காலம். தாள் - காலில். மடுத்து - வளைத்து. சூத்திரம் - விளையாட்டுக் கருவி. ஏத்தினர் - புகழ்ந்தனர். வேத்தவை - அரச சபை.

27. கோ - பூசிப்பதற்கு உரிய. கொண்டல் - நீலமேகம் போன்றவன். தாமரைக் கண்ணினன் - விஷ்ணுவைப்போன்றவன்.

ஆம்அவ னேகொல்என்(று)
ஐயம் நீங்கினள் ;
வாமமே கலையிற
மடிவ ளர்ந்ததே. கஉஅ

28. சீதையின் நிலை இப்படி. அவளுடைய தந்தை என்ன செய்தான் ?

ஆசையின் அயர்பவள்
அன்னள் ஆயினள் ;
பாசடைக் கமலத்தோன்
படைத்த வில்இறும்
ஓசையிற் பெரியதோர்
உவகை எய்தி,அக்
கோசிகற் கொருமொழி
சனகன் கூறுவான். கஉகூ

29. 'தயவு செய்து சொல்லவேண்டும், கலியாணத்தை எப்போது வைத்துக்கொள்ளலாம்?' என்று ஜனகன் முனிவரைப் பார்த்துக் கேட்கிறான்.

உரைசெய்எம் பெரும!உன்
புதல்வன் வேள்விதான்
விரைவின்இன் றொருபகல்
முடித்தல் வேட்கையோ?

---

27. அவனே கொல் - அவனே தான். வாம - அழகிய. ஆனந்தத்தினால் அடிவயிறு விம்மியது.

28. அயர்பவள் - மயங்குபவள். பாசடை - பசுமையான இலை. வில், பிரமன் செய்து சிவபிரானுக்குக் கொடுத்தது. கோசிகன் - விசுவாமித்திரன். ஓசை பெரிது ; அப்படியே ஜனகனது ஆனந்தமும் பெரிது.

29. வேள்வி - கலியாணம்.

முரசெறிந்(து) அதிர்கழல்
முழங்கு தானைஅவ்
அரசையும் இவ்வழி
அழைத்தல் வேட்கையோ? கரு௦

30. முனிவர் பதில் சொல்லுகிறார்.

மல்வலான் அவ்வுரை
பகர, மாதவன்
ஒல்லையில் அவனும்வந்(து)
உறுதல் நன்றென, -
எல்லையில் உவகையான்,
இயைந்த வாறெலாம்
சொல்லுகென்(று) ஓலையும்
தூதும் போக்கினான். கருக

---

29. 'தசரதன் சேனை புறப்பட்டால், முரசொலியும், வீரர்களுடைய கழலொலியும் ஒரே முழக்கமாய் இருக்குமாம். தானை - சேனை. அரசு - தசரதன். வேட்கை - விருப்பம்.

30. மல்வலான்: ஜனகன் ஞானியாய் இருந்தாலும், மல்யுத்தத்திலும் பயின்றிருந்தான். பகர - சொல்ல. ஒல்லையில் - துரிதமாகவே. உறுதல் - வந்து சேர்தல். எல்லையில் - அளவில்லாத. இயைந்த - பொருத்தமாய் நேர்ந்த.

## 12. எழுச்சிப் படலம்

### 1. தூதர்கள் அயோத்தியை அடைகிறார்கள்.

கடுகிய தூதரும்
காலின் ஓடிச்சென்(று),
இடிகுரல் முர(சு)அதிர்
அயோத்தி எய்தினார் :
அடியிணை தொழஇடம்
இன்றி, மன்னர்தம்
முடியொடு முடிபொரு
வாயில் முன்னினார். ௧௩௨

2. தசரத மன்னன் தூதர்களை அழைத்துவரும் படி கட்டளையிட்டான். அவர்களும் சென்று அவனைக் காணுகிறார்கள்.

முகந்தனர் திருஅருள்,
முறையின் எய்தினார்,
திகழ்ந்தொளிர் கழல்இணை
தொழுது, செல்வனைப்

---

1. கடுகிய - வேகமாய்ச் சென்ற. காலின் - காற்றைப்போல. பொரு - மோதுகிற. முன்னினார் - அடைந்தார்கள்.

2. முகந்தனர் - ரொம்பவும் தயவைப் பெற்றவராய். செல்வனை - தசரதனை.

புகழ்ந்தனர், ' அரசநின்
புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை, இது'என
நெடிது கூறினர். கஙங

3. தூதர் கொண்டுவந்த ஓலையை அங்குள்ள வன் ஒருவனைக் கொண்டு மன்னன் வாசிக்கச் செய்கிறான்.

கூறிய தூதரும்
கொணர்ந்த ஓலையை,
ஈறில்வண் புகழினாய் !
இதுஅ தென்றனர் ;
வேறொரு புலமகன்
விரும்பி வாங்கினான் ;
மாறதிர் கழலினான்
வாசி என்றனன். கஙச

4. ஓலையில் ராமனுடைய அரிய செயலை எழுதிக் காட்டியிருந்தது. அந்தப் பாகத்தை வாசிக்கக் கேட்கவும், தசரதனுக்கு என்றுமில்லாத சந்தோஷம் உண்டாகிவிட்டது.

இலைமுகப் படத்(து)அவர்
எழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில்
செவியில்ச் சார்தலும்,

---

3. ஈறில் வண் புகழ் - முடிவில்லாமல் புகழ்ந்து கொண்டே இருக்கக்கூடிய. மாறு - பகைவர். அதிர் - நடுங்கும்படியான.

4. இலைமுகப்படம் - ஓலை. தலைமகன் - மூத்த குமாரனான ராமன்.

நிலேமுக வலயங்கள்
நிமிர்ந்து நீங்கிட
மலேயென வளர்ந்தன
வயிரத் தோள்களே. கடரு

5. வில்லே ராமன் முறித்த நாளேயொட்டி ஏதோ ஒரு இடிமுழக்கம் அயோத்தியில் தற்செயலாய்க் கேட்க நேர்ந்தது. அந்த முழக்கத்தைக் குறித்து உல்லாசமான ஒரு வின்னியாசப் பேச்சு :

வெற்றிவேல் மன்னவன்,
' தக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடி
தரித்த கண்ணுதல்,
முற்றஏழ் உலகையும்
வென்ற மூரிவில்
இற்றபேர் ஒலிகொலோ,
இடித்த(து) சங்(கு) ' என்றான். கடகூ

---

4. நிலேமுக - பெரிய பதக்கங்கள் தொங்கவிட்ட. வலயம் - தோள் வளேயம்.

5. மன்னவன்-தசரதன். பார்வதிதேவியின் தந்தை யான தக்கன் யாகம் செய்தபோது, தேவர்கள் எல்லோ ருமே சிவபெருமானுக்கு விரோதமாகக் கிளம்பினார்கள் ; சிவபெருமான் ஒரு வில்லே உபயோகித்து எல்லாரையும் வென்றார் என்பது கதை. கண்ணுதல் - நெற்றிக் கண் ணேடு கூடிய சிவபெருமான். மூரி - பலம் பொருந்திய. இடியோ என்றதிலுள்ள சந்தேகம், உல்லாசத்தில் வந்த ஹாஸ்யம்.

6. இந்த வின்னியாசத்தை எல்லோருமே ஒரு வருக்கொருவர் பரிமாறிக்கொள்ளுகிருர்கள்.

என்றுரைத்(து) எதிர்எதிர்
இடைவி டாது,நேர்

துன்றிய கனைகழல்
தூதர் கொள்கெனட

பொன்திணி கலன்களும்
தூசும் போக்கினுன்,

குன்றென உயரிய
குவவுத் தோளினுன். கடு௭

7. ராமன் இருக்கிற மிதிலைக்குச் சேனையும் அரசரும் புறப்படவேண்டும் என்று பறைசாற்றச் சொல்லுகிருன் தசரதன்.

வானவன் குலத்(து)எமர்
வரத்தில் வந்தகார்

மேனியன் இருந்தஅம்
மிதிலை நோக்கி,நம்

சேனையும் அரசரும்
செல்க முந்தெனு,

ஆனைமேல் அணிமுர(சு)
அறைகென் றேவினுன். கடு௮

---

6. கலன் - ஆபரணம். தூசு - உடை.

7. வானவன் - சூரியன். எமர் - எம் முன்னேர். கார் மேனியன் - ராமன்.

8. முரசொலியைக் கேட்ட மாத்திரத்தில் :

சாற்றிய முரசொலி
செவியில்ச் சாருமுன்,
கோல்த்தொடி மகளிரும்
கோல மைந்தரும்
வேல்த்தரு குமரரும்
வென்றி வேந்தரும்,
காற்றெறி கடல்எனக்
களிப்பின் ஓங்கினர். கஙகூ

9. ராமன் வில்லை ஒடித்த செய்தியை இளைஞர் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அதைக் கேட்கப் பெண்களுக்கிருந்த ஆசை எப்படி ?

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

சந்த வார்குழல்
சோர்பவை தாங்கலார்,
சிந்து மேகலை
சிந்தையும் செய்கலார்,
எந்தை வில்இறுத்
தான்எனும் இன்சொலை,
மைந்தர் பேச
மனங்களித் தோடுவார். கசO

8. கோல் தொடி - வெளிவோடு கூடிய தோள் வளை. வேல் தரு - வேல் ஏந்திய. காற்றெறி - புயற் காற்றினால் மோதப்பட்ட.

9. ஓடுகிற வேகத்தில் கூந்தல் கலைந்ததையும் இடுப் பில் அணிந்த சங்கிலிகள் அற்று விழுந்ததையும் கவ னிக்காதவர்களாய். எந்தை - ராமன்.

10. பெண்கள், டாக்கா மஸ்லின் போன்ற நுட்பமாக துணிகளை மேலே போட்டிருக்கிறார்கள். கூந்தலில், பூவை நிறையச் சூடியிருக்கிறார்கள். அவர்களுடைய பாதசரத்தின் ஒலி ஒரே முழக்கமாய் முழங்க, நடந்து செல்கிறார்கள்.

நுட்சி லம்பி
வலந்தன நுண்துகில்,

கட்சி லம்பு
கருங்குழ லார்குழு,

உட்சி லம்பு
சிலம்பஒ துங்கலால்

புட்சி லம்பிடு
பொய்கையும் போன்றதே. கசக

11. நடந்து போகிற பெண்களின் கூட்டம் இப்படி. குதிரைமேல் சவாரி செய்தும் பெண்கள் போகிறார்கள். வழியில் ஒரு மலைப்பிரதேசம். அந்த மலையில் அருமையான மரங்கள் நிற்கின்றன. அங்கே கொஞ்சம் தங்கிப் போக ஏற்பாடாகி யிருக்கிறது சவாரி வந்த ஆடவர்கள் முதலில் இறங்கி, அடுத்த குதிரையிலிருந்த நாயகிகளை மார்புறத்தழுவிக் கீழே

---

10. நுட்சிலம்பி : சிலந்தி பின்னுகிற நுட்பமாகிய வலை. வலந்தன : பின்னியமாதிரி. கள் சிலம்பு - தேன் வண்டு சப்திக்கிற. உள் சிலம்பு சிலம்ப - அடிமுடி தானைக்குள்ளிருந்து சிலம்புகள் ஒலிக்க, ஒதுங்கலால் நடத்தலால். புள் - பட்சி, சிலம்பிடு - சப்திக்கிற பொய்கை - தடாகம்.

இறக்குகிறார்கள். இரண்டு குதிரைகளையும், குதிரைக் காரர்கள் கொண்டுபோய் மரங்களில் கட்டுகிறார்கள். எந்த மரங்களில் ?

சந்தம்

தான தன்னன
தானன தானன
தா ன.

கோவை ஆர்வடக்
கொழுங்குவ(டு) இரண்டென
நிவந் த,

ஆவி வேட்டன,
வரிசிலை அனங்கன்மேல்க்
கொண் ட,

பூவை வாய்ச்சியர்
முலை,சிலர் புயத்தொடும்
பூட் டத்,-

தேவ தாரத்தும்
சந்தினும் பூட்டின
சில மா. கசஉ

11. ஜோடியாய் நிற்கும் இரண்டு மலைகளுக்கு வடம் போட்ட மாதிரி இருந்தது, ஆரம் அணிந்திருந்தது. ஆவி : ஆடவர் உயிர். மன்மதன் கருப்பு வில்லைப்பிடித்த மாதிரித் தொய்யில் எழுதுவது அக்காலத்து மரபு. பூவை: மைனாப் பறவை மாதிரி இனிமையாய்ப் பேசுகிற. தேவ தாரம் - உயர்ந்த வாசனைத்திரவியம் கொடுக்கும் மரம். சந்து - சந்தன மரம். அத்தகைய மரங்களில் கொண்டு போய்க் குதிரையைக் கட்டுவதென்றால் எப்படி !

12. இந்த விதமான மரங்கள் இயல்பாய் வளர்ந்து அடர்ந்த மலைப்பிரதேசத்தில் தங்கினார்கள். மலர்களைக் கொய்துகொண்டும் அருவிகளிலும் தடாகங்களிலும் குளித்து விளையாடிக்கொண்டும் பொழுது போக்கினார்கள். பிறகு எல்லோருமாக விருந்துண்டு, மறுபடியும் புறப்பட்டு மிதிலைபோய்ச் சேர்ந்தார்கள். சேர்ந்ததும், ஜனகமகாராஜன் தன் பரிவாரத்தோடும் வந்து, தசரதனையும் அயோத்தியிலிருந்து வந்த மற்றவர்களையும் அன்போடு எதிர்கொண்டழைத்து அரண்மனைபோய்ச் சேர்ந்தான்.

அங்கே தசரதனை ராமனும் லட்சுமணனும் வந்து வணங்குகிறார்கள்.

பிறகு ஊர்வலத்துக்கு ஏற்பாடாகிறது. ராமன் மாலையும் ஆபரணமும் அணிந்து தேரின்மேல் உலா வருகிறான். அப்போது:

சந்தம்

தானன தானன தன் தானன தானன தன்

மானினம் வருவபோன் றும்,
மயிலினம் திரிவபோன் றும்,
மீனினம் மிளிர, வா னின்
மின்னினம் மிடைவபோன் றும்,
தேனினம் பம்பிஆர்ப் ப
சிலம்பினம் புலம்பிஏங் க,
பூநனை கூந்தல்மா தர்
பொம்மெனப் புகுந்துமொய்த் தார். கசங

12. மீன் - நட்சத்திரம். மிடைதல் - நெருங்கித் துவளுதல். தேன் - வண்டு. பூநனை - பூவின் தேன்.

13. ராமனிருந்த தேர் போகும்போது, பெண்கள் இருபக்கங்களிலுமுள்ள பூந்தோட்டங்கள் வழியாக, செடி கொடிகளை இப்படியும் அப்படியுமாகத் தள்ளிக்கொண்டு, தேருக்குத் தாங்கள் பிந்தி விடக் கூடாது என்ற ஆத்திரத்தில் ஓடுகிறார்கள்.

பள்ளத்துப் பாயும்நன் னீர்
அனையவர் பானல்பூத் த
வெள்ளத்துப் பெரியகண் ணார்
மென்சிலம்(பு) அலம்ப,மென் பூத்
தள்ளத்தம் இடைகள்நோ வத்,
தமைவலித்(து) அவன்பாற்செல் லும்
உள்ளத்தைப் பிடித்தும்நாம், என்(று)
ஓடுகின் றாரும்ஒத் தார். கசச

14. மேலே சொன்னபடி மொய்த்தும் ஓடியும் பார்த்தார்கள். எப்படிப் பார்த்தார்கள் :

தோள்கண்டார் தோளேகண் டார்,
தொடுகழற் கமலம்அன் ன
தாள்கண்டார் தாளேகண் டார்,
தடக்கைகண் டாரும்அஃ தே ;

13. மேட்டிலிருந்து பள்ளத்தில் தண்ணீர் பாயும் போது ஒரு மனோவேகம் தென்படுகிறதுபோலத் தெரிகிறது ; அத்தகைய மனோவேகம் பெண்களிடத்தில் இருந்தது. பானல் - நீலோற்பலம். வெள்ளம் - நீர்நிலை. ஓடிப்போன உள்ளத்தையே பிடிக்கப்போகிறார்களாம். என்ன விசித்திரம் !

14. ராமனுடைய பூரண சௌந்தர்யத்தை அபாரமாக அனுபவித்த காரணமாகவே ஒவ்வொரு உறுப்புக்களிலும் அவ்வளவு ஈடுபட்டு விட்டார்கள். காதல்

வாள்கொண்ட கண்ணூர்யா ரே
வடிவினை முடியக்கண் டார்?
ஊழ்கண்ட சமயத்(து),அன் னூன்
உருவுகண் டாரைஒத் தார்! கசரு

15. ஊர்வலம் கடைசியாக, வசிஷ்டரும் விசுவாமித்திரரும் முன்னமேயே போயிருந்த மண்டபம் வந்து சேர்ந்தது. ராமனும் உள்ளே சென்றுன்.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

மாதர் இன்னணம்
எய்திட, வள்ளல்போய்க்
கோதில் சிந்தை
வசிட்டனும் கோசிக
வேத பாரனும்
மேவிய மண்டபம்
ஏதில் மன்னர்
குழாத்தொடும், எய்தினுன். கசசு

---

உணர்ச்சி நிரம்ப இருந்ததால், தோள் மாத்திரம் முன் நின்றது. எதுபோல : எங்கும் நிறைந்த கடவுளிடத்தில் ஈடுபட்டவர்களுக்கே அந்தக் கடவுளின் அடையாள உருவங்களில் அபாரமான ஈடுபாடு உண்டாவதுபோல, ஒரு உருவ வழிபாட்டில், உடல் பொருள் ஆவியெல்லாம் தத்தம் பண்ணுவதென்றுல், எங்கும் நிறைந்த கடவுளிடம் மிக்க ஈடுபாடு என்பதுதான் பொருள். ஊழ் கண்ட சமயம் : ஆங்காங்கு ஒழுங்குபடுத்தி வைத்துள்ள சமய வழிபாடுகள். (கிருஷ்ணன் என்றும் முருகன் என்றும் வழிபடுவது சமயம்.)

15. வள்ளல் - ராமன். வேத பாரன் - வித்தைகளையெல்லாம் சுமந்துகொண்டிருப்பவரான விசுவாமித்திரர்.

16. ராமன் இரண்டு முனிவர்களையும் வணங்குகிறான். வணங்கும்போது, கழுத்தில் அணிந்த ஆரம் துவளுகிறது.

திருவின் நாயகன்,
மின்துவண் டால்எனத்
துருவு மாமணி
ஆரம் துயல்வரப்,
பருவ மேகம்
படிந்தது போல்ப்படிந்(து)
இருவர் தாளும்
முறையின் இறைஞ்சினான். கசஎ

17. ராமனை, முனிவர்கள், அலங்கரிக்கப்பட்ட ஒரு ஆசனத்தில் ஏறி இருக்கச் சொன்னார்கள்.

இறைஞ்சி, அன்னவர்
ஏத்தினர் ஏவ,ஓர்
நிறைஞ்ச பூந்தவி(சு)
ஏறி, நிழல்கள்போல்
புறஞ்செய் தம்பியர்
உட்பொலிந் தானரோ
அறஞ்செய் காவற்(கு)
அயோத்தியுட் தோன்றினான். கசஅ

---

16. திருவின் நாயகன் - ராமன். துருவு : கறுப்பிருந்தால் அதைச் சாணையில்த் தோய்த்து ஒதுக்கிய. துயல்வர - அசைய.

17. ஏத்தினர் - வாழ்த்தி. ராமனுடைய நிழல்கள் போலவும், அவனுடைய உருவத்தை எடுத்துக்காட்ட

18. அப்போது தசரதச் சக்கரவர்த்தி சிற்றரசர்கள் சூழ மண்டபத்துக்குள் பிரவேசிக்கிறுன்.

ஆன மாமணி
மண்டபம் அன்னதில்
தானை மன்னன்,
தமரொடும் சார்ந்தனன் ;
மீன்எ லாம்வரப்,
பின்வரும் வெண்மதி
வான்நி லாவுற
வந்தது மானவே. கசசு

19. தசரதனும் ஒரு ஆசனத்தில் ஏறுகிறுன். ஏறும்போது எல்லோரும் புஷ்பங்களைத் தூவுகிறுர்கள்.

வந்து மாதவர்
பாதம் வணங்கி,மேல்
சிந்து தேமலர்
மாரி சிறந்திட,

---

வைத்த புறப்படலம் போலவும் நின்றுர் தம்பிமார். உயர்ந்த லட்சியங்களும் தருமங்களும் ஒழிந்துபோகாதபடி காப்பதற்காக இளவரசாய்ப் பிறந்தான் ராமன்.

18. தானை - சேனை ; தசரதனது உறவினரான சிற்றரசர்கள் சிறிய பொற்கிரீடங்களைத் தரித்திருந்தார்கள்; அவனே மிகச் சிறந்த முத்துக் கிரீடத்தை அணிந்திருந்தான். சிற்றரசர் அணிவகுத்து முன்னே செல்ல, சக்கரவர்த்தி பின்னே சென்றுன். சந்திரன் உதயமாகவும் ஆகாயமெல்லாம் நிலவின்ஒளி நிறைவதுபோலத், தசரதன் வந்ததும் மண்டபம் எங்குமே பேரொளி பரந்தது.

அந்த ணாளர்கள்
ஆசியோ(டு) ஆசனம், -
இந்தி ரன்முகம்
நாணு ற, ஏறினன். கரு0

20. தசரதனுடைய சக்கரவர்த்தி ஸ்தானத்துக்கு ஏற்றவாருக :

தீங்க ரும்பினும்
தித்திக்கும் இன்சொலார்
தாங்கு சாமரை
மாடு தயங்குவ ;
ஓங்கி ஓங்கி
வளர்ந்து,(உ)யர் கீர்த்தியின்
பூங்கொ ழுந்து
பொலிவன போன்றவே. கருக

21. இப்படியாக எல்லோரும் வந்து அவரவர்கள் ஆசனத்தில் அமர்ந்த பிறகு, வசிஷ்டர் ஜனகனைப் பார்த்து, பெண்ணை அழைத்துவர ஏற்பாடு செய்யலாம் என்ருர். அரசனும் கட்டளையிட, சில பெண்கள் போய்ச் சீதையின் தாதியரிடம் சொன்னர்கள். அவர்கள் சீதையை உடை உடுத்தி, ஆபரணம் அணிந்து அலங்கரித்தார்கள். எங்கும் யாரும் காணுத அழகுடன் விளங்குகிருள் சீதை. பிறகு, நடந்து வருகிருள்.

---

20. மாடு - பக்கத்தில், தயங்குவ - விளக்கமுற்று அசைவன. தசரதனுடைய புகழ் தானே திரண்டு கொழுந்துவிட்டு வளர்ந்தது போல, வெண்சாமரை அசைந்தன.

நடந்து வரும்போது, சீதை அணிந்திருந்த நகைகளி லிருந்து பற்பல நிறங்கொண்ட ஒளி ரேகைகள் தரை யில் நாலாபக்கமும் விழுந்தன.

சந்தம்

தான னன தன்ன னன தன்ன னன தன்ன

வல்லியைஉ யிர்த்தநில
மங்கை,' இவள் பா தம்

மெல்லிய,உ றைக்கும்'என
அஞ்சி,நிலம் எங் கும்

பல்லவம லர்த்தொகை
பரப்பினள்ள னத் தன்

நல்லணிம ணிச்சுடர்
தவழ்ந்திடந டந் தாள். கருஉ

22. சீதை நடந்துவரும்போது நவரத்தின கசித மான விதானம் ஒன்றை மேலே பிடித்து வந்தார்கள். அது சூரியப் பிரகாசமாகவே இருந்தது.

மண்முதல்அ னைத்துலகின்
மங்கையர்கட் கெல் லாம்

கண்மணிஎ னத்தகைய
கன்னிஎழில் கா ண,

---

21. வல்லியை - சீதையை. உயிர்த்த - பெற்ற. நிலமங்கை - பூமாதேவி. உறைக்கும்: தரை அழுத் துமே. பல்லவம் - மெல்லிய இதழ்.

அண்ணல்ம ரபிற்சுடர்
அருத்தியொடு தான் அவ்
விண்ணிழிவ(து) ஒப்பதோர்
விதானநிழல் வந் தாள். கஉ

23. இப்படி வந்தவளைப் பார்த்த ராமன், முன்னமே அகழிப்பக்கம் உப்பரிகையில்ப் பார்த்த பெண் அல்லவோ என்று முதலில் சந்தேகிக்கிறுன்.

அன்னவளை அல்லள்என,
ஆம் !எனஅ யிர்ப் பான்,
கன்னியமிர் தத்தைஎதிர்
கண்டகடல் வண் ணன் :
உன்உயிர்நி லைப்பதோர்
அருத்தியொ(டு) உழைத் தாண்(டு)
இன்அமிழ்(து) எழக்களிகொள்
இந்திரனை ஒத் தான். கஉச

22. அண்ணல் மரபிற் சுடர் - ராமனது வமிசத்தவனை சூரியன். அருத்தி - மிக்க ஆசை.

23. அன்னவளை - அந்தப் பெண்ணை. அல்லள் என்றும் ஆம் என்றும் பலதடவைச் சந்தேகித்தான். அயிர்த்தான் - சந்தேகித்தான். இந்திரனுக்கு உயிராபத்தே வந்துவிட்டது; கடைந்த பாற்கடலிலிருந்து தேவாமிர்தம், எழாமல்ப் போனுல், தொலைய வேண்டியதுதான். அந்நிலையில் கடலிலிருந்து அமிர்தம் எழக் கண்ட மாத்திரத்தில் அவனுக்கு எவ்வளவு ஆனந்தம் இருந்திருக்கும்? உன் - சதா கவலையோடு நினைத்துக் கொண்டிருந்த. களி - ஆனந்தம்.

24. உயர்ந்த லட்சியங்களுக் கெல்லாம் ஆதார மான பேரறிவாளனென்று சகலரும் மதித்த விசுவா மித்திரரும், நடந்துவருகிற சீதையைப் பார்த்தார்.

அச்சென நினைத்தமுதல்
அந்தணன் நினைந் தான் :
' பச்சைமலை ஒத்தபடி -
வத்(து)அடல் இரா மன்,
நச்சுடை வடிக்கண்மலர்
நங்கையிவள் என் றால்,
இச்சிலைகி டக்க,மலை
ஏழையும் இரு ளோ !' கஉஉ

25. விசுவாமித்திரர்தான் பார்த்து இவ்வித மாக நினைத்தார். வசிஷ்டர் என்ன நினைத்தார் ?

' எங்கள்செய் தவத்தினில்
இராமன்என வந் தோன்,
சங்கினொடு சக்கரம்
உடைத்தனி முதல்ப் பேர்

24. அச்சு - ஆதாரம். அடல் - யுத்த வீரம். நச்சுஉடை : நஞ்சு தோய்ந்தது என்று சொல்லும்படி யான கொடிய கண்கள். என்றால் - லட்சியம் என்றால்.

25. ராமன் என வந்தோன் : விஷ்ணுமூர்த்திதான் என்று நமக்குத் தெரியும். ஆதலின், அந்த இலக்குமி தேவியானவள், இந்த நங்கைதான் என்று நினைத்தார். பேர் - பெரிய.

அங்கண்அர(சு); ஆதலின்,அவ்
அல்லிமலர் புல் லும்
மங்கை,இவ ளாம்'என
வசிட்டன்மகிழ் வுற் றான். கடுரு

26. தசரதன் நினைத்தான் : உலகத்தையே அரசாண்ட பாக்கியம் எல்லாம் இருந்தாலும், இன்று தான் லட்சுமி என் வீட்டுக்கு வர ஏற்பட்டாள்.

துன்றுபுரி கோதைஎழில்
கண்(டு),உலகு சூழ் வந்(து)
ஒன்றுபுரி கோலொடு
தனித்திகிரி உய்ப் பான்,
'என்றும்உல கேழும்அர(சு)
எய்திஉள னே னும்
இன்றுதிரு எய்திய(து)
எனக்(கு)'என நினைந் தான. கருகா

27. ராமன் முனிவர்கள் இவர்கள், அல்லாத மற்றவர்கள், சீதை வந்ததைப் பார்த்ததும் என்ன செய்தார்கள் :

---

25. அங்கண் அரசு - நெடுமால். அல்லிமலர் புல் லும் - தாமரை பொதிந்து வைத்திருக்கும். மங்கை - இலக்குமி தேவி.

26. துன்றுபுரி கோதை - நெருக்கிக் கட்டிய மாலையை அணிந்த பெண். எழில் - அழகு. ஒன்றுபுரி கோல் - ஏகசக்கராதிபத்தியத்தை உண்டாக்கி நிறுத்திய செங்கோல். தனித்திகிரி - ஏக சக்கரம் ; உலகத்தையே அடக்கி ஆளுகை.

நைவளம் எனத்தகையள்
நண்ணவர லோ டும்,
வையம் நுகர் கொற்றவனும்
மாதவரும் அல் லார்
கைகள்தலை புக்கன ;
கருத்துளன எல் லாம்
தெய்வம்என உற்ற ;உடல்
சிந்தைவசம் அன் றோ ? கருஅ

28. மண்டபத்தி லிருந்தவர்கள் நிலை இப்படி இருக்க, அவள் :

மாதவரை முற்கொள
வணங்கி,நெடு மன் னன்
பாதமல ரைத்தொழுது,
கண்கள்பனி சோ ரும்
தாதையரு(கு) இட்டதவி -
சில்த்தனி இருந் தாள் :
போதினை வெறுத்தரசர்
பொன்மனை புகுந் தாள். கருகூ

---

27. நைவளம் - ஒரு ரஸமான ராகம், கம்பர் ரொம்பவும் அனுபவித்த ராகம். தற்காலத்தில் வேறு பெயரோடு இது தமிழ் நாட்டில் வழங்கி வருகிறது ; அடாணா, பைரவி போன்ற ஏதோ ஒரு ராகம். ராகம் அற்புதமாகவும் மனசை மயக்கத் தகுந்ததாகவும் இருக்கிறது ; அதுபோல் சீதையின் அழகு இருந்தது. வையம் நுகர் கொற்றவன் - உலகத்தை உண்ட திருமால் ; ராமன். உற்ற - எண்ணியிருந்த.

28. நெடு மன்னன் - தசரதச் சக்கரவர்த்தி. தாதை அருகு - ஜனகன் பக்கத்தில். போதினை - செந்தாமரை மலரை. குறிப்பு : கடைசி அடி, அபூர்வமான அதிசய பாவம்.

29. நீலமாலை என்ற தோழிவந்து சொன்னதில், தான் கண்ட அழகன்தான் வில்லை முறித்திருக்க வேண்டும் என்று உண்மை தெரிந்ததில்க் குறைவில்லை ; ஆனாலும், கொஞ்சம் சந்தேகம் இருந்தது. அது தெளிந்தவிதம் எப்படி :

எய்யவில்வ ளைத்ததும்
இறுத்ததும் உரைக்க,
மெய்விளை விடத்தும்,உறும்
ஐயம்விடல் உற்றாள், -
ஐயனை அகத்துவடி
வேயலபு றத் தும்
கைவளை திருத்துபு
கடைக்கணின்உ ணர்ந் தாள். கசுO

30. ராமனுடைய நீலமேனியின் அழகு, ஒரு ஆறாகப் பாய்ந்து சீதையின் விசாலமான கண்ணில்ப் போய் பெருகியது.

கருங்கடலின் வண்ணன்ஒளி
ஆறு,நிறை கண் ணப்
பெருங்கடலில் மண்ட,உயிர்
பெற்றினி(து) உயிர்க் கும்

29. எய்ய வில் - அச்சம் தரத்தக்க வில். மெய்விளை விடத்து - உண்மை என்று பட்டபோதும். உறும் ஐயம் - ஏற்பட்ட சிறிய சந்தேகத்தை. இதுவரை மனசில் வைத்துத்தான் பார்த்துக்கொண்டிருந்தாள். இப்போது கைவளையைச் சரிப்படுத்துகிற முறையில் கடைக்கண்ணால் வெளியிலும் பார்த்துக் கொண்டாள். கடைக்கண்ணின் உணர்ந்துகொண்ட சீதை ஐயம் விடலுற்றாள்.

30. கருங்கடலின் வண்ணன் : ராமன். ஒளிஆறு : திருமேனி அழகின் பெருக்கு. நிறை கண்ணப் பெருங்கடலில்-விசாலமான கண்ணாகிய கடலில்.

அருங்கலன் அனங்கரசி,
ஆரமிழ்(து) அனைத் தும்
ஒருங்குடன் அருந்தினரை
ஒத்துடல் நடித் தாள். கசுக

31. இனிக் காரியமான பேச்சு. தசரதச் சக்கரவர்த்தி விசுவாமித்திரரைப் பார்த்து கலியாணத்துக்கு முகூர்த்தம் என்றைக்குக் குறிப்பிட்டிருக்கிறது என்று கேட்டான். நாளையேதான் என்று முனிவர் சொன்னார். சரி என்று விடுதிக்கு எழுகிறான் தசரதன்.

சொற்றபொழு தத்(து)அரசர்
கைதொழ எழுந் தான்;
ஒற்றைவயி ரச்சுரிகொள்
சங்கின்ஒலி பொங் கப்,
பொற்றட முடிப்புது
வெயிற்பொழி தரப் போய்,
நற்றவர்தம் ஆசியொடு
நன்மனை புகுந் தான். கசுஉ

---

30. ஒருங்குடன் - பிறருக்கில்லாமல் எல்லாம் தனக்கேயாக.

31. ஒற்றை வயிரச்சுரி - சங்கில் சுற்றியோடுகிற விளம்பில் வைரம் அழுத்தியிருந்தது.

# 13. கடிமணப் படலம்

1. தசரதன், தனக்கு ஏற்படுத்திய விடுதிக்குச் சென்றான். அப்படியே எல்லோரும் அவரவர்கள் இடத்துக்குச் சென்றார்கள்.

மறுநாள்க் காலையில், கலியாணத்துக்கு வேண்டிய சகலவிதமான பதார்த்தங்களையும் வசிஷ்டர் சேகரித்து முறைப்படி அமைத்தார். மணமகனும் மணமகளும், பூமாலையால் அலங்கரித்த மண்டபத்துக்கு வந்து மணவறைப் பீடத்தில் உட்கார்ந்தார்கள்.

ந்தம்

தானன தன்னன தன்னன தன்ன

மன்ற லின்வந்து
மணித்தவி(சு) ஏறி,
வென்றிநெ டுந்தகை
வீரனும், ஆர்வத்(து)
இன்துணை அன்னமும்
எய்தியி ருந்தார்;
ஒன்றிய போகமும்
யோகமும் ஒத்தே. கசுரு

---

1. மன்றல் - மணப்பந்தல். வீரன் - ராமன். ஆர்வம் - அன்பின் மிகுதி. அன்னம் - சீதை. பொதுவாக உலகஇன்பத்தில் திளைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு

2. ஜனகன் வந்து சீதையை ராமனுக்குக் கன்னிகாதானம் செய்கிறான்.

கோமகன் முன்,சன -
கன்,குளிர் நன்னீர்ப்
பூமக ளும்பொரு -
ளும்என, நீஎன்
மாமகள் தன்னொடு
மன்னுதி என்னாத்,
தாமரை அன்ன
தடக்கையின் ஈந்தான். ௧௬௪

3. இந்த ஆனந்த நிகழ்ச்சியை, பலபல வின்னியாசத்தோடும் சங்கநாதம் முழக்கிக் காட்டியது. என்ன என்ன பாவங்கள் அந்த வின்னியாசங்களில் இருந்தன :

---

பரலோக இன்பம் கிடையாதென்றும், பரலோக இன்பத்தில்த் திளைத்துக் கொண்டிருப்பவர்கள் உலக இன்பங்களை விட்டு விலகி இருப்பார்கள் என்று சொல்லுவதுண்டு. ஜனகன் போன்ற சிலரிடத்தில், உலக இன்பத்தையும் பரலோக இன்பத்தையும் ஒருங்கே அனுபவிக்கக் காணலாம். இரண்டு பேரின்பங்களும் கலந்திருந்தது போலிருந்தது, ராமனும் சீதையும் மணவறையில் அமர்ந்திருந்தது. அந்தக் காட்சியின் இன்பம், அப்படிச் சொல்லும்படி யிருந்தது.

2. கோமகன் - ராமன். நீர்வளத்தோடு கூடிய பூமியின் வளமும், வியாபாரம், கைத்தொழில் முதலான செல்வமும் ஒரு நாட்டில் ஒருங்கே கலந்திருக்கவேண்டுமல்லவா ? அப்படியே, நீங்கள் கலந்திருந்து வாழவேண்டும் என்று அருமையாய் வாழ்த்துகிறான் ஜனகன்.

அந்தணர் ஆசி,
அருங்கலம் அன்னூர்
தந்தபல் லாண்டிசை,
தார்முடி மன்னர்
வந்தனே, வானவர்
வாழ்த்தொலி போல,
முந்திய சங்கம்
முழுங்கின மாதோ. கசுரு

4. முழக்கந்தான் இப்படி. இதோடு:

வானவர் பூமழை,
மன்னவர் பொற்பூ,
ஏனையர் தூவும்
இலங்கொளி முத்தம்
தான்நகும் வெண்மலர்,
என்றிவை தம்மால்,
மீன்நகு வானின்
விளங்கிய(து) இப்பார். கசுசு

---

3. மன்னர் வந்தனே: போற்றி போற்றி என்று தங்கள் வந்தனத்தை முழக்கிக் காட்டினூர்கள். மற்றெல்லா வாழ்த்தொலிகளுக்கும் மேலே வந்து ஒலித்தது சங்க நாதம். வானவர் - பேரறிவாளர்.

4. முத்துத்தான் பிரகாசத்தோடு கூடிய வெண் மலராயிருந்தது. மீன் நகு: நட்சத்திரப் பிரகாசத்தோடு கூடிய. வானின் - வானமண்டலத்தைப் போல.

5. ராமனும் சீதையும், மற்றுமுள்ள கிரியைகளை எல்லாம் ஆனந்தமாய்ச் செய்தார்கள்.

மற்றுள செய்வன
செய்துமகிழ்ந்தார் ;
முற்றிய மாதவர்
தாள்முறை சூடிக்
கொற்றவனைக்கழல்
கும்பிட லோடும்,
பொற்றொடி யைக்கொடு
நன்மனை புக்கான். கசுஎ

6. ஏற்பட்டுள்ள உபசாரங்கள் எல்லாம் கோலாகலமாய் ஆகின்றன. சகல சாஸ்திர பண்டிதர்களான பெரியோர்கள் ஆசீர்வாதம் செய்கிறார்கள்.

நூற்கடல் அன்னவர்
ஆசி நுவன்றார் ;
மால்க்கடல் அன்ன
மனத்தவ ளோடும்,
கார்க்கடல் போல்க்கரு -
ணைக்கடல், பண்டைப்
பாற்கடல் அன்னதொர்
பள்ளி அணைந்தான். கசுஅ

---

5. தாள்முறை சூடி : முறைப்படி வணங்கி. கொற்றவனை - தசரதனை. புக்கான் : புகுந்தான் ராமன்.

6. ஆசிநுவன்றார் - ஆசீர்வாதம் சொன்னார்கள். சீதையின் மனம், ஆனந்த மயக்கங்கொண்டு, கொந்தளிக்கும் கடல்போல இருந்தது. பள்ளியின் விரிப்பு வெண்மை

7. கலியாணத்தை ஒட்டி எத்தனையோ வைபவங்கள். தினம் தினம் புதிது புதிதான விருந்துகள். நாட்டியங்கள் எத்தனை எத்தனையோ. எல்லாவற்றையும் மணமகனும் மணமகளும் அனுபவித்துக் கொண்டு கோலாகலமாய் இருக்கிறார்கள்.

சந்தம்

தானன தனனன தானன தனன

கோனாகிய மணவாளனும்
சனகன்தரு குயிலும்,

நானாவிதம் வருபோகமே
நுகர்கின்றஅந் நாள்வாய், -

ஆனமறை நெறிஆசிகள்
முனிகோசிகன் அருளிப்

போனான்வட திசைவாய்,உயர்
பொன்மால்வரை புகுவான். ௧௧௯

மணமக்களைச் சாஸ்திரங்களில்ச் சொல்லியபடி விஸ்தாரமான முறையில் ஆசிர்வதித்துவிட்டு, வட கோடியில் துருவ நட்சத்திரத்தோடு ஒட்டியுள்ள பொன்மயமான மேருகிரியில்ப் போய்த் தவம் செய்வதற்காக விசுவாமித்திரர் புறப்பட்டுப் போய் விட்டார்.

---

யாய் இருந்தது. விஷ்ணுமூர்த்தியே, இலக்குமியோடு பண்டையப் பாற்கடலில் பள்ளிகொள்ளப் போனது போலிருந்தது.

பிறகு, தசரத மன்னன் அயோத்திக்குப் புறப்படுகிறான். ராமன், சீதை மற்றும் எல்லோருமாக ஜனகன் முதலானவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்படுகிறார்கள்.

வழியில் பரசுராமன், இருபத்தேழு தலைமுறையாக க்ஷத்திரியர்களை வென்று ஹதம் செய்தவன், தன் மழுவாயுதத்தைக் கையில் ஏந்திக் கொண்டு, எல்லோரையும் அங்கேயே கொன்று விடுவதாகக் குமுறிக்கொண்டு வருகிறான். தசரதன், 'அடடா, இப்படி யெல்லாம் மங்களகரமாகப் போகிறபோதா இவன் வரவேண்டும்!' என்று ரொம்பவும் வருந்துகிறான், திகைக்கிறான். பரசுராமனது காலில் விழுந்து பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று மன்றாடுகிறான். 'அதெல்லாம் முடியாது. ஏதோ உன் மகன் இந்த ராமன், சிவதனுசை முறித்து விட்டானும். என் கையிலுள்ள இந்த மகா தனுசை வளைத்து விடட்டும் பார்க்கலாம்' என்றான். ராமன், அப்படியே அந்த வில்லை எளிதில் வளைத்து நாணேற்றி விட்டான். அதோடு நிற்கவில்லை, அதில் ஒரு அம்பு கோத்து, பரசுராமனைப் பார்த்துச் சொல்லுகிறான்: 'நீ பிராமணன். உன்னைக் கொல்லல் ஆகாது. அதனால் பிழைத்துப் போகிறாய். ஆனாலும், இந்த அம்புக்கு இரை ஒன்று எப்படியும் வேண்டும், அதைச் சொல்' என்றான்.

பரசுராமனுக்கு ஒன்றும் தோன்றாமல், 'என் தபோபலம் இருக்கிறது. அதுவே இரையாகட்டும்' என்றான். அம்பை ராமன் எய்தான். அது பரசுராமனது தபோபலம் அவ்வளவையும் வாரிக்கொண்டு

ராமனிடம் மீண்டது. பரசுராமன் ராமனை வாழ்த்தித் தொழுதுவிட்டு விடைபெற்றுப் போனான்.

மூர்ச்சித்துக் கிடந்த தந்தையிடம் ராமன் போய் விஷயத்தைச் சொல்லித் தேற்றிப் புறப்படச் சொன்னான். தசரதனுக்கு உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வளவு என்றில்லை. இந்தச் சிறுவனாகிய ராமனே இம்மையையும் மறுமையையும் அளிக்கும் தெய்வம், என்று உடல் புளகிக்க வாழ்த்தினான். அங்கிருந்து புறப்பட்டு எல்லோருமாக அயோத்தி போய்ச் சேர்ந்தார்கள்.

அயோத்தியில் தசரதனும் மக்களும் ஆனந்தமாய்க் காலம் கழிக்கிறார்கள். கேகய நாட்டுக்கு அரசனான பரதனது பாட்டன், பேரனைப் பார்க்கவேண்டும் என்பதாகத் தசரதனுக்குக் கொஞ்ச காலத்துக்கு முன்னமேயே செய்திசொல்லி அனுப்பியிருந்தான். அதனால், பரதனைத் தசரதன் கேகய நாட்டுக்குப் போய் வரச் சொல்லுகிறான்.

அப்படியே ராமனை வணங்கி விடைபெற்று, கேகயநாடு போய்ச் சேருகிறான் பரதன்.



# கடவுள் வாழ்த்து

நம்முடைய ஆன்ம தத்துவமானது உடம்பு, உயிர், உணர்ச்சி ஆகிய மூன்று தத்துவங்களுக்குள்ளும் நிறைந்து தொழிற்படுகிறது. இதுபோலக் கடவுள் தத்துவமும், ஆகாயம் என்ற மிக நுண்ணிய வஸ்துவிலிருந்து தடித்துத் தடித்து உண்டாயிருக்கிற காற்று, சுடர், நீர், கல் என்று சொல்லும் நான்கு தத்துவங்களிலும் நிறைந்துநின்று தொழிற்படுகிறது. எல்லா வஸ்துக்களிலும் நின்று தொழிற்படுவதால், அந்தக் கடவுள் தத்துவம் ராமனென அரிய புருஷனிடத்திலும் நின்று தொழிற்படுகிறது. ராமனுடைய கஷ்ட நஷ்டங்கள் எல்லாம் கடவுளுடைய கஷ்ட நஷ்டங்கள் தான். இந்தச் சித்தாந்தத்தைக் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் அலங்காரமாகக் காட்டுகிறார் கம்பர்.

சந்தம்

தான தான தானன தான தான தானன

**வான்நின்(று) இழிந்து வரம்பிகந்த
மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறத்தும் உளன்என்ப:**

---

வான் - ஆகாயதத்துவம். மா பூதம் - தடித்த பூதங்கள். வைப்பு - வைத்திருக்கும். உள்ளும் - அணுவுக்கு உள்ளும். புறத்தும் - அகண்ட வெளிக்கு வெளியுமே; இறுதியற்ற இடம் எங்குமே.

கூனும் சிறிய கோத்தா யும்
கொடுமை இழைப்பக் கோல்துறந் து,
கானும் கடலும் கடந்(து)இமை யோர்
இடுக்கண் காத்த கழல்வேந் தை.



கூன் - கூனி. சிறிய கோத்தாய் - சிற்றன்னையான கைகேசி. காட்டையும், அணைகட்டிக் கடலையும் கடந்து, தேவர்களுக்கு முரணாயிருந்த அரக்கனைக் கொன்று தர்மத்தை நிலைநாட்டிய வீரனை, எங்கும் நிறைந்த வஸ்துவாகவே சொல்லுவர் விஷயம் தெரிந்தோர்.

## 2. மந்திரப் படலம்

1. தசரதன் அயோத்தியில் மிக்க சந்தோஷத்துடன் இருக்கிறுன். புதல்வர்களுக்கெல்லாம் கலியாணம் ஆகிவிட்டது. அவர்கள் எல்லாவிதத்திலும் திறமை வாய்ந்தவர்களாயும் நற்குணம் படைத்தவர்களாயும் இருக்கிறுர்கள். வேறு என்ன வேண்டும் ஒருவனுக்கு? இப்படி இருக்கையில், ஒருநாள் அரண்மனையிலிருந்து புறப்பட்டுச் சபாமண்டபத்துக்கு வருகிறுன்.

சந்தம்

தானன தானன தான தன்னன

மண்ணுறு முரசினம்
மழையின் ஆர்ப்புறப்
பண்ணுறு படர்சினப்
பரும யானையான்,

---

1. மண் உறு - நாதத்துக்காகப் பசை பூசிய. ஒரு திசையிலிருந்து மற்ருெரு திசைக்கு இடி ஓடுகிறமாதிரி, சக்கரவர்த்தி வருகையை முரசு ஒவ்வொன்ருய் ஆங்காங்கு ஒலிக்கும். ஆர்ப்புற - ரொம்ப சப்திக்க. பண் உறு - அம்பாரி ஏற்றிவைத்த. படர் சின - நிலையில் நிற்க முடியாது பரபரப்போடு நடக்கிற.

கண்ணுறு கவரியங்
கற்றை சுற்றுற,
எண்ணுறு சூழ்ச்சியின்
இருக்கை எய்தினன். உ

2. சபா மண்டபத்துக்கு வந்து சேர்ந்ததும், உடன்வந்த அரசர், உறவினர், நண்பர் இவர்களைப் பக்குவமாக வெளியே போகும்படியாகக் கேட்டுக் கொண்டான். அவர்கள் போனபிறகு, தன்னந் தனியாக சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிறான்.

புக்கபின், நிருபரும்
பொருவில் சுற்றமும்
பக்கமும், பெயர்கெனப்
பரிவின் நீக்கினன்;
ஒக்கநின்(று) உலகளித்(து)
யோகின் எய்திய
சக்கரத் தவன்எனத்
தமியன் ஆயினன். ந

---

1. கண் உறு - அடர்த்தியான. சுற்றுற - பெண்கள் இரட்ட. எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை - மந்திராலோசனை செய்யும் இடம்.

2. நிருபர் - அரசர். பொருவில்-ஒப்பற்ற ; ரொம்பவும் பாசமுடைய சுற்றத்தார். பக்கமும் - சதா உடனிருக்கும் நண்பர். பெயர்கென : கொஞ்சம் ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டு வரலாமே என்றெல்லாம். பரிவின் - பக்குவமான வார்த்தைகள் சொல்லி. கடவுள் எங்குமே எல்லா வஸ்துக்களுக்குள்ளும் இருந்தாலும், தனித்துத்தான் இருக்கிறார். அதுபோல, தசரதனது ஆணை, ராஜ்யம் எங்குமே பரந்து ஆங்காங்கு சதா தொழில் செய்துகொண்டிருந்தாலும், அவன் அந்தவேளை

3. வெண் குடையானது உலகத்தை மாத்திரம் அல்ல, தேவலோகத்தையுமே கவித்து நிற்கிறது. அதாவது, தசரதனது ஆட்சியினால் உலகத்தவரும், வானவருமே பயனடைந்து சுகமாக வாழ்கிறார்கள் என்று சொல்லத்தகும். இத்தகைய சக்கரவர்த்தி, ஆலோசனைசெய்வதற்காக மந்திரிகளை மண்டபத்துக்கு அழைக்கிறான்.

சந்திரற்(கு) உவமைசெய்
தரள வெண்குடை
அந்தரத் தளவும்நின்(று)
அளிக்கும் ஆணையான்;
இந்திரற்கு இமையவர்
குருவை ஏய்ந்த,தன்
மந்திரக் கிழவரை
வருகென் றேவினான். ௩

4. மண்டபத்துக்கு, பிரதம மந்திரியாகிய வசிஷ்டர் முதலில் வருகிறார்.

பூவரு பொலன்கழல்ப்
பொருவில் மன்னவன்
காவல்இல் ஆணையங்
கடவு ளாமெனத்,

---

மண்டபத்தில் தனித்துத்தான் இருந்தான். அவன் ஒரு இடத்தில் இருந்தாலும், ஆக்ஞா சக்தி எங்குமே பரவி நிற்கிறது என்பது பொருள்.

3. தரளம் - முத்து; முத்துச் சரங்களால் அலங்கரித்த. அந்தரம் - வானம். அளிக்கும் - பாதுகாக்கும். இமையவர் - தேவர். ஏய்ந்த - ஒத்த. மந்திரக்கிழவர் - ஆலோசனைக்குரிய மந்திரிகள்.

4. பூவரு - பூவேலை செய்த. பொலன் - பொன். பொருவில் - போர்புரிவதற்கான வில்லைக் கையாளும்,

தேர்வரும் முனிவரர்
உணரும், தேவர்கள்
மூவரும் நால்வராம்
முனிவந் தெய்தினன். ரு

5. மற்ற மந்திரிகள் பிறகு வருகிறார்கள். அவர்களுடைய யோக்கியதை எப்படி :

குலமுதல் தொன்மையும்,
கலையின் குப்பையும்,
பலமுதல் கேள்வியும்,
பயனும் எய்தினர்,

---

காவல்இல் ஆணையங்கடவுள் : அதிகாரிகள் நேர்நேராக இருந்து காக்கவேண்டாதபடி, குடிகள் எல்லோரும் நியதியின்படி நடந்துகொள்ளுகிறார்கள். நியதிக்குரிய அதிதேவதை குடிகளின் உள்ளத்திலிருந்து தொழில் செய்கிறது என்று நல்ல ஆராய்ச்சியுடைய விவேகிகள் உணரக்கூடுமாம். இதெல்லாம் வசிஷ்டரால்த்தான் சாத்தியமாகிறது. படைப்புக்கு ஒரு மூர்த்தி, காப்புக்கு ஒரு மூர்த்தி, அழித்தலுக்கு ஒரு மூர்த்தி என்று சொல்வது போல, ராஜ்ய நிர்வாகத்துக்கு ஒரு மூர்த்தி என்று சொல்லும்படியாக, வசிஷ்டரோடு மூர்த்திகள் நான்கு என்று ஆகிறதாம். ராஜ்ய நிர்வாகத்தின் தத்துவத்தைத் திறம்பட எடுத்துச் சொல்லுகிறார் கம்பர். (தேர்வு) வரும் - ஆராய்தலில் சிறந்த.

5. பூர்வமான குடிப்பிறப்புப்பற்றி மிக்க பொறுப்பாளிகள் மந்திரிகள். கலையின் குப்பை : சகலவிதமான கலைகளில் பழகியிருந்தார்கள். கேள்வி - நேர்நேராகக் கலைவல்லாரிடம் உடனிருந்து கற்றல். பயன் : கற்றதை வாழ்க்கையோடு ஒட்டச் செய்தார்கள்.

நலமுதல் நலியினும்
　　நடுவு நோக்குவார்,
சலமுதல் அறுத்(து)அருந்
　　தருமம் தாங்கினூர். ௬

6. நோயாளியைப் பொறுத்தே மருந்து நல்லது கெட்டது என்ருகிறது. அப்படியே தான் ராஜ்ய பரிபாலனத்திலும், சந்தர்ப்பம்பற்றியே ஒரு காரியம் நல்லது கெட்டதென்று ஆகிறதாம்; மந்திரிகள் அப்படி யெல்லாம் யோசிப்பார்களாம்.

நல்லவும் தீயவும்
　　நாடி, நாயகற்(கு)
எல்லையில் மருத்துவத்(து)
　　இயல்பின் எண்ணுவார்;
ஒல்லைவந்(து) உறுவன
　　உற்ற பெற்றியின்,
தொல்லைநல் வினையென
　　உதவும் சூழ்ச்சியார். எ

---

5. நலம் முதல் - வாழ்க்கைக்கு அவசியமான செல்வமே. நலியினும் - தம்மைவிட்டுப் போவதாயிருந்தாலும். நடுவு - நீதி. சலம்முதல் - கோபத்தின் அடிவேரையே. தருமம் - கடமை.

6. திடீரென்று ஒரு கஷ்டம் வந்து விட்டால், தெய்வ கடாட்சம் என்று சொல்லும்படி அவர்களுக்கு யோசனை தோன்றிவிடும்.

7. மந்திரிகள் அனைவரும் வந்து சேர்ந்தார்கள்.

அறுபதி னுயிரர்
எனி னும், ஆண்தகைக்(கு)
உறுதியில் ஒன்று,இவர்க்(கு)
உணர்வென் றுன்னலாம்;
பெறலரும் சூழ்ச்சியர்
திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென
வந்து சுற்றினர். அ

8. அவர்கள் வரிசைக் கிரமமாக மண்டபத்துக்குள் வந்தார்கள்.

முறைமையின் எய்தினர்,
முந்தி அந்தமில்
அறிவனை வணங்கித்,தம்
அரசைக் கைதொழு(து),

---

7. அறுபதினுயிரம்: ஒரு உபசார எண், அவ்வளவுதான்; எதிர்பார்க்கிறதற்கு மேலான தொகை. பலராயினும் சக்கரவர்த்தியின் நன்மையைக் கருதுவதில் ஒரே உணர்ச்சிதானே இவர்களுக்கு என்று சொல்லத் தோன்றும். பெறலரும் சூழ்ச்சியர் - மகா நிபுணர். திருவின் பெட்பினர் - லட்சுமி தேவிக்கு உவந்தவர். எடுத்த காரியமெல்லாம் கைகூடி வரும்.

8. முந்தி - முதலில். அந்தம் இல் அறிவன்: வசிஷ்

இறையிடை வரன்முறை
எய்தி, ஏற்றசொல்த்
துறைஅறி பெருமையான்
அருளும் சூடினர். கூ

9. வசிஷ்டரது திருப்தியைப் பெற்று மந்திரிகள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்தார்கள் என்று தெரிந்து கொண்டு, தசரதன், வந்திருந்தவர்களை வரவேற்றான் என்று சொல்லும்படி பார்த்தான்.

அன்னவர் அருள்அமைந்(து)
இருந்த ஆண்டையின்,
மன்னவன், அவர்முகம்
மரபில் நோக்கினன் :
'உன்னிய(து) அரும்பெறல்
உறுதி ஒன்றுள(து),
என்உணர்(வு) அனைய நீர்
இனிது கேட்(க)', என. கo

---

8. இறை - பீடம். வரல் முறை-ஏற்பட்ட ஒழுங்கு. மந்திரிகளிடம் சில செய்திகளைக் கேட்டு, அவைகளின் தன்மையையும் அறிந்து திருப்தியான வார்த்தைகளைச் சொன்னார் வசிஷ்டர். அதனால் மந்திரிகளுக்கும் எவ்வளவோ சந்தோஷம். பெருமையான் : வசிஷ்டர்.

9. ஆண்டையின் - அப்பொழுது. மரபில் - வந்தவர்களை அங்கீகரித்த முறையில். உன்னியது - நான் எண்ணிய விஷயம். உறுதி - உண்மையான நன்மை. அரசனோடு யாதொரு முரணும் இல்லாமல் நடந்துகொள்பவர்களாதலால், 'என் உணர்வு அனைய நீர்' என்றான்.

10. இனி, தசரத மன்னனுடைய பிரசங்கம் வருகிறது. பேச்சில் தீவிரமான உணர்ச்சி இருக்கிறது. ஆனாலும், அது உல்லாசமாய் ஹாஸ்யத்தோடு கலந்து வருகிறது. 'அடடா, எத்தனை எத்தனை வருஷங்கள், (எல்லாம் உங்களுடைய உதவியினால்த்தான்) அரசாண்டுவிட்டேன்!'

வெய்யவன் குலமுதல்
வேந்தர், மேலவர்,
செய்கையின் ஒருமுறை
திறம்பல் இன்றியே,
வையம்யான் ஆண்டஆண்(டு),
உங்கள் மாட்சியால்,
ஐயம்இல் அறுபதி
னாயி ரம்அரோ. கக

11. இவ்வளவு காலமும் மற்றவர்களுக்கே உழைத்தேன். என் சொந்தக் காரியத்தையும் கொஞ்சம் பார்க்க வேண்டாமா?

கன்னியர்க்(கு) அமைவரும்
கற்பின், மாநிலம்
தன்னைவைத் தளித்திடத்,
தருமம் கைதர,

---

10. வெய்யவன் குல முதல் வேந்தர் - சூரியகுலம் ஆதியாக உள்ள அரசர். மேலவர் - உயர்ந்த நோக்கம் உடையவர். திறம்பல் - மாறுதல். வையம் - பூமி. ஆண்ட - அரசாண்ட. அறுபதினாயிரம் அரோ : எத்தனை எத்தனை வருஷங்கள், அடடா!

மன்னுயிர்க் குறுவதே
செய்து வைகினேன் ;
என்னுயிர்க் குறுவதும்
செய்ய எண்ணினேன். கஉ

12. ஆதிசேஷன் என்ன, அஷ்டதிக்கு யானைகள் என்ன, அஷ்டகிரிகள் என்ன, எல்லாம் சேர்ந்து ஒத்துத் தூக்கிய பாரத்தையல்லவா தோளில் வைத்துச் சுமந்தேன்.

விரும்பிய மூப்பெனும்
வீடு கண்டயான்,
இரும்பியல் அனந்தனும்
இசைந்த யானையும்
பெரும்பெயர்க் கிரிகளும்
பெயரத், தாங்கிய
அரும்பொறை இனிச்சிறி(து)
ஆற்ற கிற்றிலேன். கங

13. நானும் எண்ணிப் பார்க்கிறேன், முன்னோர்கள் எப்போதாவது கடைசிக் காலம் வரும்வரை

---

11. மன்னுயிர் - குடிகள். உறுவது - லாபகரமான காரியம்.

12. மூப்பு சீக்கிரத்தில் வராதா என்று ஆத்திரப்பட்டுக்கொண்டிருந்தேன். வீடு - விடுதலை. இரும்பு இயல்- இரும்பினால் தேகம் அமைந்தது என்று சொல்லக்கூடிய. இசைந்த - ஒத்துத் தாங்குகிற. பெயர - நீங்க ; நான் மாத்திரம் தாங்கிய. பொறை - பாரம். ஆற்றகிற்றிலேன் - தாங்கமுடியாது.

யும் பிடித்த பிடியாய் ராஜ்யபாரத்தை வைத்துக் கொண்டிருந்தவர்கள் உண்டா? கிடையாதே!

நம்குலக் குரவர்கள்
நவையின் நீங்கினுர்,
தம்குலப் புதல்வரே
தரணி தாங்கப்,போய்
வெம்குலப் புலன்கெட
வீடு நண்ணினுர்,
எங்(கு)உலப் புறுவர்என்(று)
எண்ணி நோக்குகேன். கச

14. அரசனுகச் சகல இன்பங்களிலும் திளைத்து வந்த நான், தவத்தில் உறுதியாக நிற்பேனே என்று சந்தேகப்படுகிறீர்களோ?

வெள்ளநீர் உலகினில்,
விண்ணில், நாகரில்,
தள்ளரும் பகையெலாம்
தவிர்த்து நின்றயான், -
கள்ளரில்க் கரந்(து)உறை
காமம் ஆதியாம்
உள்உறை பகைஞருக்(கு)
ஒதுங்கி வாழ்வெனே? கரு

---

13. குரவர்கள் - பெரியார்கள். நவை - குற்றம். வெங்குலப் புலன் - ஒன்று சேர்ந்துகொண்டு நம்மை ரொம்பவும் கஷ்டப்படுத்துகிற ஐம்புலன்கள். வீடு: மோட்ச வீடு. எங்கு உலப்பு உறுவர்: எங்கேயாவது பரம்பரையில் இதற்கு மாருனபடி விலக்காக இருந்தவர்.

14. வெள்ளநீர் - கடல் சூழ்ந்துள்ள. நாகரில் - பாதாள உலகத்தில். கள்ளரில் - கள்ளரைப்போல். ஒதுங்கி - பயந்து.

**15.** இந்த விஷயத்துக்கு இன்னொரு வின்னியாசம் கொடுக்கிறான். கைகேசியும் தானுமாக ஒரு நாள் தேரில் சவாரி போய்க் கொண்டிருந்தபோது, திடீரென்று அரக்கர்கள் பத்துப்பேர் பத்துத் தேர்களில் யுத்தம்செய்ய வந்துவிட்டார்கள். கைகேசி பார்த்தாள். 'சரி, நான் தேரை ஓட்டுகிறேன், நீங்கள் யுத்தம் செய்யுங்கள்' என்று லகானைத் தன் கையில் வாங்கிக் கொண்டாள். தசரதன் தன் அபாரமான வில் வித்தையால் பத்து அரக்கர்களையும் வீழ்த்தினான். அரக்கர்களுடைய பத்துத் தேரையும் அயோத்தி நகருக்குக் கொண்டு வரச்செய்து, வெற்றிக்கொண்டாட்ட ஊர்வலத்தில், தன் தேரின் பின்வரச் செய்தான். இந்த வீரப்பிரதாபத்தைச் சுகமாக மந்திரிகளுக்கு நினைப்பூட்டுகிறான்.

பஞ்சின்மென் தளிர்அடிப்
பாவை கோல்கொள

வெஞ்சினத்(து) அவுணர்தே
பத்தும் வென்றுளேற்(கு),

---

15. கைகேசியின்மீது தசரதன் வைத்துள்ள மதிப்பு எவ்வளவு சிறந்தது என்று தெரிகிறது. அது அரசியலோடும் கலந்ததாய் இருக்கிறது. மந்திரிமார்முன்பு எடுத்துச் சொல்லுவதும் இயல்பான காரியம். பின்வரும் காரியங்களை இப்படிக் கருவாக வைத்துச் சொல்லுவதை, அபூர்வமான 'இதிகாச ஏளனம்' என்று கிரேக்க ஆசிரியர்கள் சொல்லுவார்கள். யுத்தத்தோடு கலந்து நின்றது யார் : பஞ்சைவிட மெல்லிய பாதத்தையுடையவள். அவுணர் - அரக்கர்.

எஞ்சலில் மனம்எனும்
இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லும்ச(து)
அருமை யாவதோ ? கசு

16. நான் என்கிற ஆணவம், யுத்தமுனையில் நிற்கும்போது நீங்கிவிடுகிறது. விஷயங்களை யெல்லாம் தெளிவுபட ஆராய்ந்த ஞானிகள் மனசிலும் நீங்கி விடுகிறது. மற்றவர்களுக்கோ, துறவற சாதனத்தில் - தியாக வாழ்க்கையில் - நின்று வந்தால்த்தான் நீங்கும்.

ஒட்டிய பகைஞர்வந்(து)
உருத்த போரிடைப்
பட்டவர் அல்லரேல்,
பரம ஞானம்போய்த்
தெட்டவர் அல்லரேல்,
செல்வம் ஈண்டென
விட்டவர் அல்லரேல்,
யாவர் வீடுளார் ? கஎ

---

15. எஞ்சல் - மிச்சமாகவிருக்கும் ஒரு பொருள். இழுதை - அறிவே இல்லாத மூடம், ஐம்புலன்கள் ஏதோ தொழில் செய்கிறது என்று சொல்லுகிறோம். யோசனை பண்ணிப் பார்த்தால், மனசுதான் இந்த வேடிக்கைகளைச் செய்வது என்பது தெரியும். பிறகு மனசைப் பார்த்தால், அதுவும் வெறும் மாயைதான் ; உண்மையில் தொழில்செய்வது, மனசுக்குப் பின்னால் இருக்கிற கடவுள் தத்துவந்தான் என்று தெரியவரும்.

16. ஒட்டிய - நெருக்கமாய் அணிவகுத்த. உருத்த - எதிர்த்த. தெட்டவர் - தெளிந்த நிலையில் நிற்பவர்.

17. 'உலக வியாபாரத்தைவிட்டு நீங்கினால் ஒழிய எனக்குக் கதிவேறில்லை' என்று தன் கோரிக்கையை மெள்ளச் சொல்லுகிறான்.

உம்மையான் உடைமையின்
உலகம் யாவையும்
செம்மையின் ஓம்பி,நல்
அறமும் செய்தனன் ;
இம்மையின் உதவி,நல்
இசைந டாயநீர்
அம்மையும் உதவுதற்(கு)
அமைய வேண்டுமால். கஅ

18. அப்படித் துறவு போவதற்கு எல்லாம் வாய்ப்பாய் இருக்கிறதென்று எக்களிப்போடு சொல்லுகிறான்.

மைந்தரை இன்மையின்
வரம்பில் காலமும்
நொந்தனன் ; இராமன்என்
நோவை நீக்குவான்
வந்தனன் ; இனிஅவன்
வருந்த, யான்பிழைத்(து)
உய்ந்தனன் போவதோர்
உறுதி எண்ணினேன். கக

---

17. ஓம்பி - பாதுகாத்து. இம்மை - இகம். அம்மை - பரம். இசை நடாய - புகழாக நிர்வாகத்தை நடத்திய.

18. வருந்த : அருமை, ஹாஸ்யம், எக்களிப்பு ஆகிய எல்லா பாவங்களையும் காட்டும் வார்த்தை. உய்ந்தனன் - உய்ந்து, நல்லகதி கிடைத்து.

19. ராமன் சீதையைக் கலியாணம் செய்த வைபவத்தைத் தான் பார்த்துவிட்டானும்; ஆசை அதோடு நிற்கவில்லையாம்.

பெருமகன் என்வயின்
பிறக்கச், சீதையாம்
திருமகள் மணவினை
தெரியக் கண்டயான்,—
அருமகள் நிறைகுணத்(து)
அவனி மாதெனும்
ஒருமகள் மணமும்கண்(டு)
உவப்ப தாயினேன். உ0

20. ஆதலால், உங்கள் கருத்து என்ன ?

ஆதலால் இராமனுக்(கு)
அரசை நல்கி,இப்
பேதைமை தாய்வரும்
பிறப்பை நீக்குற

---

19. பெருமகன் - எல்லாப் பெருமைகளுக்கும் உரிய ராமன். அவனி மாது - பூமாதேவி; அதாவது ராஜ்ய பரிபாலனம்.

20. வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிஷமும், நாம் ஏதோ இங்கு வந்து பிறந்திருக்கிறோம் என்ற எண்ணமாகிய அறியாமை வந்து நம்மைத் தாக்குகிறது. உண்மையில், எக்காலத்திலும் கடவுளோடு ஒன்றி, பிறப்பு அதைச் சேர்ந்த இறப்பு இரண்டும் இல்லாததல்லவா நம்முடைய நிலைமை? இதை மறக்காமல் இருப்பதற்குத்தான் தவம் தொடங்குவது. தாய் - தாவி.

மாதவம் தொடங்குவான்
வனத்தை நண்ணுவேற்(கு),
யாதுநும் கருத்தென
இனைய கூறினன். உக

21. இவ்வளவையும் கூர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார் வசிஷ்டர். சரி, மந்திரிகளது அபிப்பிராயம் ஒத்துத்தான் இருக்கிறது; தான் இருக்கும்போதே ராமனுக்குப் பட்டங்கட்டிவிட்டால் பிறகு நிர்வாகம் எளிதாகவே நடக்கும் என்பது மன்னன் எண்ணம்; மேலும், குடிகளது நன்மையைக் கருதினாலும் இது தான் யுக்தம், என்று அவர் எண்ணினார்.

சந்தம்

தான தன்னன தானன தானன தா தன்

இருந்த மந்திரக்
கிழவர(து) எண்ணமும்,
மகன் பால்
பரிந்த சிந்தையம்
மன்னவன் கருதிய
பய னும்,

---

21. கம்பரைப்போல, மற்றத் தமிழ்ப் புலவர்களும் இந்தச் சந்தத்தை ரொம்பவும் அனுபவித்துக் கையாளுவார்கள்.

பொருந்தும் மன்னுயிர்க்(கு)
உறுதியும், பொதுஉற
நோக்கித்
தெரிந்து, நான்மறைத்
திசைமுகன் மகன்இவை
செப்பும்.

22. வசிஷ்டர் சொல்லுகிறார் : உனனுடைய முன்னோர்கள் செய்தபடிதான் நீயும் துறவு பூணப் போகிறாய். ஆனால், அவர்கள் உன்னைப்போல் அவ்வளவு பாக்கியசாலிகள் அல்ல.

நிருப ! நின்குல
மன்னவர் நேமி,பண்(டு)
உருட்டிப்
பெருமை எய்தினர்,
யாவரே இராமனைப்
பெற்றார் ?
கரும மேயிது ;
கற்றுணர்ந் தோய்க்(கு)இனிக்
கடவ
தருமமும்இது ;
தக்கதே உரைத்தனை,
தகவோய் ! உ௨

21. பொருந்தும் மன்னுயிர்-ராஜபக்தியோடுகூடிய குடிகள். உறுதி - நன்மை. பொது உற நோக்கி - பாரபட்சம் இல்லாமல் ஆராய்ந்து. திசைமுகன் மகன் - பிரமன் புதல்வராகிய வசிஷ்டர்.

22. நிருப - அரசனே. நேமி உருட்டி - ராஜ்ய பரிபாலனம் செய்து. கருமம் - பிறர் நன்மையைக் கோரிச் செய்யும் கடமை. தருமம் : நாம் உன்னத நிலை (கடவுளோடு ஒன்றிய நிலை) அடைவதற்காக இயற்கையாகவே ஏற்பட்ட சாதனம்.

23. மேலும் சொல்லுகிருர்: மும்மூர்த்திகளும் சேர்ந்து, உயிர் வர்க்கங்களை உண்டாக்கியும், அவைகளைப் பாதுகாத்தும், பிற உயிர்கள் உற்பத்தியாவதற்காகப் பழையவற்றை ஒதுக்கியும் செய்கிற காரியங்கள் அற்புதந்தான்; ரொம்பவும் திருத்தமாய்த்தான் இருக்கின்றன. ஆனாலும், அவைகளையும் திருத்தக்கூடிய திறம் ராமனுக்கு இருக்கிறது. வேறென்ன நான் சொல்லக் கிடக்கிறது!

புறத்து நாம்ஒரு
பொருள்இனிப் புகல்கின்ற(து)
என் ஞே,

அறத்தின் மூர்த்திவந்(து)
அவதரித் தான்என்ப(து)
அல் லால்!

பிறத்து யாவையும்
காத்தவை பின்நின் று
துடைக் கும்

திறத்து மூவரும்
திருத்திய திருத்தும்,அத்
திற லோன். உச

---

23. புறத்து - இனி வேருக. எவஞே - எப்படி முடியும். பிறத்து - சிருஷ்டித்து. திருத்திய - திருத்தமாக வைத்துள்ள காரியங்களை. அத்திறலோன் திருத்தும் என்பது முடிபு. மக்களது வாழ்க்கையை மேம்படுத்தும் சாதனங்களை யெல்லாம் ராமன் செய்துமுடிப்பான் என்பது குறிப்பு.

24. தன் விருப்பத்தை ஒட்டியே வசிஷ்டர் பேசி விட்டார் என்பதில், தசரதனுக்கு என்றும் இல்லாத உற்சாகம் உண்டாகிவிட்டது.

மற்ற வன்சொன்ன
வாசகம் கேட்டலும்,
மக னைப்

பெற்ற அன்றினும்,
பிஞ்ஞகன் பிடித்தஅ
பெரு வில்

இற்ற அன்றினும்,
எறிமழு வாளவன்
இழுக் கம்

உற்ற அன்றினும்
பெரியதோர் உவகையன்
ஆ ஞன். உரு

25. உபசார வார்த்தையாக வேறொன்றும் சொல்லாமல் அப்படியே இருந்துவிட்டார் வசிஷ்டர். பிறகு தசரதனுக்குத் தேர்ப்பாகனும் துணைவனுமான

---

24. மற்றவன் - வசிஷ்டர். பெருவில் - மிதிலை யில் ராமன் முறித்த சிவதனுசு. எறி மழு வாளவன் - மழுவையும் வாளையும் உடைய பரசுராமன். இழுக்கம் - அவமானம். பெரிய சக்திவாய்ந்த பரசுராமன் ராம னிடம் தான் தோல்வியுற்றதாக ஒப்புக்கொண்டான். தசரதனுக்கு ஏற்பட்ட பயம் எல்லாம் நீங்கிப் பேரானந் தம் அடைந்தான்.

சுமந்திரன் மந்திரிகளின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு பேசுகிறுன்.

பழுதில் மாதவன்
பின்ஞென்றும் பணித்திலன்
இருந் தான் ;
முழுதும் எண் ணு றும்
மந்திரக் கிழவர்,தம்
முகத் தால்
எழுதி நீட்டிய
இங்கிதம், இறைமகற்(கு)
ஏற் க,
தொழுத கையினன்
சுமந்திரன் முன்நின் று
சொல் லும். உசு

26. சுமந்திரன் தசரதனைப் பார்த்துச் சொல்லு கிறுன்: ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப்போகி றது என்ற விஷயம் எவ்வளவோ உவந்ததுதான்; ஆனுலும்,

உறத்த கும்அர(சு)
இராமற்கென் றுவக்கின்ற
மனத் தைத்
துறத்தி நீஎனும்
சொற்சுடும் : நின்குலத்
தொல் லோர்

25. பணித்திலன் - பேசாது ; மனசிலுள்ளதை எழு திக் காட்டியமாதிரி, முகபாவத்தினுலேயே தெரிவித்தார் கள். இங்கிதம் - மனசில் உள்ள அடக்கமான விஷயம்.

26. தொல்லோர் - மூதாதைகள்.

மறத்தல் செய்திலாத்
தருமத்தை மறப்பதும்
வழக் கன்(று) :
அறத்தின் ஊங்கினிக்
கொடிதெனல் ஆவதொன்(று)
யா தோ? உஎ

27. சுமந்திரன் சொன்னது சக்கரவர்த்திக்கு மிக்க திருப்தியைக் கொடுத்தது.

என்ற வாசகம்
சுமந்திரன் இயம்பலும்,
இறை வன்
'நன்று சொல்லினை ;
நம்பியை நளிர்முடி
சூட் டி,
நின்று நின்றது
செய்குவம் : விரைவினில்
நீ யே
சென்று கொண்டணை
திருமகள் கொழுநனை'
என் றான். உஅ

---

26. ஊங்கு - மிகுதியாக.

27. இறைவன்-தசரதன். நளிர்முடி - கண்ணுக்குச் சுகமான முடி. நின்றது - பாக்கிக் காரியத்தை. நின்று செய்குவம் - பொறுத்துச் செய்வோம். திருமகள் கொழுநன் - ராமன்.

28. மன்னனை வணங்கிவிட்டு, மாளிகைகள் நிறைந்த ராஜவீதி வழியாகச் சுமந்திரன் தேரைக் கொண்டுபோகிறான்.

அலங்கல் மன்னனை
அடிதொழு(து) அவன்மனம்
அனையான்
விலங்கல் மாளிகை
வீதியில் விரைவொடு
சென்றான்;
தலங்கள் யாவையும்
பெற்றனன் தானெனத்
தளிர்ப்பான்,
பொலன்கொள் தேரொடும்
இராகவன் திருமனை
புக்கான். உகூ

29. ராமனிருந்த இடம்போய்ச் சேருகிறான்.

பெண்ணின் இன்னமு(து)
அன்னவள் தன்னொடும்,
பிரியா
வண்ண வெஞ்சிலைக்
குரிசிலும், மருங்கினி(து)
இருப்ப

---

28. அலங்கல் - மாலை அணிந்த. மனம் அனையான் - ஒத்த மனத்தவன். விலங்கல் - மலைபோன்ற. தலங்கள் - ராஜ்யத்துக்கு உட்பட்ட நாடுகள். தளிர்ப்பான் : மன எழுச்சி அடைகிறான். பொலன் கொள் - தங்கத் தகடுகளால் அழகு செய்யப்பட்ட.

29. பெண்ணின் இன் அமுது : சீதை. குரிசில் : லட்சுமணன்.

அண்ணல் ஆண்டிருந்
தான், அழ(கு) அருநற(வு)
எனத், தன்

கண்ணும் உள்ளமும்
வண்டெனக் களிப்புறக்
கண் டான். ௩௦

30. சமாசாரத்தைச் சொல்லுகிறுன்.

கண்டு கைதொழு(து),
'ஐய !இக் கடலிடைக்
கிழ வோன்,

உண்டோர் காரியம்,
வருகென உரைத்தனன்'
என லும்,

புண்ட ரீகக்கட்
புரவலன் பொருக்கென
எழுந்(து), ஓர்

கொண்ட லேஎனக்
கொடிநெடுந் தேர்மிசைக்
கொண் டான். ௩௧

29. அண்ணல் : ராமன். அரு நறவு - அருமை யான தேன்.

30. கடலிடைக் கிழவோன் : சக்கரவர்த்தி தசரதன். புண்டரீகக்கண் புரவலன் - செந்தாமரைக் கண்ணனை ராமன். கொண்டல் - நீலமேகம். மிசைக் கொண்டான் - ஏறி அமர்ந்தான்.

31. ராமன் தேரில்ப் போகும்போது, அவன் வரு வருவதைக் குறிக்க முரசுகளை ஆங்காங்கு முறைப்படி முழக்குகிறார்கள். அவனது அழகில் ஈடுபட்ட பெண் களின் வளையல்கள் கழன்று விழுகிற சத்தம் ஒருபக் கம். 'ராமாயணம் ஆரம்பித்துவிட்டது, அதாவது ராவ ணன் தலைகள் இறுதியாகச் சிதறப் போகிறது' என்று தூர திருஷ்டியோடு கூடிய தேவர்கள் சந்தோஷத்தில் ஆரவாரிக்கிறார்கள். இந்தச் சத்தங்களோடு ராமன் சூடிய மாலையைச் சுற்றிவரும் வண்டுகளின் ரீங்கார சப்தம். எல்லாம் மங்கல முழக்கந்தான்.

முறையில் மொய்முகில்
என,முர சார்த்திட ;
மட வார்

இறைக ழன்றசங்(கு)
ஆர்த்திட ; இமையவர்,
எங் கள்

குறைமு டிந்ததென்
றார்த்திடக் ; குஞ்சியைச்
சூழ்ந் த

நறைய லங்கல்வண்(டு)
ஆர்த்திடத், தேர்மிசை
நடந் தான். ௩௨

---

31. மொய்முகில் - செறிந்த மழை மேகம். இறை கழன்ற - கையை விட்டுக் கழன்று விழுந்த ; அவ்வளவு மெய்ம்மறதி. இமையவர் - வானோர். குறை : அரக்கர்க ளால் ஏற்பட்ட கஷ்டந்தான். குஞ்சி - தலைமுடி. நறை அலங்கல் - தேன் கசிந்த மாலை. நடந்தான் - சவாரி போனான்.

32. ராமன் போவதைப் பெண்கள் வந்து பலவித மான பார்வையோடு பார்க்கிறார்கள். வெறித்த பார்வை, கலங்கிய பார்வை, அயர்ந்த பார்வை எல்லாம் கண்களில் தெரிகின்றன. தூண்களை ஒட்டி வாசல் களில் நிற்கிறார்கள். புஷ்பக் கொடிகளிடை அரை குறையாய் மறைந்து, நிலாமுற்றங்களிலும் நிற்கிறார் கள். ஜன்னல்கள் வழியாகவும் பார்க்கிறார்கள்.

நீள எழுத்தொடர்
வாயினும், குழையொடு
நெகிழ்ந் த
ஆள கத்திடை
அரமியத் தலத்தினும்,
அளந் த
வாள்அ ரத்தவேல்
வண்டொடு கெண்டைகள்
மயங் கச்
சாள ரத்தினும்
பூத்தன தாமரை
மலர் கள். ௩௩

32. எழுத்தொடர் - தூண்கள் வரிசையாயுள்ள. குழை - பூங்கொடிகளின் குழை. அரமியத்தலம் - நிலா முற்றம். அளந்த வாள் : காதுவரை சென்றளந்த வாள் போலும் கண். அரத்த வேல் : சிவந்த ரேகை படர்ந்த கண் ; வண்டும் கெண்டையும் கண்கள்தான். தாமரை மலர் - முகம்.

33. ராமன் வருகையை ஆடவரும் ஆர்வத்தோடு எதிர்பார்த்து நிற்கிறார்கள்.

ஆய(து) அவ்வழி
நிகழ்தர, ஆடவர்
எல் லாம்

தாயை முன்னிய
கன்றென நின்றுயிர்
தளிர்ப் பத்,

தூய தம்பியும்
தானும்அச் சுமந்திரன்
சொல் லப்

போய்அ கங்குளிர்
புரவலன் இருந்துழிப்
புக் கான். ௩௪

34. முதலில், குருவாகிய வசிஷ்டரை வணங்குகிறான் ராமன்.

மாதவன் தனை
வரல்முறை வணங்கி, வாள்
உழ வன்

பாத பங்கயம்
பணிந்தனன், பணிதலும்,
அனை யான்

---

33. அகங்குளிர் புரவலன் : தசரதன். இருந்துழி - இருந்த இடம்.

34. வாள் உழவன் - சக்கரவர்த்தி.

காதல் பொங்கிடக்
கண்பனி உகுத்திடக்
கனி வாய்ச்

சீதை கொண்கனைத்
திருவுறை மார்பகம்
சேர்த்தான். ௩௫

35. ராமன் இளைஞனயிருக்கிறனே, ராஜ்ய பாரத்தைத் தாங்குவான என்று சோதித்துவிட வேண்டாமா ?

நலங்கொள் மைந்தனைத்
தழுவினன் என்பதென் ?
நளி நீர்

நிலங்கள் தாங்குறும்
நிலையினை நிலையிட
நினைத் தான் :

விலங்கல் அன்னதிண்
தோளையும், மெய்த்திரு
இருக் கும்

அலங்கல் மார்பையும்,
தனதுதோள் மார்புகொண்(டு)
அளந் தான். ௩௬

---

34. கண் பனி - ஆனந்தக் கண்ணீர். சீதை கொண்கன் - ராமன்.

35. நளி நீர் - குளிர்ந்த சமுத்திரத்தால் சூழப் பட்ட. நிலங்கள் - ராஜ்யம். விலங்கல் - மலை. அலங்கல் - மாலை.

36. ராமனைப் பக்கத்தில் இருத்தி, ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறான் தசரதன்.

ஆண்டு தன்மருங்(கு)
    இரீஇஉவந் தன்புற
        நோக்கிப்,

'பூண்ட போர்மழு
    உடையவன் நெடும்புகழ்
        குறுக

நீண்ட தோள் ஐய!
    நிற்பயந் தெடுத்தயான்
        நின்னை

வேண்டி எய்திட
    விரைவதொன்(று) உள(து)', என
        விளம்பும். கஎ

37. விஷயமாவது:

'மைந்த நம்குல
    மரபினில் மணிமுடி
        வேந்தர்,

தந்தம் மக்களே
    கடைமுறை நெடுநிலம்
        தாங்க,

36. இரீஇ - இருத்தி; உட்காரச் செய்து. மழு உடையவன் - பரசுராமன். அவனுடைய புகழ் எல்லாம் ராமனுடைய தோள்வலியால் ஒழிந்தது என்பது கருத்து. விரைவது - ஆசைப்படுவது.

37. கடை முறை - கடைசிக் காலத்தில்.

ஐந்தொ டாகிய
முப்பகை மருங்கற
அகற் றி

உய்ந்து போயினர்,
ஊ ழி நின்(று) எண்ணி னும்
உல வார்.' ௩அ

38. விஷயம் இப்படியிருப்பதால், நான் சொல்லு வது மரபை ஒட்டியதுதான். ஏதோ தந்திரமாய் பாரத்தை உன் தலையில் சுமத்திவிட்டேன் என்று எண்ணிவிடாதே.

' அனைய தாதலின்,
" அருந்துயர்ப் பெரும்பரம்,
அர சன்

வினையின் என்வயின்
வைத்தனன் " எனக்கொள
வேண் டா :

---

37. ஐந்தொடாகிய முப்பகை - ஐம்பொறிகளால் ஏற்படுகிற ஆசை, கோபம், கடவுளிடத்தில் நிச்சயமில்லாத சந்தேகம் ஆகிய மூன்று பகைகள். மருங்கற - அடியோடு இல்லாமல். உய்ந்து போயினர் : இந்தப் பிறவித் துன்பத்தை விட்டுத் தப்பிப் போனவர். ஊழி நின்று - நெடுங்காலம் தொடர்ச்சியாக. உலவார் : அவர்களுடைய எண்ணத்துக்கு முடிவு கிடையாது.

38. அருந்துயர்ப் பெரும்பரம் - மிக்க கஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய ராஜ்யப் பொறுப்பு. வினையின் - தந்திரமாய்.

புனையும் மாமுடி
புனைந்திந்த நல்லறம்
புரக்க
நினையல் வேண்டும், யான்
நின்வயின் பெறுவதீ(து)'
என்றான். ௩௮

39. தசரதன் சொன்ன விஷயத்தை ராமன் எப்படி ஏற்கிறான் என்று பார்ப்போம்.

தாதை அப்பரி(சு)
உரைசெயத், தாமரைக்
கண்ணன்
காதல் உற்றிலன்,
இகழ்ந்திலன், கடன்இதென்(று)
உணர்ந்தும்,
'யாது கொற்றவன்
ஏவிய(து) அதுசெயல்
அன்றோ
நீதி எற்(கு)'என
நினைந்தும்,அப் பணிதலை
நின்றான். ௪௦

---

38. நினையல் வேண்டும் - கருதவேண்டும். நின்வயின் - உன்னிடம்.

39. ராஜ்ய பாரத்தில் துன்பம் உண்டென்று உணர்ந்தாலும், அது ஒரு கடமை ; தான் அதை ஏற்றுக் கொள்ளாவிட்டால், உலகம் கஷ்டப்பட்டுவிடும் என்றெல்லாம் நினைத்து ஆசைப்படவும் இல்லை, வெறுக்கவும் இல்லை ராமன். காதல் - ஆசை. பணிதலை - கட்டளையினிடத்து.

40. ராமன் ஒப்புக்கொண்டதில் தசரதனுக்குத் திருப்தி.

குரிசில் சிந்தையை
மனக்கொண்ட கொற்றவெண்
குடை யான், -
'தருதி இவ்வரம்'
எனச்சொலி, உயிர்உறத்
தழு விச்,
சுருதி யன்னதன்
மந்திரச் சுற்றமும்
சுற் றப்,
பொருவில் மேருவும்
பொருவரும் கோயில்போய்ப்
புக் கான். சக

41. தசரதன் தன் அரண்மனைக்குப் போகவும், ராமனும் தன்னுடைய அரண்மனைக்குப் போனான்.

நிவந்த அந்தணர்,
நெடுந்தகை மன்னவர்,
நக ரத்(து)
உவந்த மைந்தர்கள்,
மடந்தையர், உழையர்பின்
தொட ரச்,

40. குரிசில் - ராமன். சுருதியன்ன : சாஸ்திரங்களை யெல்லாம் நன்ருய்க் கற்ற. மந்திரச் சுற்றம்-மந்திரிகள். பொரு இல் - ஒப்பற்ற, மேருமலையினும் பெரிய அரண்மனை (கோயில்).

41. நிவந்த - உயர்ந்த பதவியிலுள்ள. உவந்த - மனம் ஒத்த. உழையர் - தோழர்கள்.

சுமந்தி ரன்தடந்
　　தேர்மிசைச் சுந்தரத்
　　　　திரள் தோள்
அமைந்த மைந்தனும்
　　தன்நெடும் கோயில்சென்(று)
　　　　அடைந் தான். சஉ

42. மற்ற அரசர்களுக்கு அழைப்புப் பத்திரிகை அனுப்ப ஏற்பாடாகிறது. ஓலையில் எழுதிச் சுருட்டி, அதன்மேல் கருடமுத்திரையும் வைத்து அனுப்புகிறார்கள்.

வென்றி வேந்தரை
　　வருகஎன்(று), உவணம்வீற்
　　　　றிருந் து
பொன்தி ணிந்ததோட்(டு)
　　அரும்பெறல் இலச்சினை
　　　　போக் கி,
' நன்று சித்திர
　　நளிர்முடி கவித்தற்கு,
　　　　நல் லீர் !
சென்று வேண்டுவ
　　வரல்முறை அமைக் 'கெனச்
　　　　செப் ப. சங

---

41. மைந்தனும் - ராமனும்.

42. உவணம் - கருடப்பறவை. இலச்சினை - முத்திரை ; முத்திரையிட்ட கடிதம். போக்கி - அனுப்பி. நளிர் - கண்ணுக்கு உவந்த. நல்லீர் - பெரியோர்களே. வரல்முறை - பூர்வமான ஏற்பாட்டின்படி.

43. பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்வதற்காக வசிஷ்டரை அனுப்பிவிட்டு, தன் மகிழ்ச்சியை மற்ற அரசர்களிடம் சொல்லுகிறான் தசரதன்.

உரிய மாதவன்
ஒள்ளிதென்(று) அமர்ந்தனன்,
விரைந்(து) ஓர்

பொருவில் தேர்மிசை
அந்தணர் குழாத்தொடும்
போக,—

'நிருபர் கேண்மின்கள்,
இராமற்கு நெறிமுறை -
மையி னால்

திருவும் பூமியும்
சேர்தலிற் சிறந்தன'
என் றான். சஅ

44. அரசர்கள் இந்தச் செய்தியைக் கேட்டார்களோ இல்லையோ, அவர்களுக்கு ஒரே உற்சாகம் உண்டாய்விட்டது. அங்கும் இங்குமாக, மரியாதையைக்கூடப் பார்க்காமல், ஓட ஆரம்பித்தார்கள்.

---

43. மாதவன் - வசிஷ்டர். ஒள்ளிது - ரொம்ப சரி. அமைந்தனன் - ஒப்புக்கொண்டு. நிருபர் - அரசர்களே. திரு - இலக்குமி. பூமி - பூமாதேவி.

இறைவன் சொல்எனும்
இன்நற(வு) அருந்தினர்
யா ரும்
முறையில் நின்றிலர்,
முகந்துறு களியிடை
மூழ் கி,
நிறையும் நெஞ்சிடை
உவகைபோய் மயிர்வழி
நிமி ர,
உறையும் விண்ணகம்
உடலொடும் எய்தினர்
ஒத் தார். சரு

45. ராமனுக்குப் பட்டம் சூட்டப் போகிறார்கள் என்ற செய்தியைக் கேட்ட அரசர்களது எக்களிப்பைப் பார்த்தோம். இனி, அந்தச் செய்தியைக் கேள்வியுற்ற பெண்கள் நால்வர் செயலைப் பார்க்கலாம்.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

ஆண்டை அந்நிலை
யாகஅ றிந்தனர்,
பூண்ட காதலர்,
பூட்டவிழ் கச்சினர்,

44. நறவு - தேன். முகந்துறு - அள்ளிக் கொள்ளும். மெய்புளகித்தார்கள் என்பதை, மயிர்வழி உவகை போய் நிமிர்ந்தது என்கிறார். உறையும் - நித்தியமாய் வசிக்கும்.

45. ஆண்டை - அவ்விடத்தில். காதலர் - ஆனந்த வெறி பூண்டவராய், கச்சு - ரவிக்கை.

நீண்ட கூந்தலர்
நீள்கலை தாங்கலர்,
ஈண்ட ஓடினர்,
இட்டிடை இற்றிலர். ௪௬

46. ஓட்டத்தோடு நிற்கவில்லை அவர்கள்.

ஆடு கின்றனர்,
பண்அடை இன்றியே
பாடு கின்றனர்,
பார்த்தவர்க் கேகரம்
சூடு கின்றனர்,
சொல்லுவ தோர்கிலர்,
மாடு சென்றனர்
மங்கையர் நால்வரே. ௪௭

47. இப்படியெல்லாம் ஆடிப்பாடிவருகிற பெண்களை ஒரு அம்மாள் பார்க்கிறாள்.

கண்ட மாதரைக்
காதலின் நோக்கினள்,
கொண்டல் வண்ணனை
நல்கிய கோசலை ;

45. கலை - சேலை. ஈண்ட - நெருங்கி ஒருவரோடொருவர் இடித்துக் கொண்டே. இட்டிடை - நுட்பமான இடை ; ஓடியவில்லை இடை, அவ்வளவுதான்.

46. பண் அடை இன்றியே - ராகமும் தாளமும் பிசகிட ; வசமற்ற ஆனந்தவெறி காரணமாகத்தான். மாடு - பக்கமாக.

47. கொண்டல் வண்ணனை - ராமனை. நல்கிய : உலகத்தின் நன்மைக்கென்றே பெற்றுக் கொடுத்த.

'உண்டு பேர்உவ -
கைப்பொருள், அன்னது,
தொண்டை வாயினிர் !
சொல்லுமின் ஈண்(டு)' என்றாள். சஅ

48. பெண்கள் தங்கள் ஆனந்த மயக்கத்தில், யாரோ வந்து யார்காலிலோ விழுந்தமாதிரி, சொல்ல ஆரம்பிக்கிறார்கள்.

'மன்நெ டுங்கழல்
வந்துவ ணங்கிடப்
பல்நெ டும்பகல்
பார்அளிப் பாய்,என—
நின்நெ டும்புதல்
வன்தனை, நேமியான்
தொல்நெ டும்முடி
சூட்டுகின் றான்' என்றார். சகூ

49. தான்பெற்ற பிள்ளை நாளை சக்கரவர்த்தி யாகவே ஆகப்போகிறான் என்ற மாத்திரத்தில், மனசில் ஒரு ஆனந்தக்கடலே பொங்கிவிட்டது. அடுத்த நிமிஷம் அக்கடல் என்ன ஆயிற்று ?

---

47. தொண்டை வாயினிர் - தொண்டைப் பூவைப் போல் சிவந்த வாயுடைய பெண்களே.

48. மன் - பூசிக்கத்தக்க. நெடுங்கழல் - வலிமையைக் காட்டும் கழலணிந்த பாதம். பல் நெடும் பகல் - என்றென்றைக்கும். நேமியான் - சக்கரவர்த்தி. தொல் - பரம்பரையாய் வந்த.

சிறக்கும் செல்வம்
மகற்கெனச், சிந்தையில்ப்
பிறக்கும் பேருவ
கைக்கடல், - பெட்பற
வறக்கும் மாவட
வைக்கனல் ஆனதால் :
துறக்கும் மன்னவன்
என்னும் துணுக்கமே. ௪௯

50. தாய்த்தத்துவம் முதலில் ஆனந்தத்தைக் கொடுத்தது. ஆனாலும், அடுத்த நிமிஷமே பொறுப் புணர்ச்சி ஒன்று வந்து வருத்தத்தையே உண்டாக்கி விட்டது. கோசலை இதை வெளிக்காட்டிக் கொள்ளா மல், சந்தோஷச் செய்தி சொன்னவர்களுக்குப் பரிசு வழங்குகிறாள்; லௌகிகமும் அவ்வளவு கூடவே இருக்கிறது.

அன்னள் ஆயும்,
அரும்பெறல் ஆரமும்
நல்நி திக்குவை -
யும்நனி நல்கித்,தன்

49. மகற்கு என - மகனுக்கு என. பெட்பு - நீர்மயமான தன்மை. அற - அற்றுப் பாலைவனமாய்ப் போக. வறக்கும் - வறண்டுபோகச் செய்யும். மா வடவைக் கனல் - சமுத்திரத்தின் இடையிலுள்ள பெரு நெருப்பு; சமுத்திரத்தினிடையே உள்ள அக்கினி மலை களைத்தான் வடவைக்கனல் என்கிறார்கள். துறக்கும் - வனவாசம் செய்யப்போய்விடுவான். துணுக்கம் - பயம்.

50. ஆரம் - முத்தாரம். நல் நிதிக் குவை : பணத் தைக்குவித்து அலங்காரமாகக் கொடுத்தாள். நனி : உவ கையும் உபசாரமும் கலந்தபடி.

துன்னு காதல்ச்
சுமித்திரை யோடும்போய்,
மின்னு நேமியன்
மேவிடம் மேவினுள். ருக

51. இதுவரை, ராமனைத் தந்தை அருமையாகப் பார்த்துவந்தான். இனி, யார் இருக்கிறுர்கள் பார்க்க, என்ற எண்ணத்தோடு கோயிலுக்குப் போகிறுள். எல்லா உயிர்களுக்கும் தேவர்களுக்குமே ஆதாரமாய் இருக்கும் கடவுள், இலக்குமிதேவி பூமாதேவி சமேதராய்க் காட்சி அளிக்கிறுர்.

மேவி, மென்மல
ராள்நில மாதெனும்
தேவி மாரொடும்,
தேவரோ(டு) யாவர்க்கும்
ஆவி யும்அறி -
வும்எலாம் ஆயவன்
வாவி மாமலர்ப்
பாதம் வணங்கினுள். ருஉ

---

50. துன்னு காதல் - எப்பொழுதும் உடனிருக்கும் அன்பு. மின்னு நேமியன் மேவிடம் : பெருமாள் எழுந்தருளியிருக்கும் கோயில். நேமி - சக்கரம்.

51. மென்மலராள்-தாமரைமலரிலிருக்கும் லட்சுமி தேவி. நிலமாது - பூமாதேவி. தேவர் - ஞானிகள். நமக்கானுலும் சரி ஞானிகளுக்கானுலும் சரி, உயிர் உணர்ச்சி ஆகிய தத்துவங்கள் எல்லாம் கடவுளது தொழிற்பாடுதான். வாவி மா மலர் : தடாகத்திலிருந்து அப்போது பறித்த தாமரை போன்ற.

52. பெருமானைப் பார்த்துப் பிரார்த்திக்கிறாள்.

என்வ யிற்றரு
 மைந்தற்(கு) இனிஅருள்
உன்வ யத்த(து),என் -
 றாள்,உல(கு) யாவையும்
மன்வ யிற்றின்
 அடக்கிய மாயனைத்,
தன்வ யிற்றின்
 அடக்கும் தவத்தினாள். ருங

---

52. திருமால், உலகத்தையெல்லாம் தன் வயிற்றில் அடக்கினான். அந்தத் திருமாலையே (அதாவது ராமனையே) கோசலை தன் வயிற்றில் பத்துமாசம் அடக்கி வைக்கும்படியான பாக்கியம் பெற்றிருந்தாள்.

## 3. மந்தரை சூழ்ச்சிப் படலம்

1. ராமன் பட்டாபிஷேகத்துக்குத் தயாராய் இருக்கிறான். சோதிடர்கள், பஞ்சாங்கம் சாஸ்திரம் எல்லாம் பார்த்து, இரவு கழிந்ததும் காலையிலேயே நல்ல முகூர்த்தம் என்று சொல்லிவிட்டார்கள். வசிஷ்டர் அப்படியே தசரதனிடம் போய், முகூர்த்தம் குறிப்பிட்டாய்விட்டது என்று சொன்னார்.

சந்தம்

தானன தானன தான தன்னன

ஏற்றிட ஆண்டகை
இனி(து)இ ருந்துழி,
நூல்த்தட மார்பனும்
நொய்தின் எய்தப்போய்,
ஆற்றல்சால் அரசனுக்(கு)
அறிவித் தான்,அவன்,
'சாற்றுக நகரணி
சமைக்க' என்றனன். ருச

---

1. ஏற்றிட - முடி சூட. ஆணதகை - ராமன். நூல் தடமார்பன் : வசிஷ்டர். நகரணி சமைக்க - நகரத்தை அலங்கரிக்கும்படி. சாற்றுக - பறைசாற்றி விளம்பரம் செய்க.

2. பறைசாற்றும் வள்ளுவர் ரொம்ப உற்சாகத்துடன் விளம்பரம்செய்கிறார்கள்.

ஏவின வள்ளுவர்,
 ‘இராமன் நாளையே
பூமகள் கொழுநனாய்ப்
 புனையும் மௌலி,இக்
கோநகர் அணி(க)’எனக்
 கொட்டும் பேரி,அத்
தேவரும் களிகொளத்
 திரிந்து சாற்றினார். ருரு

3. ராமனுக்கு நாளைப் பட்டாபிஷேகம் என்ற சொல், செவிப்புலனோடு நிற்கவில்லை.

கவியமை கீர்த்திஅக்
 காளை, நாளையே
புவியமை மணிமுடி
 புனையும் என்றசொல்,
செவியமை நுகர்சிய
 எனினும், தேவர்தம்
அவியமு(து) அன்னஅந்
 நகரு ளார்க்கெலாம். ருசு

---

2. பேரியின் முழக்கம் தேவலோகத்துக்குக் கூட எட்டிவிட்டதாம்.

3. கவியமை கீர்த்தி : ராமனுடைய கீர்த்தியைக் கொஞ்சநேரம் நினைத்தால் போதும், அப்படியே அது கவிரூபமாக வந்துவிடும். காளை - ராமன். புவியமை : பெரிய ராஜ்யபாரத்தைக் குறித்துக் காட்டும். செவியமை நுகர்சிய - செவிப்புலன் மாத்திரம் உட்கொள்ளக்கூடியதாயிருந்தாலும். அவி - தேவர் பெறும் உணவு.

4. செய்தி சொன்னவர்களுக்கெல்லாம் ஊரார் பரிசு வழங்கினார்கள்.

ஆர்த்தனர், களித்தனர்,
ஆடிப் பாடினர்,
வேர்த்தனர், தடித்தனர்,
சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர், மன்னனைப்
புகழ்ந்து வாழ்த்தினர், -
தூர்த்தனர் நீள்நிதி
சொல்லி னார்க்கெலாம். ருஎ

5. எப்போதுமே சகல அழகும் வாய்ந்ததாய் இருக்கிறது அயோத்தி. இருந்தாலும், ஜனங்களைப் பேராசை பிடித்து, வேண்டாதபடியெல்லாம் அலங் கரிக்கத் தூண்டுகிறது. எதுபோல் என்றால் :

திணிசுடர் இரவியைத்
திருத்தும் ஆறும், அப்
பணியிடைப் பள்ளியான்
பரந்த மார்பிடை
மணியினை வேகடம்
வகுக்கும் ஆறும்போல்,
அணிநகர் அணிந்தனர்
அருத்தி மாக்களே. ருஅ

---

4. ஆர்த்தனர் - கூச்சலிட்டார்கள். தூர்த்தனர் - கொட்டிவிட்டார்கள்.

5. யாராவது சூரியனை மெருகுத்தூள் போட்டு விளக்கப் பார்ப்பார்களா! நீலவானத்திடைச் சயனங் கொள்ளும் நெடுமாலின் மார்பை அலங்கரிக்கிற மணி யானது எல்லாத் திசைகளிலும் பிரகாசிக்கும்படியாகக்

6. முடிசூட்டுவிழாவைக் காண, மக்கள் மாத்திரம் அல்ல, பறவைகள் கூட வந்து மொய்த்தன என்று சொல்லும்படி இருந்தது.

வெள்ளிய, கரியன,
செய்ய, வேறுள,
கொள்ளைவான் கொடிநிரைக்
குழாங்கள் தோன்றுவ :
கள்ளவிழ் கோதையான்
செல்வம் காணிய
புள்ளெலாம் திருநகர்
புகுந்த போன்றவே. ருகூ

7. அலங்கரிக்கப்பட்ட தேர்களையும் யானைகளையும் பார்த்தால் :

ஆடல்மான் தேர்க்குழாம்
அவனி காணிய
வீடெனும் உலகின்வீழ்
விமானம் போன்றன ;

---

கிரணங்களை வீசிக்கொண்டிருக்கிறது. அந்த மணியை யாராவது மாசுதுடைக்கப் போவார்களா! வேகடம் வகுத்தல் - மாசு நீக்குதல்.

6. செல்வம் : முடிசூட்டுவிழா. காணிய - காணும்படி. புள் - பறவை. பெண்டிர் உடுத்தும் ஆடைகளின் நிறத்தை எல்லாம் கொடிகளில் ஏற்றி அனுபவித்தார்கள் ஜனங்கள். அதனாலேயே, கருநிறக்கொடியையும் உபயோகித்தார்கள்.

7. மான் - குதிரை. அவனி - பூமி. காணிய - காணும்படி. வீடு - மோட்சம். உலகின்வீழ் - மோட்ச உலகிலிருந்து இறங்குகிற. விமானம் - தேவவிமானம்.

ஓடைமாக் கடகளி(று),
உதய மால்வரை
தேடருங் கதிரொடும்
திரிவ போன்றவே. ௬0

8. ஜனங்கள் தங்கள் சந்தோஷத்தைக் காட்டுவதற்காக, இருபக்கத்து வீட்டிலிருந்தும், மாடியிலிருந்தும், எதையெல்லாமோ தூவுகிறார்கள்.

பூமழை, பொரிமழை,
புதுமென் சுண்ணத்தின்
தூமழை, தரளத்தின்
தோமில் வெண்மழை,
தாம்இழை நெரிதலில்த்
தகர்ந்த பொன்மழை,
மாமழை நிகர்த்தன
மாட வீதியே. ௬௧

9. தேவர்கள் தங்கள் அலங்காரமான நாட்டை விட்டுப் பூமிக்குவர விமானத்தில் புறப்பட்டார்களாம்.

7. ஓடை - யானைக்கு இடுகிற நெற்றிப் பட்டம். உதய மால்வரை - கிழக்கேயுள்ள பெரியமலை; அந்த மலை சூரியனை நெற்றியில் வைத்துக்கொண்டு திரிவதுபோல இருக்கிறதாம் யானையைப் பார்த்தால்.

8. சுண்ணம் - வாசனைப்பொடி. தூ - சுத்தமான. தரளம் - முத்து. தோம் - மாசு. தாம்-தாவிச் செல்லும். இழை நெரிதலில்; மாடிகளிலிருந்து எதிர் எதிராக வீசும் போது தாவிச் செல்லும் பொன் ஆரங்கள் ஒன்றோடொன்று மோதி நெரிந்தன ; அதுகாரணமாகப் பொன் மழை.

விமானமும் நெடுநேரம் பறந்து ஓடிற்று. ஆனாலும், தேவலோகத்தின் எல்லையைக் கடந்ததாகத் தோன்ற வில்லையாம். காரணம்:

ஏய்ந்தெழு செல்வமும்
அழகும் இன்பமும்
தேய்ந்தில : அனையது
தெரிகி லாமையால்
ஆய்ந்தனர் பெருகவும்
அமரர் : இம்பரிற்
போந்தவர், - போந்திலம்
என்னும் புந்தியால். கூ௨

10. வானவரே திகைக்கும்படி அயோத்தியை அலங்கரித்துக் கொண்டிருக்கிற கும்மாளத்தின் இடையே, ஒருத்தி காட்சி கொடுக்கிறாள்.

அந்நகர் அணிவுறும்
அமலை, வானவர்
பொன்னகர் இயல்பெனப்
பொலிவும் எல்லையில்,

---

9. வீடுகளும், மாளிகைகளும், கோயில்களும் நன்றாய்ப் பொருத்தமாக விளங்கிநிற்கின்றன. மக்கள் ஆனந்தமாய் இருக்கிறார்கள். தேய்ந்தில - வானுலகத்தில் இருந்த மாதிரியே அயோத்தியிலும் இருக்கிறதாம். ஆய்ந்தனர் - ரொம்ப ரொம்ப யோசனை செய்தார்கள். இம்பர் - இந்த உலகம். போந்தவர் - வந்தவர். போந்திலம் - வரவில்லை போலும் நாம்.

10. அமலை - கொண்டாட்டம். எல்லையில் - சமயத்தில். தன்வினை தன்னைச் சுடும் என்பதனை,

இன்னல்செய் இராவணன்
இழைத்த தீமைபோல்,
துன்னரும் கொடுமனக்
கூனி தோன்றினாள். ௪௫

11. 'ராமனது முடிசூட்டுக்காகவா இத்தனை ஆர்ப்பாட்டமும்!' என்று ஆங்காரம் வருகிறது கூனிக்கு.

தோன்றிய கூனியும்
துடிக்கும் நெஞ்சினாள்,
ஊன்றிய வெகுளியாள்,
உளைக்கும் உள்ளத்தாள்,
கான்(று)எரி நயனத்தாள்,
கதிக்கும் சொல்லினாள்,
மூன்றுல கினுக்கும்ஓர்
இடுக்கண் மூட்டுவாள். ௪௬

12. அக்கிரமம் பண்ண ஆரம்பிக்கும்போது, அதற்கு ஒரு காரணம் கற்பித்துக் கொண்டால்த்

---

இராவணன் கடைசியாக அழிந்துபோவதற்கு அவனுடைய பாவச்செயல்களே கூனியாக உருவெடுத்து வந்தன. துன்னரும் - கொடுமை ரொம்பச் செறிந்திருக்கிற.

11. ஊன்றிய வெகுளியாள்: நேரம் ஆக ஆக கோபம் அழுந்துகிறது. உளைக்கும் உள்ளத்தாள்: ஏதடா, இதை எல்லாம் தடுக்க முடியாதுபோல் இருக்கிறதே என்று கஷ்டம். கதிக்கும் சொல்: குபீர் குபீர் என்று வார்த்தைகள் விட்டுவிட்டு வருகின்றன. நமக்கு மாத்திரமே துன்பம் வரலாம். ஆனாலும், அது உலகங்களையெல்லாமே பாதிக்கிறதுபோல் தோன்றும்; அதனால் மூன்றுலகு என்றார்.

தான் மனசு திருப்திப்படுகிறது. எப்போதோ ஒரு சமயம், ராமன் சிறுபையனாக இருந்தபோது, கூனி யின் முதுகின்மேல் விளையாட்டாகக் களிமண் உருண் டையை வில்லில்வைத்து எய்தான். அந்த விளையாட்டு, கூனிக்குச் சந்தோஷத்தையே கொடுத்திருக்கும். ஆனால்,அந்தக் காரியத்தை, மறந்துபோன காரியத்தைத் தான், நினைவுக்குக் கொண்டுவந்து, ஆங்காரத்தை வேண்டுமென்று மூட்டிக்கொள்ளுகிறாள்.

தொண்டைவாய்க் கேகயன்
தோகை கோயில்மேல்

மண்டினாள், வெகுளியில்
மடித்த வாயினாள்,—

பண்டைநாள் இராகவன்
பாணி வில்உமிழ்

உண்டைஉண் டதனைத்தன்
உள்ளத் துள்ளுவாள். ௧௨

13. அரண்மனைக்குள் போன கூனி, வெள்ளைத் துப்பட்டி விரித்த பஞ்சணைமேல் கைகேசி தூங்கிக் கொண்டிருக்கப் பார்க்கிறாள்.

---

12. தொண்டை - சிவந்த தொண்டைமலர். கேக யன் மகள் - கைகேசி. கோயில் - அரண்மனை. பாணி - கையில் ஏந்திய. உண்டை உண்டது-களிமண் உருண்டை பட்டது. குறிப்பு: மனசில் அழுத்துகிறாள் என்னும் பாவம், ' உள்ளத்து உள்ளுவாள் ' என்ற சொல்லில் தொனிக்கிறது.

நாற்கடல் மணிபடு
நளினம் பூத்ததோர்
பாற்கடல்ப் படுதிரை
பவள வல்லியாய்,
சேற்கடைக் கண்அளி
தேங்கப் பொங்கணை
மேற்கிடந் தாள்தனை
விரைவின் எய்தினுள். ௧௩

14. படுத்திருந்தது இப்படி ; பாதங்களின் அழகைச் சொல்ல முடியாது. பாதங்களுக்கு உவமை, தாமரைமலர் என்று ஒருவாறு சொல்லலாம். இப்படி உவமமாகச் சொல்லுவதற்குத் தாமரை மலர் எவ்வளவு தவம் செய்ததோ!

எய்தி,அக் கேகயன்
மடந்தை, - ஏடவிழ்
நொய்தலர் தாமரை
நோற்ற நோன்பினுல்

---

13. பாற்கடலில் பவளக்கொடி ஒன்று படர்ந்து, தாமரைமலர்களைப் பூத்ததுபோலிருந்தது கைகேசி படுத்திருந்த தோற்றம். நளினம் - தாமரை. கை, கால், வாய், தாமரையை ஒத்திருந்தன. தூக்கத்திலும் அவளுடைய கண்ணில் அமைதியும் கருணையும் நிறைந்திருந்தன. வெள்ளைத் துப்பட்டி ஒரு நாகரிகத்தைக் காட்டுகிறது.

14. ஏடு அவிழ் நொய்து அலர் - இதழ்கள் விரிந்து மிருதுவாக மலர்கிற. தாமரைநோற்ற தவத்தினுல்த்தான், தக்க முறையில் உவமை சொல்ல நேர்ந்தது.

செய்தபேர் உவமைசால்—
செம்பொற் சீறடி
கைகளில்த் தீண்டினுள்
காலக் கோள்அ(ன்)னுள். ௬௭

15. காலைத் தொட்ட மாத்திரத்தில், நித்திரை கலைந்துவிட்டது. ஆனாலும், கண்ணைத் திறக்கவில்லை கைகேசி.

தீண்டலும் உணர்ந்தஅத்
தெய்வக் கற்பினுள்,
நீண்டகண் அனந்தரும்
நீங்க கிற்றிலள் :
மூண்டெழு பெரும்பழி
முடிக்கும் வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை
சொல்லல் மேயினுள். ௬௮

---

14. காலக்கோள் - பின்வரும் கேட்டைக் குறிக்கும் தூமகேது. தீண்டினுள் ; சர்ப்பம் தீண்டிய மாதிரிதான். காலைப் பிடிப்பது, தூக்கத்தைவிட்டு எழுப்புவதற்கு, ஏற்பட்ட இதமான முறை.

15. அனந்தர் - தூக்கம், அதாவது இமை மூடிய நிலைமை. நீங்ககிற்றிலள் - நீங்கப் பெறவில்லை. ஏதேனும் சொல்லச் சமயம் இல்லை ; தன் எண்ணத்தைக் கைகேசியின் முன்னிலையில்ச் சொல்லக் கூனியும் தயங்குகிருள். ஆனாலும், எல்லாக் காரியங்களையும் முடிக்கிற விதியே வந்து, சொல்லிவிடு என்று தூண்டுகிறது.

16. மனதைத் திடப்படுத்திக்கொண்டு சொல்லு கிறாள் கூனி.

‘அணங்குவாள் விடஅரா
அணுகும் எல்லையும்
குணம்கெடா(து) ஒளிவிரி
குளிர்வெண் திங்கள்போல்,
பிணங்குவான் பேர்இடர்
பிணிக்க நண்ணவும்,
உணங்குவாய் அல்லை நீ, -
உறங்கு வாய்’என்றாள். கசு

17. கூனி இவ்வளவு சொல்லவும், இடராவது ஒன்றாவது நமக்கு என்றுதான் எண்ணுகிறாள் கைகேசி.

வெவ்விடம் அனையவள்
விளம்ப, வேற்கணாள் :
தெவ்அடு சிலைக்கைஎன்
சிறுவர் செவ்வியர்,

---

16. அணங்கு - துன்பம் தரும். வாள் - கொடூர மான. அரா - சந்திரனை விழுங்குகிற ராகு என்னும் பாம்பு. பிணங்குவான் பேர்இடர் - திருத்திக்கொள்ள முடியாத அவ்வளவு பெரிய துன்பம். உணங்குவாய் அல்லை - வருந்தவில்லை நீ.

17. வேற்கண்ணாள் - கைகேசி. தெவ்அடு - பகை வரை ஒடுக்கும். சிறுவர் - ராமன், பரதன், லட்சுமணன், சத்துருக்கன் ஆகிய என் பிள்ளைகள். செவ்வியர் - நல்ல ஒழுக்கம் உடையவர்கள்.

அவ்வவர் துறைதொறும்
அறந்தி றம்பலர், -
எவ்விடர் எனக்குவந்(து)
அடுப்ப(து), ஈண்(டு)' என்றாள். எ0

10. ஏதோ நல்ல பிள்ளைகள் என்று பேரெடுத்த பிள்ளைகளைப் பெற்றுவிட்டாலே போதும்: ஒரு துயரும் நம்மைவந்து அணுகாது.

' பராவரும் புதல்வரைப்
பயக்க, யாவரும்
உராவரும் துயரைவிட்(டு)
உறுதி காண்பரால்;
விராவரும் புவிக்கெலாம்
வேத மேஅன
இராமனைப் பயந்தஎற்(கு)
இடர்உண் டோ' என்றாள். எக

---

17. அவ்வவர் துறை - அவரவர்கள் பார்க்கிற வேலைகளில். இளவரசர்களாகவே அனேக இலாகாக்களை மேல்பார்த்துவந்திருக்கிறார்கள் என்பது குறிப்பு. அறம் திறம்பலர் - நீதி தவறாமல் நிர்வகிக்கிறார்கள். ஈண்டு - இந்த உலகில்த்தான்

18. பராவரும் - உலகத்தார் பாராட்டும். பயக்க - பெற. உராவரும் - நம்முடன் ஒட்டியே வரும். உறுதி - நித்தியமான இன்பத்தை. விராவரும் - விரிவாய் அமைந்துள்ள. வேதமே அன்ன இராமன்: நீதி நூல்களைப் பார்க்கவே வேண்டாம், இராமன் செயல்களைப் பார்த்தால் போதும்; செயல்களை வைத்து வேதத்தை வகுக்கலாம் என்றபடி.

19. கூனி பேச வந்தது ராமனுக்கு விரோதமாக; கைகேசியோ ராமனை ரொம்பவும் உயர்த்திப் பேசி விட்டாள். கூனிக்குச் சங்கடமாய்த்தான் போய்விட்டது. அதனால், அவள், வேறொரு மூலையைப் பார்த்துப் பேச்சைத் திருப்புகிறாள்.

ஆழ்ந்தபேர் அன்பினாள்
அனைய கூறலும்,
சூழ்ந்ததீ வினைநிகர்
கூனி சொல்லுவாள் :
' வீழ்ந்தது நின்நலம்,
திருவும் வீந்தது,
வாழ்ந்தனள் கோசலை
மதியினால் ' என்றாள். எஉ

20. கூனி அப்படிச் சொன்னதற்குப் பதில் சொல்லுகிறாள் கைகேசி :

---

19. ஆழ்ந்த பேர் அன்பினாள்-கைகேசி உண்மையிலேயே எல்லோரிடத்திலும் அன்புடையவள்தான். அனைய : அந்த வார்த்தைகளை. ஒருவருக்குக் கஷ்டம் வரும்போது எத்தனையோ கேடுகள் ஒத்துப்பேசிக் கொண்டுவந்தமாதிரி வந்துசேரும். அந்தக் கேடுகளோடு தான் ஒத்துச்சொல்லவேணும் கூனியைஎன்கிறார் கவிஞர். நின் நலம்-உன் செல்வாக்கு. திருவும் வீந்தது - உனக்குக் கையில்க் காசுகிடையாது என்றுதான் ஏற்படும் ; திரு - செல்வமாய் இருக்கும் நிலை. வீந்தது - ஒழிந்தது. மதி - புத்திகூர்மை.

அன்னவள் அவ்வுரை
உரைப்ப, ஆயிழை :
'மன்னவர் மன்னனேல்க்
கணவன், மைந்தனேல்
பன்னரும் பெரும்புகழ்ப்
பரதன், பார்தனில்
என் ? இதன் மேல்அவட்(கு)
எய்தும் வாழ்(வு)' என்றாள். ௭௩

21. 'அவளுக்கு வாழ்வு என்ன வந்துவிட்டதென்று கேட்கிறாய்? சொல்லுகிறேன்' என்கிறாள் கூனி.

'ஆடவர் நகையுற
ஆண்மை மாசுறத்
தாடகை எனும்பெயர்த்
தையலாள்படக்,

---

20. ஆயிழை - மங்கை ; கைகேசி, மன்னர் மன்னனேல் : ராஜாதிராஜன் எனக்கு யார், கணவனுக்கும். பன்னரும் புகழ் - சொல்லமுடியாத புகழ். அவட்கு - கோசலைக்கு.

21. 'தாடகை என்னும் பெண்ணை அம்பெய்து கொன்று விட்டான் ராமன். வீரனைப் பார் வீரனை! அவன் பட்டத்துக்கு வருகிறான். இதைவிட வேறென்ன கோசலைக்கு வேண்டும், அதிகாரம் எல்லாம் வருவதற்கு' என்கிறாள் கூனி.

கோடிய வரிசிலை
இராமன் கோமுடி
சூடுவன் நாளை! வாழ்(வு)
இ(து)'எனச் சொல்லினாள். எச

22. கோசலையைப்பற்றிப் பேசும்போது ஏதோ பேச்சுப்போட்டிக்காக, தன்பிள்ளை பரதனை, ராமனை விட்டுப் பிரித்த முறையில் பேசினாள். அவ்வளவு தான். ஆனால், ராமனுக்குப் பெரிய பதவி வருகிறது என்று கூனி சொன்னாளோ இல்லையோ உடனே தாய்ப்பண்பு மேலிட்டுவிட்டது; ஆனந்தம் பொங்கி விட்டது.

மாற்றம்அஃ(து) உரைசெய,
மங்கை உள்ளமும்
ஆற்றல்சால் கோசலை
அன்பும் ஒத்ததால் :

---

21. கோடிய - க்ஷத்திரியதர்மத்துக்கு மாறான. வரி சிலை - இறுக நரம்பிட்டுக் கட்டிய வில். கோ முடி - சக்கரவர்த்திக்கு உரிய முடி.

22. மாற்றம்-மேலே சொன்ன வார்த்தையை. ஆற்றல் சால் கோசலை : ஒருவீட்டில் எல்லோரும் ஒத்த அன்புடன் வாழ்தலே வாழ்வு என்ற உத்தமக் கொள்கையோடு எல்லாக் காரியங்களையும், பொறுமையோடும் அன்போடும் நிர்வகித்துவந்த பெருமாட்டி கோசலை. கைகேசியானவள் இளமைபற்றி இவ்வளவும் யோசனை பண்ணுகிறவள் அல்லதான். ஆனாலும், இயற்கையான பண்புபற்றி எல்லாரிடத்திலும் வாஞ்சையோடிருந்தாள். கோசலையின் அன்புக்கும் கைகேசியின் இயற்கைப்

வேற்றுமை உற்றிலள்,
    வீரர் வீரன்புக்(கு)
ஏற்றவள் இருதயத்(து)
    இருக்க வேகொலாம். எடு

23. கைகேசி மனசில் என்றும் இல்லாத ஆனந்தம் பொங்கிவிட்டது.

ஆயபேர் அன்பெனும்
    அளக்கர் ஆர்த்தெழ,
தேய்விலா முகமதி
    விளங்கித் தேசுறத்,
தூயவள் உவகைபோய்
    மிகச், சுடர்க்கெலாம்
நாயகம் அனையதோர்
    மாலை நல்கினள். எசு

24. செய்தி சொல்லியதை நல்ல செய்தி என்று எண்ணியதோடில்லை. சொல்லியதற்குப் பரிசு வேறு

---

ரண்புக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லை. இது வெளியாயிற்று இப்போது. வீரர் வீரன் - ராமன். மிக்க ஆசையோடு இதயத்தில் ராமனை வைத்துப் பாராட்டினள் கைகேசி.

23. அளக்கர் - சமுத்திரம். ஆர்த்து - ஆரவாரித்து. தேசு - பிரகாசம். தூயவள் : கைகேசி உண்மையில் ராமனிடம் வாஞ்சையுள்ளவள். சுடர்க்கெலாம் நாயகம் - நட்சத்திரங்களில் மிக்க பிரகாசமுடையதுபோன்ற ரத்தினங்கள் அமைந்த மாலை.

கொடுக்கிறது என்று ஏற்பட்டுவிட்டால், கோபம் வராதா கூனிக்கு!

தெழித்தனள், உரப்பினள்,
சிறுகண் தீயுக
விழித்தனள், வைதனள்,
வெய்(து) உயிர்த்தனள்,
சுழித்தனள், அழுதனள், -
சுடர்செய் மாலையால்க்
குழித்தனள் நிலத்தை,அக்
கொடிய கூனியே. என

25. பொறுக்க முடியாத மனவேதனையோடும் கோபத்தோடும் கூனி பேசுகிறாள்.

வேதனைக் கூனிபின்
வெகுண்டு நோக்கி,அப்
பேதையைப், 'பித்தி! நிற்
பிறந்த சேயொடும்

---

24. தெழித்தனள் : அடடா அடடா என்று கூச்சல் போட்டாள். உரப்பினள் - அதட்டினாள். ஆங்காரத்தினாலும் விஷயம் கைகூடாமல் போய்விட்டதே என்ற வருத்தத்தினாலும் கூனியிடத்து ஏற்பட்ட மெய்ப்பாடுகள் உண்மையோடு ஒட்டியவை ; ரொம்ப நன்றாய் அமைந்திருக்கின்றன.

25. பேதையை - பரிசுத்தமான மனத்தவளான கைகேசியை. பித்தி - பைத்தியக்காரியே. நிற் பிறந்த - உன் வயிற்றிற் பிறந்த.

நீ துயர் படுக, நாள்
  நெடி(து) : உன் மாற்றவள்
தாதியர்க்(கு) ஆட்செயத்
  தரிக்கி லேன்' என்ருள். எஅ

26. கோசலை காரியக்காரிதான். அவளுடைய மகனுக்கோ, செல்வத்திலெல்லாம் பெரிய செல்வம் வந்துவிட்டது. அவர்களுக்கென்ன குறைவு!

'மறந்திலள் கோசலை
  உறுதி, மைந்தனும்
சிறந்தநல் திருவினில்த்
  திருவும் எய்தினன்,—
இறந்திலன் இருந்தனன்
  என்செய் தாற்றுவான்!
பிறந்திலன் பரதன்! நீ
  பெற்ற தால்' என்ருள். எகூ

27. பரதன், இயல்பாகத் தன் தாயின் பிறந்த வீட்டுக்கு (கேகய நாட்டுக்குப்) போயிருக்கிருன். கூனியின் மனசிலோ, வேண்டுமென்றே தசரதன்

---

25. ஆட் செய-அடிமையாக இருந்து வேலைசெய்ய.

26. உறுதி - நித்தியமான லாபத்தை. 'பரதனை, அடடா, நீயேன் பெற்ருய், வேறு யாராவது பெற்றிருக்க லாகாதா!' என்பது பாவம். இறந்திலன் - பேருக்கு இறந்துபோகாமல் இருக்கிருன்; அவ்வளவுதான். குறிப்பு: கூனியின் மனசில் உண்மையாகவே பரிதாபம் உண்டாய்விட்டது.

பரதனை வெளியூருக்கு அனுப்பிவிட்டான் என்று படுகிறது. அதைச் சொல்லுகிருள்.

'பாக்கியம் புரிந்திலாப்
பரதன் தன்னைப்பண்(டு)
ஆக்கிய பொலன்கழல்
அரசன், ஆணையால்
தேக்குயர் கல்லதர்
கடிது சேணிடைப்
போக்கிய பொருள்எனக்(கு)
இன்று போந்ததால்.' அ0

28. மந்தரை ரொம்பவும் யோசித்துப் பார்க்கிருள் : ராமன் பட்டத்துக்கு வந்துவிட்டால் தசரதன் வனத்துக்குப் போய்விடுவான். கைகேசிக்கும் பரதனுக்கும் வேண்டியவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள். அவர்கள் கதி நிர்க்கதி அல்லவா என்று உண்மையிலேயே வருந்துகிருள்.

---

27. பண்டு ஆக்கிய பொலன் கழல் அரசன் - மூதாதைகள் அணிந்துவந்த வீரக்கழலைத் தசரதனும் அணிந்திருக்கிருன் என்பதில் இகழ்ச்சிக் குறிப்பு. பொலன் - பொன். கல்லதர் - மலைப்பாதைகளின் வழியாக. கடிது - அவசரம் அவசரமாக. சேணிடை - தூரமான ஊருக்கு. போக்கிய பொருள் - போகும்படி ஏற்பாடு செய்ததன் தந்திரம். இன்று போந்ததால் - இப்போதுதான் தெரிகிறது.

மந்தரை பின்னரும்
வதைந்து கூறுவாள் :
அந்தரம் தீர்ந்துலகு
அளிக்கும் நீரினல்,
தந்தையும் கொடியன்,நல்த்
தாயும் தீயளால்,—
எந்தையே, பரதனே !
என்செய்வாய்' என்ருள். அக

29. பரதனிடத்துச் சென்ற பரிதாபம் திரும்பி வந்து, அதிக வேகத்தோடு கைகேசியிடமே செல்லுகிறது.

'அரசர்இல்ப் பிறந்து,பின்
அரசர் இல்வளர்ந்(து)
அரசர்இல்ப் புகுந்து,பேர்
அரசி யானநீ,
கரைசெயற்(கு) அருந்துயர்க்
கடலில் வீழ்கின்ருய்
உரைசெயக் கேட்கிலை !
உணர்வி லோய்'என்ருள். அஉ

---

28. அந்தரம் தீர்ந்து - எல்லை என்பது இல்லை என்று சொல்லும்படி. மந்தரைக்கு உண்டான மன வருத்தத்தால் 'அப்பா பரதனே' என்று எங்கேயோ தூரத்தில் இருந்தவன் பெயரைச் சொல்லி அலறுகிருள். குறிப்பு : நாடகப் பண்பு வாய்ப்பாய் வந்திருக்கிறது.

29. அரசர் அரசர் என்று அடுக்கிவருவது ஆத்திரத்தை ரொம்ப அழகாய்க் காட்டுகிறது.

30. இத்தனை ஆத்திரத்தோடு மந்தரை சொன்னாலும் கைகேசிக்கு ஏற்கவில்லை. கோபந்தான் வருகிறது.

சந்தம்

தான தன்னன
தானன தானன
தா ன.

வாய்க யப்புற
மந்தரை வழங்கிய
வெஞ் சொல்,

காய்க னல்த்தலை
நெய்சொரிந் தெனக்,கதம்
கனற் றக்,

கேக யர்க்கிறை
திருமகள், கிளர்இள
வரி கள்

தோய்க யற்கண்கள்
சிவப்புற, நோக்கினள்
சொல் லும். அஙு

31. மிக்க கோபத்தோடு அவள் மந்தரையைக் கண்டிக்கிறாள்.

---

30. மந்தரையின் வெஞ்சொல் கதத்தை (கோபத்தை) மூட்டி விட்டது. கனற்ற - தீமூட்ட. கேகயர்க்கிறை - கேகய நாட்டினருக்கு அரசன். கிளர் இள வரிகள் - தெளிவாகவும் நுட்பமாகவும கண்ணில் படர்ந்த ரேகைகள். நோக்கினள் - நோக்கி.

' எனக்கு நல்லை நீ
அல்லை, மற் றென்மகன்
பர தன்

தனக்கும் நல்லை நீ
அல்லை, வெம் தண்டனை
நோக்கில்

உனக்கும் நல்லை நீ
அல்லை, வந் தூழ்வினை
தூண் ட

மனக்கு நல்லன
சொல்லினை, மதியிலா
மனத் தோய்!' அ௪

32. எவ்வளவோ கோபத்தோடுதான் கைகேசி பேசுகிறாள்: ஆனாலும், உள்ளுக்குள் மந்தரைக்கு ஏதேனும் கேடு வந்துவிடக்கூடாதே என்ற பரிவும் கிடக்கிறது.

' போதி என்எதிர்
நின்று, நின் புன்பொறி
நா வைச்

சேதி யா(து)இது
பொறுத்தனன்; புறஞ்சிலர்
அறி யின்,

---

31. மனக்கு நல்லன - யோசனையில்லாமல், ஏதோ மனசுக்கு தோன்றியவைகளை.

32. போதி - போய்விடுவாயாக. புன் பொறி - அற்பப் புத்தி.

நீதி அல்லவும்
நெறிமுறை அல்லவும்
நினைந் தாய்
ஆதி ! ஆதலின்,
அறிவிலி ! அடங்குதி '
என் றுள். அடு

33. ஆனால், வாயை மூடிக்கொண்டு அப்படியே அடங்கிவிடுகிறவளா மந்தரை !

அஞ்சி மந்தரை
அகன்றிலள் அம்மொழி
கேட் டு :
நஞ்சு தீர்கினும்
தீர்கிலா(து) அதுநலிந்
தென் னத்,
' தஞ்ச மே ! உனக்(கு)
உறுபொருள் உணர்த்துகை
தவி ரேன்,
வஞ்சி போலி ! ' என்(று)
அடிமிசை வீழ்ந்துரை
வழங் கும். அசு

32. நீதி - நியாயம். நெறிமுறை - சட்டம், அதாவது ஏற்பட்ட ஒழுங்கு. ஆதி - ஆகின்றாய். அடங்குதி - வாயை மூடு.

33. விஷத்தை உட்கொள்ளாமல் நிறுத்தலாம் ; ஆனாலும், முன்னமே உட்கொண்ட காரணத்தால் தேகத்திலேயே நின்றுகொண்டு அது பெருங்கேடு செய்யும் ; தேகத்தைவிட்டுப் போகாது. அந்த விதமாக, மந்தரை கைகேசியை விட்டு ஒழிந்துபோய்விடவில்லை. நலிந்தென்ன - வருத்தியதென்ன. தஞ்சமே - அடைக்கலமே. உறுபொருள் - பொருத்தமான காரியம். வஞ்சிபோலி - பூங்கொடி போன்றவளே.

34. கைகேசி இயற்கையில் மிக்க தாராள சிந்தை உள்ளவள். அதற்கேற்ப, விஷயங்களை எடுத்துச் சொல்ல ஆரம்பிக்கிறாள் கூனி.

‘அறம்நி றம்பிய
அருளுடை அருந்தவர்க்
கே னும்,
பெறல ருந்திருப்
பெற்றபின், சிந்தனை
பிறி தாம் :
மறம்நி னைந்துமை
நலிகில ராயினும்,
மனந் தான்
இறலு றும்படி
இயற்றுவர் இடையறு
இன் னல்.’ அஎ

35. ஏதோ பொதுப்படையாகச் சொன்னமாதிரி மேலே சொன்ன விஷயத்தைச் சொல்லிவிட்டு, பளீர் என்று ஒரு பாய்ச்சல் பாய்கிறாள், காரியக்காரி கூனி.

‘புரியும் தன்மகன்
அர(சு)எனில், பூதலம்
எல் லாம்
விரியும் சிந்தனைக்
கோசலைக்(கு) உடைமையாம்
என் னில்,—

34. மறம் நினைந்து - கொடுமையை வேண்டும் என்று நினைத்து. நலிகிலராயினும் - துன்புறுத்தாவிட்டாலும். இறலுறும்படி - இடிந்துபோகும்படி. இன்னல் - துன்பம்.

35. விரியும் சிந்தனை-பேராசை கொண்ட.

பரியும் நின்குலப்
புதல்வற்கும் உனக்கும்இப்
பார் மேல்
உரிய தென் ? அவள்
உதவிய ஒருபொருள்
அல் லால்.' அஅ

36. கடைசியாக ஒரு வார்த்தை கூனி சொல்லு கிருள் - அது கைகேசியின் தயாள சிந்தையை லட்சிய மாகக் கொண்டு சொல்லுவது. கைகேசிக்கு ரொம்ப வேண்டியவர்கள் ஏதோ கஷ்டப்பட்டு உதவி நாடி வருவார்கள், என்று ஆரம்பிக்கிருள்.

' தூண்டும் இன்னலும்
வறுமையும் தொடர்தரத்
துய ரால்
ஈண்டு வந்துனை
இரந்தவர்க்(கு) இருநிதி
அவ ளா
வேண்டி ஈதியோ,
வெள்குதி யோ, விம்மல்
நோ யால்
மாண்டு போதியோ,
மறுத்தியோ, எங்ஙனம்
வாழ் தி !' அகூ

---

35. பரியும் - வருத்தத்துக்கு உள்ளாகும்.

36. தூண்டும் : கஷ்டத்தைச் சகிக்க முடியாமல், வறுமை பிடித்துத் தள்ளித்தான் யாசிக்க வருவார்கள் என்றபடி. ஈண்டு - இங்கே. இருநிதி-இதுவரை தாராள

37. 'நீ எப்படி உயிர் வைத்துக்கொண்டிருக்கப் போகிருய்' என்று உண்மையான பரிவோடும் கோபத்தோடுமே கைகேசியைப் பார்த்துக் கேட்கிருள். இத ளுல் என்ன ஏற்பட்டது:

தீய மந்தரை
இவ்வுரை செப்பலும்,
தே வி
தூய சிந்தையும்
திரிந்தது ,—சூழ்ச்சியின்
அரக் கர்
மாய, வானவர்
பெற்றநல் வரம்உண்மை
யா லும்,
ஆய் அந்தணர்
இயற்றிய அருந்தவத்
தா லும். கo

38. மனம் திரிந்தது. அவ்வளவுதான் : கைகேசிக்குக் கூனியின்மேல் இல்லாத பிரியம் உண்டாய் விட்டது.

---

மாகக் கொடுத்துவந்தபடி மிகுதியான திரவியம், கொடுக்க முடியவில்லை என்றபோது உயிர்விடுதல் எளிதுதான் ; இல்லை என்று சொல்லுதலோ தாங்க முடியாத துன்பம்.

37. தேவி : கைகேசி. திரிந்தது - மாறிவிட்டது. சூழ்ச்சியின் - தந்திரத்தில் வல்லவரான. மாய - ஒழிந்து போகும்படி, வரம் உண்மை - வரம் ஒன்று ஏற்பட்டிருத்தல். ஆய அந்தணர் - குழாமாக உள்ள பல முனிவர்கள்.

அனைய தன்மையள்
ஆகிய கேகயன்
அன்னம்,
வினை நிரம்பிய
கூனியை விரும்பினள்
நோக்கி,
' எனை உவந்தனை,
இனியைஎன் மகனுக்கும் ;—
அனை யான்
புனையும் நீள்முடி
பெறும்படி புகலுதி '
என்றாள். ௩௮

39. கைகேசி நன்றாய் வழிக்கு வந்துவிட்டாள் : மந்தரைக்கு வந்த மகிழ்ச்சியைச் சொல்லவாவேண்டும்?

மாழை உண்கணி
உரைசெயக் கேட்டமந் -
தரை, ' என்
தோழி வல்லள், என்
துணைவல்லள்' என்றடி
தொழுதாள் ;

---

38. கேகயன் அன்னம் : கைகேசி. வினை நிரம்பிய - தந்திரமாகக் காரியம் முடிக்கவல்ல. விரும்பினள் - விரும்பி. அனையான் - பரதன். புகலுதி - சொல்வாயாக.

39. மாழை உண்கணி - மாவடுவை வகிர்ந்துவைத்த மாதிரியுள்ள கண்ணை உடைய கைகேசி. தோழி : உல்லாசப் பொழுதுபோக்குக்காக உள்ளவள். துணை - பாது காக்கிறவள்.

தாழும் அந்நிலை,
 ‘ என்உரை தலைநிற்பின்,
  உலகம்

ஏழும் ஏழும்உன்
 ஒருமகற்(கு) ஆக்குவென் ’
  என்றாள். ௩௯

40. கூனி ஆரம்பிக்கிறாள். ‘என் யோசனையில்த் தட்டுப்பட்டது ஒரு காரியம். சம்பராசுரனை வென்றபோது ஒரு விழா நடத்தினான் அல்லவா தசரதன்? அந்த உற்சாகத்தில் உனக்கு இரண்டு வரம் கொடுத்தான். அது ஞாபகம் இருக்கிறதா?’ என்கிறாள்.

‘ நாடி ஒன்றுனக்(கு)
 உரைசெய்வென், நளிர்மணி
  நகை யாய்!

தோ(டு)இ வர்ந்ததார்ச்
 சம்பரன் தொலைவுற்ற
  வேலை,

---

39. என் உரை தலைநிற்பின் - நான் சொல்லுகிற வகையில் உறுதியாக நின்றால்.

40. நாடி - யோசனை செய்துதான். நளிர் மணி - குளிர்ந்த பிரகாசமுள்ள முத்து. நகை - பல்; கைகேசி சந்தோஷத்தினால் குழந்தைமாதிரி சிரிக்கிறாள். வேலை - சமயம்.

ஆடல் வென்றியான்
அருளிய வரம்அவை
இரண் டும்

கோடி !' என்றனள்,
உள்ளமும் கோடிய
கொடி யாள். ௬௩

41. அந்த இரண்டு வரங்களையும் எந்த முறையில் பெறவேண்டும் ?

'இருவ ரத்தினில்,
ஒன்றினால் அரசுகொண்(டு),
இரா மன்

பெருவ னத்திடை
ஏழிரு பருவங்கள்
பெயர்ந் து

திரியச் செய்திமற்
றொன்றினால், செழுநிலம்
எல் லாம்

ஒருவ ழிப்படும்
உன்மகற்(கு) ; உபாயம்ஈ(து)'
என் றாள். ௬௪

---

40. ஆடல் வென்றி - வெற்றிவிழாக் கொண்டாட்டம். கோடி - கொள்வாயாக ! உள்ளமும் கோடிய : உடல் மாத்திரம் அல்ல வளைந்திருப்பது.

41. ஏழிரு பருவங்கள் - பதினாலு வருஷங்கள். ஒருவழிப்படும் - உறுதியாக வந்து சேரும்.

42. உபாயம் ரொம்ப சரியான உபாயந்தான் என்று பட்டுவிட்டது கைகேசிக்கு.

உரைத்த கூனியை
உவந்தனள் உயிருறத்
தழு வி,

நிரைத்த மாமணி
ஆரமும் நிதியமும்
நீட் டி,

'இரைத்த வேலைசூழ்
உலகம்என் ஒருமகற்(கு)
ஈந் தாய்,

தரைக்கு நாயகன்,
தாய்,இனி நீ' எனத்
தணி யா. கூரு

43.

'நன்று சொல்லினை ;
நம்பியை நளிர்முடி
சூட் டல்,

துன்று கானத்தில்
இராமனைத் துரத்தல்,இவ்
இரண் டும்

42. உவந்தனள் - உவந்து. நீட்டி - கொடுத்து. இரைத்த வேலை - அலையோடு சப்திக்கிற சமுத்திரம். தணியா - மனம் ரொம்பவும் அமைதிபெற்று.

43. நம்பியை - பரதனை. துன்று கானம் - மரம் நெருங்கிய.

அன்ற தாம்எனில்,
அரசன்முன் ஆருயிர்
துறந் து
பொன்றி நீங்குதல்
புரிவென்யான் ; போதிநீ '
என் ருள். ௪௬

44. காரியம் சித்திக்காமல்ப் போனல், உண்மையிலேயே உயிர் துறக்க துணிந்துவிட்டாள் கைகேசி. ஒரு வெறியே பிடித்துவிட்டது அவளுக்கு. கூனி கூட விருந்தால் இடையூறுதான் என்று எண்ணுகிருள்.

கூனி போனபின்
குலமலர்க் குப்பைநின்(று)
இழிந் தாள் ;
சோனை வார்குழல்க்
கற்றையில்ச் சொருகிய
மா லை,
வான வார்மழை
நுழைதரு மதிபிதிர்ப்
பாள் போல்,
தேன்அ வாவுறு
வண்டினம் அலமரச்,
சிதைத் தாள். ௪௭

43. பொன்றி - செத்து.

44. அபூர்வமான மலர்களை நிறையப் பரப்பிய படுக்கையைவிட்டு இறங்கினுள். சோனை வார் மழை - பலத்த மழையைப் பெய்யப்பார்க்கும் கருமேகம். மழை நுழை தரு - மேகத்துக்குள் நுழையும், மாலையைப்

**45.** கைகேசியினுடைய உயர்ந்த பண்புகளைக் கவிஞர்தான் சிருஷ்டித்தார். அந்தப் பண்புகளை ரொம்பவும் வியந்து அனுபவித்தார். இப்போது, அடடா! அத்தனையும் பாழாய்ப் போகின்றனவே என்று ஆற்றாமைப்படுகிறார் :

**விளையும் தன்புகழ்**
**வல்லியை வேர்அறுத்(து)**
**என்னக்**

**குளைகொள் மேகலை**
**சிந்தினள் ; கிண்கிணி**
**யோடும்**

**வளைதுறந்தனள் ;**
**மதியினில் மறுத்துடைப்**
**பாள் போல்,**

**அளக வாள்நுதல்**
**அரும்பெறல் திலதமும்**
**அழித்தாள். ●** கூஅ

பிதிர்த்து எறிந்த மாத்திரத்தில் தேனை உண்டுகொண்டிருந்த வண்டுகள் அப்படியும் இப்படியுமாகத் திகைத்துப் பறந்தன. கவிஞர் வண்டுகளைப் பார்த்து அவ்வளவாகப் பரிதபிக்கிறார்.

45. முத்துச்சரங்கள் தொங்கினமேகலைச்சங்கிலியை அறுத்து எறிந்த செயலானது, வளர்ந்துவந்த புகழாகிய அழகிய பூங்கொடியின் வேரை, அறுத்து எறிந்ததுபோலிருந்தது. பூங்கொடி அப்படியே நசித்துப்போகவேண்டியதுதானே? அளக வாள் நுதல் - நெற்றியின்மேல்க் கூந்தல் (அளகம்) வளைந்து சுருண்டுகிடக்கும் அழகைக் குறித்தது. திலதத்தை அழிப்பது. இந்த இடத்தில், அமங்கலத்தையே குறிக்கும் அவ்வளவு துர்ச்செயல். ராமனது பட்டாபிஷேகத்தின் மங்களத்தைக் கெடுக்கச் செய்த காரியம்.

46. ஆபரணங்களையும் அங்கொன்று இங்கொன்றுகச் சிதறி, கூந்தலையும் மண்ணில்ப் புரளும்படி சிதறினுள். இந்த வேலையெல்லாம் யோசித்துச் செய்த செயலாய் இருந்தாலும், மனசிலுள்ள ஆற்றுமையும் வருத்தமும் அவளால் தாங்க முடியாதனவாகத்தான் இருந்தன.

**தா**வில் மாமணிக்
கலன்மற்றும் தனித்தனி
சிதறி,
நாவி நன்குழல்
நானிலம் தைவரப்
பரப்பி,
காவி யுண்கண்கள்
அஞ்சனம் கான்றிடக்
கலுழா, -
பூஉ திர்ந்ததோர்
கொம்பெனப் புவிமிசைப்
புரண்டாள். ௬௬

---

46. தாவில் - குற்றம் யாதும் இல்லாத. கலன் - ஆபரணம். நாவி - வாசனைத் தைலம் ஏறிய. நானிலம் - தரை. தைவர - புரண்டு கிடக்க. காவியுண்கண் - நீலோற்பலத்தை வைத்ததுபோன்ற கண். அஞ்சனம் கான்றிட - மை கரைந்து ஒழுக. மைகலந்த கண்ணீரானது துன்பத்தை எடுத்துக்காட்டுகிறது. கலுழா - கலுழ்ந்து; துன்பத்துக்குள்ளாய்.

## 4. கைகேசி சூழ்வினைப் படலம்

1. எப்படியாவது பரதனுக்குப் பட்டம் கட்டி விட வேண்டும், ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட வேண்டும் என்ற ஆத்திரம் வந்து கைகேசியின் உள்ளத்தைத் தாக்கிவிட்டது. இது கைகூடாமல் போய் விடுமோ என்கிற பயம், அதோடு ஆங்காரம், எல்லாம் கலந்து அவளைக் கஷ்டப்படுத்துகின்றன; இந்த நிலையிலே படுக்கையறையில், தரையில்தானே புரண்டு கொண்டிருக்கிறாள்.

இனி, வெளியே வாசலில் போய்ப் பார்ப்போம். நாழிகை, நள்ளிரவு பன்னிரண்டு மணி. அரசர்கள் 'வாழ்க வாழ்க' என்று ஆரவாரித்துக் கொண்டு வாசலுக்கு வருகிற சப்தம் கேட்கிறது.

சந்தம்

தானன தன்னன தன்ன
தன்னன தன்

நாழிகை கங்குலின் நள் அ-
டைந்தபின் றை,
யாழிசை அஞ்சிய அஞ் சொல்
ஏழைகோ யில்,

---

1. கங்குல் - இரவு. நள் - நடுநேரம். பின்றை - பிறகு. ஏழை - பெண்; கைகேசி. யாழிசை அஞ்சிய அஞ்சொல் ஏழை. கைகேசியின் இனிய பேச்சைக் கேட்டால் யாழின் இசையே பயப்படும் என்ற குறிப்பு. கோயில் - கைகேசி வசிக்கும் அரண்மனை.

'வாழிய' என்(று)அயில் மன் னர்
துன்ன,வந் தான்,

ஆழிநெ டுங்கைம டங் கல்
ஆளிஅன் னான். க00

2. வாழ்த்திக்கொண்டு வந்த மன்னர் வாசலி லேயே நின்றுவிட்டார்கள்; சக்கரவர்த்தி உள்ளே போகிறான்.

வாயிலில் மன்னர்வ ணங் கி
நிற்ப,வந் தாங்(கு)

ஏயின செய்யும்ம டந் தை -
மாரொ(டு) ஏகிப்,

பாயல்து றந்த,ப டைத் த -
டங்கண்மென் தோள்,

ஆயிழை தன்னைஅ டைந் தான்
வாழிமன் னன். க0க

3. கைகேசியைப் பார்த்து, 'என்ன இப்படிக் கஷ்டம் வந்து சேர்ந்தது' என்று வருந்துகிறான்.

---

1. அயில் மன்னர் - வேலேந்திய மன்னர். துன்ன - நெருங்கி ஒழுங்குபட நின்று. ஆழி - கனத்த தோள் வளையம். மடங்கல் ஆளி - பிடரி ரோமத்தோடு கம் பீரமாய் விளங்கும் சிங்கம். அன்னான் - போன்றவன்.

2. ஏயின செய்யும் மடந்தைமார் - இட்ட வேலை யைச் செய்யும் பணிப்பெண்கள். ஏகி - போய். பாயல் - படுக்கை. படைத்தடங்கண் - வேல்போன்ற பெரிய கண். ஆயிழை - கைகேசி. ஆழிமன்னன் - சக்கரவர்த்தி.

அடைந்(து)அவள் நோக்கி,அ ரந் தை
என்கொல்வந் து
தொடர்ந்ததெ னத்துயர் கொண் டு
சோரும்நெஞ் சன்
மடந்தையை, மானைஎ டுக் கும்
ஆனையே போல்
தடங்கைகள் கொண்டுத ழீ இ
எடுக்கல்உற் றான். ௧0௨

4. கைகேசிக்கு ஏதோ மிக்கவேதனை கொடுக்கும் நோய்தான் வந்துவிட்டது என்று எண்ணினான். ஆனால், உடல்பற்றிய நோய் அல்ல என்று உடனே தெரிந்து கொள்ள நேர்ந்தது. எப்படி? எடுத்த கையை ஒரே உதறாக உதறித் தள்ளிவிட்டாள்.

நின்றுதொ டர்ந்தநெ டுங் கை
தம்மைநீக் கி,
மின்துவள் கின்றது போ ல
மண்ணில்வீழ்ந் தாள்;
ஒன்றும்இ யம்பலள் நீ (டு)
உயிர்க்கல்உற் றாள்,
மன்றல் அருந்தொடை மன் னன்
ஆவிஅன் னாள். ௧0௩

---

3. அவள் நோக்கி - அவளை நோக்கி. அரந்தை - துன்பம் தரும் நோய். என்கொல்-என்ன. தொடர்ந்தது-பற்றிக்கொண்டது. மடந்தை - கைகேசி. தழீஇ - தழுவி.

4. நின்று : உறுதியாக. தொடர்ந்த - கோத்த. இயம்பலள் - பேசவில்லை. நீடு உயிர்த்தல் - பெருமூச்சு விடல். மன்றல் அருந்தொடை - வாசனை கமழும் அழகிய மாலை. ஆவி அன்னாள் - உயிருக்குச் சமானமானவள்.

5. தேகத்தில் யாதொரு நோயும் இல்லை, ஆனால் அவளுடைய மனைசத்தான் யாரோ புண்படுத்தி விட்டார்கள், என்பதாகத் தெரிந்து கொண்டான் சக்கரவர்த்தி.

அன்னது கண்டஅ லங் கல்
மன்னன்அஞ் சி,
' என்னைநி கழ்ந்த(து)இஞ் ஞா லம்
ஏ ழில்வாழ் வார்
உன்னைஇ கழ்ந்தவர் மாள் வர் !
உற்றதெல் லாம்
சொன்னபின் என்செயல் காண் டி !
சொல்லி(டு) 'என் றான். கO௪

6. உண்மையான ஆத்திரத்தோடு தசரதன் பேசுகிறான் என்று அறிந்துகொண்டாள் கைகேசி.

வண்டுளர் தாரவன் வாய் மை
கேட்டமங் கை
கொண்டல்நெ டுங்கணின் ஆ லி
கொங்கைகோப் ப

---

5. அலங்கல் - மாலை. என்னை நிகழ்ந்தது - என்ன நேர்ந்தது. ஞாலம் - உலகம். உற்றது - நேர்ந்தது. காண்டி - காண்பாய்.

6. வண்டு உளர் - வண்டு மொய்த்து ரீங்காரம் செய்கிற. வாய்மை - உண்மையான வார்த்தையை. கொண்டல்-மேகம்போன்ற. ஆலி - கண்ணீர். கோப்ப - மண்ட.

14

'உண்டுகொ லாம்அருள் என் கண்,
உண்மைதா னேல்,

பண்டைய இன்றுப ரிந் (து)
அளித்தி'என் றாள். ௧0௫

7. தசரதனுக்கோ, 'இதென்ன வேடிக்கை' என்று சிரிப்பு வந்துவிட்டது.

கள்அவிழ் கோதைக ருத் (து)
உணர்ந்திலா தான்,

வெள்ளநெ டுஞ்சுடர் மின் னின்
மின்னநக் கான், .

'உள்ளம்உ வந்தது செய் வன்,
ஒன்றும்லோ பேன்,

வள்ளல்இ ராமன்உன் மைந் தன்
ஆணை'என் றான். ௧0௬

---

6. அருள் - தயவு. என்கண் - என்னிடம். பண்டைய : பூர்வமாக என்னிடம் காட்டும் தயவை. பரிந்து அளித்தி - பிரியத்துடன் காட்டவேண்டும்.

7. கள் அவிழ் கோதை : இதழ்கள் மெல்ல விரிந்து தேனை வடிக்கும்படியான அத்தனை புதிய மாலையை அணிந்த கைகேசி. ஓரா - உணராத. வெள்ள - மிக்க. நக்கான் - சிரித்தான். உள்ளம் உவந்தது - உன் மனசுக்குப் பிடித்த காரியத்தை. லோபேன் - குறைக்க மாட்டேன். குறிப்பு : இராமன் பெயரை இங்கே கொண்டு வந்துவிட்டது, விதியின் வேடிக்கைதான்.

8. 'உன் மைந்தன் ராமனது ஆணை எனச் செய்வேன்' என்று தசரதன் சொன்னது இயற்கையான வார்த்தைதான். கைகேசிக்கு உறுதி பிறந்துவிட்டது; தனது கோரிக்கையைச் சொல்லத் தைரியமும் வந்துவிட்டது.

ஆன்றவன் அவ்வுரை கூற
ஐயம்இல் லாள்,
'தோன்றிய பேர்அவ லம் து-
டைத்தலுண் டேல்,
சான்றிமை யோர்குலம் ஆக,
மன்ன! த ரற்(கு)
ஏன்றவ ரங்கள்இ ரண் டும்
ஈதி' என் றாள். கoஎ

9. வரங்கொள்ளுவதற்காக, இவ்வளவு துன்பத்துக்கு உன்னை உள்ளாக்கிக் கொள்ள வேண்டுமா?

'வரங்கொள இத்துணை மன் னும்
அல்லல்எய் தி
இரங்கிடல் யாதுகொல்! ஈண் டே
ஈவன்: என் பால்

---

8. ஆன்றவன்: உயர்ந்த சீலமுள்ள தசரதன். தோன்றிய - என் மனசில் உண்டான. அவலம் - வருத்தம். சான்று - சாட்சிகள். இமையோர் குலமாக - தேவர்களேயாக. தரற்கு ஏன்ற - தருதற்கு ஒப்புக்கொண்ட. ஈதி - கொடுக்கவேண்டும்.

9. மன்னும் - அளவுக்கு. அல்லல் - துன்பம். யாதுகொல் - என்ன காரணம்பற்றி. ஈண்டே - இப்பொழுதே.

பரங்கெட இப்பொழு தே ப
கர்ந்தி(டு)'என் றான்,
உரங்கொள் மனத்தவள் வஞ் சம்
ஓர்கிலா தான். ௧0௮

10. வரங்கள் இன்னதென்றே சொல்ல ஆரம்பித்துவிடுகிறாள் :

' ஏயவ ரங்கள்இ ரண் டின்
ஒன் றினால், என்
சேய்அர சாள்வது, சீ தை
கேள்வன்ஒன் றால்
போய்வனம் ஆள்வ(து)'எ னப் பு -
கன்றுநின் றாள்,
தீயவை யாவையி னும் சி -
றந்ததீ யாள் ௧0௯

---

9. என்பால் பரங்கெட - என் இதயத்தில் உண்டான வருத்தம் தீர. பரம் - பாரம். உரம் - உறுதி.

10. ஏய - எனக்கு ஏற்பட்ட. என் சேய் - பரதன். பெருங்கொடுமைக்கு உள்ளாக்க நினைத்தமாத்திரத்தில், கைகேசிக்கு ராமன் என்ற அருமைப்பெயரைச் சொல்ல முடியவில்லை ; சீதையின் கணவன் இருக்கிறானே அவன் என்று சொல்லுகிறாள். நின்றாள் : சாதாரணமான பெண் என்றால், இந்தக் கொடுமையைச் சொன்னமாத்திரத்திலேயே கீழே விழுந்துவிடுவாள் ; கைகேசியோ நின்றாள்.

11. இந்தத் துணிச்சலான வார்த்தைகளைத் தச தரன் கேட்டானே இல்லையோ, அவ்வளவுதான் :

நாகம்எ னும்கொடி யாள் தன்
நாவின்வந் த
சோகவி டந்தொட ரத், து -
ணுக்கம்எய் தா,
ஆகம்அ டங்கலும் வெந் (து)
அழிந்(து),அரா வின்
வேகம்அ டங்கிய வே ழம்
என்னவிழ்ந் தான். கக0

12. துன்பத்தைச் சகிக்க முடியாமல் கீழே விழுந்து புரளுகிறான் :

பூதலம் உற்(று)அத னிற் பு -
ரண்டமன் னன்
மாதுய ரத்தினை யா வர்
சொல்லவல் லார் :
வேதனை முற்றிட வெந் து
வெந்து,கொல் லன்
ஊ துலை யில்க்கனல் என் ன
வெய்துயிர்த் தான். கக௧

11. சோக விடம் - புத்திர சோகமாகிய விஷம். தொடர - தேகத்தில் ஏற. துணுக்கம் - பயம். ஆகம் - தேகம். அராவின்-பாம்பு தீண்டிய காரணமாக. வேகம்: அபாரமான சக்திகொண்ட மதம். வேழம் - யானை.

12. பூதலம் - தரை. வெய்துயிர்த்தான் - பெரு மூச்சு விட்டான்.

13. இப்படி வேதனைக்கு உள்ளாகிச் செயலற்றுப் போனவனுக்கு மெள்ள உணர்ச்சி பிறந்து :

மேவிநி லத்தில்இ ருக் கும்,
நிற்கும்,வீ ழும்,
ஓவியம் ஒப்பஉ யிர்ப் (பு)
அடங்கிஒ யும், -
பாவியை உற்றெதிர் பற் றி
எற்றஎண் ணும்,
ஆவிபதைப்பஅ லக் கண்
எய்துகின் றான். கக௨

14. இடம் பெயரமுடியாத நிலையில் கைகேசியைக் கூர்ந்து பார்த்து :

தன்நிலை நின்றவள் தன் னை
எய்தநோக் கி,
நெய்ந்நிலை வேலவன், 'நீ தி -
சைத்ததுண் டோ,
பொய்ந்நிலை யோர்கள்பு ணர்த் த
வஞ்சமுண் டோ,
அந்நிலை சொல்,என(து) ஆ ணை
உண்மை' என் றான். ககங

---

13. உயிர்ப்பு - சுவாசம். ஓய்ந்து கிடந்தவனுக்குத் திடீர் என்று ஆத்திரமும் கோபமும் உண்டாய்விடுகிறது. கிட்டப்போய், அவளை உதைத்துவிட எண்ணுகிறான். ஆனல், அவன் தேகநிலையோ உயிர்போகிற தருவாயில்த்தான் இருக்கிறது. அலக்கண் - வேதனை.

14. தன் நிலை நின்றவள் - தன் கோரிக்கையில் உறுதியாக நின்ற கைகேசி. எய்த - கூர்ந்து. நெய்ந்நிலை - நெய் பூசிப் பளபளப்பாய் வைத்த. திசைத்தது - மாற்றியது. ஆணை - கட்டளை. உண்மை - இது சத்தியம்.

15. யாராவது வந்து உன் மனசை மாற்றிவிட்டார்களா, என்று கேட்டதற்குக் கைகேசி :

'திசைத்ததும் இல்லை,எ னக் கு
வந்துதீ யோர்
இசைத்ததும் இல்லை,முன் ஈந் த
அவ்வரங் கள்,
குசைப்பரி யோய் ! தரின், நன் று
கொள்வென் : அன் றேல், -
வசைத்திறம் நின்வயின் வைத் து
மாள்வென்'என் றாள். கக௪

16. இவ்விதமாக அந்தப் பாதகி சொன்ன சொல்லை யாரால்த்தான் தாங்கமுடியும் ?

இந்தநெ டும்சொல்அவ் ஏ ழை
கூறுமுன் னே,
வெந்தகொ டும்புணில் வேல் நு -
ழைந்ததொப் ப
சிந்தைதி ரிந்து,தி கைத்(து),
அயர்ந்துவீ ழ்ந் தான், -
மைந்தன்அலா(து)உயிர் வே (று)
இலாதமன் னன். ககரு

---

15. இசைத்தது-மூட்டிவிட்டது. குசைப்பரியோய்-பிடரிரோமம் கொய்துவிட்ட குதிரைமேல் சவாரி செய்யும் வீரனே. வசைத்திறம் - பழி. மாள்வென் - உயிர் விடுவேன்.

16. நெடுஞ் சொல் - அழுத்தி அழுத்திச் சொன்ன சொல். ஏழை : கைகேசி.

17. தள்ளாடி வீழ்ந்தவன் மறுபடியும் எழுந்து உட்கார்ந்து, ஆற்ருமையோடு பேசுகிருன் :

'ஆகொடி யாய் !' எனும் ; ஆ வி
காலும் ; அந் தோ,
'ஓகொடி தேஅறம் !' என் னும் ;
'உண்மைமுற் றும்
சாக !' எனுஎழும் ; மெய் தள் -
ளாடிவீ ழும் ;
மாகமும் நாகமும் மண் ணும்
வென்றவா ளான். கக௬

18. வானுலகத்தையும் பாதாள லோகத்தையும் பூலோகத்தையும் வென்ற வீரன் மெய் தள்ளாடி விழுகிருன். சற்றுநேரம் கழிக்கவும், உள்ளத்திலிருந்து கோபம் பொங்கி எழுகிறது :

'நாரியர் இல்லைஇஞ் ஞா லம்
ஏழும்என் னக்,
கூரிய வாள்கொடு கொன் று
நீக்கி,யா னும்

---

17. ஆவி காலும் - உயிர் நீங்கியமாதிரி மூர்ச்சை யாகிவிட்டான். உண்மை - சத்தியம் என்கிற தத்துவம். 'சத்தியம் தொலைந்துபோகட்டும்' என்ற வார்த்தை தன் வாயிலிருந்து வரவும், பதைபதைத்து அப்படியே கீழே விழுகிருன். மாகம் - வானலோகம். நாகம் - பாதாள லோகம். மண் - பூலோகம்.

18. நாரியர் - பெண்கள்.

பூரியர் எண்ணிடை வீழ் வன்'
என்றுபொங் கும்,
வீரியர் வீரம்வி ழுங் கி
நின்றவே லான். ககஎ

19. ஆனாலும் ஒரு எண்ணம் வருகிறது. இவளைக் கொன்றுவிட்டால், சத்தியத்தைவிட்டு நீங்கினேன் என்றல்லவா ஏற்பட்டுவிடும். அடடா, ஒன்றுஞ் செய்யத் தோன்றவில்லையே என்று:

கையொடு கையைப்பு டைக் கும்,
வாய்கடிக் கும்;
'பொய்யுரை குற்றம்'எ னப் பு -
ழுங்கிவா டும்;
நெய்யெரி வுற்றென நெஞ் (சு)
அழிந்துசோ ரும்; -
வையகம் முற்றும்ந டந் த
வாய்மைமன் னன். ககஅ

20. சத்தியம் தர்மம் இவைகளே உலகத்தை நடத்தி வைக்கின்றன என்ற தீவிர நம்பிக்கை கொண்டவன் தசரதன். கைகேசி கேட்டுக்கொண்ட வரத்தை மறுத்துவிட்டால், உலகத்திற்கே பெருங்கேடு, தனக்கும் பெரும்பழி வந்துவிடும் என்று நடுங்கு கிறது அவன் மனசு. எவ்வளவோ கோபத்தோடு

18. பூரியர் எண்ணிடை - மிலேச்சர்களுடைய கணக்கில். பகைவர்களைக் கொன்று அவர்களுடைய வீரத்தையெல்லாம் வாங்கிய வேலை ஏந்தியவன்.

19. நெய்யெரி-எண்ணெய்விட்டு வளர்த்த அக்கினி. தசரதனுடைய சத்தியமே உலகமுற்றும் நடந்து பரிபாலனம் செய்தது என்பது குறிப்பு.

அவளை வெருட்டினுன். அவள் கொஞ்சமேனும் தன் கோரிக்கையைவிட்டு அசைகிறதாக இல்லை. ஒன்றும் செய்யமுடியாத நிலையில், கையோடு கையை அடிக்கிறுன். உதட்டைக் கடிக்கிறுன். புத்தியே கலங்கிப் போய்விடுகிறது. சரி, வேருெரு முறையை அனுசரித்துப் பார்க்கலாம் என்று எண்ணுகிருன்.

அவசியமான ஆபத்துக் காலத்தில், ஒருவரை யாசிக்கிறது இழிவான காரியம் அல்ல. அப்படி யாசிப்பது, யுத்தப்படை கொண்டு, அக்கிரமத்தை நீக்கப் புறப்படும் வீரச்செயல் போன்றதே என்று எண்ணுகிருன்.

சந்தம்

தான தன்ன
தன்னன தன்ன
தனன தன்

கோல்மேல்க் கொண்டு
குற்றம்அ கற்றக்
குறிகொண் டால்ப்
போன்மே, உற்றக்
கால்,இரப்(பு) என்னுப்,
பொறியற் ருள்

20. கோல் - யுத்தப்படையை. மேல்கொண்டு - ஏந்திக்கொண்டு. குற்றம் அகற்ற-அக்கிரமத்தை அடக்க. குறிகொண்டால் போன்மே - லட்சியத்தோடு போருக்குப் புறப்பட்டது போன்றதே. உற்றக்கால் - ஆபத்து நேர்ந்த காலத்தில். இரப்பு - தாழ்ந்து யாசிப்பது. என்னு - என்று எண்ணி. பொறியற்ருள் - கண் இல்லாதவள்; அதாவது தாட்சண்யம், இரக்கம் ஒன்றுமே இல்லாதவள்.

கால்மேல் வீழ்ந்தான்,
கந்துகொல் யானைக்
களிமன் னர்

மேல்மேல் வந்து
முந்திவ ணங்கி
மிடைதா ளான். கககூ

21. கைகேசியின் காலிலே விழுந்து, தசரதன், மிக்க பரிவோடு 'உன் மகன் பரதனே அரசாள இணங்க மாட்டான்' என்று சொல்லுகிறான் :

'கொள்ளான் நின்சேய்
இவ்வர(சு) : அன்றான்
கொண்டா லும்,

நள்ளா(து) இந்த
நானிலம் : ஞாலம்
தனில்என் றும்

---

20. கந்துகொல் - கட்டுத்தறியை முறிக்கின்ற. யானைக் களிமன்னர் - யானைபோன்ற வீர மன்னர். மேல் மேல் வந்து - தொகுதி தொகுதியாக வந்து. மிடை - நெருங்கும். தாளான் : அப்படி வணங்கி நெருங்குதற் குரிய பாதத்தை யுடையவன் ; சக்கரவர்த்தி நிலை அப்படிப்பட்டது.

21. நின் சேய் - பரதன். அரசு - பட்டம். நள்ளாது - விரும்பாது. நானிலம் - உலகத்தார். என்றும் - எக்காலத்தும்.

உள்ளார் எல்லாம்
ஓதஉ வக்கும்
புகழ்கொள் ளாய் :
எள்ளா நிற்கும்
வன்பழி கொண்(டு)என்
பயன் ? 'என் ருன். க௨0

22. இந்த விதமாக என்னென்னவோ சொல்லித் தசரதன் பணிந்து கேட்டான்.

இன்னே இன்னே
பன்னி இரந்தான்
இகல்வேந் தன் ;—
தன்நேர் இல்லாத்
தீயவள் உள்ளம்
தடுமா ருள் ;
' முன்னே தந்தாய்
இவ்வரம் ; நல்காய்
முனிவா யேல்,
என்னே மன்ன !
யார்உளர் வாய்மைக்(கு)
இனி ? 'என் ருள். க௨க

---

21. ஓத உவக்கும் புகழ் - விருப்பத்தோடு சொல்லிக் கொண்டிருக்கும் புகழ். எள்ளா நிற்கும் - இகழ்ந்து பேசுவதற்கு இலக்காய் உள்ள. என் பயன் - என்ன பிரயோசனம்.

22. இன்னே இன்னே - இப்படி இப்படி எல்லாம். பன்னி - பலபடியாகச் சொல்லி. இகல் வேந்தன் - போரில் வல்ல தசரதன். தன்நேர் இல்லா - தனக்குச் சமானமில்லாத. நல்காய் - கொடுக்காமல். முனிவாயேல் - கோபிப்பாயானல்.

23. ஏளனமாய் இப்படிச் சொன்ன வார்த்தை, தசரதன் மனசில் எவ்வளவோ காரமாகத் தைத்தது. அதைப் பொருட்படுத்தாமலே அவன் மேலும் கெஞ்சுகிறான் :

‘ நின்மகன் ஆள்வான் ;
நீ இனி(து) ஆள்வாய் ;
நிலமெல் லாம்

உன்வயம் ஆமே,
ஆளுதி, தந்தேன்,
உரைகுன் றேன் :

என்மகன், என்கண்,
என்உயிர், எல்லா
உயிர்கட் கும்

நன்மகன் இந்த
நாடிற வாமை
நய ’என் றான். கஉ௨

24. இவ்வளவாகக் கெஞ்சியும் கைகேசிக்கு மனம் இரங்கவில்லை. கோபம் அவளுக்கு அதிகரிக்கத் தான் செய்தது.

---

23. எல்லா உயிர்கட்கும் நன்மகன் : எல்லாப் பிராணிகளுமே ராமனைத் தங்கள் சொந்த பிள்ளை என்று கருதுகிறார்கள். நாடு இறவாமை - நாட்டைக் கடந்து காட்டுக்குப் போகாது இருத்தலை. நய - விரும்பிக் கேட்பாயாக.

இரந்தான் சொல்லும்
இன்னுரை கொள்ளாள்,
முனி(வு)எஞ் சாள்,
மரந்தான் என்னும்
நெஞ்சினள், நாணுள்,
வசைபா ராள்,
'சரம்தா வில்லாய்!
தந்தவ ரத்தைத்
தவிர்கென் றல்
உரந்தான் அல்லால்,
நல்லறம் ஆமோ?
உரை' என் ருள். கஉங

25. கைகேசி இவ்வளவு கொடுமையாகப் பேசி விட்டாள். மன்னனுக்குக் காரியம் எப்படி முடியும் என்பது நினைவுக்கு வந்துவிட்டது.

கொடியாள் இன்ன
கூறினள்; கூறக்
குலவேந் தன்,
'முடிசூ டாமல்
காத்தலும், மொய்கான்
இடைமெய் யே

---

24. முனிவு எஞ்சாள்-ஆங்காரம் மீறியதே ஒழியக் குறையவில்லை. வசை - பழி. சரம் தா வில்லாய் - அம்பானது தாவிச் சென்று பகைவர்களை அழிக்கக்கூடிய வில் வீரனே. இது மிக்க இகழ்ச்சியோடு சொன்ன வார்த்தை. உரந்தான் - சாமர்த்தியந்தான். நல்லறம் - நல்ல தர்மம்; சத்தியம்.

25. இன்ன - இப்படியாக. காத்தலும் - தடுத்தலும். மொய் கான்-மரம்நெருங்கிய காடு. மெய்யே-உறுதியாக

நெடியான் நீங்க,
நீங்கு(ம்)என் ஆவி
இனி 'என் று,
இடியே றுண்ட
மால்வரை போல்மண்
இடைவீழ்ந் தான். கஉச

26. மண்ணில் வீழ்ந்த தசரதன், அப்படியே கொஞ்சநேரம் கிடந்தான். பிறகு துயர்க்கடலில் விழுந்தான்.

வீழ்ந்தான் ; வீழா,
வெந்துய ரத்தின்
கடல்வெள் ளத்(து)
ஆழ்ந்தான் ; ஆழா,
அக்கட லுக்கோர்
கரைகா ணான் ;
சூழ்ந்தாள் துன்பம்
வெம்கொடி யாள் ; சொற்
கொடுநெஞ் சம்
போழ்ந்தாள் உள்ளப்
புன்மையை நோக்கிப்
புலர்கின் றான். கஉரு

---

25. நெடியான் - ராமன். என்று - என்று எண்ணி. இடியேறு உண்ட - பேரிடி தாக்கிய.

26. வீழா - வீழ்ந்து. ஆழா - ஆழ்ந்து. சூழ்ந்தாள் துன்பம் - கஷ்டத்தை உண்டுபண்ணிவிடத் துணிந்துவிட்டாள். சொற்கொடு - சொல்லாகிய ஈட்டியைக்கொண்டு. போழ்ந்தாள் - கிறியவள். உள்ளப் புன்மை - மனசிலுள்ள அற்பத்தனத்தை. புலர்கின்றான் - வெதும்புகின்றான் ; வேதனைப்படுகின்றான்.

27. மேலும் கதறுகிறான். உயிரும் உயிரும் ஒன்று என்று சொல்லக்கூடிய நாயகர், உயிர்விடுவதற்கு முன்னேயே, தங்கள் உயிரை விட்டுவிடுவார்கள் என்பதல்லவா பெண்களுக்குரிய புகழ்!

'ஒன்று நின்ற
ஆருயி ரோடும்
உயிர்க்கேள் வர்
பொன்று முன்னம்
பொன்றினர், என்னும்
புகழ்அல் லால்;
இன்றோர் காறும்
எல்வளை யார், தம்
இறையோ ரைக்
கொன்றார் இல்லை; —
கொல்லுதி யோநீ,
கொடியா ளே!' கஉசு

28. ராமன் காட்டுக்குப்போகிற காரணமாக, எனக்கு உயிர் போகப்போகிறது. சக்தி வாய்ந்த - அறிவு வாய்ந்த. அரசர்கள் எத்தனையோ பேர்களுடன் போர் புரிந்திருக்கிறேன். வானோர் வரைக்கும் என் போரும் வெற்றியும் பரவியிருக்கின்றன. இந்த யுத்தம் எதிலாவது எனக்கு உயிர்போயிருக்கக்கூடாதா?

---

27. உயிர்க் கேள்வர் - பிராண நாயகர். பொன்று முன்னம் - இறப்பதற்கு முன்னமேயே. இன்றோர் காறும் - இதுவரையும். எல் வளையார் - பிரகாசமான வளை அணிந்த பெண்கள். இறையோரை - நாயகரை.

'மண்ணுள் இன்றூர்
ஆகி,வ லத்தால்
மதியால்வைத் (து)
எண்ணு நின்றூர்
யாரையும் எல்லா
இகலா லும்,
விண்ணோர் கா றும்,
வென்றன னக்(கு),என்
மனைவா ழும்
பெண்ணல் வந்த(து)
அந்தரம் என்னப்
பெறுவே னோ ? ' கஉஎ

29. வீரனுக்கு ஒவ்வாத மரணம் வரப்போகிறதே, என்ற எண்ணம் திரும்பத் திரும்ப மனைசத் தாக்குகிறது.

என்றென்(று) உன் னும்,
பன்னி இ ரக்கும்,
இடர்தோ யும்,
ஒன்றுன்(று) ஒவ்வா
இன்னல்உ ழக்கும்,
உயிருண் டோ

---

28. வலத்தால் மதியால் எண்ணு நின்றூர் - சக்தி காரணமாகவும், அறிவு காரணமாகவும் மதிக்கப்பட்டவர். இகல் - யுத்தம். அந்தரம் - முடிவு.

29. உன்னும் - எண்ணுகிறுன். இடர் தோயும் - துன்பத்தில் அமிழ்ந்துவிடுகிறுன். இன்னல் உழக்கும் - மனவேதனைக்கு உள்ளாகிறுன்.

இன்(று)இன்(று) என்னும்
வண்ணம்ம யங்கும்,
இடியும், பொன்

குன்(று)ஒன் றொன்றோ(டு)
ஒன்றிய(து) என்னக்
குவிதோ ளான். கஉஅ

30. இவ்விதமாக உயிர்போகிற தறுவாயில் தேக மெல்லாம் மண் தோயும்படி புரளுகிறான் கணவன். ஆனால், கைகேசிக்கோ மனம் கொஞ்சம்கூட இளக வில்லை.

ஆழிப் பொற்றேர்
மன்னவன் இவ்வா(று)
அயர்வெய் திப்,

பூழிப் பொற்றோள்
முற்றும்அ டங்கப்
புரள்போழ் தில்,

'ஊழிற் பெற்றால்
ஆகுக : அன்றேல்,
உயிர்மாய் வென்;

பாழிப் பொற்றார்
மன்னவ!' என்றாள்
பசையற் றாள். கஉகூ

---

29. இடியும் - இதயம் இடியும். ஒன்றியதென்ன - ஒத்துநின்றது என்று சொல்லும்படி. குவி - திரண்ட. குறிப்பு : துன்பங்கள் பற்பல விதமாக வந்து வந்து தாக்குகின்றன என்ற பாவம் செய்யுளில் தொனிக்கிறது.

30. ஆழி - தேர்ச்சக்கரம். பூழி - புழுதி. ஊழில் - சொன்ன முறைப்படி. ஆகுக - நான் ஒப்புக்கொள்வேன். பாழி - திரண்ட; பெரிய. பொற்றார் - பொன் தார்; அழகிய மாலை சூடிய. பசையற்றாள் - இரக்கமற்றவள்.

31. என்ன சொன்னாலும் கைகேசி தன் கொடிய எண்ணத்தை விட்டுக் கொடுக்கப் போவதில்லை, என்பது தெரிந்து விட்டது. 'நீ எப்படியாகிலும் தொலைந்து போ, நீ கேட்ட வரத்தைக் கொடுத்து விட்டேன் நானும்' என்கிறான் தசரதன்.

வீய்ந்தா ளேஇவ்
வெய்யவள் என்று,
மிடல்வேந் தன்,
'ஈந்தேன் ஈந்தேன்
இவ்வரம் ; என்சேய்
வனம்ஆ ள,
மாய்ந்தேன் நான்போய்
வானுல(கு) ஆள்வென் ;
வசைவெள் ளம்
நீந்தாய் நீந்தாய்
நின்மக னோடும்
நெடி(து)'என் றான். கநo

32. இப்படி வாய்விட்டுச் சொன்னானோ இல்லையோ, உடனே, 'இந்தக் கைகேசியும் பரதனும், அடடா, எவ்வளவு கேவலமான பழிக்கு உள்ளாகப் போகிறார்கள்!' என்ற ஒரு துயரம் வந்து இதயத்தைத்

---

31. வீய்ந்தாள் - பழிக்குள்ளாகிச் செத்தொழிந்தாள். மிடல் - பலம். என் சேய் - ராமன். மாய்ந்தேன் - மாய்ந்து. வானுலகாள்வென் - சொர்க்கத்தில் நல்ல நிலைமையில் இருப்பேன். வசை-கொடும்பழி. நீந்தாய் - நீந்துவாயாக. நெடிது - நீண்ட காலம்.

தாக்கிவிட்டது. ஏதோ வாள்வந்து நெஞ்சைப்பிளந்த மாதிரி ஆய்விட்டது. அறிவு மாய்ந்து, செயலும் இழந்தான்.

கூறு முன்னம்,
    கூறுப டுக்கும்
        கொலைவா ளின்

ஏறும் என்னும்
    வன்துயர் ஆகத்(து)
        இடைமூழ் க,

தேறுன் ஆகிச்
    செய்கைம றந்தான் ;
        செயல்முற் றி

ஊறு நின்ற
    சிந்தையி னளும்
        துயில்உற் றாள். கூக

32. கூறு முன்னம்-கூறும் முன்னம். கூறுபடுக்கும்-வெட்டிச் சிதைக்கும். கொலை வாளின் ஏறு - சிறந்த தோய்ச்சல் உள்ள வாள். ஆகத்திடை - நெஞ்சிடை. செயல் முற்றி - எடுத்த காரியம் கைகூடி. ஊறு நின்ற - உறுதிகொண்டு நின்ற. துயில் உற்றாள் - தூங்கிவிட்டாள்.— தன் கோரிக்கை கைகூடுமோ கூடாதோ என்று அலமந்து கொண்டிருந்தது, கைகேசியின் சிந்தை. ஏதோ சாபம் கொடுத்தமாதிரி 'ஈந்தேன், ஈந்தேன், இவ் வரம்' என்று தசரதன் அரைகுறையான உணர்ச்சியோடு சொன்னன். அதுவே அவளுக்குத் திருப்தியைக் கொடுத்து விட்டது. மனம் நிம்மதி அடைந்தது. தூக்கமே வந்து விட்டது. கவலை ஏதும் இல்லாமல் தூங்குகிறாள். பெண்களின் மன நிலை இப்படித்தான் என்று கம்பர் காட்டுவதில், அற்புதமான உண்மையும் அழகும் பிரகாசிக்கிறது. அபூர்வமான நாடகப் பண்பு கிடக்கிறது.

33. பெண்கள் ஆடவர்களைவிடத் தேகபலம் குன்றியவர்கள். அதுகாரணமாக ஆகாரத்துக்காகவும், உயிர் வாழ்வதற்காகவும், போட்டி என்று ஏற்பட்டு விட்டால் பெண்கள்பாடு கஷ்டம்தான். உலகமே பெரிய கஷ்டத்துக்கு உள்ளாகி யிருந்திருக்கும். இதை யெல்லாம் உத்தேசித்து, இயற்கையானது, ஆண்மக்கள் இதயத்தில் ஒரு பச்சாத்தாபத்தையும் அன்பையும் வைத்துப் பெண்களைப் பாராட்டிப் பாதுகாக்கும்படி செய்துவந்திருக்கிறது. அனுபவமுள்ள பெண்கள் எல் லாரும் இந்த உண்மையை உணர்ந்து, ஒழுகி வந்திருக் கிறார்கள்: இதற்கு மாறான ஒழுக்கம் பெண்களிடத் தில் கண்டால், அவர்கள் கண்டிப்பதும் உண்டு. இதை யெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, இரவு நீங்கி, கிழக்கு வெளுக்கிற சமயத்தை வர்ணிக் கிற வர்ணனையைப் பார்க்கலாம்.

சந்தம்

தான தன்னன தன்ன தன்னன
தன்ன தன்னன தன்ன தன்

சேண்உ லாவிய நாள்எ லாம்,உயிர்
ஒன்று போல்வன செய்து, பின்
ஏண்உ லாவிய தோளி னுன்இடர்
எய்த, ஒன்று(ம்)இ ரங்கி லா

---

33. சேண் உலாவிய நாள் எலாம்-கல்யாணம் செய்தது முதல் நெடுநாளாகத்தானே. உயிர் ஒன்று போல்வன - ஒரே உயிர் இருவர் செயலையும் இயக்கியதுபோல. ஏண் உலாவிய - தூண் போன்ற.

வாள்நி லாநகை மாத ராள்செயல்
கண்டு, மைந்தர்முன் நிற்க வும்
நாணி னாள்என ஏகி னாள், நளிர்
கங்கு லாகிய நங்கை யே. கசஉ

34. அரசர்களுடைய வீட்டில் கல்யாணம் நடப்பதாக இருந்தால், பிரம்மாண்டமான கொட்டகை போட்டு, கொட்டகைக்குள் உயர்ந்த முத்துச் சரங்கள் தொங்க விடுவது வழக்கம். ராமனது முடிசூட்டுதலும் ஒரு கலியாணந்தான். அது சம்பந்தமாக அவனுடைய நீண்ட கையில் மங்கல நாண் அணிவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆனால், கைகேசி சூழ்ச்சி காரணமாக, அது நிறைவேறாமல் போய்விடுகிறது. கலியாணக் கொட்டகையை வைத்துக் கொண்டிருப்பதால் பிரயோசனம் என்ன!

சிரித்த பங்கயம் ஒத்த செங்கண்
இராம னைத்திரு மாலை, அக்
கரிக்க ரம்பொரு கைத்த லத்(து)உயர்
காப்பு நாண்அணி தற்கு முன்,—

---

33. வாள் நிலா நகை : திருப்தியால் உண்டான வாயின் மலர்ச்சி ; பற்களும் தெரியும்படியான மலர்ச்சி. மைந்தர் - ஆடவர். ஏகினாள் - உலகத்தைவிட்டு நீங்கினாள். செயல் : பெண் தன்மைக்கு ஒவ்வாத செயல். நளிர் - குளிர்ச்சி கொடுக்கும். கங்குலாகிய நங்கை - இரவாகிய பெண்.

34. சிரித்த பங்கயம் - விரிந்த செந்தாமரை, கரிக் கரம் பொரு - யானைத் துதிக்கைபோன்ற. உயர் காப்பு நாண் - புனிதமான மங்கல நாண்.

வரித்த தண்கதிர் முத்த தாகி,இம்
மண்அ னைத்தும்நி ழற்ற, மேல்
விரித்த பந்தர்பி ரித்த தாமென
மீன்ஒ ளித்தன வான மே. கரு௩

35. விடியற்காலமானதும் அரண்மனையி லிருந்த விளக்குகள் எல்லாம் அணைந்து விட்டன. தீபங்கள் அணைந்த மாதிரியே, தசரதனுடைய ஆவியும் தேய்கிற பருவமாய் இருக்கிறது. எல்லாம், பாவி கைகேசியினால் ஏற்பட்டதல்லவா என்று யாருக்குமே கோபம் உண்டாகும். இப்படி உள்ளத்தில் எழும் கோபம், வெளியே எப்படி பிரதிபலிக்கிறது என்பதைப் பார்க்கலாம்.

தூபம் முற்றிய போல்இ ருள்ப்பகை
துள்ளி யோடிட, - உள்ள ழும்
தீபம் முற்றவும் நீர்த்(து)அ கன்றெனச்,
சேய்அ(து) ஆருயிர் தேய்த லால்,

---

34. வரித்த - வரிசைப்படுத்திய. மண் - பூமி. நிழற்ற - கவிக்கும்படி. மீன் ஒளித்தன வானமே - பொழுது விடிந்த காரணத்தினால் நட்சத்திரங்களெல்லாம் மறைந்துபோய் விட்டன.

35. தூபம் முற்றியபோல் - புகை அடர்ந்தது போன்ற. உள் எழும் - அரண்மனைக்குள் ஏற்றிய. நீர்த்து அகன்று என - அவிந்து அணைந்துபோனதுபோல். சேய் - சூரியனுக்கு மகனான தசரதன் (தசரதன் சூரியகுலத்தைச் சேர்ந்தவன்).

பாபம் முற்றிய பேதை செய்த
பகைத்தி றத்தினில், - வெய்யவன்
கோபம் முற்றிமி குச்சி வந்(து)உதித்
திட்ட னன்,குணக் குன்றி லே. கடுச

36. சூரியன் உதித்துப் பகலாய் விட்டது. கைகேசியின் அரண்மனையிலே இரவில் நடந்த காரியம் அயோத்தியில் யாருக்கும் தெரியாது. ஜனங்கள் எல்லோரும் ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆகப் போகிறதை நோக்கி ஒரே ஆனந்தத்தில் மூழ்கி யிருக்கிறார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் பட்டாபிஷேகத்தை எண்ணி அனுபவிக்கிறார்கள். வயது முதிர்ந்த மாதர்கள், 'கோசலை தான் பாக்கியசாலி: புருஷன் சக்கிரவர்த்தி, புத்திரனும் சக்கிரவர்த்தியாகி இருப்பதைக் கண் குளிரப் பார்க்கப் போகிறாள்' என்று பேசிக்கொள்ளுகிறார்கள். அப்படியே வேதியர்கள், வசிஷ்டரே பாக்கியசாலி என்கிறார்கள். இளம் பெண்கள், தங்களோடு ஒத்த சீதையைப் பாக்கியசாலி என்று சொல்லி அனுபவிக்கிறார்கள்.

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

மாதர்கள் வயதின்மிக் கார்
கோசலை மனத்தைஒத் தார் ;
வேதியர் வசிட்டன்ஒத் தார் ;
வேறுள மகளிர்எல் லாம்

---

35. பேதை - கைகேசி. வெய்யவன் - சூரியன். குணக் குன்று - கிழக்கேயுள்ள உதயகிரி. இருட்பகை துள்ளி ஓடிட, சூரியன் உதித்திட்டனன் குணக் குன்றிலே—என்று முடிக்கவும்.

சீதையை ஒத்தார்; அன்னாள்
திருவினை ஒத்தாள்; அவ் வூர்
சாதன மாந்தர்எல் லாம்
தயரதன் தன்னைஒத் தார். கங௫

37. ராமனுடைய பட்டாபிஷேகத்தைப் பார்ப்பதற்காகப் பக்கத்துநாட்டு அரசர்கள் எல்லோரும், தங்கள் பரிவாரம், பிரஜைகளோடு வந்துவிட்டார்கள். அங்கங்கே அவர்களுடைய நாடு எல்லாம் காலியாய்ப் போய்விட்டன. அயோத்தியைத் தவிர்த்து உலகத்திலுள்ள மற்ற இடங்கள் எல்லாம் காலியாய்ப் போய்விட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இமிழ்திரைப் பரவைஞா லம்
எங்கணும் வறுமைகூ ர,
உமிழ்வதொத்(து) உலவுகா தல்
உந்திட வந்ததன் றே, -

---

36. அன்னாள் - அந்தச் சீதை. திருவினை - லட்சுமி தேவியையே. சாதன மாந்தர்-உலக காரியங்களை ஒதுக்கி விட்டுப் பரலோக சாதனத்தில் மனசை ஈடுபடுத்திய முதியவர். குறிப்பு: எல்லாரும் அனுபவித்தார்கள் என்று விட்டால், உண்மை நன்றாய்ப் புலப்படாது. வகுத்து வகுத்துச் சொல்லும்போது உண்மைக்கு வேகம் பிறக்கிறது. செய்யுள் அபூர்வமான உருவம் கொண்டது.

37. இமிழ் - சப்திக்கிற. திரை - அலை. பரவை - சமுத்திரம். ஞாலம் - உலகம். உலவு காதல் - பெருவெள்ளம்போல் அங்கும் இங்குமாய்ப் பாய்கிற ஆசை வெறி. உந்திட - தள்ள.

குமிழ்முலைச் சீதைகொண் கன்
கோமுடி புனைதல்காண் பான்,
அமிழ்துணக் குழுவுகின் ற
அமரரின், அரசவெள் ளம். கஙசு

38. அரசர் கூட்டம் வந்தது. இன்னொரு புறம் பார்த்தால் பெண்களுடைய கூட்டம். பெண்களுடைய கண்களில் எத்தனையோவிதமான உல்லாசங்கள் தெரிகின்றன. இந்த உல்லாசங்களை, தீட்டிய மையானது பன்மடங்காக எடுத்துக் காட்டுகிறது. அந்த மையை எப்படித்தான் சேர்த்தார்களோ !

குவளையின் எழிலும்வே லின்
கொடுமையும் குழைத்துக்கூட் டி,
திவளும்அஞ் சனம்என்(று)ஏய்ந் த
நஞ்சினைத் தெரியத்தீட் டி,
தவளஒண் மதியுள்வைத் த
தன்மைசால் தடங்கண்நல் லார்
துவளும்நுண் இடையார்,ஆ டும்
தோகைஅங் குழாத்தில்,தொக் கார். கஙஎ

---

37. கோ முடி - கிரீடம். கொண்கன் - நாயகன். காண்பான் - காணும்பொருட்டு. குழுவுகின்ற - கூடுகின்ற. அமரரின் - தேவர்களைப்போலவே. அரச வெள்ளம் - அரசர் கூட்டம்.

38. குவளையின் எழில் - நீலோற்பல மலரின் அழகு. திவளும் அஞ்சனம் - எடுத்துக்காட்டும் மை. என்று ஏய்ந்த - என்ற பெயரோடமைந்த. தவள - வெண்மையான. ஒண் - பிரகாசமான. மதி - சந்திரன்; இங்கே பெண்களதுமுகம். நல்லார் - பெண்கள். ஆடும் தோகை - தோகையை விரித்தாடும் மயில். தொக்கார் - கூடினார்.

39. ஒரு தேர்த்திருவிழாவுக்குக்கூட்டம்தொகுதி தொகுதியாக வருவதைப் பார்க்கிறோம். எந்தத் தொகுதியும் ஒரு கணக்குக்கு வராது. ஆனாலும் ஜனங்கள், இந்தத் தொகுதி பெரிது, அந்தத் தொகுதி பெரிது என்று சொல்லிக்கொண்டே இருப்பார்கள். அயோத்தியிலுள்ள ஜனங்களும் நம்மைப் போன்றவர்கள் தான் :

வேந்தரே பெரி(து)என்பா ரும்,
 வீரரே பெரி(து)என்பா ரும்,
மாந்தரே பெரி(து)என்பா ரும்,
 மகளிரே பெரி(து)என்பா ரும்,
போந்ததே பெரி(து)என்பா ரும்,
 புகுவதே பெரி(து)என்பா ரும்,
தேர்ந்ததே தேரின்அல் லால்
 யாவரே தெரியக்கண் டார்? கஙஅ

40. தெருவுகள் தோறும் இந்த விதமாகக் கூட்டம் வந்தும் போய்க்கொண்டும் இருக்க, அரண்மனை ஆசார வாசலுக்கு வசிஷ்டர் வருகிறார்: சகல விதமான மங்கலப் பொருள்களோடும் வருகிறார்.

---

39. பெரிது - எண்ணிக்கையால் மிகுதி. வீரர் - சேனையைச் சேர்ந்தவர். மாந்தர் - சாமானிய ஆடவர். போந்ததே - ஒரு இடத்தைவிட்டு அகன்றவரே. தேர்ந்ததே - மனசுக்குத் தோன்றியதே. தெரியக் கண்டார் - எண்ணிப்பார்த்துத் தெரிந்துகொண்டவர்கள்.

ஆயதோர் அமைதியின் கண்,
ஐயனை மகுடம்சூட் டற்(கு)

ஏயும்மங் கலங்களா ன
யாவையும் இயையக்கொண் டு,

தூயநான் மறைகள்வே த
பாரகர் சொல்லத்,தொல் லை

வாயில்கள் நெருக்கம்நீங் க,
மாதவக் கிழவன்வந் தான். ௩௯

41. கங்கைத் தீர்த்தம் முதல் கன்னியாகுமரித் தீர்த்தம்வரை யுள்ள தீர்த்தங்கள் எல்லாம் பொற் குடங்களில் நிறைத்துவைத்தார் வசிஷ்டர். ஓமத்துக்கு வேண்டிய பலவகைச் சமித்துக்களும் தயாராய் இருக் கின்றன.

கஙகையே முதலவா ய
கன்னியீ ருனதீர்த் த

மங்கலப் புனலும்,நா லு
வாரியின் நீரும்,பூ ரித்(து),

40. ஆயதோர் அமைதியின் கண் - நகரம் அந்த நிலைமையிலிருக்க. ஐயனை-ராமனை. ஏயும்-அவசியமான. இயையக்கொண்டு - சேர்த்துக்கொண்டு. தொல்லை வாயில்கள்-பூர்வமான ஆசார வாசல்களிலே. நெருக்கம் நீங்க - நெருங்கிநின்ற ஜனங்கள் விலகி இடம்விட.

41. கன்னி - கன்னியாகுமரி. வாரி - சமுத்திரம். பூரித்து - நிறைத்து.

அங்கியின் வினையிற்(கு)ஏற் ற
யாவையும் அமைத்து,வீ ரச்
சிங்கஆ தனமும்வைத் துச்,
செய்வன பிறவுஞ்செய் தான். கசO

42. சோதிடம் வல்லார், முகூர்த்தம் நெருங்கி விட்டது என்று சொன்னார்கள் : வசிஷ்டரும், தசரத சக்கரவர்த்தி உடனே வரவேண்டியதுதான் என்றார்.

கணித நூல் உணர்ந்தமாந் தர்
காலம்வந்(து) அடுத்ததென் னப்,
பிணியற நோற்றுநின் ற
பெரியவன், 'விரைவின்ஏ கி
மணிமுடி வேந்தன்தன் னை
வல்லையில் கொணர்தி'என் ன,
பணிதலை நின்றகா தல்
சுமந்திரன் பரிவில்சென் றான். கசக

41. அங்கியின் வினை - அக்கினி வளர்ப்பதற்கான ஓமக்கிரியை. வீர - வீர பாவம் அமையும்படி செதுக்கிய. சிங்க ஆதனம் - சிம்மாசனம்.

42. கணிதநூல் - சோதிட சாஸ்திரம். அடுத்தது - நெருங்கிவிட்டது. பிணி அற நோற்ற-பிறவியால் வரும் துன்பங்களையெல்லாம் மனசைவிட்டு நோன்பினால் நீக்கிய. பெரியவன் - வசிஷ்டர். வல்லையில் கொணர்தி - சீக்கிரமாக அழைத்துவா. பணிதலை நின்ற - செய்யவேண்டிய காரியத்தைச் செய்யத் தயாராய் நின்ற. காதல் சுமந்திரன் - மிக்க ராஜபக்தியோடு கூடிய சுமந்திரன் என்னும் தேர்ப்பாகன். பரிவில் - ஆசையோடு.

43. சுமந்திரன் தசரதனிருக்கும் மாளிகைக்குச் சென்றான். அங்கே அவன் இல்லை. அப்படியே கைகேசியின் மாளிகைக்குப் போகிறான் :

விண்தொட நிவந்தகோ யில்
வேந்தர்தம் வேந்தன்தனைக்
கண்டிலன் ; வினவக்கேட் டான் ;
கைகயன் கோயில்நண் ணித்,
தொண்டைவாய் மடந்தைமா ரில்ச்
சொல்ல,மற் றவரும்சொல் லப்,
பெண்டிரில்க் கூற்றம்அன் னாள்
'பிள்ளையைக் கொணர்க'என் றாள். கசஉ

44. ராமனைக் கூட்டிவரச் சொல்லிவிட்டாள் கைகேசி, என்ற மாத்திரத்தில், சுமந்தரனுக்குச் சந்தோஷம் பொங்கிவிட்டது.

---

43. விண்தொட நிவந்த கோயில் - ஆகாயத்தைத் தொடும்படி நிமிர்ந்த மாளிகையில். வேந்தர் தம் வேந்தன் - ராஜாதி ராஜன். வினவ - விசாரிக்க. தொண்டை- தொண்டைப் பூவுக்குச் சமானமாகச் சிவந்த. மடந்தைமாரில் - பணிப்பெண்களிடம். பெண்டிரில் கூற்றம் அன்னாள் - பெண்களுக்குள் எமன் போன்றவள். பிள்ளையை - ராமனை. குறிப்பு : இந்தச் செய்யுளில் வாக்கியங்கள் விட்டுவிட்டு நிற்பது துரித பாவத்தைக் காட்டுகிறது : சுமந்திரனுக்கு அவ்வளவு ஆத்திரம் என்பதாக.

என்றனள், என்னக்,கேட் டான்
  எழுந்தபே ருவகைபொங் க,

பொன்திணி மாடவீ தி
  பொருக்கென நீங்கிப்புக் கான்,

தன்திரு வுள்ளத்துள் ளே
  தன்னையே நினையும்மற் றக்

குன்றிவர் தோளினு னைத்
  தொழுதுவாய் புதைத்துக்கூ றும். ௪௪

45. சுமந்திரன் சொல்லுகிறான்: 'அரசர்கள் முனிவர்கள் எல்லோரும் உன் தந்தையைப் போலவே ஒரே ஆசையோடு உன்னை எதிர்பார்த்துநிற்கிறார்கள்.'

---

44. என்றனள் என்ன - இப்படிச் சொன்னாள் என்று பணிப்பெண்கள் சொல்ல. பொன் திணி - தங்க ரேக்குகள் வைத்து அலங்கரித்த. மாட - மாளிகை பல அமைந்துள்ள. புக்கான் - ராமன் இருந்த இடத்திற்குப் போய். உண்மையான தியானம் என்றால், 'நான்' என்பது ஒன்றில்லை, நான் என்பதே கடவுளின் ஒரு விளையாட்டுத் தான் என்று மனசை நிறுத்துவது. ஞானிகள் கடவுளே இதயத்தில் இருக்கிறான் என்று நினைப்பார்கள். ராமன் இந்த நிலையில், அதாவது உள்ளத்தில் உள்ள கடவுளைத் தியானித்துக்கொண்டிருக்கிறான். இதைக் குறித்துத்தான் கம்பர், 'தன்திரு வுள்ளத் துள்ளே தன்னையே நினையும்' ராமன் என்றார். குன்று இவர் - குன்றுபோன்ற. வாய் புதைத்து - மரியாதையாக வாயைப் பொத்திக்கொண்டு.

'கொற்றவர், முனிவர், மற் றும்
குவலயத் துள்ளார், உன் னைப்

பெற்றவன் தன்னைப்போ லப்
பெரும்பரி (வு) இயற்றிநின் ருர்,

சிற்றவை தானும்ஆங் கே
கொணர்கெனச் செப்பினுள், அப்

பொற்றட மகுடம்சூ டப்
போதுதி விரைவின்'என் ருன். ௧௪௪

46. ராமன் விஷ்ணுமூர்த்தியை வணங்கிவிட்டுத் தேரின்மேல் ஏறி உட்காருகிருன்:

ஐயனும் அச்சொற்கே ளா,
ஆயிர மௌலியா னைக்

கைதொழு(து), அரசவெள் ளம்
கடல்எனத் தொடர்ந்துசுற் றத்,

---

45. கொற்றவர் - அரசர். குவலயத்துள்ள - உலகத்திலுள்ள எல்லோருமே. பெரும் பரிவு இயற்றி நின்ருர் - மிக்க ஆசையோடு எதிர்பார்த்து நிற்கிருர்கள். சிற்றவை - சிற்றன்னை. கொணர்க என - அழைத்து வா என்று. பொன்தட மகுடம் - பொன்னுல் செய்த உயர்ந்த கிரீடம். போதுதி - வருவாயாக.

46. ஐயனும் - ராமனும். கேளா - கேட்டு. ஆயிரம் மௌலியானை - ஆயிரம் கிரீடம் தரித்த விஷ்ணு மூர்த்தியை.

தெய்வகீ தங்கள்பா டத்
தேவரும் மகிழ்ந்துவாழ்த் தத்
தையலார் இரைத்துநோக் கத்
தார்அணி தேரில்ச்சென் ருன். கசரு

47. உயிர் என்கிற தத்துவமானது ஒவ்வொருவர் உடலுக்குள்ளும் காணமுடியாதபடி நின்று, உடலுக்குப் பாதுகாப்பையும் ஆனந்தத்தையும் அளிக்கிறது. ஆனால் தேரில் ராமனைப் பார்த்த மாத்திரத்தில், அவனுடைய அழகில் ஈடுபட்ட பெண்களுக்கு, உயிரானது எல்லோருக்கும் பொதுவாக ஒன்றுதான் என்று சொல்லும்படி திரண்டு, உடல்களைவிட்டு வெளியே நிற்பதுபோலத் தோன்றுகிறது. அவ்வளவு ஈடுபாடு ராமனுடைய அழகில்!

திருமணி மகுடஞ்சூ டச்
சேவகன் செல்கின்ருன் என்(று)
ஒருவரின் ஒருவர்முந் தக்,
காதலோ(டு) உவகைஉந் த,
இருகையும் இரைத்துமொய்த் தார்,—
இன்னுயிர் யார்க்கும்ஒன் ருய்
பொருவரும் தேரில்ச்செல் லப்
புறத்திடைக் கண்டார்போல் வார். கசகூ

---

46. இரைத்து : தோழிகளோடு கோலாகலமாய்ப் பேசிக் கொண்டிருப்பதால் பேரிரைச்சல். தார் அணி - மாலைகள் தொங்கவிட்ட. தேரில் சென்ருன் - தேரில் ஏறி உட்கார்ந்தான்.

47. சேவகன் - வீரனுகிய ராமன். உந்த - தள்ள. இருகையும் - இரண்டு பக்கத்திலும். இரைத்து - இரைச்சல் செய்துகொண்டு. இன்னுயிர் - உடலுக்கு இன்பம் செய்யும் உயிர்த் தத்துவம். பொருவரும் - தனியாக அழகு வாய்ந்த. புறத்திடை - ஒளிந்து கொண்டிருக்கிற உடலைவிட்டு வெளியே ஸ்தூலமாக.

48. பெண்கள், ராமன் தேரில்வருவதை இவ்வாறு அனுபவிக்கிறார்கள். வயது முதிர்ந்த ஆடவர்கள் எப்படி அனுபவிக்கிறார்களென்பதைப் பார்க்கலாம். அவர்களுக்கு, ராமன் திருமாலின் அவதாரம் என்றே தோன்றுகிறது. ஆனாலும், தங்கள் ஆர்வத்தை ஆசிமூலமாகவே தெரிவிக்கிறார்கள்.

உய்ந்த(து)இவ் வுலகம்என் பார்,
ஊழிகாண் கிற்பாய்என் பார்,
மைந்தநீ கோடிஎங் கள்
வாழ்க்கைநாள் யாவும்என் பார்,
ஐந்தவித்(து) அரிதிற்செய் த
தவம்உனக்(கு) ஆகஎன் பார்
பைந்துழாய்த் தெரியலாய்க் கே
நல்வினை பயக்கஎன் பார். கசஎ

49. ராமனது கண், தனியான அருளைக் காட்டுவதாய் இருக்கிறது. அதை ஒத்திருக்கத் தாமரை என்ன தவந்தான் செய்ததோ! மேனியை ஒத்திருக்க நீலமேகம் என்ன தவம் செய்ததோ! என்று வியந்தவண்ணமாய் இருக்கிறார்கள்.

---

48. உய்ந்தது - மேலான நிலையை அடையப் போகிறது. ஊழி காண்கிற்பாய் - நீடூழி வாழ்வாயாக. கோடி - கொள்ளுதி; ஏற்றுக்கொள்வாயாக. ஐந்தவித்து - ஐம்புலன்களையும் அடக்கி. பைந்துழாய் - துளசி. தெரியலாய்க்கே - மாலையை அணிந்த திருமாலாகிய உனக்கே. நல்வினை பயக்க - நல்ல காரியங்கள் உண்டாவதாக.

உயரருள் ஓண்கண் ஒக் கும்
தாமரை, நிறத்தைஒக் கும்
புயல்பொழி மேகம்,என்ன
புண்ணியம் செய்தஎன் பார் ;
செயலரும் தவங்கள்செய்(து) இச்
செம்மலைத் தந்தசெல் வத்
தயரதற்(கு) என்னகைம் மா(று)
உடையம்யாம் தக்க(து)என் பார். கசஅ

50. இளவரசனாக இருக்கும்போதே ராமனுடைய பரிவும் கருணையும் குடிகள் மனசைக் கொள்ளை கொண்டன. அந்தக் கருணையிலேயே ஈடுபட்டு, அதையே பலவாறாகப் பாராட்டிப் பேசுகிறார்கள்.

வாரணம் அரற்றவந் து
கராவுயிர் மாற்றும்நே மி
நாரணன் ஒக்கும்இந் த
நம்பிதன் கருணைஎன் பார் ;
ஆரணம் அறிதல்தேற் றா
ஐயனை அனுகிநோக் கிக்
காரணம் இன்றியே யும்
கண்கள்நீர் கலுழநிற் பார். கசகூ

49. உயரருள் - எங்கும் கிடையாத கருணை. புயல் - மழை. குறிப்பு : உள்ளத்தில் உள்ள அன்பை, செய்யுள், பாவத்தினால் அருமையாய்க் காட்டுகிறது.

50. வாரணம் - கஜேந்திரனாகிய யானை. அரற்ற - ஓலமிட. கரா - முதலை. உயிர் மாற்றும் - உயிரை வாங்கும். நேமி - சக்கிராயுதம். ஆரணம் - வேதம். உடலும் உயிரும் ஈடுபாட்டினால் கரைகின்றன, கண்ணீர் தானாகப் பொழிகிறது ; இதற்குக் காரணம் சொல்ல முடியாது தானே ! கலுழ - பொழிய.

51. ஏதோ பூர்வத்தில் சகரர்கள் என்ற வீரர்கள் சமுத்திரத்தையே தோண்டினார்களாம். பகீரதன் வானத்திலிருந்த கங்கையையே பூமிக்குக் கொண்டு வந்தானாம். ககுத்தன், முசுகுந்தன் என்ற வீரர்கள் வானவர்பொருட்டு அசுரர்களோடு போர்செய்து, வெற்றிகொண்டார்களாம். இவைகளைப்பற்றி யார் பேசுகிறார்கள்? எல்லாம் பழங்கதையாகத்தானே போய்விட்டது? ராமனைப்பற்றிப் பேச நேர்ந்த இப்போதுதான், மேலே சொன்ன மூதாதையர்களின் சரித்திரத்தைக் கொஞ்சம் புரட்டிப் பார்க்கிறோம்.

ஆர்கலி அகழ்ந்தோர்,கங் கை
அவனியில்க் கொணர்ந்தோர், முந் தை
போர்கெழு புலவர்க்(கு)ஆ கி
அசுரரைப் பொருதுவென் றோர்,
பேர்கெழு சிறப்பின்வந் த
பெரும்புகழ் நிற்ப(து),ஐ யன்
தார்கெழு திரள்தோள்தந் த
புகழினைத் தழுவிஎன் பார். கரு௦

52. ராமன் ஏறி உட்கார்ந்திருந்த தேரைச் சுற்றிநின்ற பலரும் இப்படியெல்லாம் பாராட்டினார்கள், வாழ்த்தினார்கள்; இப்போது தேர் ஓடுகிறது.

---

51. ஆர்கலி-சமுத்திரத்தை. அகழ்ந்தோர்-தோண்டியவர். அவனியில் - பூமிக்கு. போர்கெழு - போர் வல்ல. புலவர் - வானவர். பொருது - போர் செய்து. பேர்கெழு - பேர் வாங்கின. ஐயன் - ராமன். தார் கெழு - மாலை தங்குகிற. தோள் தந்த புகழினை - வீரப் பிரதாபத்தை. தழுவி - ஒட்டி.

ராமன் வருகிறான் என்று எதிர்பார்த்த ஜனங்களின் நிலை :

சந்தம்

தன்ன னன தன்ன னன
தன்ன னன தன்ன

மின்பொ ருவு தேரின் மிசை
வீரன் வரு போழ் தில்,
தன்பொ ரு(வு)இல் கன்று தனி
தாவி வரல் கண் டாங்(கு), -
அன்பு ருகு சிந்தை யொடும்
ஆவு ருகு மா போல்,
என்பு ருகி நெஞ்சு ருகி
நஞ்சு ருகி நிற் பார். கருக

53. ராமன் நம்முடைய வாசலில் தேரை நிறுத்தவா போகிறான்? சரி, அதற்கொரு யுக்திபண்ணுவோம் என்று சொல்கிறார்களாம்.

கார்மின் னொ(டு) உ லாய தென
நூல்க ளு(ம்) மார் பன்,
தேர்மி சைநம் வாயில் கடி(து)
ஏகுதல்செய் வா னோ :

---

52. மின் பொருவு - மின்னலை ஒத்த ; பொன்வேலை செய்த. பொருவு இல் - வேறு எதுவும் ஒப்பில்லாத. கண்டாங்கு - கண்டதுபோல. ஆ உருகுமாபோல் - தாய்ப் பசு கனிவதுபோல. நஞ்சு உருகி - நைந்து உருகி. குறிப்பு : செய்யுளின் சந்தம், தேர்க்குதிரைகளின் நடையை ஞாபகம் ஊட்டுகிறது.

53. கார் மின்னொடு உலாயது என - நீல மேகத்தோடு மின்னல் புரண்டுகிடந்ததுபோல. நூல் களும்- பூணூல் பிரகாசிக்கிற. கடிது - வேகமாக.

கூர்க னக ராசி யொடு
கோடி மணி யா லும்
தூர்மின் நெடு வீதி யினை
என் று சொரி வா ரும். கருஉ

54. ராமன் பட்டத்திற்கு வரப்போகிருன்: புது யுகமே பிறக்கப் போகிறது. உலகத்தை யுடையவன் இதுவரை தனிப்பட்ட ஒருவன், அதாவது அரசன் என்றுதான் இருந்தது. இனி, உலகமானது மக்கள் எல்லோருக்குமே பொதுவுடைமையாய்விடும். இதுதான் ராம ராஜ்யம். இதெல்லாம் காரணமாகச் சிற்றரசர்களுக்கு நீதிமுறையில் நிர்வாகம்செய்வது எவ்வளவோ எளிதாகும்.

பாவ மும்அ ருந்து யரும்
வேர்ப றியும் என் பார்,
பூவ லயம் இன் று தனி
அன் று பொது என் பார்,
தேவர் பகை உள்ள னஇவ்
வள்ளல் தெறும் என் பார்,
ஏவல் செயும் மன்னர் தவம்
யாவ துகொல் என் பார். கருங

---

53. கூர் கனக ராசி - உயர்ந்த பொன்னுபரணங்கள். கோடி மணி - புதிய ரத்தினங்கள். தூர்மின் - நிரப்புங்கள்.

54. வேர் பறியும் - அடியோடு தொலையும். பூவலயம் - உலகமாகிய வட்டம். தெறும் - ஒழிப்பான்.

55. இந்த நிலையில் வீதி வழியாகச் சென்று, தசரதன் தங்க நேர்ந்த கைகேசியின் மாளிகைக்குள் போகிறான் ராமன்.

ஆண்(டு)இ ளைய ராய்இ ளைய
  கூற, அடல் வீ ரன்,
தூண்டு புர விப்பொ ருவில்
  சுந்த ரம ணித் தேர்
நீண்ட கொடி மாட நிரை
  வீதி நிறை யப் போய்,
பூண்ட புகழ் மன்னன் உறை
  கோயில் புக லோ டும். கருசு

56. கைகேசியினுடைய மாளிகையின் முன்கட்டுக்கு ராமன் போனான். கைகேசியும் அங்கு வந்து சேர்ந்தாள்.

சந்தம்

தானன தானன தன்
  தானன தானன தன்

வந்தவள் தன்னைச்சென் னி
  மண்ணுற வணங்கி,வாய்த் த
சிந்துரப் பவளச்செவ் வாய்
  செங்கையில் புதைத்து,மற் றைச்

55. ஆண்டு - அவ்விடம். இளையராய் - இப்படிப்பட்டவராய். இளைய - இத்தகைய வார்த்தைகளை. புரவி - குதிரை. பொருவில் - ஒப்பற்ற ; தனியான அழகு வாய்ந்த. கொடி மாடம் நிரை - கொடிகள் கட்டிய மாளிகைகள் வரிசையாய் அமைந்த. மன்னன் - தசரதன். உறை - தங்க நேர்ந்த.

56. சென்னி - தலை

சுந்தரத் தடக்கைதா னை
 மடக்குறத் துவண்டுநின் ருன், -
அந்திவந்(து) அடைந்ததா யைக்
 கண்டஆன் கன்றின்அன் னுன். ௧௫௫

57. அப்படி அருமையும் அன்பும் நிறைந்து நின்ற ராமனைப் பார்த்துக் கைகேசி பேசுகிருள் :

நின்றவன் தன்னைநோக் கி
 இரும்பினல் இயைந்தநெஞ் சில்,
கொன்று(உ)ழல் கூற்றம்என் னும்
 பெயரின்றிக், கொடுமைபூண் டாள்,
'ஒன்று(உ)னக்(கு) உந்தை,மைந் த!
 உரைப்பதாம் உரையுண்(டு)அன் ன(து)
இன்று(உ)னக்(கு) உணர்த்தலா வ(து)
 ஈண்(டு)என்க்(கு) இயைந்த(து)' என் ருள்.

58. தந்தை கட்டளை யிடுகிறது, நீர் அதை எடுத்துச்சொல்லுகிறதென்ருல், அதன்படி நடத்தலைப்

56. தடம் கை - பெரிய கை. தானை மடக்குற - வேட்டியின் முந்தானையை மரியாதையாய் ஒதுக்கி. அந்தி- அந்திநேரம். ஆன் கன்றின் அன்னுன் - பசுவின் கன்றை ஒத்தவனுய்.

57. கொன்று உழல் - உயிர்களைக் கொல்லுதல் பொருட்டே உலகு எங்கும் திரியும். கூற்றம் - எமன். உந்தை - உன் தந்தை. மைந்த - மைந்தனே. ஈண்டு - இப்போது. ஏய்ந்தது - கடமையாய் ஏற்பட்டது.

போல, எனக்கு உயர்ந்த பதவியைக் கொடுக்கக் கூடியது வேறு என்ன இருக்கிறது!

‘ எந்தையே ஏவ, நீ ரே
உரைசெய, இயைவ(து)உண் டேல்,
உய்ந்தனன் அடியேன் ; என் னில்
பிறந்தவர் உளரோவா ழி !
வந்த(து)என் தவத்தின்ஆ ய !
வருபயன் மற்றென்(று)உண் டோ !
தந்தையும் தாயு(ம்)நீ ரே :
தலைநின்றேன் பணிமின்’ என் ருன். கருஎ

59. கைகேசி சொல்லப்போவதைச் செய்ய ஒப்புக்கொண்டான் ராமன். அவ்வளவுதான், கைகேசி துணிச்சலோடு சொல்ல ஆரம்பிக்கிருள்.

‘ஆழியான் உலகம்உம் பி
பரதனே ஆள, நீ போய்த், -
தாழிரும் சடைகள்தாங் கி
அமைவரும் தவமேற்கொண் டு

---

58. எந்தை - என் தந்தை. உய்ந்தனன் - மோட்ச பதவிக்குச் சமானமான பாக்கியம் கிடைத்துவிட்டது. என்னில் : என்னைப்போல் பாக்கியசாலிகளாக. உளரோ வாழி - உண்டோ, அடடா! தவத்தினுய - தவத்தினுல் ஏற்படக்கூடிய காரியம். தலைநின்றேன் - கட்டளையைச் செய்ய ஒப்புக்கொள்கிறேன். பணிமின் - கட்டளையிட வேண்டும்.

59. ஆழியான் - தசரத சக்கரவர்த்தியினுடைய. உம்பி - உன் தம்பி.

வாழ்வுறும் முனிவரோ டு
வாழ்ந்து,நல் நதிகள்ஆ டி,
ஏ ழிரண்(டு) ஆண்டில்வா, என்(று)
இயம்பினன்அரசன் 'என் ருள். கருஅ

60. இப்படிச் சொன்னளோ இல்லையோ, ராமனுக்கு இல்லாத சந்தோஷம் வந்துவிட்டது. அவ்வளவு இவ்வளவு என்றில்லாதபடி உள்ளன்போடு தன்னை வளர்த்தெடுத்த கைகேசிக்கு, கைம்மாறு என்னதான் செய்யக்கூடும், என்று எண்ணிக்கொண்டிருந்தான் ராமன். இப்போது அவளுக்குத் திருப்தியான காரியத்தைச் செய்யச் சந்தர்ப்பம் கிடைத்துவிட்டதல்லவா? ராமனுடைய முகம் எப்பொழுதுமே அன்போடும் ஆனந்தத்தோடும் மலர்ந்திருக்கும். இந்தச் சந்தர்ப்பத்திலோ அவனுடைய முகமலர்ச்சியைப்பற்றி என்ன சொல்லுகிறது!

இப்பொழு(து) எம்மனோ ரால்
இயம்புதற்(கு) எளிதோ, யார்க் கும்
செப்பரும் குணத்திரா மன்
திருமுகச் செவ்விநோக் கி;—
ஒப்பதே முன்பு, மற்(று) அவ்
வாசகம் உணர்ந்தபின் னர், -
அப்பொழு(து) அலர்ந்தசெந் தா -
மரையினை வென்ற(து)அம் மா! கருக

59. ஏழிரண்டு ஆண்டு - பதினலு வருஷம்.

60. எம்மனோர்-என்போலிய கவிஞர். இயம்புதற்கு- வருணிப்பதற்கு. செவ்வி - அழகை. முகம் தாமரையை ஒத்திருக்கும்; ஆனல் இப்போதோ, அப்பொழுதே மலர்ந்த தாமரையின் அழகை வென்றுவிட்டது.

61. சக்கரவர்த்தியே கட்டளையிடவில்லை என்ருல் என்ன, உம் கட்டளை என்று இருந்தால் போதாதா எனக்கு, என்று, உண்மையான மனப்பாங்கோடு பேசுகிருன் ராமன்.

'மன்னவன் பணியன்ருகில்
உம்பணி மறுப்பனே: என்
பின்னவன் பெற்றசெல்வம்
அடியனேன் பெற்ற(து)அன்ருே!—
என்இனி உறுதிஅப் பால்,
இப்பணி தலைமேற்கொண் டேன்,
இன்னினி யேயான்கா னம்
ஏகின்றேன், விடையும்கொண் டேன்.' கசு0

---

61. மன்னவன் - சக்கரவர்த்தி. பணி - கட்டளை. பின்னவன் - தம்பியாகிய பரதன். என் இனி உறுதி அப்பால் - இதற்கு மேலான பாக்கியம் வேறு என்ன இனிமேல். என் - என்ன. இன்னினியே - இந்த க்ஷணத்திலேயே.

## 5. நகர் நீங்கு படலம்

1. கைகேசி ராமனைக் கூப்பிட்டு விட்டாள். ராமனும் வந்தான். நீ காட்டுக்குப் போகவேண்டும் என்று எதிர்பாராதபடி சொன்னாள். ராமன் மிக்க திருப்தியோடு, இப்போதே போகிறேன் என்று சொல்லி அவளை அடிபணிந்தான். தந்தையைப் பார்த்து விடைபெற்றுக் கொள்ளவேண்டுமென்றுகூட எண்ணவில்லை. உள்க்கட்டில் தந்தை இருந்தான் என்பதுதான் தெரியும். அந்தத் திசையைப் பார்த்துக் கை தொழுதுவிட்டு வெளியே போகிறான்.

என்றுகொண்(டு) இனையகூ றி
அடியிணை இறைஞ்சி,மீட் டும்
தன்துணைத் தாதைபா தத்(து)
அத்திசை நோக்கித்தாழ்ந் து, -
பொன்திணி போதினா ளும்
பூமியும் புலம்பிநை யக்,
குன்றினும் உயர்ந்ததோ ளான்
கோசலை கோயில்புக் கான். கசுக

1. என்று கொண்டு - மேலே சொன்ன மனப்பாங் கோடு. இனைய - இந்தவிதமாக. இறைஞ்சி - பணிந்து. தன் துணை - தனக்கு எல்லாவிதத்திலும் பாதுகாப்பா யுள்ள. பொன் திணி போதினாள் - அழகிய தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கும் லட்சுமி தேவி. பூமி - பூமா தேவி. லட்சுமிதேவியும், பூமாதேவியும் வருந்தினார்கள்

2. கோசலையின் மாளிகைக்கு, ராமன் போனான். அவள் என்ன எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்: சக்கிரவர்த்திக்கோலத்தில் ராமன் அழகாய் வருவான்; இரண்டு பக்கத்திலும் வெண்சாமரை வீசிக்கொண்டிருப்பார்கள்; வெண்கொற்றக்குடை மேலே பிடித்திருக்கும்; தலையில் கிரீடம் பளபளவென்று பிரகாசித்துக்கொண்டிருக்கும். இப்படியெல்லாம் பாவனை செய்துகொண்டிருந்த தாயின் கண்ணுக்கு என்ன தெரிகிறது?

குழைக்கின்ற கவரியின்றிக்,
கொற்றவெண் குடையுமின்றி,

இழைக்கின்ற விதிமுன்செல்லத்,
தருமம்பின் இரங்கிஏங்க,

மழைக் குன்றம் அனையான்மௌலி
கவித்தனன் வரும்என்(று)என்று

தழைக்கின்ற வுள்ளத்(து)அன்னாள்
முன்,ஒரு தமியன்சென்றான். கசுஉ

---

என்றால், அராஜகம் ஏற்பட்டுவிடும், அதனால் செல்வப் பாதுகாப்பும் பயிர்த்தொழில் பாதுகாப்பும் இல்லாமல் போய்விடும், என்று கம்பர் வருந்துகிறார்.

2. கவரி-வெண்சாமரை. கொற்ற - ராஜரீகத்துக்கு உரிய. இழைக்கின்ற விதி - இப்படியெல்லாம் கொடுமை ஏற்படுவதற்குக் காரணமான விதி. மழைக் குன்றம் - மேகங் கவிந்த மலை. மௌலி கவித்தனன் - கிரீடத்தைச் சூடிக்கொண்டு. ஒரு தமியன் - பரிவாரம் யாதும் இன்றித் தன்னந் தனியனாக.

3. கோசலை பார்த்தாள்: தலையில், கிரீடம் இல்லை; மங்களஸ்நானம்செய்து தலையும் நனைந்திருக்க வேண்டும், அதுவுமில்லை; சந்தேகம் உண்டாய் விட்டது.

புனைந்திலன் மௌலி,குஞ் சி
மஞ்சனப் புனிதநீ ரால்
நனைந்திலன், என்கொல்என் னும்
ஐயத்தாள் நளினபா தம்
வனைந்தபொற் கழற்கால்வீ ரன்
வணங்கலும், குழைந்துவாழ்த் தி,
'நினைந்த(து)என், இடையூறுண் டோ?
நெடுமுடி புனைதற்(கு)'என் றாள். கசுரு

4. கோசலை என்ன இடையூறு உண்டாயது என்று கேட்டதற்கு, ராமன் பதில் சொல்லுகிறான்:

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

மங்கை அம்மொழி
கூறலும், மானவன்
செங்கை கூப்பி,' நின்
காதல்த் திருமகன்

---

3. குஞ்சி - தலைமுடி. மஞ்சனம் - மங்களநீராட்டு. என்கொல் - என்ன காரணம். நளின பாதம் - தாமரை போன்ற பாதம். குழைந்து - அருமையோடு.

4. மங்கை - கோசலை. மானவன் - உயர்ந்த கீர்த்தி யோடு கூடிய. காதல் திருமகன் - அன்பிற்குரிய பிள்ளை.

பங்க(ம்) இல்குணத்(து)
எம்பி பரதனே
துங்க மாமுடி
சூடு நின் முன் 'என்முன். கசுச

5. கோசலாதேவி குடும்பத்தை மிக்க ஆர்வத்தோடு மேற்பார்த்து வந்தாள். எல்லோரிடத்திலும் ஒரேவிதமான அன்பு. தனக்குப் பட்டம் இல்லை பரதன் ஆளப்போகிறுன் என்று, ராமன் சொன்ன மாத்திரத்தில், ஒழுங்குக்கு ஏதோ மாறுபட்டதாய் இருக்கிறதே என்ற எண்ணம் முதலில் வந்தது கோசலைக்கு. உடனே அது மனசை விட்டு அகன்றுபோய்விட்டது. காரணம்: பரதனையும் தன் பிள்ளையாகப் பாவித்து வந்ததுதான்.

'முறைமை அன்(று)என்ப(து)
ஒன்(று)உண்டு, மும்மையின்
நிறைகுணத்தவன்,
நின்னினும் நல்லனுல்,
குறைவி லன்'எனக்
கூறினள், நால்வர்க்கும்
மறுவில் அன்பினில்
வேற்றுமை மாற்றினுள். கசுரு

---

4. பங்கம் இல் - யாதொரு குற்றமும் இல்லாத. துங்க - உயர்ந்த பதவிக்குரிய.

5. முறைமை - வாரிசுக் கிரமம். மும்மையின் நிறை குணத்தவன் : தாமசம், ராஜசம், சாத்விகம்; அதாவது உடல்நலம்பற்றியும், வீரச்செயல்பற்றியும், சமயஞானம் பற்றியும் பரதனை எண்ணினுல், அவனே லக்ஷிய புருஷனுக இருப்பான். நால்வர்க்கும்-ராமன், பரதன், லட்சுமணன், சத்துருக்கன் ஆகிய நால்வர் சம்பந்தமாக. மறுவு இல் - யாதொரு குற்றமும் இல்லாத.

6. மேலும், சக்கரவர்த்தியின் கட்டளைக்கு மாருக ஒன்றும் செய்யக்கூடாது என்று சொல்லு கிருள்.

என்று, பின்னரும்,
 ‘மன்னவன் ஏவிய(து)
அன்(று)என ஞமை
 மகனே உனக்(கு)அறன் :
நன்று நும்பிக்கு
 நானிலம் நீகொடுத்(து),
ஓன்றி வாழுதி
 ஊழிபல’ என்ருள். கசுசு

7. தனக்குப் பட்டமாகாததுபற்றி ரொம்பக் கஷ்டப்பட்டுவிடுவாள் கோசலை என்று எண்ணி யிருந்தான் ராமன். அவளுக்கு அதனுல் யாதொரு கஷ்டமும் இல்லை என்று தெரிந்தவுடன் அவனுக்கு ரொம்பத் திருப்தி உண்டாய்விட்டது.

தாயு ரைத்தசொல்
 கேட்டுத்த ழைக்கின்ற
தூய சிந்தைஅத்
 தோம்இல்கு ணத்தினுன்,

---

6. ஏவியது அன்று எனுமை - அரசன் இட்ட கட்டளை நியாயம் அல்ல் என்று சொல்லாமல் கீழ்ப் படிந்து நடத்தல். நன்று - மனப்பூர்வமாக. நும்பிக்கு - உன் தம்பிக்கு. நானிலம் - ராஜ்யத்தை. ஒன்றி - ஒற்றுமையாக. வாழுதி - வாழ்வாயாக. ஊழி - நீண்டகாலம்.

7. தழைக்கின்ற - மன எழுச்சி கொண்ட. தோம் இல் - குற்றமில்லாத.

'நாய கன்எனை
நன்னெறி உய்ப்பதற்(கு)
ஏய துண்(டு)ஓர்
பணி'என்(று) இயம்பினுன். கசுஎ

8. 'அப்படி ஏவிய கட்டளை என்னது அப்பா?' என்று கேட்கிருள் கோசலை.

'ஈண்டு ரைத்த
பணிஎன்னை' என்றவட்(கு)
'ஆண்(டு)ஓர் ஏழிஞே(டு)
ஏழ்,அகன் கானிடை
மாண்ட மாதவ -
ரோடுடன் வைகிப், பின்
மீண்டு நீவரல்
வேண்டும்என் றுன்'என்றுன். கசுஅ

9. இந்த வார்த்தை கோசலை காதில் அனல் போல் விழுந்தது.

ஆங்(கு)அவ் வாசகம்
என்னும்அ னல்,குழை
தூங்கு தன்செவி -
யில்த்தொட ராமுனம்,

---

7. நாயகன் - சக்கரவர்த்தி. நன்னெறி உய்ப்பதற்கு - நல்ல மார்க்கத்தில் செலுத்துவதற்கு. ஏயது - ஏவியது. பணி - கட்டளை.

8. ஈண்டு - இப்படியாக. என்னை - யாதோ. ஆண்டு ஏழிஞேடு ஏழு - பதினுலு வருஷம். அகன் - விசாலமான ; நகரத்தைப்போல் ஒடுக்கமாக இல்லாத. மாண்ட - மாட்சிமை தங்கிய.

9. குழை தூங்கு-குழையாகிற ஆபரணம் தொங்குகிற. தொடரா முனம் - பட்டதோ இல்லையோ.

ஏங்கி னாள்,இளைத் -
தாள்,திகைத் தாள்,மனம்
வீங்கி னாள்,விம்மி
னாள்,விழுந் தாளரோ. கக௯

10. தாயின் உள்ளத்திற்குச் சகிக்க முடியவில்லை எல்லாம் ஏதோ வஞ்சிக்கவந்த காரியம் என்று எண்ணுகிறாள்.

‘ வஞ்ச மோ,மக -
னே ! உனை மாநிலம்
தஞ்ச மாகநீ
தாங்(கு)என்ற வாசகம் ?
நஞ்ச மோ,இனி
நானுயிர் வாழ்வெனோ,
அஞ்சும் அஞ்சும்
என்ஆருயிர் அஞ்சுமால்.' கஎ0

---

9. மனம் வீங்கினாள் : மனசில் உண்டான துன்பம், உள்ளிருந்து மனசைத் தள்ளி இடித்து விடுமோ என்ற உணர்ச்சி.

10. தஞ்சமாக - பாதுகாப்புக்காக. நஞ்சமோ - ஏதோ விஷம் தனக்குள் சென்றுவிட்டதாக எண்ணுகிறாள். துயரம் அவளை அவ்வளவு பாடுபடுத்துகிறது !

11. தனக்கு உயிரே போய்விடும் என்று அஞ்சுகிருள். அவள் படுகிறபாட்டைப் பாருங்கள்!

ாகையைக் கையில்நெரிக்
கும்,தன் காதலன்

வைகும், ஆலிலை
அன்னவ யிற்றினை

பெய்வ ளைத்தளி
ரால்ப்பிசை யும்,புகை

வெய்து யிர்க்கும்,
விழுங்கும், புழுங்குமால். களக

12. இவ்வளவு துக்கத்தில் கோசலைக்குச் சிரிப்பும் வருகிறது. அதைப் பைத்தியநிலை என்றுதானே சொல்லவேண்டும்? வேறு என்ன சொல்வது.

---

11. காதலன் - மகன். தாயான காரணத்தால், இந்த நிலையில், ராமன் அப்போது தன் வயிற்றுக்குள்ளேயே கிடக்கிறதாக ஒரு பாவனை வருகிறது. இது தாய்களுக்குரிய இயற்கையான உணர்ச்சி. அதனுல் வயிற்றைப் பிசைகிருள். ஆலிலை அன்ன - ஆலிலைபோன்று மிருதுவான. பெய்வளைத் தளிரால் - வளைகள் நிறைய அணிந்த செந்தளிர் போன்ற கையினுல். புகை வெய்துயிர்க்கும்: பெருமூச்சுவிடுவது, புகைபோல் அவ்வளவு வெம்மையாக இருந்தது. விழுங்கும் - ஏதோ துன்பத்தை விழுங்குகிற பாவனையாய் விழுங்கினுள். இது அபூர்வமான உண்மை. புழுங்கும் - அக்கினியிலிருந்த மாதிரி வெதும்புகிருள்.

‘ நன்று மன்னன்
கருணை !’என் றுநகும் ;
நின்ற மைந்தனை
நோக்கி‘நெ டுஞ்சுரத்(து)
என்று போவ(து) ? ’
எனுஎழும்; இன்னுயிர்
பொன்றும் போ(து)உறல்
உற்றது போலுமே. கஎ௨

13. கோசலை உள்ளத்தில் திடீரென்று ஒரு சந்தேகம் பிறக்கிறது : தந்தைக்கு விரோதமாக எதாவது செய்துவிட்டாயோ என்று ராமனைப் பார்த்துக் கேட்கிறாள் :

‘ அன்(பு)இ ழைத்த
மனத்(து)அர சற்குநீ
என்பி ழைத்தனை ?’
என்றுநின்(று) ஏங்குமால் :
முன்(பு)இ ழைத்த
வறுமையின் முற்றினோர்
பொன்பி ழைக்கப்
பொதிர்ந்தனர் போலவே. கஎ௩

12. நன்று - ரொம்ப அழகு ! என - என்று. நகும் - சிரிக்கும். நெடுஞ் சுரத்து - நீண்டு ஒழியாத பாலைவனத்துக்கு, பொன்றும் - நீங்கும். உறல் - ஏற்படும்.

13. அன்பிழைத்த - மனப்பூர்வமாக அன்பு பாராட்டி வந்த. அரசற்கு - அரசனுக்கு. என் பிழைத்தனை - என்ன தவறு செய்தாய். இழைத்த - கஷ்டப்பட்ட. பொன் : வெகுநாளாகத் தேடி வைத்திருந்த பொன். பிழைக்க - காணாமல் போகவும். பொதிர்ந்தனர் - அச்சத்தினால் நடுங்கினவர்.

14. கோசலை மிகவும் பக்தியுள்ளவள். தர்மமே தலைகாக்கும் என்ற நம்பிக்கையுள்ளவள். அவளுக்கு இப்போது, எல்லாம் பிரயோசனமற்றதாய்த் தோன்று கிறது. அலறுகிறாள்.

‘ அறம்எ னக்கிலை
யோ !’ எனும் ; ஆவிநைந்(து)
‘ இறவி டுத்த(து)என் !
தெய்வதங் காள்’ எனும் ;
பிறஉ ரைப்ப(து)என், -
கன்றுபி ரிந்துழி
கறவை ஒப்பக்
கரைந்துக லங்கினாள். கஎச

15. இப்படிக் கலங்கித் தரையில்க் கிடந்தவளைக் கையினால் எடுத்து, விஷயத்தை விளக்குகிறான் ராமன்.

இத்தி றத்தின்
இடர்உறு வாள்தனைக்,
கைத்த லத்தின்
எடுத்(து)‘அருங் கற்பினோய் !
பொய்த் திறத்தினன்
ஆக்குதி யோபுகல்,
மெய்த்தி றத்துநம்
வேந்தனை நீ’ என்றான். கஎரு

---

14. இற - இறந்துப்போம்படி. விடுத்தது - கைவிட்டது. என் - என்ன காரணம். தெய்வதங்காள் - தெய்வங்களே. கறவை - பால் கறக்கிற பசு ; அதாவது கன்றோடு கூடிய பசு.

15. கற்பினோய் : உறுதியான மனசோடு கணவன் நன்மையைக் கோரி நிற்பவளே. பொய்த்திறத்தினன் - பொய் புகலும் வாழ்க்கையில் நிற்பவன். புகல் - நீயே சொல்.

16. என்றும் இல்லாத பாக்கியம் எனக்கு இப்போது வந்திருக்கிறது. இது உனக்குத் தெரியவில்லையா?

‘ சிறந்த தம்பி
திருவுற, எந்தையை
மறந்தும் பொய்யிலன்
ஆக்கி,வ னத்திடை
உறைந்து கா னும்
உறுதிபெற் றேன்:இதில்
பிறந்து நான்பெறும்
பேறுபி றிதுண்டோ ? ’ ளசு

17. வானம், பூமி, சமுத்திரம் மற்றும் பஞ்ச பூதங்களெல்லாம் கடவுளுடைய ஆணையைவிட்டுச் சிறிதும் விலகாமல் ஒரே நியதியில் ஒழுகுகின்றன. அவை மாறி ஒழுகும் என்று ஏற்பட்டாலுங்கூட, நான் தந்தையின் கட்டளையைவிட்டு எப்படி விலகமுடியும்? இதுவும் உனக்குத் தெரிந்ததுதானே?

‘ விண் ணும் மண் ணும்அவ்
வேலையும், மற் றும்வே(று)
எண் ணும் பூதம்எ
லாம்இறந்(து) ஏகி னும்,

---

16. திரு உற - ராஜ்யத்தை அடைய. எந்தையை - என் தந்தையை.

17. இறந்து - நியதியைக் கடந்து.

அண்ணல் ஏவல்
 மறுக்கஅ டியனேற்(கு)
ஒண்ணு மோ? இதற்(கு)
 உள்அழி யேல்'என்றான். கஎஎ

18. அதற்குக் கோசலை சொல்லுகிறாள் : சரி, உண்மைதான், காட்டுக்குப் போகவேண்டாம் என்று நான் சொல்லவில்லை :

' ஆகின், ஐய !
 அரசன்தன் ஆணையால்,
ஏகல் என்பது
 யானும்உ ரைக்கிலேன் ;
சாக லாஉயிர்
 தாங்கவல் லேனையும்,
போகின், நின்னொடும்
 கொண்டனை போ(க)' என்றாள். கஎஅ

19. கடமை வேறு உனக்கு இருக்கிறது என்று, தாயைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்.

' என்னை நீங்கி
 இடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை
 வற்புறுத் தா(து),உடன்

17. அண்ணல் - சக்கரவர்த்தி. ஒண்ணுமோ - கூடிய காரியமோ. உள் அழியேல் - மனசை இடியும்படி இடம்கொடுக்கலாகாது.

18. ஏகல் - போகவேண்டாம். போகின் - நீ போகின். கொண்டனைபோக - கொண்டு போக.

19. இடர்க்கடல் வைகுறும் - துன்பமாகிய கடலில் விழுந்து கிடக்கும். வற்புறுத்தாது - மன உறுதி அடையச் செய்யாமல்.

துன்னு கானம்
　　தொடரத்து னிவதோ ?
அன்னை யே,அறம்
　　பார்க்கிலை யாம் !'' என்றான். கஎக

20. தம்பி பரதன் அரசாளும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளப் போகிறான். தந்தை ராஜரீக சம்பந்தத்தையெல்லாம் விட்டு, தவஞ்செய்வதில் ஈடுபடுவான் என்பது உனக்குத் தெரியும் அல்லவா ?

'வரிவில் எம்பி இம்
　　மண் அர சாய், அவற்(கு)
உரிமை மா நிலம்
　　உற்றபின், கொற்றவன்
திருவின் நீங்கித்
　　தவஞ்செயும் நாள், உடன்
அருமை நோன்புகள்
　　ஆற்றுதி யாம் அன்றே.' கஅ0

21. உனக்கு ஏன் இவ்வளவு திகைப்பு ? எனக்கு யாருக்கும் இல்லாத உயர்ந்த பதவி அல்லவா

---

19. துன்னு கானம் - மரம் நெருங்கிய காடு.

20. வரிவில் - இறுகக் கட்டிய. எம்பி - என் தம்பி. மண்ணரசாய் - ராஜ்யத்திற்கு அரசனாய். அவற்கு - அவனுக்கு. கொற்றவன் - தசரதன். திருவின் நீங்கி - செல்வத்தையும் அதனால் ஆகிற சௌகரியங்களையும் துறந்து. ஆற்றுதியாம் அன்றே - செய்து கொண்டிருக்க வேண்டும்.

கிடைக்கப் போகிறது? தவஞ் செய்கிறதற்குக் கொடுத்து வைக்கவேண்டாமா ஒருவனுக்கு?

‘ சித்தம் நீதிகைக்
கின்ற(து)என் : தேவரும்

ஒத்த மாதவம்
செய்(து)உயர்ந் தார்அன்றே ;

எத்த னைக்குள
ஆண்டுகள் ? ஈண்(டு)அவை

பத்து நாலும்
பகல்அல்ல வோ ?’ என்றான். கஅக

22. இப்படி யெல்லாம் எத்தனையோ பல விஷயங்களை ராமன் எடுத்துச் சொன்னான் : கோசலைக்கும் மகனுடைய மனப்பாங்கு தெரிந்துவிட்டது.

இத்தி றத்த
எனைப்பல வாசகம்

உய்த்(து) உரைத்த
மகனுரை உட்கொளா,

---

21. எத்தனைக்குள ஆண்டுகள் - அப்படி என்ன ஆண்டுகள் அவ்வளவு அதிகமா ! எல்லாம் பதினாலு நாள் அவ்வளவு தான். பகல் - அறுபது நாழிகை கொண்ட ஒரு நாள்.

22. இத்திறத்த - இந்த விதமான. எனைப்பல - வேறு பல. உய்த்து - மனதில் படும்படி. உட்கொளா - நன்றாய் உணர்ந்து.

எத்தி றத்து(ம்)
இறக்கும்இந் நா(டு)என,
மெய்த்தி றத்துவி -
ளங்கிழை உன்னுவாள். கஅ௨

23. பரதனே சக்கரவர்த்தியாகட்டும் : ராமன் காட்டுக்குப் போகாதபடி தடுத்துவிட வேண்டும்.

'அவனி காவல்
பரதன(து) ஆகுக,
இவன்இஞ் ஞாலம்
இறந்(து),இருங் கானிடைத்
தவன்நில் லாவகை
காப்பென்,த கைவிலாப்
புவனி நாதற்றொ
ழு(து)'என்று போயினள். கஅ௩

24. தசரதனுள்ள அரண்மனை நோக்கி வேகமாய்ப் போகிற கோசலையை அப்படியே தொழுது விட்டு, 'சரி அவள் செய்கிறதைச் செய்யட்டும். இவளையும் இவளுடைய துயரத்தையும் ஆற்றக்கூடியவள்

22. எத்திறத்தும் - எப்படியும். இறக்கும் இந் நாடு என - நாட்டைக் கடந்துபோய் விடுவான் என்று. மெய்த்திறத்து விளங்கிழை - சத்தியத்தையே ஆபரணமாகக் கொண்ட கோசலை. உன்னுவாள் - கருதுவாள்.

23. அவனி காவல் - ராஜ்ய பரிபாலனம். ஞாலம் இறந்து - நாட்டைவிட்டு அகன்று. தவன் நில்லா - தவத்தில் நிற்காதபடி. காப்பென் - தடுப்பேன். தகைவிலா: விஷயத்தை எடுத்துச்சொல்லுவதற்கு வகையான ஆள் இல்லாமல். புவனி நாதன் - சக்கரவர்த்தி.

சிற்றன்னை சுமித்திரைதான்' என்று ராமன் எண்ணுகிறான்.

போகின் றுளைத்தொ -
 ழுதுபு ரவலன்,
ஆக, மற்(று)இவள்
 தன்னையும் ஆற்றிஇச்
சோகம் தீர்ப்பவள்,
 என்றுசு மித்திரை
மேகம் தோய்தனிக்
 கோயிலை மேயினுன். கஅச

25. ராமனை விட்டுப்போன கோசலை, கைகேசியின் அரண்மனைக்குள் போகிருள்.

நடந்த கோசலை,
 கேகய நாட்டிறை
மடந்தை கோயிலை
 எய்தினள் ; மன்னவன்
கிடந்த பார்மிசை
 வீழ்ந்தனள், - கெட்டுயிர்
உடைந்த போழ்தின்
 உடல்விழுந் தென்னவே. கஅரு

26. கோசலை, தசரதன் தரையில் விழுந்து கிடப்பதைப் பார்த்தாள், அப்படியே மூர்ச்சையாளுள். அந்த

---

24. புரவலன் - ராமன். ஆக - செய்கிற முயற்சியைச் செய்யட்டும். சுமித்திரை கோயில் - சுமித்திரையின் அரண்மனை ; அது மேகத்தை அளாவியதுபோல் உன்னதமாயிருந்தது.

25. பார் மிசை - தரையின்மீது.

இடத்தில் என்ன நடந்தது என்பதுபற்றிக் கம்பர் பாடியுள்ள பாடல்கள் விடுபட்டிருக்கின்றன. மறுபடி அவர் ஆரம்பிக்கிற கட்டத்தைப் பார்ப்போம்.

தசரத சக்கரவர்த்தி வாழும் அரண்மனையின் முற்றத்தில், அரசர்களெல்லாம் வந்து முடி சூட்டல் காரணமாகக் காத்திருக்கிறார்கள். கால தாமதம் ஆகிறதற்குக் காரணம் தெரியவில்லை. அங்கே வருகிறார் வசிஷ்டர்.

சந்தம்

தானன தன்னன தன்னன தன்னன

உரைசெய் பெருமை
உயர்தவத்தின் ஓங்கல்,
புரசை மதகளிற்றான்
பொற்கோயில் முன்னர்,
முரசம் முழங்க
முடிசூட்ட மொய்த்தாண்(டு),
அரசர் இனிதிருந்த
நல்லவையன் ஆனான். கஅசு

---

26. உரைசெய் பெருமை - யாவராலும் புகழத்தக்க பெருமை வாய்ந்த. தவத்தின் ஓங்கல் - தவக் குன்று ; வசிஷ்டர். புரசை - யானை நடத்துவதற்குக் கழுத்திலிடும் அலங்காரமான கயிறு. ஆண்டு - அங்கே. நல்லவையன் - அரசர் கூட்டத்திற்குள். ஆனான் - வந்தான்.

சந்தம் : மேலே குறித்தபடி தாளத்தோடு பாட வேண்டும். தாளத்துக்கு இளக்கம் கொடுத்துப் பாடும் போது, சீர் பிரித்தமுறையில் பாடினால் பாவத்தோடு ஒட்டிவிடும்.

27. வசிஷ்டரைப் பார்த்து, 'தாங்கள் இங்கு வருகிறதற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டதா' என்று அரசர்கள் கேட்கிறார்கள்.

வந்த முனியை
முகநோக்கி வாள்வேந்தர்,
'எந்தை புகுதற்கு
இடையூறுண் டாயதோ?
அந்தமில் சோகத்(து)
அழுதகுரல் தான்என்ன?
சிந்தை தெளிந்தோய்!
தெரிஎமக்(கு)இங்(கு)' என்றுரைத்தார்.

28. வசிஷ்டர் பதில் சொல்லுகிறார்.

'கொண்டாள் வரமிரண்டு,
கேகயர்கோன் கொம்(பு),அவட்குத்
தண்டாத செங்கோல்
தயரதனும் தானளித்தான்;
ஒண்தார் முகிலை
வனம் போகென்(று)ஒருப்படுத்தாள்;
எண்தானும் வேறில்லை,
ஈதடுத்த வா(று)' என்றான். கஅஅ

27. எந்தை - எந்தையே; வசிஷ்டரே. அந்தமில் சோகம் - அளவில்லாத சோகம்.

28. கேகயர் கோன் கொம்பு - கைகேசி. தண்டாத - மாறாத. ஒண் தார்முகிலை - அழகிய மாலையணிந்த நீல மேகம் போன்ற ராமனை. ஒருப்படுத்தாள் - சம்மதிக்கச் செய்துவிட்டாள். எண்தானும் வேறில்லை - யோசனை பண்ணுவதற்கு ஒன்றும் தோன்றவில்லை. ஈதடுத்த ஆறு என்றான் - இதுதான் நடந்த விதம்.

29. ஏதோ தசரதன் கட்டளை என்பதாக ஒன்று பிறந்து, அதன்படி பரதன் ராஜ்யம் ஆளுவதென்று ஏற்பட்டிருக்கிறது :

'வேந்தன் பணியினால்
கைகேசி மெய்ப்புதல்வன்
பாந்தள் மிசைக்கிடந்த
பார்அளிப்பான் ஆயினான் ;
ஏந்து தடந்தோள்
இராமன், திருமடந்தை
காந்தன், ஒருமுறையே
காடுறைவான் ஆயினான்.' கஅகூ

30. ராமன் காட்டுக்குப் போகும்படி ஏற்பட்டு விட்டது என்று சொன்ன மாத்திரத்தில் எல்லோரும் மூர்ச்சையாகிக் கீழே விழுகிறார்கள்.

வாரார் முலையாரும்,
மற்றுள்ள மாந்தர்களும்,
ஆராத காதல்
அரசர்களும், அந்தணரும்,
பேராத வாய்மைப்
பெரியோன் உரைசெவியிற்
சாராத முன்னம்
தயரதனைப் போல்வீழ்ந்தார். ககூ0

---

29. பாந்தள் மிசை - ஆதிசேஷன்மேல். அளிப்பான் - காப்பாற்றுவான். திருமடந்தை காந்தன் - சீதையின் நாயகன். ஒரு முறையே - உறுதியாக.

30. ஆராத காதல் - முடிவில்லாத அன்பு. பேராத வாய்மைப் பெரியோன் - உண்மையில் நின்றே பேசுபவரான வசிஷ்டர்.

31. உயிர் என்பதை ஈட்டிகொண்டு குத்தி, தீயில் வெதுப்பினுல் என்ன பாடுபடும் அது! உயிர் அப்படிப் பதைத்ததாம். உடல் பட்ட பாட்டைச் சொல்லவா வேண்டும்?

புண் ணுற்றுத், தீயில்
புகையுற்(று) உயிர்பதைப்ப,
மண் ணுற்(று) அயர்ந்து
மறுகுற்(று), உடம்பெல்லாம்
கண் ணுற்ற வாரி
கலுழ்வுற்ற(து), - அந்நிலையே
விண் ணுற்ற(து), எம்மருங்கும்
விட்டழுத பேரோசை. கசுக

32. பெண்கள் பட்ட கஷ்டத்தை என்னவென்று சொல்வது? ஆபரணங்களைச் சிதறினுர்கள்: மங்கல நாணைக்கூட அறுத்து எறிந்தார்கள். கூந்தல் அப்படியும் இப்படியுமாகப் புரள்கிறது. உல்லாசமாகப் பார்க்கிற பார்வை எல்லாம் போய்க் கோவைப் பழமாகச் சிவந்து போய்விட்டன கண்கள். ஒரு நிலையில் நிற்க முடியாதபடி துள்ளிநின்ற காரணமாகப் பாதங்களும் சிவந்துபோய்விட்டன.

மாதர் அருங்கலமும்
மங்கலமும் சிந்தித், தம்
கோதை புடைபெயரக்,
கூற்றனைய கண்சிவப்பப்,

---

31. கலுழ்வுற்றது - ஒழுகியது. விண்ணுற்றது - வானத்தையே எட்டியது.

32. அருங்கலம் - அரிய ஆபரணம். கோதை கூந்தல். கூற்றனைய - எமன்போன்ற கூர்மையான.

பாத மலர்சிவப்பத்
    தாம்பதைத்துப் பார்சேர்ந்தார் :
ஊதை எறிய
    ஒசிபூங் கொடியொப்பார். கக௨

33. பெண்கள் இவ்வாறெல்லாம் வருந்த, அரசர்கள் என்ன செய்தார்கள் : 'சக்கரவர்த்தியே கொஞ்சமும் தயை தாட்சண்ய மில்லாமல் தர்மத்தைக் கை விட்டுவிட்டான். இனி நமக்கென்ன தருமம் வந்தது ?'

ஆஆ அரசன்
    அருளிலனே யாம் ! என்பார்,
காவா அறத்தைஇனிக்
    கைவிடுவேம் யாம் ! என்று,
தாவாத மன்னர்
    தலைத்தலைவீழ்ந்(து) ஏங்கினர்,—
மாவாதம் சாய்த்த
    மராமரமே போல்கின்றார். கக௩

34. அரசர்கள் இவ்விதமாக மயங்கிக்கீழேவிழுந்தார்கள். தெருவிலுள்ள ஜனங்கள் தங்கள் தங்கள் வீடுகளிலிருந்து அலறுகிறார்கள். 'நிலத்தை யார் உழுவார்கள் ? அராஜகம் ஏற்பட்டுப் பயிர்களை அழித்து

---

32. ஊதை - கடுமையாக வீசும் காற்று. எறிய - மோத. ஒசி - துவளும்.

33. காவா - காவாதபடி. தாவாத மன்னர் - நிலை தவறாத அரசர்கள். தலைத்தலை வீழ்ந்து - ஆங்காங்கு வீழ்ந்து. மாவாதம் - பெரிய புயல்காற்று.

விடுவார்கள். அம்பாரத்தைச் சூறையாடி விடுவார்கள். இதற்கெல்லாம் காரணம், என்ன என்று சொல்லுகிறது? பூமாதேவி பாவம் செய்திருக்கிருள் என்றுதான் சொல்லவேண்டும். நிலத்தின் நிலைமையே இதுவென்ருல், பொன்னேயும் ரத்தினங்களேயும் ஒருவர் வைத்திருக்க முடியுமா? லட்சுமிதேவி செய்த பாவம், பூமாதேவி செய்த பாவத்தைவிடப் பெரிது என்றே சொல்லவேண்டும். இப்படிச் சொல்லிக்கொண்டிருப்பதனிடையில் நம்முடைய நெஞ்சை விதி எப்படி குத்திப் புண்ணுக்குகிறது' என்ற அலறல் வருகிறது.

**ம**ண்செய்த பாவம்
உள(து)என்பார், மாமலர்மேல்ப்
பெண்செய்த பாவம்
அதனில்ப் பெரி(து)என்பார்,
புண்செய்த நெஞ்சை
விதிஎன்பார், பூதலத்தார்
கண்செய்த பாவம்
கடலில்ப் பெரி(து)என்பார். கக௪

35. பரதன் ஆளப் போவதில்லே: ராமனும் திரும்பி வரமாட்டான்: நாம் எல்லோரும் தொலேந்தோம் என்கிருர்கள்.

---

34. மண்: எத்தனேயோ நன்மைகளேச் செய்து கொடுக்கிற பூமாதேவி. மாமலர்மேல் பெண் - லட்சுமி தேவி. விதி: எல்லாவற்றையும் நடத்துகிற ஊழ். பூதலத்தோர் - இந்த உலகத்திலுள்ள நாம்.

ஆளான் பரதன்
அர(சு)என்பார், ஐயன்இனி
மீளான், நமக்கு
விதிகொடிது காண்என்பார்,
கோளாகி வந்தவா
கொற்றமுடி தான்என்பார்,
மாளாத நம்மின்
மனம்வலியார் ஆர் !என்பார். கசரு

36. தசரதன் ஏன் இப்படிச் செய்தான்? கைகேசியின் மேல் ஆசை, அளவுக்கு மிஞ்சிவிட்டது.

ஆதி அரசன்,
அருங்கே கயன்மகள்மேல்
காதல் முதிரக்
கருத்தழிந்தா னும்என்பார் ;
சீதை மணவாளன்
தன்னேடும் தீக்கானம்
போதும், அதுவன்றேல்
புகுதும் எரிஎன்பார். கசசா

35. ஐயன் - ராமன். கோளாகி வந்தவா : நமக்குக் கேடுகாலத்தைக் கொடுக்கும் காலக்கோள் அல்லவா வந்திருக்கிறது. மாளாத - உயிர் நீங்காத. நம்மின் - நம்மைப் போல். மனம் வலியார் - கல்மனசு உடையவர்கள்.

36. போதும் - நாம் போவோம். புகுதும் எரி - அக்கினிப் பிரவேசம் செய்வோம்.

37. 'கோசலைக்கு உயிர் போய்விடும். எங்கே பிழைக்கப் போகிறாள்: ஓ லட்சுமணனே! நீ எங்கே இதைச் சகிக்கப் போகிறாய்?' என்று அலறுகிறார்கள்.

கையால் நிலந்தடவிக்
கண்ணீர் மெழுகுவார்;
உய்யாள்பொற் கோசலைஎன்(று)
ஓவாது வெய்துயிர்ப்பார்;
ஐயா, இளங்கோவே!
ஆற்றுதியோ நீஎன்பார்;
நெய்யார் அழல்உற்ற(து)
உற்றார்அந் நீள்நகரார். கஙஎ

38. தசரதன் தவஞ் செய்கிறதற்கு ஏதோ காட்டுக்குப் போவதாகச் சொன்ன காரியம் எதற்காகத் தெரியுமா? நம்மைக் கொன்று களைய எண்ணியதுதான்.

'நின்று தவம்இயற்றித்
தான்திர நேர்ந்ததோ?
அன்(று),இவ் வுலகத்துள்
ஆருயிராய் வாழ்வாரைக்

37. உய்யாள் - பிழைக்கமாட்டாள். ஓவாது - மறுபடியும் தொடர்ந்து. வெய்துயிர்ப்பார் - பெருமூச்சு விடுவார்கள். ஆற்றுதியோ - பொறுப்பாயோ. நெய்யார் அழல் உற்றது உற்றார் - எரிகிற எண்ணெயில் விழுந்ததுபோலத் துன்புற்றார்.

38. தான் திர - நம்மை விட்டுப் பிரிய. ஆருயிராய்- அரைகுறை உயிராய் இருக்கின்ற.

கொன்று களையக்
குறித்த பொருளன்றோ ?
நன்று வரங்கொடுத்த
நாயகற்கு நன்(று)! 'என்பார். ககஅ

39. கொஞ்சம் உற்றுப் பார்த்தால் அரசர்களுடைய இயற்கை எவ்வளவு கேவலமாக இருக்கிறது!

' என்னே நிருபர்
இயற்கை இருந்தவா!
தன்னேர் இலாத
தலைமகற்குத் தாரணியை
முன்னே கொடுத்து,
முறைதிறம்பத் தம்பிக்குப்
பின்னே கொடுத்தால்ப்
பிழையாதோ மெய்!' என்பார். ககக

40. இந்தப் பாழாய்ப்போன நாட்டைத் தானே கைகேசிக்கு ராமன் கொடுத்தான். அதை அவள் வைத்துக் கொள்ளட்டும். காடு என்பது ஒன்று வாழ்வதற்கு நமக்கு இருக்கத்தானே செய்கிறது?

' பெற்றுடைய மண்அவளுக்(கு)
ஈந்து, பிறந்(து)உலகம்
முற்றுடைய கோவைப்
பிரியாது மொய்த்தீண்டி

---

38. நன்று - ரொம்ப அழகாய் இருக்கிறது !

39. நிருபர் - அரசர். தாரணியை - ராஜ்யத்தை. பிழையாதோ மெய் - சத்தியம் பழுதுபடாதோ.

40. பெற்றுடைய மண் : ஏதோ தசரதன் கொடுத்துப் பெற்ற ராஜ்யம். பிறந்து உலகம் முற்றுடைய கோவை-அவதரித்த காரணத்தினுலேயே உலகம் முழுவதும் உண்மையில் ராமனுக்கு உரித்தாய் இருக்கிறது.

உற்(று)உறைதும் யாரும் :
உறையவே, சில்நாளில்ப்
புற்(று)உடைய கா(டு)எல்லாம்
நாடாகிப் போம்'என்பார். உ00

41. பெண்கள், 'ஐயோ, ராமன் நம்மைப் பிரிந்து போய்விட்டானே! அவன் கண்ணின் அருளையும் அழகையும் இனி எங்கே பார்க்கப் போகிறோம்!' என்று நைகிறார்கள்.

உந்தாது, நெய்வார்த்(து)
உதவாது, கால்எறிய
நந்தா விளக்கின்
நடுங்குகின்ற நங்கைமார், -
'செந்தா மரைத்தடங்கண்
செவ்வி அருள்நோக்கம்
அந்தோ, பிரிதுமோ!
ஆ!விதியே ஓ!'என்பார். உ0க

42. ராமனைக் கைகேசி காட்டுக்கு அனுப்பி விட்டாள் என்பதைக் கேட்ட ஜனங்கள் எப்படியெல்லாமோ வருந்துகிறார்கள். ஆனால், லட்சுமணனுக்கோ

---

40. உற்று உறைதும் - சேர்ந்து வாழ்வோம்.

41. உந்தாது - தூண்டாமல். கால் எறிய - காற்று வீச. நந்தா விளக்கின் - சுடர்குன்றி வருகிற விளக்கைப்போல. செவ்வி அருள் நோக்கம் - அழகாகிய அருட் பார்வை. குறிப்பு : 'ஆ' 'ஓ' என்கிற சப்தங்களினாலே, சோக பாவம் பொங்கித் ததும்புகிறது ; செய்யுள் மிக மிக அருமையான உருவம் பெற்றிருக்கிறது.

ஒரே கோப வெறி பிறந்துவிட்டது. 'சரி, சரி. தனக்கு ராஜ்யத்தைச் சம்பாதித்துக் கொண்டாள். ராமனுக்கு, ஓகோ! வனத்தைக் கொடுத்து விட்டாளாக்கும். இருக்கட்டும்' என்று ஆங்காரத்தோடு எழுந்தான்.

சந்தம்

தானன்ன தன்னன தன்
தன்னன தன்னன தன்

கேட்டான்இ ளையோன்,கி ளர்
ஞாலம்வ ரத்தினு லே
ஈட்டாள்,அ ளித்தாள்வ னம்
தம்முன்இ ராமனுக் கே, -
தீட்டாத வேற்கண்ச்சி று
தாய்என, யாவரா லும்
மூட்டாத காலக்க டைத்
தீயென மூண்டெழுந் தான். ௨0௨

43. இப்படிக் கோபாவேசத்தோடு லட்சுமணன் எழுந்தான். எழுந்து யுத்த சன்னத்தனாகிறான்.

---

42. இளையோன் - லட்சுமணன். கிளர் - விரிவாயுள்ள. ஞாலம் - ராஜ்யம். ஈட்டாள் - சம்பாதித்துக் கொண்டாள். அளித்தாள் வனம் - காட்டைக் கொடுத்து விட்டாள். என்ன கருணை, அடாடா! தம்முன் - தமையன். தீட்டாத வேற்கண் சிறுதாய் - மிக்க கூர்மையான கண்ணை உடையவள்; அதாவது பெரிய சாகசக்காரி என்பது பொருள். குறிப்பு : செய்யுளை ரொம்பச் சவுக்கத்தில் பாடவேண்டும்.

அவனுடைய வாளின் பிடி, ரத்தினங்கள் பதித்துள்ளது. அது பளபளவென்று மின்னுகிறது. அந்த வாளும், பிடியும் நன்ருய்த் தெரியும்படி அணிந்துகொள்ளுகிருன்.

சுற்ருர்ம ணியின்பி டி
வாள்புடை தோன்றஆர்த் து,
வில்த்தாங்கி, வாளிப்பெ ரும்
புட்டில்பு றத்துவீக் கிப்,
பற்ருர்ந்த செம்பொற்க வ-
சம்,பனி மேருஆங் கோர்
புற்ரும்எ னஓங்கி ய
தோளொடு மார்புபோர்த் தான். உ0௩

44. வாளையும் வில்லையும் அணிந்தாளுே இல்லையோ, வீரம் பொங்கிவிட்டது. 'பூமாதேவிக்குப் பாரம் அதிகமாய்ப் போய்விட்டது, அதைத் தீர்க்க வேண்டாமா' என்று குமுறுகிருன்.

---

43. சுற்ருர் மணி - வட்டம் வட்டமாக ரத்தினம் பதித்த. புடை - பக்கத்தில். ஆர்த்து - கட்டி. வாளிப் பெரும்புட்டில் - அம்பு நிறைந்த அம்பருத்தூணி. புறத்து வீக்கி - முதுகிலே கட்டி. பற்று ஆர்ந்த - பூட்டு அமைந்த. செம்பொற் கவசம்-பொன்னிஞல் செய்த போர்க் கவசம். பனி மேரு ஆங்கோர் புற்ரும் என : லட்சுமணனுடைய பருத்த தோளையும் மார்பையும் ஒப்பிட்டால், மேருமலை கூடக் கறையான்புற்று மாதிரிச் சிறுத்துத் தோன்றும். கவசத்தைக்கொண்டு மார்பையும் தோளையும் போர்த்தான்.

'புவிப்பாவை பரங்கெடப்,
போர்உவந் தோரையெல் லாம்
அவிப்பானும், அவித்(து)அவர்
ஆக்கையை அண்டம்முற் றக்
குவிப்பானும், எனக்(கு)ஒரு
கோவினைக் கொற்றமௌலி
கவிப்பானும், நின்றேன்,இது
காக்குநர் காமின்!'என்றான். ௨0௪

45. லட்சுமணன் நிற்கிற இடம் அயோத்திநகரத்தில் ஒருநடுவான இடம். ஊரார் எல்லோரும் சூழ்ந்து விட்டார்கள். அவன்முகம் கோபாவேசத்தோடு யாரும் பயப்படும்படி பிரகாசிக்கிறது. காலையில் சூரியன்மிகப் பெரிதாகத் தோன்றுகிறது. அந்த விசாலமான காலைச் சூரியனிடத்தில் மத்தியானத்து வெயிலின் காந்தி ஏற்பட்டு விட்டால், பார்க்கமுடியுமா? அப்படியிருந்தது, லட்சுமணனுடைய முகம்.

---

44. புவிப்பாவை பரம்கெட - பூமாதேவியின் பாரம் நீங்க. போர் உவந்தோரை - யுத்தம் செய்ய ஆசைப் பட்டவரையெல்லாம். அவிப்பானும் - நிர்மூலம் பண்ணுவதற்காக. ஆக்கையை-உயிரற்ற உடம்புகளை. அண்டம் முற்ற - வான்முகடு நிறையும்படி. குவிப்பானும் - குவிப்பதற்காகவும். எனக்கு ஒரு கோவினை - எனக்குச் சக்கரவர்த்தியாக இருக்கிற ராமனை. கொற்ற மௌலி கவிப்பானும் - ராஜ கிரீடத்தைச் சூட்டுவதற்காகவும். காக்குநர் காமின் - தடுக்கக்கூடியவர் தடுக்கட்டும்.

காலைக்க திரோன், நடு
வுற்றதோர் வெம்மைகாட்டி,

ஞாலத்த வர்சூழ்த ர,
அந்நக ரத்துநாப் பண், -

மாலைச்சி கரத்த னி
மந்தர மேரு,முந் தை

வேலைத்தி ரிகின்ற து
போல்த்திரி கின்றவே லை. ௨0௫

46. கைகேசி செய்த கொடுமையைக் கேட்ட மாத்திரத்தில் சிற்றன்னையாகிய சுமித்திரை மூர்ச்சை போய்விட்டாள். அவளை ராமன் எப்படியெல்லாமோ தேற்றிக்கொண்டிருக்கிறான். அந்த வேளையில் ராமன் காதில் விழுந்தது, தம்பி லட்சுமணனுடைய வில்லின் நாண் ஒலி.

---

45. காலைக் கதிரோன் - விசாலமான வட்டத்தோடு கூடிய காலைச் சூரியன். ஞாலத்தவர் - அயோத்தி நகர மக்கள். சூழ்தர - சூழ. நாப்பண் - நடுவில். மந்தரகிரியாகிய பெரிய பர்வதத்தை நட்டுப் பாற்கடலைக் கடைந்தார்கள். அந்த மந்தரகிரியின் சிகரத்தில் ஒரு பெரியமாலையைச் சூடினால், மாலையும் மலையும் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது, மாலையைச்சூடிக்கொண்டு லட்சுமணன் கோபத்தில் குனித்த குனிப்பு. மந்தர மேரு - மந்தர மலை. முந்தை - பூர்வகாலத்தில். வேலைத் திரிகின்றது - பாற்கடலில் சுற்றுகின்றது. வேலை - வேளை.

வேற்றுக்கொ டியாள்வி ளை -
 வித்தவி னைக்குவிம் மி,
தேற்றத்தெ ளியா(து)அ யர்
 சிற்றவை பால்இருந் தான்:
ஆற்றல்த்து ணைத்தம்பி தன்
 வில்லினின்(று) அண்டகோ ளம்
கீற்றொத்(து)உ டையப்ப டு
 நாண்உரும் ஏறுகேட் டான். ௨0௬

47. லட்சுமணன் ஒரு பெரும் நெருப்பாகக் கனன்றுகொண்டிருக்கிறன். அந்த நெருப்பை அவிக்கத் தகுந்த வகையில் ராமன் தண்மையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வருகிறன்.

வீறுக்கி யபொற்க லன்
 வில்விட, ஆரம்மின் ன,
மாறுத்த ளிச்சொல்த்து ளி
 மாரிவ ழங்கிவந் தான், -

---

46. வேற்றுக் கொடியாள் - மனம் மாறுபட்ட கைகேசி. அயர் - மூர்ச்சைபோன. சிற்றவைபால் - சுமித்திரை பக்கத்தில். ஆற்றல் - சக்திவாய்ந்த. அண்டகோளம் - பேரண்டம். கீற்று ஒத்துஉடைய - கீறுபட்டு உடைந்து போம்படியான. நாண் உரும் ஏறு - நாணைத் தெரிப்பதனல் உண்டாகும் இடிபோன்ற முழக்கம்.

47. வீறுக்கிய - அபூர்வமான வேலைப்பாட்டோடு கூடிய. பொற்கலன் - அழகிய ஆபரணங்கள். வில்விட - கிரணங்களை வீச. ஆரம் மின்ன - கழுத்தில் அணிந்த ஆபரணங்கள் மின்னல்போல் ஒளிவிட. மாறு - மறுக்க முடியாத. சொல் துளி மாரி - சொல்லாகிய நீர்த் துளிகளை. வழங்கி - சொல்லிக்கொண்டு.

கால்தாக்க நிமிர்ந்து, பு -
கைந்து,க னன்றுபொங் கும்
ஆருக்க னல்ஆற்றும் ஓர்
அஞ்சன மேகம்என் ன. உ0எ

48. லட்சுமணனும் மேகத்தைப்போலத் தான் நிற்கிறான்; அதோடு, இடையிடையே மின்னல் வீசிக் கொண்டு உலகத்தையே முடித்துவிட நிற்கும் மேகம் போலவும் தோற்றுகிறான். அப்பேர்ப்பட்ட லட்சுமணனைப் பார்த்து, ராமன் பேசுகிறான்.

மின்னொத்த சீற்றக்க னல்
விட்டுவி ளங்கநின் ற
பொன்ஒத்த மேனிப்பு யல்
ஒத்த,த டக்கையா னை,
'என்அத்த! என்,நீஇ மை
ஓரைமு னிந்திலா தாய்!
சன்னத்த னாகித்த னு
ஏந்துதற்(கு) ஏது?' என் றான். உ0அ

47. கால் தாக்க - காற்று வேகமாய் அடிக்க. ஆருக் கனல் - மேலும் மேலும் வளரும் நெருப்பு. ஆற்றும் - தணிக்கும். அஞ்சன மேகம் அன்ன - நீலமேகம்போல. துளிமாறி வழங்கி வந்தான் : முடிபு.

48. சீற்றக்கனல் - கோபாக்கினி. புயல் - மேகம். தடக்கையானை - வீரனான லட்சுமணனை. என் அத்த - என் அப்பனே! என் - என்ன காரணத்தினால். இமை ஓரை முனிந்திலாதாய் - இமைப்பொழுதுகூடக் கோபம் வராத சாந்த குணமுடையவனே. சன்னத்தன் - போர்க் கோலம் கொண்டவனாய். தனு - வில். ஏது - காரணம்.

49. போர்க்கோலங் கொள்ளுவதற்குக் காரணம் இருக்கத்தான் செய்கிறது என்று, லட்சுமணன் சொல்லுகிறான்.

‘மெய்யைச்சி தைவித்து, நின்
மெய்ம்முறை நீத்த,நெஞ் சம்
மையில்க ரியாள்எ திர்,
நின்னைநல் மௌலிசூட் டல்
செய்யக்க ருதித் ; த டை
செய்குநர் தேவரே னும்,
துய்யைச்சு டுவெங்க னல்
போல்ச்சுடு வான்துணிந் தேன்.’ உ0கூ

50. ராமன் சொல்லுகிறான்: ‘உன்னுடைய ஒழுக்கமெல்லாம் நீதியோடு கலந்த ஒழுக்கமாயிற்றே? ஏன் இந்தக் கோபம் வந்தது?’

இளையான் இதுகூ ற,
இராமன் ‘இ யைந்தநீ தி,
அளையாவ ரும்நல்நெ றி
நின்நெறி யாகும்அன் றே:

---

49. மெய்யைச் சிதைவித்து-சத்தியத்தைக் கெடுத்து. நின் மெய்ம்முறை நீத்த - உனக்கு ஏற்பட்ட உண்மையான உரிமையைக் கெடுத்த. நெஞ்சம் மையில் கரியாள் எதிர் - மைபோன்ற இருண்ட நெஞ்சத்தோடு கூடிய கைகேசியின் கண்முன்பாகவே. துய்யை - பஞ்சுப் பொதியை.

50. அளையா வரும் - பொருந்தி வரும்.

உளையாஅ றம்அற்றி ட,
ஊழ்வழு வுற்றசீற் றம்
விளையாத புலத்து னக்(கு)
எங்ஙன்வி ளைந்த(து) ? ' என் றான். ௨௰

51. இப்படி ஏன் கோபம் வந்தது என்று ராமன் கேட்கவும், லட்சுமணனுக்குச் சிரிப்பே வந்துவிட்டது.

நீண்டான்அஃ துரைத்த லும்,
நித்திலம் தோற்கநக் கு,
' சேண்தான்தொ டர்மாநி லம்
நின்ன(து)என்(று) உந்தைசெப் பப்
பூண்டாய்,ப கையால்இ ழந் -
தே,வனம் போதிஎன் றால்,
யாண்டோஅ டியேற்(கு)இ னிச்
சீற்றம்அ டுப்ப(து) ! 'என் றான். ௨௧௧

---

50. உளையா அறம் - சலனமில்லாத தருமம். ஊழ் வழுவுற்ற சீற்றம் - முறை தவறிய கோபம். விளையாத புலத்து - உண்டாகாத உன் அறிவில். கைகேசியைக் குறைவாகப் பேசியதால், தர்மத்துக்கு மாறாகவும் முறை பிறழ்ந்தும் பேசியதாக ராமன் சொல்லுகிறான்.

51. நீண்டான் - இராமன். நித்திலம் தோற்க நக்கு - முத்துக்கள் தோற்கும்படியாகச் சிரித்து. சேண் தான் தொடர் - எல்லையானது தூரமாகச்சென்றுள்ள. உந்தை - உன்னுடைய தந்தை ; நீ ஏதோ தந்தை தந்தையென்று சொல்லிக்கொண்டிருப்பாயே, அந்தத் தசரதன். பூண்டாய் - உன்னுடைய உரிமையோடு கொண்டாய். போதி - போகிறாய். யாண்டோ - ஏனோ ; வாஸ்தவந்தான், என்ன காரணத்தினாலோ !

52. மேலும் மிக்க வருத்தத்தோடு சொல்லு கிருன் : 'உன்னிடத்தில் அன்பில்லாதவர்கள் உன்னைக் காட்டுக்கு அனுப்பிவிட்டார்கள். நான் அதைப் பார்த்துக்கொண்டு என் உடலையும் உயிரையும் ரொம்பப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டிருக்கிறேன் அல்லவா! ரொம்ப அழகு!'

'நின்கண்ப ரிவில்ல வர்,
நீள்வனத்(து) உன்னை நீக் கப்,
புன்கண்பொ றியாக்கை பொ -
றுத்துயிர் போற்றுகே னே!
என்கட்பு லமுன்உ னக்(கு)
ஈந்துவைத்(து), இல்லைஎன் ற, -
வன்கண்பு லந்தாங்கி ய
மன்னவன் யான்கொல்?' என் ருன்.

53. லட்சுமணன் தந்தையைப்பற்றி ரொம்பவும் இழிவாகப் பேசிவிட்டான். ராமனுடைய மனசு ரொம்பவும் புண்பட்டுவிட்டது. லட்சுமணனது கோபத்தைத் தணிப்பதற்காக மிக்க உணர்ச்சியோடு ராமன் பேசுகிருன் : 'ஒரு நதி ஏராளமான நீரை மலையிலிருந்து கொண்டுவந்து ஜனங்களுக்குக் கொடுக்கிறது.

---

52. நின்கண் - உன்னிடத்து. பரிவு - அன்பு; இரக்கம். புன்கண்பொறி யாக்கை : யாதொரு உணர்ச்சியுமற்ற உடம்பு. உயிர் போற்றுகேனே - உயிரைப் போற்றுகிறேன் அல்லவா! இது இரக்கம் இன்மை தானே? என் கண் புல முன் - என் கண்ணுக்கு எதிரிலேயே. வன்கண் புலம் - இரக்க உணர்ச்சியற்ற. நான், என்ன, இந்த இரக்கமற்ற பாவி தசரதனு?

எத்தனையோ விதத்தில் நாட்டை வளம்படுத்துகிறது. ஒரு சமயம் நதியில் தண்ணீரில்லாமல் போக நேர்ந்து விடுகிறது. மக்கள்,.பயிர் பச்சைகள், ஆடு மாடு எல்லாம் கஷ்டத்துக்கு உள்ளாகிவிடுகின்றன. அப்போது நதியைப் பார்த்து, பாவி நதியே! மோசம் செய்து விட்டாயே, என்று வைவதில் பொருளுண்டா? மலையில் மழை பெய்தால் பெய்த அவ்வளவு நீரையும் தாங்கிக்கொண்டுவந்து கொடுக்க நதி தயாராய்த் தானே இருக்கிறது. நதியின்மேல் பிழையுண்டா அப்பா! அதேபோல,மக்களுடைய செயல்களுக்கு மூலகாரணம் எங்கேயோ அறுதியாய்க் கிடக்கிறது' என்று சொல்லுகிறுன் ராமன்.

'நதியின்பி ழையன் று
நறும்புனல் இன்மை,அற் றேற
பதியின்பி ழைஅன் று,
பயந்துந மைப்புரந் தாள்
மதியின்பி ழைஅன் று,
மகன்பிழை அன்று,மைந் த!
விதியின்பி ழை,நீஇ தற்(கு)
என்னைவெ குண்ட(து)?'என் ருன். ௨கந

53. நறும்புனல் இன்மை - நல்ல தண்ணீர் இல்லாதிருத்தல். அற்றேற - அதே மாதிரிதான். பதி - சக்கரவர்த்தி. பயந்து நம்மைப் புரந்தாள் - பெற்று வளர்த்தவளாகிய கைகேசி. பயந்து - பெற்று; அருமையால் வந்த உபசாரம். மகன் - பரதன். மைந்த - தம்பியே. வெகுண்டது - கோபித்தது. மக்களுடைய செயல்களுக்கெல்லாம் மூலகாரணம் எங்கேயோ அறுதியாக இருக்கிறது; அவர்களிடத்தில் இல்லவே இல்லை. ஆகவே, அவர்களிடம் கோபங்கொள்ள இடமில்லை.

54. ராமன் எடுத்துச் சொன்ன தத்துவம் உண்மைதான் என்று லட்சுமணன் மனசில் பட்டுவிட்டது. கோபத்தை அப்படியே அடக்கப் பார்த்தான். அடங்கவா செய்கிறது? துருத்திவைத்து ஊதவும், கொல்லுலையிலிருந்து குபீரென்று நெருப்பும் புகையும் பொங்கி வருவதுபோல, லட்சுமணனுக்குக் கோபம் தன்னையே மீறி வருகிறது.

உதிக்கும்உ லையுள்உ று
    தீஎன ஊதைபொங் கக்
'கொதிக்கும்ம னம்எங்ங னம்
    ஆற்றுவென்; - கோள்இழைத் தாள்
மதிக்கும்ம தியாய்மு தல்
    வானவர்க் கும்வலீ இ தாம்
விதிக்கும்வி தியாகும் என்
    வில்த்தொழில் காண்டி' என்றான். உகச

55. லட்சுமணன் கோபத்தை அடக்க முயன்றதையும், அது அடங்காமல் வெளிவருவதையும் பார்த்து யோசனையில் ஆழ்ந்துநின்றான் ராமன். இந்தக் கோபமெல்லாம், தன்மீது ஏற்பட்டுள்ள அன்பு காரணமாக அல்லவா என்றும் எண்ணுகிறான். அதன் பேரில்

---

54. உதிக்கும் - பொங்கிவரும். உலை - கொல்லுலை. ஊதை - கோபத்தால் வரும் பெருமூச்சு. கோள் இழைத்தாள் - கொடுமை செய்த கைகேசி. மதிக்கும் மதி - யுக்திக்குமேல் யுக்தி. முதல் வானவர்: பிரும்மா விஷ்ணு சிவன். வலீஇதாம் - வலியதாம். விதிக்கும் விதி - விதியையும் கடக்கக்கூடிய ஒரு தத்துவம்; அதாவது என் கை வில்.

'அப்பா! நீ வாய்க்குவந்த வார்த்தையைச் சொல்லலாமா?' என்றான். உடனே தான் அப்படிக் கடிந்து சொன்னது பிசகு என்று எண்ணி, 'உன் வாயிலிருந்து வருவதெல்லாம் வேதமாக இருக்குமே; ஆகையால், நீ சொன்னதல்ல அப்பா இந்த வார்த்தை!' என்று மிக்க பரிவுடன் சொல்லுகிறான்.

ஆய்தந்த வன்அவ்வு ரை
கேட்டலும், 'ஐயநின் தன்

வாய்தந்த னகூறு தி -
யோ!மறை தந்தநா வர்ல்

நீதந்த தன்றே!நெ றி -
யின்கண்நில் லாதோர்,ஈன் ற

தாய்தந்தை என்றால்,அ வர்
மேல்ச்சலிக் கின்றதென் னோ?' ௫௧௫

---

55. ஆய்தந்தவன் - ஆராய்ந்து நின்று பார்த்தவன்; ராமன். வாய்தந்தன - வாய்க்கு வந்த வார்த்தைகள். நெறியின்கண் நில்லாதோர் : ஏதோ முன்னோர்கள் வகுத்தது என்று சொல்லுகிற ஒழுங்கில் நில்லாமல் சிறிது பிசகிவிட்டவர். சலிக்கின்றது - கோபிக்கிறது. என்னோ- எப்படிப் பொருந்தும். ஏதோ பிசகு ஒன்றிருந்து விட்டால் சாமானிய ஜனங்களையே கோபிக்கக்கூடாது. தாய் தந்தையர் என்றால்,கோபிக்கிறது கொஞ்சமும் பொருந்தவில்லையே.

56. தாய் தந்தை என்ற வார்த்தையை ராமன் எடுத்தானே இல்லையோ, உடனே லக்ஷ்மணன் :

‘ நல்த்தாதை யும்நீ,த னி
நாயகன் நீ,வயிற் றில்

பெற்றாயும் நீயே,பி றர்
இல்லை,பி றர்க்குநல் கக்

கற்றாய் ! இ துகா ணு தி
இன்(று) !’ எனக் கைமறித் தான்,

முற்றும தியம்மி லைந் -
தான்அனை யானை,முன் னோன். உகசு

---

56. நல்தாதை-பட்சமுள்ள தந்தை. தனிநாயகன்-கடவுளும். வயிற்றில் பெற்றாயும் - பத்து மாசம் வயிற்றில் வைத்துப் பெற்ற தாயும். பிறர்க்கு நல்கக் கற்றாய் : எத்தனையோ ஜன்மங்களாகப் பிறருக்குக் கொடுத்துக் கொடுத்து அற்புதமான பயிற்சி அடைந்திருக்கிறாய்; அதனால் அல்லவா உன் கைக்குவந்த ராஜ்யத்தை வேறொருவனுக்கு அப்படியே கொடுத்துவிட்டாய்? இந்தக் கை லாகவத்தை என்ன என்று புகழ்வது ! இது காணுதி இன்று என : இந்த உண்மையைக் (எனக்கு, நீயே எல்லாம் என்ற உண்மையைக்) காண்பாய் இப்போது என்று லக்ஷ்மணன் சொல்ல. கை மறித்தான் : வார்த்தையைக் கேட்க முடியாமல் கையைக்கொண்டு லக்ஷ்மணனது வாயை மூடப்பார்த்தான். முற்று மதியம் மிலைந்தான் அனையானை - இளம்பிறைச் சந்திரனைச் சூடிய ருத்திர மூர்த்திபோல் நின்ற லக்ஷ்மணனை. முன்னோன் - தமையனாகிய ராமன். (ருத்ரமூர்த்தி என்றால், கோபமயமாய் நிற்கும் சிவபெருமான்.)

57. சிறிதுநேரங்கழித்து, ராமன் சொல்லு கிறான் : ' இன்னும் உனக்குக் கோபம் தீரவில்லையே : எப்படித் தீரப் போகிறதோ !'

ஆன்றான்ப கர்வான்பின் னர் :
' ஐய! இவ் வையமை யல்
தோன்றாநெ றிவாழ்து ணைத்
தம்முனைப் போர்தொலைத் தோ,
சான்றோர் புகழும்த வத்
தாதையை வாதைகண் டோ,
ஈன்றாளை வென்றோ, இ னி
இக்கதம் தீர்வ(து) ?' என் றான். உகள

58. ராமன், இந்த விதமாக எதிர்வார்த்தை சொல்லமுடியாதபடி பேசிவிட்டான். ஆனாலும், லக்ஷ்மணனுக்குப் பதில் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. ' தம்பியாவது தம்பி ! லக்ஷ்மணனும் ராமனுக்குத்

---

57. ஆன்றான் : ஆய்ந்து அமைந்த அறிவு உடையவனை ராமன். வைய மையல் - ராஜ்ய சம்பந்தமான எப்பேர்ப்பட்ட ஆசையும். தோன்றா நெறிவாழ் - கொஞ்சமும் இல்லாத மனப்பாங்கில் வாழ்கின்ற. தம் முன்னை - தமையனாகிய பரதனை, போர் - போரில். சான்றோர் - உயர்ந்த பெரியோர், வாதை கண்டோ - மனசு புண்படச் செய்தோ. ஈன்றாளை - தாயை ; கைகேசியை. தீர்வது - நீங்குவது.

துரோகிதான் என்று என்னுடைய பகைவர்கள் சொல்லப் போகிறார்கள். அப்படிச் சொல்லுகிற சொல்லையும் நான் ஏற்றுக்கொண்டு சும்மா இருக்கவேண்டியதுதான்.'

செல்லுஞ்சொல் வல்லான்எ திர்,
    தம்பியும் : ' தெவ்வர் தூற் றும்
சொல்லும்சு மந்தேன், இ ரு
    தோள்எனச் சோம்பிஓங் கும்
கல்லும்சு மந்தேன், க ணைப்
    புட்டிலும் கட்(டு)அமைந் த
வில்லும்சு மக்கப்பி றந் -
    தேன், வெகுண்(டு) என்னை ?' என் றான்.

59. தெருச் சந்தியில் நின்று ராமன் லக்ஷ்மணன் இருவரும், மேலே சொன்ன மாதிரி பேசிவிட்டு, சுமித்திரையின் மாளிகைக்குப் போகிறார்கள். ராமன் சுமித்திரையிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியே

---

58. செல்லும் சொல் வல்லான் - மனசில் ஏறும்படியாகப் பேசக்கூடிய ராமன். எதிர் - பதில் வார்த்தையாக. தெவ்வர் - பகைவர். தூற்றும் - பழித்துச் சொல்லும். சோம்பி : அக்கிரமத்தை அடக்குவதற்கான வீரச் செயல் ஒன்றும் செய்யாமல். கணை - அம்பு. புட்டிலும் - அம்பறாத்தூணியும். கட்டமைந்த - நெரிந்து போகாதபடி இறுகக் கட்டிய. வெகுண்டு என்னை - கோபித்துப் பயன் என்ன.

வருகிறான். அதற்குள் லக்ஷ்மணன் மரவுரியைத் தரித்துக்கொண்டு வந்து விடுகிறான்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

தான்புனை சீரையைத்
தம்பி சாத்திட,
தேன்புனை தெரியலான்,
செய்கை நோக்கினான் :
'வான்புனை இசையினாய் !
மறுக்கி லாது,நீ
யான்புகல்(வு) அனையதோர்
உறுதி கேள்' என. ௨௧௯

60. ராமன் சொல்லுகிறான் : மூன்று அன்னை மாரும் சக்கரவர்த்தியாகிய தந்தையும் முன்போலில்லை, மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள் தெரியுமா ?

' அன்னையர் அனைவரும்
ஆழி வேந்தனும்
முன்னையர் அல்லர்,வெம்
துயரின் மூழ்கினார்,

---

59. சீரை - மரவுரியாகிய உடை. தேன்புனை தெரியலான் - வண்டுகள் சூழும் மாலையைச் சூடிய ராமன். செய்கை - லட்சுமணனுடைய செய்கை. வான் புனை இசையினாய் - விண்ணுலகத்தவரும் புகழும்படியான உயர்ந்த பண்புடையோய். புகல்வு அனையதோர் - சொல்லுதற்கு ஒத்த. உறுதி - அவசியமாகச் செய்யவேண்டிய காரியத்தை.

என்னையும் பிரிந்தனர்,
இடர்உ றுவகை
உன்னை நீ என்பொருட்(டு)
உதவு வாய்' என்றான். ௨௨௦

61. ராமன், அந்தவிதமாகச் சொல்லித் தன்னை விலக்குகிறான் என்று எண்ணிவிட்டான் லக்ஷ்மணன். அவ்வளவுதான். ஒரே பயத்தினால் தோள்கள் நடுங்க, உணர்ச்சி யற்றவனாய் அப்படியே நின்றுவிடுகிறான். சிறிது நேரம் கழித்து, மீண்டும் உணர்ச்சிவந்து, பேசுகிறான்.

ஆண்தகை அம்மொழி
பகர, அன்பனும்
தூண்தகு திரள்புயம்
துளங்கத் துண்என்றா,
மீண்டதோர் உயிர்,இடை
விம்ம, விம்முவான்,
' ஈண்டு உனக்(கு) அடியனேன்
பிழைத்த(து) யா(து) ? ' என்றான். ௨௨௧

62. யாரோ ஒரு பெண்பிள்ளை சொன்னாளாம், அதற்காக நீ காட்டுக்குப் போகிறாய். இதைத் தெரிந்தும்

---

61. ஆண்தகை - வீரனாகிய ராமன். பகர-சொல்ல. அன்பனும் - லக்ஷ்மணனும். தூண்தகு - தூண்போன்ற. துளங்க - நடுங்க. துண்என்றா - திடுக்கிட்டு. உயிர் இடை விம்ம : உயிரும் அதோடு உணர்ச்சியும் கொஞ்சம் இடை இடையே தெளிய விம்மினான் ; ஏங்கினான். ஈண்டு - இந்தப் பிறப்பில். பிழைத்தது - பிழை செய்தது.

நான் உயிர் வைத்துக்கொண்டிருக்கிறேன். இதை விட நான் என்ன பிழை செய்யக்கிடக்கிறது?

'பைந்தொடி ஒருத்திசொல்
கொண்டு, பார்மகள்
நைந்துயிர் நடுங்கவும்
நடத்தி கான்எனு,
உய்ந்தனன் இருந்தனன் :
உண்மை காவலன்
மைந்தன்என்(று) இனையசொல்
வழங்கி னுய்'எனு. ௨௨௨

63. கொடுமை செய்தவர்கள்மேல் எனக்குக் கோபம் வந்தது; அந்தக் கோபத்தை அடக்கிவிடச் சொன்னுய். அப்படி நீ சொன்னதோ கொடுமைதான். ஆனல், நான் காட்டுக்கு உன்னுடன் வரக்கூடாது என்று இப்போது சொல்லுகிறதோ:

---

62. பைந்தொடி : கைகேசி. பார்மகள் - பூமா தேவி; உலகத்தார். நடத்தி கான் - காட்டை நோக்கிச் செல்லுகிருய். எனு - என்றிருந்தும். உய்ந்தனன் இருந் தனன் : உய்ந்து உயிரோடு இருக்கத்தானே செய்கிறேன். உண்மை காவலன் : அந்த அழகு சத்தியத்தைத் காக்கிற தசரதன்! இனைய - இப்பேர்ப்பட்ட. என - என்று. தந்தையைப்போலப் பிள்ளையும் இரக்கம் அற்றவன் என்று எண்ணுகிருய் என்பது பொருள்.

'மாறிநின்(று), என்னை, நீ -
வனம்கொள் வாய்என,
ஏறின வெகுளியை,
யாதும் முற்றுற
ஆறினை தவிர்கென,
ஐய! ஆணையில்க்
கூறிய மொழியினும்,
கொடிய தாம்'என்றான். உஉ௩

64. லக்ஷ்மணனுக்கு மேலும் மேலும் வருத்தம் பொங்கி வருகிறது: 'எவ்வளவோ விருத்திசெய்து உன்னுடைய உடைமையாயிருந்த செல்வத்தை யெல்லாம், வேண்டாதது என்று தள்ளிவிட்டாய். அதைப் போலவே எங்களையும் தள்ளப் பார்க்கிறாயா?'

'செய்துடைச் செல்வமோ
யாதும் தீர்ந்(து),எமைக்
கைதுடைத்(து) ஏகவும்
கடவை யோஐயா? -

63. மாறி நின்று - எனக்கு மாறாக. யாதும் முற்றுற - இல்லாமல் போகும்படி. ஆறினை தவிர்க-கோபம் தணிவாயாக, என் கோபத்தை அடக்கச் சொன்னதே கொடிது; அதனினும் கொடிது, காட்டுக்கு உடன் வரக் கூடாது என்று நீ சொல்லுவது.

64. செய்துடை - விருத்தி செய்து உடைமையாக வுள்ள. கை துடைத்து ஏகவும் - எங்களுடைய வாசனை கூட ஒட்டக்கூடாது என்று போய்விடவும். கடவையோ- உனக்கு மனம் ஒருப்படுமோ. ராமனுடைய வேலானது எப்பேர்ப்பட்டது என்றால்: முதலில், அதற்கு நெய்

நெய்துடைத்(து), அடையலர்
நேய மாதர்கண்

மைதுடைத்(து) உறைபுகும்
வயங்கொள் வேலினாய்!' உ௨௪

65. லக்ஷ்மணன் அப்படிச் சொன்னானோ இல்லையோ, ராமன் ஸ்தம்பித்து நின்றுவிட்டான்.

உரைத்தபின் இராமன்ஒன்(று)
உரைக்க நேர்ந்திலன்,

வரைத்தடம் தோளினான்
வதனம் நோக்கினான்;

விரைத்தடம் தாமரைக்
கண்ணின் மிக்கநீர்

நிரைத்(து)இடை இடைவிழ,
நெடிது நிற்கின்றான். உ௨௫

---

துடைப்பார்கள். பிறகு அது பகை அரசர்களைக் கொல்லும், அதுகாரணமாக அவர்களுடைய மனைவியர் கண்ணீரைத் துடைக்கிற துடைப்பில், கண்ணில் இட்ட மையும் துடைபடும். இந்த இரண்டு காரியமும் நடந்த பிறகுதான் அது உறைக்குள் புகுமாம். அடையலர் - பகையரசர். நேய மாதர் - அன்புடைய மனைவியர்.

65. வரைத்தடம் தோளினான் வதனம் : லக்ஷ்மணனது முகத்தை. விரை - வாசனை பொருந்திய. தடம் - விசாலமான. நிரைத்து - வரிசையாகக் கோத்தமாதிரி. நெடிது : இந்த நிலையில் எவ்வளவுநேரம் நின்றான் என்பது தெரியாதபடி.

66. லக்ஷ்மணனும் அவனுக்கு எதிரே ராமனும் நிற்கிறார்கள். அந்தச் சமயத்தில் வருகிறார் வசிஷ்டர்.

அவ்வயின், அரசவை
நின்றும் அன்பினன்
எவ்வமில் இருந்தவ
முனிவன் எய்தினான் ;
செவ்விய குமரரும்
சென்னி தாழ்ந்தனர் ;
கௌவையம் பெருங்கடல்
முனியும் கால்வைத்தான். உஉகூ

67. வசிஷ்டர் ராம லக்ஷ்மணருடைய முகத்தைப் பார்த்தார். அதிலிருந்து அவர்களுடைய நோக்கம் இன்னதென்று அறிந்துகொண்டார்.

அன்னவர் முகத்தினோ(டு)
அகத்தை நோக்கினான்,
பொன்அரைச் சீரையின்
பொலிவு நோக்கினான்,

---

66. அவ்வயின் - அந்தச் சமயத்தில். அரச அவை - ராஜ சபை. எவ்வம்இல் - யாதொரு குற்றமும் இல்லாத. இரும் - பெரும். கௌவையம் பெருங்கடல் - துன்பமாகிய பெருங்கடலுக்குள். கால்வைத்தான் : அப்படியே முழுகிப்போகத்தான் காலை இறக்கினான் என்பது குறிப்பு.

67. அகத்தை-உள்ளத்தை. சீரை-மரவுரி. பொலிவு-தனித்த அழகு.

என் இனி உணர்த்துவ(து), -
எடுத்த துன்பத்தால்

தன்னையும் உணர்ந்திலன்,
உணரும் தன்மையான். உ௨எ

68. வசிஷ்டர் தமக்குள் சொல்லிக் கொள்கிறார்: 'விதிதான் என்னவேலை செய்கிறது! சகல தேசங்களுக்கும் சக்கரவர்த்தியாகவேண்டிய மங்களகரமான நாளை ஏற்படுத்தினார்கள்; பொன்முடி சூடிப் பொன்னுடை தரித்து விளங்கவேண்டியது. ஆனால், என்ன நேர்ந்திருக்கிறது? மரவுரியைத் தரித்துநிற்கிறான்!'

'வாழ்வினை நுதலிய
மங்கலத்துநாள்,

தாழ்வினை அதுவரச்
சீரை சாத்தினான்; -

---

67. என் இனி உணர்த்துவது - இவர்களுக்கு இனிமேல் என்னத்தைச் சொல்ல இருக்கிறது. எடுத்த - பொங்கிவருகிற. தன்னையும் உணர்ந்திலன் : வசிஷ்டர் ஞானியானதால் தன்னை உணர்ந்தவர்தான்; தலைவனையும் (கடவுளையும்) உணர்ந்தவர்தான். ஆனால், அளவில்லாத துன்பம் வந்து தாக்கவும் தம் வசமே அற்றவரானார்.

68. வாழ்வினை நுதலிய - நல்ல புகழ் தரக்கூடிய வாழ்வு வரும் என்று சோதிட சாஸ்திரம் சொன்ன. மங்கலத்து நாள் - மங்களகரமாகிய நாளிலேயே. தாழ்வினை அது வர - கேடான பூர்வ வினை வந்து தாக்க.

சூழ்வினை நான்முகத்(து)
ஒருவர்ச் சூழினும்
ஊழ்வினை ஒருவரால்
ஒழிக்கற் பாலதோ ? ' உ௨அ

69. வசிஷ்டர் கொஞ்சம் தைரியம்கொண்டு, ராமனிடம் போய்ச் சொல்லுகிறார் :

வில்தடம் தாமரைச்
செங்கண் வீரனை
உற்றுஅடைந்(து), ' ஐய ! நீ
ஒருவி ஓங்கிய
கல்தடம் காணுதி
என்னில், கண்அகல்
மல்தடம் தானையான்
வாழ்கிலான் ' என்றான். உ௨௯

70. தந்தை இறந்துபோவான் என்று சொல்லி, அதன் மூலமாக, காட்டுக்குப் போவதைத் தடுக்கப்

---

68. சூழ்வினை நான்முகத்து ஒருவர் - பலவிதமாய் நம்மைச் சூழ்ந்து தாக்கும் விதிகளை வகுக்கும் பிரமன். ஊழ்வினை பிரமனையே சூழ்ந்துவிட்டால், அவனாலும் விலக்கமுடியாது.

69. வில் - வில்லை ஏந்திய, தடம் - விசாலமான, வீரனே - ராமனே, உற்று அடைந்து - நெருங்கிப்போய், ஒருவி - நீங்கி. ஓங்கிய கல்தடம் - உன்னதமான மலையை. காணுதி என்னில் - சென்று அடைவாயானால். கண் அகல் - விசாலமான. மல்தடம் தானையான் - போர்வல்ல பெரிய சேனையையுடைய தசரத சக்கரவர்த்தி.

பார்த்த வசிஷ்டருக்கு ராமன் சொல்லுகிறான்: அரசன் கட்டளைப்படி நடத்தல் என்னுடைய கடமை. ஆனால் உமது கடமையோ :

‘ அன்னவன் பணிதலை
ஏந்தி ஆற்றுதல்
என்னது கடன், அவன்
இடரை நீக்குதல்
நின்னது கடன், இது
நெறியும் ’ என்றனன் :
பன்னகப் பாயலுள்
பள்ளி நீங்கினான். உ௲ ௦

71. மேலும் சொல்லுகிறான் ராமன் : தந்தை வரங்களைக் கொடுக்க ஒப்புக்கொண்டான். தாய் காட்டுக்குப் போகும்படியாகக் கட்டளையிட்டாள். இந்நிலையில், குலகுருவாகிய நீர் செய்ய வேண்டுவதென்ன ?

‘ ஈன்றனன் எந்தைஇவ்
வரங்கள் ; ஏவினாள்
ஈன்றவள் ; யானது
சென்னி ஏந்தினேன் ;

---

70. அன்னவன் - தசரதன். பணி - கட்டளை. தலை ஏந்தி - சிரமேல் கொண்டு. ஆற்றுதல் - ஒழுகுதல். கடன் - கடமை. நெறியும் - தருமமும். ஆதிசேஷனாகிய பள்ளியைவிட்டு நீங்கி அவதாரம் செய்த விஷ்ணுமூர்த்தியாகிய ராமன்.

71. ஈன்றனன் - கொடுக்க ஒப்புக்கொண்டான். சென்னி ஏந்தினேன் - தலையாய கடன் என்று ஒப்புக் கொண்டேன்.

சான்றென நின்றநீ
　　நடுத்தி யோ? 'என்ருன்:
தோன்றிய நல்லறம்
　　நிறுத்தத் தோன்றினன். உகக

72. ராமன் இப்படி ஒருவிதமாகக் கடிந்துசொல்லவும், வசிஷ்டருக்கு ஒன்றுமே சொல்லத் தோன்றவில்லை. அப்படியே கண்ணீர் உகுத்து நின்றுவிட்டார்.

என்றபின் முனிவன்ஒன்(று)
　　இயம்ப நேர்ந்திலன்
நின்றனன், நெடுங்கணீர்
　　நிலத்து நீர்த்(து)உக; -
குன்றன தோளவன்
　　தொழுது, கொற்றவன்
பொன்திணி நெடுமதில்
　　வாயில் போயினன். உகஉ

73. இனி, ஜனங்களிடம் போவோம். ஜனங்கள் எல்லோரும், ஒரே கஷ்டத்திற்கு உள்ளாகிவிட்டார்கள் என்று சொல்வது மிகை. ஏனென்ருல், தேவர்கள், ஏதோ, இந்த உலகத்தைவிட்டு வேருன சௌகரியம்

---

71. சான்றென நின்ற நீ - இதையெல்லாம் அறிந்து நின்ற நீ; சான்று - சாட்சி. தோன்றிய நல்லறம் - அநுதியாக மக்களுக்குத் தென்பட்ட தருமத்தை மறுபடியும் நிறுத்துவதற்காக அவதரித்த ராமன்.

72. குன்று அன்ன - குன்றுக்குச் சமானமான. கொற்றவன் - தசரத சக்கரவர்த்தியினுடைய.

உள்ள வானுலகத்தில் இருப்பதாகப் பாவனை. அவர்களுக்கு, ராமன்மூலமாகத் தங்களுடைய காரியம் சௌகரியமாகவேண்டும் என்பதுதான் கோரிக்கை. அவர்களுடைய உள்ளம் என்ன பாடுபட்டது?

அந்தணர் அருந்தவர்
அவனி காவலர்
நந்தவில் நகருளார்
நாட்டுள் ளார்கள்தம்
சிந்தைஎன் புகல்வது ; -
தேவர் உள்ளமும்
வெந்தனர், மேல்வரும்
உறுதி வேண்டலார். உ௩௩

74. அரண்மனையை விட்டு ராமன் முற்றத்துக்கு வருகிறான். அங்கு நிகழ்கிற காட்சி: தசரதனுக்குப் பட்டத்து மனைவிகள் போக, ஆசை நாயகிகளுமுண்டு. (அது அந்தக் காலத்து முறை.) அவர்களெல்லோரும் ராமனையே பிள்ளையாகப் பாவித்துவந்தார்கள். ராமனும் பெற்ற தாய்மாராகவே அவர்களைப் பாவித்து அன்புபாராட்டிவந்தான். அந்தப்பெண்களுக்கு ராமன்

---

73. அந்தணர் - அறிவு ஒழுக்கங்களால் சிறந்தவர். அவனி காவலர் - பூமியை ஆளுகிற அரசர். நந்தல் இல் - யாதொரு கஷ்டத்தையும் அனுபவியாத. உள்ளமும் வெந்தனர் - துன்பப்பட்டார்கள். மேல்வரும் உறுதி : ராமன் அரக்கர்களைக் கொன்று, அதனால் தங்களுக்கு ஏற்படக்கூடிய தொந்தரவற்ற வாழ்க்கையைக்கூட விரும்பவில்லை தேவர்கள்; அவர்களும் அவ்வளவு துன்பத்துக்கு உள்ளாய்விட்டார்கள்.

காட்டுக்குப் போகிற செய்தி தெரிந்துவிட்டது. அப்படியே முற்றத்தில் வந்து மொய்த்துவிட்டார்கள்.

அறுபதி னாயிரர்
அரசன் தேவியர்,
மறுவறு கற்பினர்,
மழைக்கண் நீரினர்,
சிறுவனைத் தொடர்ந்தனர்,
சிந்தை மாழ்கினர்,
எறிதிரை கடல்என
இரங்கி ஏங்கினர். உ௭௪

75. அந்தப் பெண்களுடைய அழகும் நிறமும் விதவிதமாய் இருந்தன.

கன்னிநல் மயில்களும்,
குயில்க் கணங்களும்,
அன்னமும், சிறையிழந்(து)
அவனி சேர்ந்தன
என்ன,வீழ்ந்(து) உழந்தனர்,
இராமன் அல்லது
மன்னுயிர்ப் புதல்வரை
மற்றும் பெற்றிலார். உ௭௫

74. மழைக்கண் - கன்னங்கரேல் என்றிருந்த கண்கள். சிறுவனை - பிள்ளையாகிய ராமனை. சிந்தை மாழ்கினர் - மனசு உடைந்தவராய். எறி திரை - மோதுகின்ற அலையோடு கூடிய. இரங்கி - வருந்தி.

75. கன்னி - இளமையோடு கூடிய. மன்னுயிர்ப் புதல்வரை - வாழ்க்கைக்குத் தாரகமான பிள்ளைகளை.

76. அந்த மகளிர் ராமனைப் பார்த்துத் தாங்களும் காட்டுக்கு வருவதாகச் சொல்லுகிறார்கள். துயரத்தினால் வந்த திகைப்பின்காரணமாக, வாயைத் திறந்த வண்ணமாய்க் கெஞ்சுகிறார்கள்.

'புகல்இடம் கொடு,வனம்
போதும்' என்றுதம்
மகன்வயின் இரங்குறு
மகளிர் வாய்களால்,
அகல்மதில் நெடுமனை,
அரத்த ஆம்பல்கள்
பகலிடை மலர்ந்ததோர்
பழனம் போன்றவே. உ௫௬

77. ரத்தின கிரீடம் சூடுவதற்காக ராமன் அந்தத் தெருவழியாகப் போனான். இப்போதோ, அதே தெருவழியாக மரவுரியைச் சுற்றிக்கொண்டு ஆண்டி மாதிரி நடந்துபோகிறான்.

நல்நெடு நளிர்முடி
சூட, நன்மணிப்
பொன்நெடுந் தேரொடும்
பவனி போனவன்,

---

76. வனம் போதும் - காட்டுக்கு உன்னோடு வருகிறோம். அகல் மதில் நெடு மனை - கனத்த மதில்சுவருக்குள் அடங்கிய விசாலமான முற்றம். அரத்த ஆம்பல் - செந்நிறமான அல்லி; இரவில் மலர்வது. பழனம் - நீர்நிலை.

துன்நெடுஞ் சீரையும்
சுற்றி, மீண்டும்அப்
பொன்நெடும் தெருவிடைப்
போதல் மேயினான். உ௩எ

78. ஜனங்கள் பலபல விதமாகப் புலம்புகி றார்கள்: இவ்வளவு கொடுமையைக் கண்டபின்னும் நம்முடைய நெஞ்சு உடையவில்லை. அதைவிட வலி யது, நம்மை ஒட்டிக் கொண்டிருக்கிற உயிர்தான். நமக்கு உடல்நலம் இப்படியா வந்து வாய்க்கவேண்டும்!

'அஞ்சன மேனி இவ்
அழகற்(கு) எய்திய
வஞ்சனை கண்டபின்,
வகிர்ந்து நீங்கலா
நெஞ்சினும் வலி(து)உயிர், -
நினைப்ப(து) என்,கொல்லும்
நஞ்சினும் வலியநம்
நலம்'என் றார்சிலர். உ௩அ

79. ராஜ்யபாரப் பொறுப்பையெல்லாம் ஏற் றுக்கொண்டு நம் கண்ணுக்கு உவந்தவனாய் ராமன் வருவான் என்று எதிர்பார்க்கிறோம். அப்படி எதிர்

---

77. துன்நெடும் சீரை - நார் நெருங்கிய மரவுரி. போதல் மேயினான் - போனான்.

78. அஞ்சன மேனி - கண்ணுக்கு இடும் மைபோன்ற உடல். நஞ்சு நம்மைத் துன்புறுத்தும்; அதைவிடத் துன்புறுத்துகிறது, நம்முடைய ஆரோக்கியம் (நலம்).

பார்த்து இருந்தது. ராமன் காட்டுக்குப் போவதைக் காணத்தான் போலிருக்கிறது!

‘மண்கொடு வரும்என
வழியி ருந்த(து)யாம்,
எண்கொடு சுடர்வனத்(து)
ஏகல் காணவோ?
பெண்கொடு வினைசெயப்
பெற்ற நாட்டினில்,
கண்கொடு பிறத்தலும்
கடை’என் றார்சிலர். உ௭௯

80. பிறக்கும்போதே ராமன் ராஜ்யத்தின் உரிமையோடு பிறந்தான். இப்போது காட்டுக்குப் போவதற்காகப் புறப்படுகிறான் பார்த்தீர்களா! என்ன செய்கிறீர்கள் நீங்கள்?

‘முழுவதே பிறந்(து)உல(கு)
உடைய மொய்ம்பினான்,
உழுவைசேர் கானகத்(து)
உறைவென் யான்என,
எழுவதே! எழுதல்கண்(டு)
இருப்ப தே! இருந்(து)
அழுவதே! அழுகி(து)இவ்
அன்(பு)!’ என் றார்சிலர். உ௮௦

---

79. எண்கொடு - சலனமில்லாத உணர்ச்சியோடு. பெண்கொடு வினை செய - கைகேசியாகிய பெண்ணை அதிகாரியாகக் கொண்டு ராஜ்ய பரிபாலனம் செய்ய.

80. மொய்ம்பினான் - வீரம் பொருந்தியவன். உழுவை - புலி. எழுவதே : எழுகிற காரியம் எல்லாம் விருதாவான காரியந்தான்.

81. ஒருவருக்கு அனேக பிள்ளைகள் இருக்கலாம். அவைகளில், ஒரு பிள்ளைக்குக் காதோ கண்ணோ இல்லாமல் இருக்கலாம். அந்தப் பிள்ளையைக்கூட இழக்க மனம் ஒவ்வாது; இழக்க நேர்ந்தால் உயிரையே கொடுத்துவிடத் தோன்றும்.

‘ நிறைமக உடையவர்,
நெறிசெல் ஐம்பொறி
குறைமக குறையினும்
கொடுப்ப ராம்உயிர் ; -
முறைமகன் வனம்புக,
மொழியைக் காக்கின்ற
இறைமகன் திருமனம்
இரும்(பு) ’ என் றார்சிலர். உ௬௧

82. பெண்கள் என்ன செய்தார்கள் ? அங்கங்கே கூடி, ஆபரணங்களையெல்லாம் சிதறிவிட்டுக் கீழே புரண்டு அழுகிறார்கள்.

---

81. நிறை மக - அனேக பிள்ளைகள். நெறிசெல் ஐம்பொறி - நேராகத் தொழில்படுகிற மெய், வாய், கண், மூக்கு, செவி. குறை மக - குறைந்துள்ள பிள்ளை. குறையினும் - இழக்க நேரிடினும். முறை மகன் : எல்லா உறுப்பும் அழகாய் அமைந்துள்ள பிள்ளை; ராமன். மொழியைக் காக்கின்ற - சத்தியத்தைக் காக்கிற ; இது கேலி. இறைமகன் - அரசன் ; தசரத சக்கரவர்த்தி. திருமனம் - அழகிய மனம் ; இதுவும் கேலி.

மழைக்குலம் புரைகுழல்
விரிந்து மண் ணுறக்
குழைக்குல முகத்தியர்,
குழாங்கொண்(டு) ஏங்கினர்,
இழைக்குலம் சிதறிட,
ஏவுண்(டு) ஓய்வுறும்
உழைக்குலம் உழைப்பன
ஒத்(து)ஓர் பால்எலாம். உசஉ

83. ராமன் காட்டுக்குப் போகிறுன் என்கிற துயரத்தில், வீடுகள்தோறும் பெண்கள் செயலற்றுச் சோர்ந்து கிடக்கிறுர்கள்.

அட்டிலும் இழந்தன
புகை ; அகில்ப்புகை
நெட்டிலும் இழந்தன ;
நிறைந்த பால்,கிளி

---

82. மழைக்குலம் புரை குழல் - அழகான கரு மேகம்போன்ற கூந்தல். குழைக்குலம் - சிறந்த காதணி. இழைக்குலம் - ஆபரணங்கள் பலவற்றை. ஏ உண்டு - அம்பினுல் துடைக்கப்பட்டு. ஓய்வுறும் - சோர்ந்து விழும். உழைக்குலம் - மான்குட்டிகள். ஓர்பால் - ஒரு பக்கம்.

83. அட்டில் - சமையல் புரை. புகை - அடுப்பி லிருந்துவரும் புகையை. அகிற்புகை - கூந்தலுக்கு இடும் அகில் புகையை. நெட்டில் - உப்பரிகைகள். கிளி வட்டில் - கிளிக்காக ஏற்பட்ட கிண்ணம்.

வட்டிலும் இழந்தன ;
மகளிர் கை,மணித்

தொட்டிலும் இழந்தன,
மகவும் சோரவே. உசங

84. அயோத்தியிலுள்ள அரசவீதியில் சதா மத்தள ஓசை, யாழிசை, அதோடுகூடிய பாட்டு, தேவர்களுக்கான திருவிழாக்கள் - இவை நடந்தவண்ணமாய் இருக்கும். இப்போது அவை ஒன்றும் இல்லை.

முழ(வு)எழும் ஒலியில,
முறையின் யாழ்நரம்(பு)

எழஎழும் ஒலியில,
இமைப்பில் கண்ணினர்

விழ(வு)எழும் ஒலியில,
வேறும் ஒன்றில, -

அழஎழும் ஒலியல(து)
அரச வீதியே. உசச

---

83. மகளிர் கை - தொட்டிலை ஆட்டும் பெண்களுடைய கையை. மணித்தொட்டில் - அழகிய தொட்டில். சமையல் நடக்கவில்லை ; பெண்கள் குளிக்கவில்லை ; அருமையாக வளர்த்த கிளிக்குப் பாலும் விடவில்லை ; தொட்டிலை ஆட்டிக் குழந்தைகளுக்கு இதம் செய்ய வேண்டுமே, அதுவும் செய்யவில்லை.

84. முழவு - மத்தளம். இமைப்பில் கண்ணினர் - தேவதைகளுக்கான. விழவு எழும் ஒலி - திருவிழாவின் காரணமாக எழும் ஆரவாரம்.

85. ஆடவர் பெண்டிர் பட்ட கஷ்டத்தைப் பார்த்தோம். அவர்கள் சாமானிய ஜனங்கள். அவர்களைப்பற்றிப் பேச வேண்டாம், இனி.

கொஞ்சம் சாஸ்திரங்களைக் கற்றவர்கள், துன்பம் வந்தால் பூர்வமான தீவினைப் பயன் என்றும், இன்பம் வந்தால் நல்வினைப் பயன் என்றும் சொல்லிக் கொள்ளுவார்கள். இப்படிக் காரண காரியம் கற்பித்துக்கொள்ளுவதனுல், நேர்ந்த துன்பம் இதயத்தைத் தாக்காமலா போய்விடும்? போகவே போகாது. ஆகையால், இந்தப் புஸ்தக ஆசாமிகளை அப்படியே விட்டுவிட்டு, - யோகிகள் என்று இருக்கிருர்களே, - அதாவது துன்பமும் இன்பமும் ஒன்றே என்று கருதுகிறவர்கள், அவர்கள் பாடு என்ன ஆயிற்று? பார்க்கலாம்.

சந்தம்

தான தன்னன
தானன தானன
தான

திக்கு நோக்கிய
தீவினைப் பயன்எனச்,
சிந்தை

நெக்கு நோக்குவோர்,
நல்வினைப் பயன்என
நேர்வோர்

85. திக்கு நோக்கிய தீவினை : புலி, மலையில் நீரோடைப்பக்கம் பதுங்கிக் கிடக்கிறது, மான் அங்கே வந்தால் அதன்மேல் பாய்ந்துவிடலாம் என்று. அதே போல, பூர்வஜன்மத்துத் தீவினை நம்மைத் தாக்கச் சமயம் பார்த்துக்கொண்டேதான் இருக்கிறது. நெக்கு - உடைந்து. நேர்வோர் - யாதொரு யோசனையும் இல்லாமல் மனம் ஒத்து அனுபவிப்பவர்.

பக்கம் நோக்கல்என்! -
பருவரல் இன்பம்என்(று)
இரண் டும்

ஒக்க நோக்கிய
யோகரும் அருந்துயர்
உழந் தார். உசரு

86. ஜனங்கள் இப்படியாகக் கஷ்டத்துக்குள்ளாகிக் கொண்டு, ஆங்காங்கு கூட்டம் கூட்டமாக ராமனைத் தொடர்ந்து வருகிறார்கள். ராமன் எங்கே போகிறான் என்று பார்ப்போம்.

உயங்கி அந்நகர்
உலைவுற, ஒருங்குழை
சுற் றம்

மயங்கி ஏங்கினர்
வயின்வயின், வரம்பிலர்
தொட ர,

85. பருவரல் - துன்பம். யோகிகளே துன்பத்துக்கு உள்ளாகிவிட்டார்கள் என்றால், ராமன் காட்டுக்குப் போன செய்தி, யாராலும் சகிக்க முடியாத காரியம் என்று ஏற்படுகிறது அல்லவா?

86. உயங்கி - கஷ்டப்பட்டு. உலைவுற - செயல் அழிந்து. ஒருங்கு உழை சுற்றம் - ஒன்றாகப் பக்கத்தில் நெருங்கி வந்த சுற்றத்தார். ஏங்கினர் - ஏங்கினவர்களாய்.

இயங்கு பல்லுயிர்க்(கு)
ஓர்உயிர் எனநின்ற
இராமன்,
தயங்கு பூண்முலைச்
சானகி இருந்துழிச்
சார்ந்தான். உசசு

87. ஜானகி இருந்த இடத்திற்கு ராமன் மரவுரியைத் தரித்துவருகிறுன். அந்த விஷயம் அவளுக்கு விளங்கவில்லை. மற்றவர்கள் அழுதுவந்தது அதைவிட விளங்கவில்லை.

அழுது தாயாரோ(டு)
அருந்தவர் அந்தணர்
அரசர்
புழுதி ஆடிய
மெய்யினர் புடைவந்து
பொருமப்,
பழுது சீரையின்
உடையினன் வரும்படி
பாரா,
எழுது பாவைஅன் -
னுள்மனத் துணுக்கமொ(டு)
எழுந்தாள். உசஎ

---

86. இயங்கு பல்உயிர் - ஓடியாடித் திரியும் உயிர் வர்க்கங்கள். தயங்கு பூண் - அசைந்து ஒலிக்கும் ஆபரணம் பூண்ட.

87. புடை வந்து பொரும-பக்கத்தில் வந்து விம்ம. பழுது சீரை - ராஜாவுக்கு ஒவ்வாத மரவுரி. வரும்படி பாரா - வருகிறதைப் பார்த்து. எழுது பாவை அன்னுள்- அருமையாய்ச் செய்த ஓவியம் போன்ற. துணுக்கம் - பயம்.

88. பயத்தோடு எழுந்த சீதையை மாமிமார் தழுவினார்கள், கண்ணீர்விட்டுப் புலம்பினார்கள்.

எழுந்த நங்கையை
 மாமியர் தழுவினர்,
 ஏங்கிப்
பொழிந்த உண்கணீர்ப்
 புதுப்புனல் ஆட்டினர்,
 புலம்ப
அழிந்த சிந்தையின்
 அன்னம்,இ(து) என்னதென்(று)
 அறியாள்,
வழிந்த நீர்நெடுங்
 கண்ணினள், வள்ளலை
 நோக்கி. உ௪அ

89. ராமனைப் பார்த்துச் சீதை கேட்கிறாள்: தசரதருக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதா? என்ன காரணமாக இந்தத் துயரமெல்லாம்?'

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

'பொன்னை யுற்ற
 பொலன்கழ லோய்!புகழ்
மன்னை உற்ற(து)உண் -
 டோ,மற்(று)இவ் வன்துயர்

---

88. தழுவினர் - தழுவி. உண்கண்ணீர்ப் புதுப்புனல் ஆட்டினர் - விரிந்த கண்ணிலிருந்து வடிந்த கண்ணீரைக் கொண்டு குளிப்பாட்டி. அழிந்த சிந்தையின் அன்னம் - மனம் திகைத்துப்போன சீதை. வள்ளலை - ராமனை.

89. பொன்னையுற்ற பொலன் கழலோய் - பொன்ஞல் செய்த அழகிய கழலை அணிந்தவனே. மன்னை - தசரதனை. வன் துயர் - பெருந்துயர்.

என்னை உற்ற(து),
இயம்பென்(று)இ யம்பினுள் :
மின்னை உற்ற
நடுக்கத்து மேனியாள். உ௪௯

90. சீதை கேட்டதற்கு, ராமன், 'என் அருமைத் தம்பி பரதன் சக்கரவர்த்தியாகப் போகிறுன்' என்று ஆரம்பிக்கிறுன்.

'பொருவில் எம்பி
புவிபுரப் பான் ;ஈன்ற
இருவர் ஆணையும்
ஏந்தினென், இன்றுபோய்க்,
கருவி மாமழைக்
கல்த்தடம் கண்டு,நான்
வருவென் ஈண்டு,—
வருந்தலை நீ 'என்றுன். உ௫௦

91. நாயகன் காட்டுக்குப் போவதுபற்றிச் சீதைக்கு வருத்தமில்லை ; ராஜ்யத்தை இழந்துவிட்டான் என்பதுபற்றியும் வருத்தமில்லை. ஆனுல் :

---

89. என்னை உற்றது - என்ன காரணத்தினுல் ஏற்பட்டது. மின்னை உற்ற நடுக்கத்து - மின்னல் நடுங்குகிற மாதிரி நடுங்கிய.

90. பொருவில் எம்பி - ஒப்பற்ற தம்பி பரதன். புவி புரப்பான் - ராஜ்யத்தை ஆளுவான். ஈன்ற இருவர் : தந்தையும் தாயும். கருவி மாமழை கல் தடம் கண்டு - மழை கொட்டுவதற்கு ஏதுவான மலைக்குப் போய்விட்டு. வருந்தலை - வருந்தவேண்டாம்.

நாய கன்வனம்
  நண்ணல்உற் ருன்என்றும்,
மேய மண்இழந்
  தான்என்றும், விம்மலள் ; -
' நீவ ருந்தலை
  நீங்குவென் யான் ' என்ற
தீய வெஞ்சொல்
  செவிசுடத் தேம்புவாள். உ௬க

92. தன்னைவிட்டுப் பிரிந்துபோகிருன் ராமன் என்பதைச் சீதாபிராட்டியார் எப்படித் தாங்கமுடியும்! ஆதியில் பாற்கடலில் பள்ளிகொண்டவன், அதை விட்டு அயோத்தியில் ராமனுக அவதரித்தான். சீதையும் அவனுடனேயே பாற்கடல் பள்ளியைவிட்டு இங்கு வந்தவள்தானே! நெடுகிலும் பிரியாமல் இருந்தவள் அல்லவா?

துறந்து போம்எனச்
  சொற்றசொல் தேறுமோ?
உறைந்த பாற்கடல்
  சேக்கை யுடன்ஒரீஇ,
அறம்தி றம்பும்என்(று)
  ஐயன்அ யோத்தியில்ப்
பிறந்த பின்பும்,
  பிரிவிலள் ஆயினுள். உ௬உ

---

91. மேய மண் இழந்தான் - தனக்கு வந்த ராஜ்யத்தை இழந்தான்.

92. சொற்ற சொல் தேறுமோ - சொன்ன சொல்லைத் தாங்க முடியுமா. சேக்கை - ஆதிசேஷ சயனம். உடன் ஒரீஇ - ஒன்ருக விட்டு நீங்கி. ஐயன் - விஷ்ணு அம்சமாகிய ராமன்.

93. இந்தவிதமாக நொந்துபோன சீதை சொல்லுகிறாள் : 'வாஸ்தவந்தான். தந்தையும் தாயும் சொன்ன காரியத்தைச் செய்யத் துணிந்தது உத்தமமான விஷயமே' என்று.

அன்ன தன்மையள்,
 'ஐயனும் அன்னையும்
சொன்ன செய்யத்
 துணிந்தது தூயதே ;
என்னை, என்னை
 இருத்திஎன் றான்? 'எனா, —
உன்ன உன்ன
 உயிர்உமி ழாநின்றாள். உ௫௩

94. 'கொஞ்சங்கூட இரக்கமில்லாமல் என்னை விட்டுவிட்டுப் போக நினைக்கிறாய்' என்று சொல்லுகிறாள்.

'பரி(வு)இ கந்த
 மனத்தொடு பற்றிலா(து),
ஒருவு கின்றனை :
 ஊழிஅ ருக்கன்அங்(கு)
எரியும் என்ப(து)
 யாண்டைய(து)? ஈண்டுநின்
பிரிவி னும்சுடு
 மோ,பெருங் கா(டு)?' என்றாள். உ௫௪

93. என்னை - என்ன காரணத்தினால். இருத்தி - இங்கே இருப்பாயாக. எனா - என்று எண்ணி. உன்ன உன்ன - எண்ண எண்ண. உயிர் உமிழா நின்றாள் : உயிரை இழந்துகொண்டே இருக்கிற நிலையில் நின்றாள்.

94. பரிவு இகந்த - இரக்கம் இல்லாத. ஒருவுகின்றனை - விட்டு நீங்குகிறாய். ஊழி அருக்கன் - பூர்வமாய் ஏற்பட்ட சூரியன். யாண்டையது - எப்படி ஏற்படும்.

95. சீதையினுடைய வருத்தத்தை அறிந்து கொண்டான் ராமன்.

கடல்மேல் நீட்டி அமைத்துள்ள பாலத்தின் கோடியில் ஒரு அறை. அந்த அறையின் தளத்தில் சிறு துவாரம். அதன் வழியாகக் கீழுள்ள சமுத்திரத்தைப் பார்க்க நேர்ந்தது. சமுத்திரமானது ஓடுகிறது, சுழல்கிறது, அலைகள் மடங்குகிறது—இவ்வளவையும் பார்க்க முடிகிறது. பார்க்கும்போது, கரைகாணுத முழுச் சமுத்திரத்தின் கோஷிப்பையே துவாரத்தில் பார்க்கிறோம். இந்தவிதமாக ராமன் சீதையின் கண்ணீர்த்துளி வழியாகப் பார்த்தான் : அவளுடைய உடலும் உணர்ச்சியும் ஓரே கண்ணீர்க் கடலாகத் தோன்றிற்று அவனுக்கு.

அண்ணல் அன்னசொல்க்
  கேட்டனன், அன்றியும்
உள்நி வந்த
  கருத்தும் உணர்ந்தனன் ;
கண்ணின் நீர்க்கடல்க்
  கைவிட நேர்கிலன்,
எண்ணு கின்றனன், -
  என்செயற் பாற்றெனு. உ௫௫

95. அண்ணல் - ராமன். உள் நிவந்த - மனசில் பொங்கி நிறைந்த. கண்ணின் நீர்க்கடல் கைவிட நேர்கிலன் - கண்ணீர்க்கடலாகிய சீதையை விட்டுவிட்டுப் போக மனம் கொள்ளவில்லை. என் செயல் பாற்று எனு - என்ன செய்யக் கிடக்கிறது என்று.

96. ராமன் இப்படித் திகைத்து நிற்கும்போது, சீதை அரண்மனையின் உள்க்கட்டுக்குப் போகிறாள்.

அனைய வேலை
அகமனை எய்தினள் ;
புனையும் சீரம்
துணிந்து புனைந்தனள் ;
நினை(வு)இல் வள்ளல்பின்
வந்தயல் நின்றனள் ; -
பனையின் நீள்கரம்
பற்றிய கையினாள். உருசு

97. சீதையும், அடடா, காட்டுக்குப் போகத் தயாராய் நின்றுவிட்டாள். அதைப் பார்த்தவர்களுக்குப் பூமியே புரண்ட மாதிரி தோற்றியது. அப்படி அப்படியே கீழே விழுந்தார்கள். உயிர் அவர்களுக்கும் போய்விட்டால் நல்லதுதான். ஆனால், எளிதில் போகிற காரியமா அது?

---

96. அனைய வேலை - அந்த வேளை. அகமனை - உள்க்கட்டு. புனையும் சீரம் - தான் அணிந்து கொள்ளக் கூடிய ஒரு மரவுரியை. நினைவில் வள்ளல் பின்-திகைத்து நின்ற ராமனுக்குப் பின்புறமாக. அயல் நின்றனள் - பக்கத்தில் நின்றாள். பனையின் நீள் கரம் - பனை போன்றது என்று சொல்லும்படியான ராமனது நீண்டகையை, அயல் நின்றாள் : எப்படி நின்றாள்? கையைப்பற்றிய வண்ணமாய் நின்றாள். காட்டுக்கு அவனுடன் போவதில் அவ்வளவு ஆத்திரம் அவளுக்கு.

ஏழை தன்செயல்
கண்டவர் யாவரும்
வீழும் மண்ணிடை
வீழ்ந்தனர் ; வீந்திலர் ;—
வாழும் நாள்உள
என்றபின் மாள்வரோ ?
ஊழி பேரினும்
உய்குநர் உய்வரே ! ௯௭

98. சீதைக்குத் தாய்முறையாக உள்ளவர்கள் தமக்கை முறையாய் உள்ளவர்கள், சேடியர்கள், நெருங்கிப் பழகும் கூட்டாளிகள் எல்லோரும் ஏதோ தீயில் விழுந்தமாதிரித் துயரப்படுகிறார்கள். இந்த நிலையில், சீதையைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்.

தாயர் தவ்வையர்
தன்துணைச் சேடியர்
ஆயம் மன்னிய
அன்பினர் என்றிவர்

---

97. ஏழை தன் செயல் - சீதையின் செயல். வீழும் மண்ணிடை - புரளுகிறதாகத் தோற்றும் பூமியில் ; மயக்கத்தால் வந்த தோற்றம் இது. வீந்திலர் - சாகவில்லை. வாழவேண்டிய நாள் இருந்தால், எப்படி உயிர் போகும்? ஊழி பேரினும் - பேரண்டம் முழுதும் தகர்ந்து போகட்டுமே. உய்குநர் உய்வரே-பிழைக்கிறவர்கள், பிழைத்தே தீருவார்கள். குறிப்பு : துயரத்தின் மேலீட்டால் மக்கள் தங்களை நொந்துகொள்ளுகிற பாவம் செய்யுளில் அருமையாய் அமைந்திருக்கிறது.

தீயின் மூழ்கினர்
ஒத்தனர் : செங்கணுன்

தூய தையலை
நோக்கினன் சொல்லுவான். உருஅ

99. என்ன சொல்லுகிருன் : சீதையே, நீ ரொம்ப சந்தோஷப்பட்டு நிற்கிருய். உன்னுடைய பற்களால் அது நன்ருய்த் தெரிகிறது. நீ காட்டுக்கு வருவதால் என்ன என்ன நேரும் என்று யோசித்துப் பார்த்தாயா?

'முல்லையும் கடல்
முத்தும் எதிர்ப்பினும்,

வெல்லும் வெண்நகை -
யாய்! விளை(வு) உன்னுவாய்

அல்லை! போத
அமைந்தனை ; ஆதலின்

எல்லை யற்ற
இடர்தரு வாய் 'என்ருன். உருகூ

100. அவ்வளவுதான், சீதைக்குப் பெருங்கோபம் வந்துவிட்டது.

---

98. செங்கணுன்-ராமன். தூய தையலை : சீதையை.

99. வெண் நகையாய் - வெள்ளிய பல்வரிசை யுடையவளே ; சந்தோஷமாய் நிற்பவளே. விளைவு உன்னுவாய் அல்லை - என்ன என்ன நேரக்கூடும் என்பதை நீ எண்ணவில்லை. போத அமைந்தனை - காட்டுக்கு வர ஆயத்தம் பண்ணிவிட்டாய்.

கொற்ற வன்அது
கூறலும், கோகிலம்
செற்ற(து) அன்ன
குதலையள் சீறுவாள் ; -
‘உற்று நின்ற
துயரம்இ(து) ஒன்றுமே :
எற்று றந்தபின்
இன்பங்கொ லாம்?’ என்றாள். உகூ0

101. சீதை கோபத்தோடு சொன்ன வார்த்தையைப் பார்த்தான் ராமன். ஒன்றுமே பேசவில்லை. அப்படியே தெருவுக்குப் போய்விட்டான்.

பிறிதொர் மாற்றம்
பெருந்தகை பேசலன் ;
மறுகி வீழ்ந்தழும்
மைந்தரும் மாதரும்
செறுவில் வீழ்ந்த
நெடுந்தெருச் சென்றனன் ; -
நெறிபெ ருமை
அரிதினில் நீங்குவான். உகூக

---

100. கொற்றவன் - ராமன். கோகிலம் செற்றது அன்ன - குயிலைத் தோற்கடிக்கும்படியான. குதலையள் - இனிய மழலைச் சொல்லுடையவள். சீறுவாள்-கோபித்துச் சொன்னாள். உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே - உன்னைச் சார்ந்துள்ள துயரம் நான் ஒருத்தி காட்டுக்கு வருவதான இது ஒன்றுதானோ. என் துறந்தபின் - என்னை விட்டு நீங்கியபின். இன்பங்கொலாம் - இன்பந்தானோ. குறிப்பு : கோப பாவம் அருமையாய் அமைந்திருக்கிறது.

101. மறுகி - மயங்கி. செறுவில் வீழ்ந்த - நெருங்கி விழுந்துகிடந்த. நெறி பெருமை : கால் எடுத்து வைக்க

102. கீழே விழுந்து கிடந்த ஜனங்களையெல்லாம் ஒரு வகையாய் விலக்கிக் கொண்டு, தெருவழியாக ராமன் நடந்துபோகிறான். எப்படிப் போகிறான் :

சீரை சுற்றித்
திருமகள் பின்செல,
மூரி வில்கை
இளையவன் முன்செலக் ;
காரை ஒத்தவன்
போம்படி கண்டஅவ்
ஊரை உற்ற(து)
உணர்த்தவும் ஒண்ணுமோ ? ௨௬௨

103. காரியம் இவ்வளவுக்கு வந்துவிட்டது. இனி, அழுகிற காரியம், நொந்துகொள்ளுகிற காரியம், ஒன்றும் வேண்டாம் என்கிறார்கள் ஜனங்கள்.

---

இடம் இல்லாமல் அவ்வளவு நெருங்கி விழுந்துகிடந்தார்கள். அரிதினில் - ரொம்ப கஷ்டத்தின்மேல்.

102. சீரை - மரவுரியையே. திருமகள் - லக்ஷ்மியே போன்ற சீதை. மூரி - பலமாகக் கட்டமைந்த. காரை ஒத்தவன் - நீலமேகமேனியனான ராமன். குறிப்பு : அபூர்வமான எளிமையில், மூவர் போன போக்கையும், ஊர் பட்டபாட்டையும் செய்யுளின் உருவம் எடுத்துக்காட்டுகிறது. லக்ஷ்மணனுக்கு, கோபம் ; ராமனுக்கு, தந்தையின் கட்டளைப்படி தர்மத்தைக் காக்க முடிந்ததே என்ற திருப்தி ; சீதைக்கு, நாயகனுடன் காட்டுக்குப் போகக் கிடைத்துவிட்டதல்லவா என்ற எக்களிப்பு. இந்த மூன்று வெவ்வேறான பாவங்களும் சித்திரத்தில் நன்றாய்த்துலங்குகின்றன.

ஆரும் பின்னர்
அழு(து)அவ லித்திலர் ;
சோரும் சிந்தையர்
யாவரும் சூழ்ந்தனர் ; -
'வீரன் முன்வனம்
மேவுதும் யாம்'எனப்,
'போர்'என்(று) ஒல்ஒலி
கைம்மிகப் போயினர். உசுரு

104. வழியிலே தசரதனது அரண்மனை வாசல் இருந்தது. அங்கே தாய்மார் வந்துநின்றார்கள். அவர்களை வணங்கினான் ராமன்.

தாதை வாயில்
குறுகினன் சார்தலும்,
கோதை வேலவன்
தாயரைக் கும்பிடா :
'ஆதி மன்னனை
ஆற்றுமின் நீர்'என்றான் ;
மாத ராரும்
விழுந்து மயங்கினர். உசுச

103. அவலித்திலர் - நொந்து கொள்ளவில்லை. என - என்று சொல்லவும். போர் - பெருங்கூட்டத்திலிருந்து வரும் இரைச்சலைக் குறிக்கும் சொல். ஒல் ஒலி - நிறைந்த சப்தம். கைம்மிக - ரொம்பவும் எடுக்க.

104. குறுகினன் சார்தலும் - நெருங்கிப் போகவும். கோதை வேலவன்:வெற்றியைக் கொண்டாடுகிற விழாக்களில் வில்லுக்கு மாலை கட்டி அலங்காரம் பண்ணுவார்கள் ; அதை ஏந்திநிற்பான் ராமன். ஆதி மன்னனை - தசரதனை. ஆற்றுமின் - ஆறுதலடையச் செய்யுங்கள்.

105. ராமனையும் சீதையையும் அந்தத் தாய்மார் புகழ்ந்தார்கள். காவலாய்ப் போகிற லக்ஷ்மணனைப் பார்த்து, 'ஒரு குறைவும் உனக்கு வராதப்பா' என்று வாழ்த்தினார்கள்.

ஏத்தி னார்,
மகனை மருகியை,
வாழ்த்தி னார்இளை -
யோனை, வழுத்தினார் ;
'காத்து நல்குமின்,
தெய்வதங் காள்'என, -
நாத்த ழும்ப
அரற்றிந டுங்குவார். ௨௬௫

106. தாய்மாரை விட்டுக் கஷ்டத்தின்பேரில் கடந்து போனான். அங்கே, வாய்பேச முடியாத நிலையில் வசிஷ்டர் நின்றார். அவரை அப்படியே கையினால் தொழுதுவிட்டுத் தேரில் ஏறிப்போகிறான்.

அன்ன தாயர்
அரிதிற் பிரிந்தபின,
முன்னர் நின்ற
முனிவனைக் கைதொழாத்

---

105. ஏத்தினார் - புகழ்ந்தார்கள். வழுத்தினார் - பிரார்த்தனை செய்தார்கள். என - என்று.

தன்ன(து) ஆருயிர்த்
தம்பியும், தாமரைப்

பொன்னும், தானும்ஓர்
தேர்மிசைப் போயினன். உ௬௬

---

106. தாமரைப் பொன்னும் - தாமரை மலரிலிருக்கும் லக்ஷ்மியோடுமே; சீதை அவ்வளவு அழகாய்த் தேரில் இருக்கிருள். உடன்வந்த லக்ஷ்மணன், அதைவிட சீதை: இவர்களை யோசிக்கும் ராமனுக்கு மனசு சரியான நிலைமையிலிருந்து சிறிது மயங்கும்; பிறகு தெளியும். தெளியும்போது, தானும் தேரில் இருப்பதாக உணருவான். இதைக் குறித்து நிற்கிறது, 'தானும்' என்ற வார்த்தை.

## 6. தைலம் ஆட்டு படலம்

1. ராமன், உயிருக்கு உயிரான ராமன், காட்டுக்குப் போகிறான், எப்படியெல்லாமோ கஷ்டத்துக்கு உள்ளாகப் போகிறான் என்பதைத் தெரிந்த அயோத்தி நகரத்தார் எப்படி ஊரில் இருந்துவிடக்கூடும்?

ஏகிய குரிசில்பின்
யாவர் ஏகிலார்?

மாஇயல் தானைஅம்
மன்னை நீங்கலாத்

தேவியர் ஒழிந்தனர்;
செல்வ மாநகர்

ஓவியம் ஒழிந்தன,
உயிர்இ லாமையால்! உகூஎ

---

1. ஏகிய குரிசில் - காட்டுக்குப் போன ராமன். மா இயல் தானை: யானையும் குதிரையும் மிகவாக உடைய படைக்கு உரிய. தேவியர் ஒழிந்தனர்: தசரதனுக்கு உயிர் ஆபத்தாக இருந்த காரணத்தால் தேவியர் போகவில்லை. சித்திரங்களைப் பார்த்தால் சோகத்தில் மூழ்கினவாகவே தோன்றுகிறது, உணர்ச்சி தத்துவம் உடையனவாகவே தோன்றுகிறது. இடம் பெயராததற்குக் காரணம், அவற்றுக்கு வேண்டிய உயிர்த்தத்துவம் இல்லை என்று எண்ணத் தோன்றுகிறது.

2. ராமன் காட்டுக்குப் புறப்படுகிற சமயம் அந்திநேரம். மாலை வெயிலானது கிழக்கே தூரத்திலுள்ள மலைச்சிகரங்களில் நின்றுநின்று, அப்படியே ஒதுங்கப் பார்க்கிறது. எருமைகளும், அவைகளோடு பசுக்களும், வயிறு நிறைய மேய்ந்துவிட்டு, நகரத்துக்குள் மெல்ல வருகின்றன. சூரியனும், மேற்குத் திசையில் அஸ்தமித்துவிட்டான். சூரியன் அஸ்தமித்தது எப்படி யிருந்தது :

மீன்புகழ் பெறவெயில்
ஒதுங்க, மேதியோ(டு)

ஆன்புகக், கதிரவன்
அத்தம் புக்கனன் ; -

' கான்புகக் காண்கிலேன் '
என்று கல்லிடைத்

தான்புக முடுகினன்
என்னும் தன்மையான். உ௬அ

3. தேரில் போகும்போது சிறிது நேரத்தில் ஒளி மயங்குகிற நேரம் வந்தது. பிறகு அதுவும் போய் இருட்டும் வந்துவிட்டது.

---

2. மீன்புகழ் பெற : நட்சத்திரங்கள் விளக்கம் பெறுவதற்காக வெயில் ஒதுங்கியதாக பாவம். மேதியோடு ஆன் - எருமையோடு பசுக்கூட்டம். கதிரவன் அத்தம் புக்கனன் - சூரியன் மேற்கு மலையில் அஸ்தமித்தான். காண்கிலேன் என்று - காண எனக்குச் சகிக்காது என்று. கல்லிடை - மலையில். முடுகினன் - வேகமாகச் சென்றான்.

அந்தியின் மயங்(கு)ஒளி
அகல, வையகம்,
நந்தலில் கைகயன்
பயந்த நங்கைதன், -
(மந்தரை உரைஎனும்
கடுவின் மட்கிய,)
சிந்தையின் இருண்டது
செம்மை நீங்கியே. உகூசு

4. இரண்டு யோசனை தூரம் போவதற்குள், மேலே சொன்னபடி நன்றாய் இருட்டிவிட்டது. ராமன் ஒரு சோலையை அடைந்தான்.

திருநகர்க்(கு) யோசனை
இரண்டு சென்(று), ஒரு
விரைசெறி சோலையை
விரைவின் எய்தினன் ;
இரதம்நின்(று) இழிந்தபின்,
இராமன் இன்துணை
உரைசெறி முனிவரோ(டு)
உறையும் காலையே. உஎ0

---

3. அந்தியின் மயங்கொளி - சூரியன் அஸ்தமித்த பிறகு உண்டாகிற மங்கிய ஒளி. வையகம் - உலகம். நந்தலில் - ஒன்றிலும் குறைவில்லாத. பயந்த - பெற்ற. கைகேசியின் மனம் முதலில் நன்றாய்த் தெளிவாக இருந்தது. அந்தத் தெளிவைக் கூனியின் சொல்லாகிய விஷம் வந்து கலக்கிவிட்டது. செம்மை - பிரகாசம் ; நேர்மை.

4. விரைசெறி - புஷ்பத்தால் வாசனை மிகுந்த. இன் துணை உரைசெறி முனிவரோடு - தனக்கு மிகவும் வேண்டியவர்களான புலமை மிகுந்த முனிவர்களோடு.

5. முனிவர்களோடு உல்லாசமாய் அளவளாவிக் கொண்டிருக்கிறான். அப்போது என்ன நேர்ந்தது :

வட்டமோர் யோசனை
வளைவிற் றாய், நடு
எள்த்தனை இடவும்ஓர்
இடமி லாவகைப்,
புள்தகு சோலையின்
புறத்துப், போர்த்தன
விட்டது, குரிசிலை
விடாத சேனையே. உஎக

6. வந்த கூட்டம் எப்படித் தங்கியது? நதிக் கரையிலும், மணல்ப் பரப்பிலும், பைம்புல் தரையிலும், வந்தவர்கள் தங்கினார்கள்.

குயின்றிய குலமணி
நதியின் கூலத்தில்,
பயின்றுயர் வாலுகப்
பரப்பில், பைம்புலில்,

---

5. வட்டம் ஓர் யோசனை வளைவிற்றாய் - ஒரு யோசனை வட்டம் என்று சொல்லும்படியாய் வளைந்து. எள்த்தனை இடமும் - எள்ளைப் போடவும் முடியாதபடி. புள் தகு - பட்சிகள் நிறைந்த. சோலையின் புறத்து - ஆசிரமத்துச் சோலைக்குப் புறம்பெல்லாம். போர்த்தன விட்டது - போர்த்து விட்டது. குரிசிலை விடாத சேனை - ராமனை விடாமல் பின் தொடர்ந்து வந்த கூட்டம்.

6. குயின்றிய குலமணி-அரிய ரத்தினங்களைப் பதித்துள்ளது போன்ற. நதியின் கூலத்து - நதியின் கரையில். பயின்றுயர் வாலுகப் பரப்பில் : செங்குத்தாய் அல்லாமல் பையப்பைய உயர்ந்துள்ள மணல் பரப்பில்.

வயின்தொறும் வைகினர்,
ஒன்றும் வாய்மடுத்(து)

அயின்றிலர்: துயின்றிலர்,
அழுது விம்மினர். ௨௭௨

7. பெண்கள் ஆங்காங்கு சோர்ந்து படுத்திருந்தது தனிப்பட்ட அழகாய் இருந்தது. கண்கள் மூடியிருந்தது நீலோற்பல மலர் முகிழ்த்திருந்தது போலிருந்தது. அலங்காரமாக அணிந்திருந்த டாக்கா மஸ்லின்போன்ற மெல்லிய ஆடைகளைக் கொய்து தலைக்கு அணையாக வைத்துக் கொண்டார்கள். கூந்தல் விரிந்து கீழே கிடந்த காட்சி மான்கள் படுத்திருந்தனவோ என்று சொல்லும்படியாக இருந்தது. சோர்வு காரணமாகவே சிறிதுநேரத்தில் உறங்கிவிட்டார்கள்.

சந்தம்

தான னன தன்ன னன
தன்ன னன தன் ன

**வா**வி விரி தாம ரையின்
மாம லரில், வா சக்

காவி விரி நாள்ம லர்
முகிழ்த்த னைய கண் ணர்,

---

6. வயின் தொறும் - இடம் இடமாக. அயின்றிலர் - உண்ணவில்லை.

7. வாவி விரி - தடாகத்தில் விரிந்துள்ள. காவி - நீலோற்பலம்.

ஆவி விரி பால்நு ரையின்
ஆடை அணை யா க,

நாவி விரி கூழை இள
நவ்வி யர்து யின் ருர். உஎ௩

8. சம்பகச் சோலைகளில், பூங்கொம்புகள் வதங்கிக் கிடந்தது போல் சிலர் படுத்திருந்தார்கள். மற்றும் சிலர், மணல்மேட்டில் வளர்ந்து கொடிவீசிய பவளக் கொடிபோல் அயர்ந்துகிடந்தார்கள்.

சம்ப கந றும்பொ ழில்க
ளில்த்,த ருண வஞ் சிக்

கொம்ப ழ(கு)ஒ சிந்த ன
எனச்சி லர்கு ழைந் தார்,

வம்ப ளவு கொங்கை யொடு
வா லு கம்வ ளர்க் கும்

செம்ப வள வல்லி கள்
எனச்சி லர்அ யர்ந் தார். உஎச

7. ஆவி விரி பால்நுரையின் ஆடை : ஆவியெழும்படியாகப் பொங்கிய பால் நுரையை ஒக்கும்படி கொய்துவைத்த டாக்கா மஸ்லின்போன்ற ஆடை. அணையாக - தலைக்கு அணையாக. நாவி விரி - தைலத்திலுள்ள புனுகு வாசனை பரவுகிற. கூழை - கூந்தல். நவ்வியர் - மான்போன்ற நங்கைமார். துயின்ருர் - உறங்கினர்.

8. தருண வஞ்சிக் கொம்பு - இளம் பூங்கொடி. அழகு ஒசிந்தன என - அழகு எல்லாம் வதங்கியதுபோல. வம்பு - ரவிக்கை. வாலுகம் வளர்க்கும் - மணல்மேட்டிலிருந்து வளர்ந்த.

9. பெண்களைப் போல மற்றவர்களும் உறங்கி விட்டார்கள். ஆனால், ராமன் உறங்கவில்லை. சுமந்திரனை மெதுவாக 'வா' வென்று அழைக்கிறான்.

ஏனை யரும் இன்ன ணம்
உறங்கி னர்,உ றங் கா
மான வனும் மந்தி ரிசு -
மந்தி ரனை வா வென்(று)-
' ஊன மில்பெ ருங்கு ணம்
ஒருங்கு டைய உன் னால்
மேல்நி கழ்வ(து) உண்டவ் வுரை
கேள்'எ னவி ளம்பும். உஎ௫

10. ராமன் சொல்லுகிறான்: அயோத்தியிலிருந்து இங்கு வந்திருக்கிற ஆடவர் பெண்டிர் எல்லோரும் என்னிடத்தில் அபாரமான அன்புள்ளவர்கள். அது காரணமாகவே அவர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். ஊருக்குத் திரும்பிப் போங்கள் என்றால் போவார்களா? ஊருக்குப் போகாமல் அவர்களும் காட்டுக்கு வருகிறதென்றால், எவ்வளவு துன்பம்! ஆதலால், நீ ஒரு காரியம் செய்யவேண்டியிருக்கிறது.

---

9. ஏனையரும் - மற்றவர்களும்; ஆடவர்களும். உறங்கா மானவனும் - உறங்காத குணசீலனான ராமன். ஊனமில் பெருங் குணம் - யாதொரு குற்றமுமில்லாத உயர்ந்த குணங்கள் எல்லாம். மேல் நிகழ்வது - மேலே நடக்கவேண்டிய காரியம்.

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

‘ பூண்டபேர் அன்பினு ரைப்
போக்குவ(து) அரிது ; போக் கா(து)
ஈண்டுநின்(று) ஏகல்பொல் லா(து) ;
எந்தைநீ இரதம்இன் னே
தூண்டினை மீள்க : ஆண் டுச்
சுவட்டைஓர்ந்(து) என்னைஆங் கே
மீண்டனன் என்னமீள் வர்,
இதுநின்னை வேண்டிற்(று)’ என் றான்.

11. ராமன் லகுவாய்ச் சொல்லிவிட்டான். சுமந்திரனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. எப்படித் தேரைக்கொண்டு திரும்பிப்போகிறது? தசரதனுக்கு முன் எப்படி விழிக்கிறது? - என்று ஒரேயடியாய்த் திணறுகிறான்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

‘ தேவியும் இளவலும்
தொடரச், செல்வனைப்
பூவியல் கானகம்
புகஉய்த்தேன் என்கோ !

---

10. பூண்ட பேர்அன்பு-நிலையான பேரன்பு. இன்னே தூண்டினை மீள்க - இப்போதே தூண்டி மீளவேண்டும். ஆண்டுச் சுவட்டை ஓர்ந்து - அது காரணமாகத் தேர்ச் சக்கரத்தின் தடத்தை அறிந்து.

11. தேவியும் இளவலும் - சீதையும் லக்ஷ்மணனும். செல்வனை - ராமனை. பூவியல் கானகம் - புஷ்பம் நிறைந்த

கோவினை உடன்கொடு
குறுகினேன் என்கோ!
யாவது கூறுகேன்?
இரும்பின் நெஞ்சினேன்.' உஎஎ

12. புஷ்பத்திலுள்ள இதழ்களைச் சேர்த்துப் பரப்பினாலும் சீதையின் பாதங்களில் உறுத்துமே!

'தாருடை மலரினும்
ஒதுங்கத் தக்கிலா
வாருடை மயிலொடு,
மதுகை மைந்தரைப்
பாரிடைச் செலுத்தினேன்,
பழைய நண்பினேன்! -
தேரிடை வந்தனன்,
தீதி லேன், என்கோ!' உஎஅ

13. நான், என்ன, ஈவு இரக்கம் அற்றவன், அறிவில்லாதவன். ஆம், வஞ்சனைக்கு ஆளானவன். உடலும் உயிரும் உடைகிற நிலைமையிலிருக்கிற

---

காட்டில்; இது வருத்தத்தால் மனங்கசிந்து சொன்ன சொல். கோவினை உடன்கொடு குறுகினேன் என்கோ: ஆமாம், ராமனையே கூட்டிக்கொண்டு வந்துவிட்டேன் என்ற பொய்யைத்தான் சொல்வேனோ.

12. தாருடை மலரினும் - ஒட்டித் தைத்த பூவிதழ் மேலும். ஒதுங்கத் தக்கிலா: நடக்க முடியாத. வாருடை மயிலொடு: சீதையோடும். மதுகை மைந்தரை - வலிமையுள்ள ராமலக்ஷ்மணர்களை. தீதிலேன்-எனக்கு யாதொரு அசௌகரியமுமில்லை.

சக்கரவர்த்தியிடம் போய் நீ சொன்னதைச் சொல்லவா ? ரொம்ப அழகு !

‘ வன்புலக் கல்மன
மதிஇல் வஞ்சனேன்,

என்(பு)உலப் புறஉடைந்(து)
இரங்கு மன்னன்பால்

உன்புலக்(கு) உரியசொல்
உணர்த்தச் செல்கெனோ ? -

தென்புலக் கோமகன்
தூதில்ச் செல்கெனோ ? ’ உஎகூ

14. அக்கினிவளர்த்து, அதையொட்டிய வேள்வியெல்லாம்செய்து, உன்னை அருமையாய்ப் பெற்றான் உன் தந்தை. அவனிடம் போய், உன் அருமை மைந்தனை வீரன் காட்டுக்குப் போய்விட்டான், என்று நான் சொல்லவா ?

‘ அங்கிமேல் வேள்விசெய்(து)
அரிதில்ப் பெற்றநின்

சிங்கஏ(று) அகன்ற(து) என்(று)
உணர்த்தச் செல்கெனோ ?

---

13. வன்புலக் கல்மனம் - உணர்ச்சி யாதுமில்லாத கல்மனம், என்பு உலப்புற - உடல் கரையும்படி. உன் புலக்கு உரிய சொல் - உன் அறிவுக்கு ஏதோ ஒத்தவாறாகத் தோன்றுகிற சொல்லை. தென் புலக் கோமகன்-தென் திசையிலுள்ள எமனது.

14. அங்கி - அக்கினி. சிங்க ஏறு - ஆண் சிங்கம்.

எங்கள் கோமகற்(கு)இனி
என்னில், - கேகயன்

நங்கையே கடைமுறை
நல்லள் போலுமால்.' உ௮0

15. முடிவாக இவ்வளவு வார்த்தைகளும் சொல்லிவிட்டு, ராமன் காலில் விழுந்து புரளுகிறான். மேலும் என்ன என்னவோ சொல்லிப் புரளுகிறான்.

முடிவுற இன்னன
மொழிந்து, பின்னரும்,

அடியுறத் தழுவினன், -
அழுங்கு பேர்அரா

இடியுறத் துவளுவ(து)
என்ன, இன்னலின்

படியுறப் புரண்டனன் ;
பலவும் பன்னினான். உ௮க

---

14. எங்கள் கோமகற்கு - தசரத சக்கரவர்த்திக்கு. என்னில் - என்னைவிட. கேகயன் நங்கையே : கைகேசியே. கடைமுறை நல்லள் - யாதொரு சந்தேகமுமில்லாமல் நல்லவள்.

15. அடியுறத் தழுவினன் - பாதத்தைத் தழுவியவனாய். அழுங்கு பேர் அரா - பயந்துபோன பெரும் பாம்பு ஒன்று. இடியுறத் துவளுவது என்ன - தலையில் இடி விழுந்த மாத்திரத்தில் அப்படியும் இப்படியுமாகப் புரளுவதுபோல. இன்னலின் படியுறப் புரண்டனன் - தாங்கமுடியாத துயரத்தினால் மண்ணில் விழுந்து புரண்டான்.

16. சுமந்திரன் படுகிற கஷ்டத்தை ராமன் பார்த்தான். அப்படியே கையால் எடுத்துத் தனியான இடத்துக்கு அழைத்துச் சென்று, விஷயத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

> திடக்கையால் எடுத்(து),அவற்
> தழுவிக், கண்ணநீர்
>
> துடைத்து,வே(று) இருத்தி,மற்(று)
> இனைய சொல்லினன், -
>
> அடக்கும்ஐம் பொறியொடு
> கரணத்(து) அப்புறம்
>
> கடக்கும்வா லுணர்வினுக்(கு)
> அணுகும் காட்சியான். உஅஉ

16. அவன் தழுவி - அவனைத் தழுவி. அடக்கும் ஐம்பொறியொடு கரணத்து அப்புறம் கடக்கும்வாலுணர்வினுக்கு அணுகும் காட்சியான் : கடவுள் தத்துவம் யாருக்கும் புலனாகும் ; கண்வழியாகவும், நாசியின் வழியாகவும், ருசி பார்க்கிற வாயின் வழியாகவும், கேட்கிற செவியின் வழியாகவும், தொட்டு உணர்கிற உடற்புறத்தின் வழியாகவும், நம்முடைய அறிவு சதா தொழிற்பட்டுக்கொண்டிருக்கிறது; அதாவது, நம்முடைய அறிவு புறத்தே போய்க்கொண்டிருக்கிறது. இப்படிப் போவதைத் தடுத்துவிட்டு, உள்முகமாகப் பார்த்தோமானால், மனசு என்பது தென்படும். அந்த மனசோடு ஒட்டி, பகுத்தறியும் புத்தி என்றும், சிந்திப்பதற்கு ஆதாரமாகவுள்ள சித்தம் என்றும்,சிந்தித்தபின் விரும்பவோ வெறுக்கவோ தூண்டும் அகங்காரம் என்றும், மூன்று கரணங்கள் இருக்கின்றன. மனசையும், இந்த மூன்று கரணங்களையும் உற்றுப் பார்ப்போமானால், அவை மூலமாகத் தொழிற்படுவது ‘ நாம் ’ அல்ல, கடவுள்தான் என்பது

17. சுமந்திரனைப் பார்த்து ராமன் சொல்லு கிறன்: பிறக்கிறது என்று ஏற்பட்டு விடுகிறது. அது காரணமாக இன்ப துன்பங்கள் எல்லாம் வந்து சேரு கின்றன. அவைகளை எப்படி வைத்துப் பார்க்க வேண்டுமோ அப்படி வைத்துப் பார்க்கும் ஞானியல் லவா நீ. வாஸ்தவந்தான். நீ அயோத்திக்குத் திரும்பிப் போனல், ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரும் உன் னைப் பழிப்பார்கள். அந்தப் பழியைப் பங்குபோடுவ தற்கு யாரும் இல்லைதான். ஆனல், உன் உள்ளமானது என்ன சொல்லும்? சத்தியத்தை இந்த விதமாகக் காப்பாற்றுவதே தர்ம மார்க்கம் என்று சொல்லும் அல்லவா?

'பிறந்தல்என்(று) உற்றபின்
பெறுவ யாவையும்,
திறத்(து)உளி உணர்வதோர்
செம்மை உள்ளத்தாய்!
புறத்துறு பெரும்பழி
பொதுவின்(று) எய்தலும்
அறத்திறம்: மறத்தியோ,
அவலம் உண்(டு)என ?' உஅந

---

தெரியவரும். ஆகவே, ஞானிகள், கரணங்களை யெல் லாம் கடந்து பார்க்கிற தெளிவான ஞானத்தையுடைய வர்கள். அவர்களுக்கே இறைவன் காட்சி யளிக்கிறன். ராமன் அத்தகைய ஞானி, கடவுளோடு ஒன்றுபட்டவன் தான் என்கிறர் கவிஞர்.

17. திறத்து உளி - ஏற்பட்ட நேரான முறையில் அறத்திறம் - தர்ம மார்க்கம். மறத்தியோ: அறத்திறம் என்று உணர்ந்த உண்மையை வேண்டுமென்று மறக் கிறயோ. அவலம் உண்டு என - துன்பம் இருக்கிறது என்ற காரணத்தினல்.

18. அருமையோடு இவ்விதமாக மேலும் கண்டிக்கிறான் ராமன் : தர்மமானது, முதலில் புகழைக் கொடுக்கிறது. காரியம் முற்றிய பிறகு உள்ளத்துக்கு மெய்யான இன்பத்தையே கொடுத்துவிடுகிறது. இது உனக்குத் தெரிந்ததே.

'முன்புநின்(று) இசைநிறீஇ,
முடிவு முற்றிய
பின்புநின்(று) உறுதியைப்
பயக்கும் பேரறம்,
இன்பம்வந்(து) உறும்எனின்
இயைவ தாய்,இடைத்
துன்பம்வந்(து) உறும்எனில்
துறக்க லாகுமோ ?' ௨௮௪

19. நீயோ மகா வீரன். உனக்குத் தெரியாத காரியம் அல்லவே: நான் ஒருவன் பிறந்த காரணமாகவா, சூரிய குலத்துக்கு வசை உண்டாக்குவது? எல்லாம், ஏதோ காட்டுக்குப் போவது எனக்கு கஷ்டம் என்பது பற்றித் தானே ?

---

18. இசை நிறீஇ-புகழை உலகத்தில் நிற்கச்செய்து. உறுதியைப் பயக்கும் - நித்திய ஆனந்தத்தைக் கொடுக்கும். பேரறம் : உயர்ந்த லட்சியமும் அதோடு ஒத்த செயலும். உறும் எனில்-அடையுமானால். இயைவதாய்-நாம் ஏற்றுக்கொள்வதாய். இடை - ஏதோ சிறிது காலத்துக்கு.

' கான்புறஞ் சேறலில்
அருமை காண்டலால்,
வான்பிறங் கியபுகழ்
மன்னர் தொல்குலம்,
யான்பிறந்(து), அறத்தினின்(று)
இழுக்கிற்(று) என்னவோ? -
ஊன்திறந்(து) உயிர்குடித்(து)
உழலும் வேலினய் !' உ௮ரு

20. ஏதோ, தவம் தவம் என்றெல்லாம் சொல்லு கிருர்கள். உண்மையில், தந்தைக்குத் தவமாவது, சத்தியத்தின்பொருட்டு என்னைக் காட்டுக்கு அனுப்பு வதுதான். அதையொட்டிக் காட்டுக்குப் போவதுதான் எனக்குத் தவம்.

' வினைக்கரும் மெய்ம்மையன்,
வனத்துள் விட்டனன்
மனக்கரும் புதல்வனை
என்றல், மன்னவன்

---

19. கான் புறஞ்சேறலில் - காட்டுப் பக்கமாய்ச் செல்லுவதால். அருமை காண்டலால்-கஷ்டம் இருப்பது காரணமாக. வான்பிறங்கிய புகழ் - வானளவும் எட்டிய புகழ்; வானவருமே புகழும்படியான. ஊன் திறந்து உயிர் குடித்து உழலும் வேலினய் - பகைவருடைய ஊனைக் கீறி, அந்த ஊனுக்குள் இருக்கும் உயிரை வாங்கு கிற வேலை ஏந்திய வீரனே.

20. வினைக்கரும் மெய்ம்மையன்-அரிய செயல்களைச் சாதிக்கத் தக்க கருவியாகக் கொண்ட சக்கரவர்த்தி. மனக்கு அரும் - மனசுக்கு உவந்த மகனுகிய என்னை.

தனக்(கு)அரும் தவம் ; அஃது
தலைக்கொண்(டு) ஏகுதல்

எனக்(கு)அரும் தவம்,இதற்(கு)
இரங்கல், எந்தைநீ.' உ௮௬

21. அரிய பெரிய உண்மைகளெல்லாம் இந்த விதமாக எடுத்துச்சொல்லி, ராமன் சுமந்திரனைச் சமாதானம் பண்ணுகிறான். சமாதானம் பண்ணிவிட்டு, தசரதனிடம்போய்ச் செய்திசொல்லச் சொல்லுகிறான்:

'ஏழிரண்டு ஆண்டுநீத்(து),
ஈண்ட வந்(து)உனைத்

தாழ்குவன் திருவடி ;
தளரல் ஈண்(டு)எனச்,

சூழிவெங் கடகளிற்(று)
அரசற் சொல்லிப்,பின்

வாழிமா தவன்சொலால்
மனம்தெருட்டுவாய்.' உ௮எ

---

20. இரங்கல் - வருந்த வேண்டாம். எந்தை - என்னப்பனே, சுமந்திரனே !

21. ஏழிரண்டு ஆண்டு நீத்து - பதினாலு வருஷம் கழிந்து. ஈண்ட வந்து - சீக்கிரமாகவே வந்து. தளரல்- தளரவேண்டாம். ஈண்டு - இப்படியாக. சூழி வெம் கடகளிற்று - முகாபடாம் அணிந்த மதம் பொழிகிற யானை மேல் சவாரிசெய்யும். அரசற் சொல்லி - அரசனுக்குச் சொல்லி. வாழி - என்றென்றும் போற்றத்தக்க. மனம் தெருட்டுவாய்-அரசனுடைய மனசுக்குத் தெளிவை உண்டாக்குவாய்.

22. என்னைப்பெற்ற தாய்மார் மூவருக்கும் என் வணக்கத்தைச் சொல்லவேண்டும். பிறகு சக்கரவர்த்தியாக இருக்கிற என் அருமைத் தம்பி பரதன் பக்கத்திலேயே நீ இருக்கவேண்டும்.

'முறைமையால் எற்பயந்(து)
எடுத்த மூவர்க்கும்

குறைவிலா என்நெடு
வணக்கம் கூறிப், பின்

இறைமகன் துயர்துடைத்(து)
இருத்திமா(டு)' என்றான் :

மறைகளை மறைந்துபோய்
வனத்துள் வைகுவான். உஅ

22. முறைமையால் - ஒருவர் பின் ஒருவராக. எற் பயந்து எடுத்த - என்னைப் பெற்று வளர்த்த. இறை மகன் - சக்கரவர்த்தியாகவுள்ள பரதன். இருத்தி மாடு - பக்கத்தில் இருப்பாயாக. மறைகளை மறைந்துபோய் வனத்துள் வைகுவான் : கடவுளைக் காணுவதற்கு ஆணவம் நம்மைவிட்டு நீங்கவேண்டும். நாட்டுக்குள்ளும் நகரத்துக்குள்ளும் இருக்கும்போது, நான் இதைச் செய்தேன் என்னுடையது இது, என்றுதான் எண்ணத் தோன்றும். காரணம், வீடு வயல் எல்லாம் மனுஷனுடைய செயலால் விளைவது. வனத்திலோ, மனுஷன் செயல் என்று சொல்லக்கூடியதான பொருள் ஒன்றும் இல்லை. எல்லாம் இயற்கையாகிய கடவுளின் நியதியால் உண்டாவது. அவைகளைக் கண்ணுற்று நோக்கும்போதுதான் கடவுள் தத்துவத்தை நோக்க வசதி உண்டாகும். நாட்டிலும்நகரத்திலும் இருந்துகொண்டு ஞான நூல்களைப் படிக்கலாம் படித்தாலுங்கூட அது சாத்தியமாவது இல்லை.

23. ராமன் சொல்லுவதைக் கேட்ட பிறகு சுமந்திரனுக்கு ஒரு துணிவு உண்டாகிறது. 'செய்ய வேண்டிய காரியம், இனி சத்தியதர்மத்துக்கான வழியை விட்டு விலகாது இருப்பதுதான்' என்று எண்ணுகிறான். விடைபெற்றுக் கொள்ளுவதற்காக ராமனை வணங்குகிறான். இருந்தாலும், இந்த உயிர் போகமாட்டேன் என்கிறதே, பூர்வவினையின் வசமாக அல்லவா இருக்கிறது! என்று மனம் இடிகிறான்.

ஆள்வினை உண்மையில்
 திறம்பல் அன்(று),எனுத்

தாள்முதல் வணங்கிய
 தனித்திண் தேர்வலான்,

ஊழ்வினை வசத்(து)உயிர்
 நிலையென்(று) உன்னுவான், -

வாழ்வினை நோக்கியை
 வணங்கி நோக்கினான். உஅகூ

---

23. ஆள் வினை - செய்யவேண்டிய காரியம். உண்மையில் திறம்பல் - சத்தியத்துக்கான வழியைவிட்டுப் புறம் போதல். எனு - என்று முடிவுசெய்து. தாள் முதல் - ராமனது திவ்விய பாதம். வாழ்வினை நோக்கியை : காட்டுக்குப் போனால் நாயகனுக்கு வேண்டிய காரியங்களையெல்லாம் தானே செய்வதற்கு வசதியுண்டென்று எண்ணுகிறாள் சீதை ; அது காரணமாக நல்ல வாழ்க்கையைக் குதூகலத்தோடு எதிர்பார்க்கும் அவளை. நோக்கியை - எதிர்பார்த்துக் கொண்டிருப்பவளை.

24. உற்சாக நிலையில் நிற்கிற சீதையைப் பார்த்து, சுமந்திரன் என்ன செய்தி என்று கேட்ட வண்ணமாய் நிற்கிறான். அவளும் அதை அறிந்து சொல்லுகிறாள் : 'சக்கரவர்த்திக்கும், மாமிமாருக்கும் என்னுடைய வணக்கத்தைச் சொல்லிவிட்டு, என் தங்கையரிடம் நான் வளர்த்த மைனாவையும் கிளியையும் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளும்படி ஞாபகமாய்ச் சொல்லவேண்டும்' என்றாள்.

அன்னவள் கூறுவாள்:
'அரசற்(கு) அத்தையர்க்(கு)

என்னுடை வணக்கமுன்
இயம்பி, யானுடைப்

பொன்நிறப் பூவையும்
கிளியும் போற்றுகென்(று)

உன்னும்என் தங்கையர்க்(கு)
உணர்த்து வாய்' என்றாள். உகூ0

25. சுமந்திரன் பார்த்தான் : 'அடடா, சிறு குழந்தையாக இருக்கிறாளே இவள். காட்டுக்குப் போகிறதில் கஷ்டம் இருக்கிறதென்று கொஞ்சம்கூட உணரவில்லையே' என்று எண்ணினான். அவ்வளவு தான், சோகம் அவனை மீறிவிட்டது. 'உயிரை

---

24. பூவை - மைனா. உன்னும் என் தங்கையர்க்கு - என்னைப் பிரிந்தது காரணமாக வருந்திக்கொண்டிருக்கிற தங்கையர்க்கு ; அதாவது பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கன் ஆகிய மூவருடைய மனைவியர்களுக்கு.

யாரால்த்தான் நீக்கமுடியும்? எளிய காரியமாய் இல்லையே, ஐயோ' என்று வாய்விட்டு அலறிவிட்டான். உடனே ராமன் தடுத்தான். சுமந்திரன் திடீரென்று அலறுவதற்குக் காரணம் சீதைக்கு விளங்கவில்லை - 'குருவியையும் கிளியையும் நன்றாய் வளர்க்கவேண்டும் என்று தானே நான் சொன்னேன்! இதில் வருத்தப் படுவதற்கு என்ன இருக்கிறது? சுமந்திரன் இப்படிப் பொருமி விம்முவதற்கு எந்தக் காரணமும் இல்லையே' என்று திகைக்கிறாள் சீதை. ஆனாலும், சுமந்திரனுடைய சோகம் அவளைத் தாக்க, அவளும் அழ ஆரம்பித்தாள்.

தேர்வலான் அவ்வுரை
  கேட்டுத், ' தீங்குறின்
யார்வலார் உயிர்துறப்(பு),
  எளிதன் றே'எனப்,
(போர்வலான் தடுக்கவும்,)
  பொருமி விம்மினன், -
சோர்விலாள் அறிகிலாத்
  துயர்க்குச் சோரவே. உகூக

---

25. தீங்கு உறின் - கேடு வந்தகாலத்தில். எளிது அன்றே என : எளியது அல்லவே என்று ராமன் தடுக்கவும் பொருமி விம்மினன். சோர்விலாள் - சீதை. அறிகிலாத் துயர்க்கு - தனக்கு விளங்காத சுமந்திரனுடைய துயருக்கு.

26. ஏதோ ஒரு விதமாக மனசைத் தேற்றிக் கொண்டு 'விடைகொடு' என்று ராமனைக் கேட்கிறான்.

ஆறினன் போல்ச்சிறி(து)
அவலம், ஆவழி
வேறிலான், ' அன்பினாய் !
விடைதந்து ஈ(க) 'என,
ஏறுசேவ கற்றொழு(து) ; -
இளைய மைந்தனைக்,
' கூறுவ(து) யா(து)'என,
இனைய கூறினான். உகூஉ

27. லக்ஷ்மணன் சொல்லுகிறான் : வாக்குக் கொடுத்து ராஜ்யத்தை ராமனுக்கென்று ஆக்கினான் முதலில்; பிறகு அந்த வாக்குக்கு மாறாக, யாதொரு சம்பந்தமுமில்லாத பெண்ணினிடம் அந்த ராஜ்யத்தைக் கொடுத்தான். சத்தியத்தை ரொம்ப அழகாகக் காத்துவிட்டான் தசரதன் !

' உரைசெய்(து)எம் கோமகற்(கு)
உறுதி யாக்கிய
தரைகெழு செல்வத்தைத்
தவிர்த்து, மற்றொரு

---

26. அவலம் - துயரம். ஆவழி - கடைப்பிடிக்கக் கூடிய வழி. ஏறு சேவகற் றொழுது - சிங்கம் போன்ற ராமனைத் தொழுதுவிட்டு. இளைய மைந்தனை - லக்ஷ்மணனைப் பார்த்து. இனைய கூறினான் - இந்த வார்த்தைகளை லக்ஷ்மணன் கூறினான்.

27. தரை கெழு செல்வம் - விஸ்தாரமான பூமி கொண்ட ராஜ்யம்.

விரைசெறி குழலிமாட்(டு)
அளித்த மெய்யனே,
அரசன்என்(று) இன்னும்ஒன்(று)
அறையற் பாலதோ?' உ௬௩

28. காட்டுக்குப் போய் அருமைப் புதல்வன் காய கனிகளை உண்டு கொண்டிருக்கிறான். தந்தையாகிய தானோ, போசனப் பிரியனாய், நன்றாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறான். பொய்யில்லாத மன்னன் என்கிற பெயர் வேறே கேடு!

'கானகம் பற்றிநல்
புதல்வன் காய்உணப்,
போனகம் பற்றிய
பொய்யில் மன்னர்க்(கு),இங்(கு)
ஊனகம் பற்றிய
உயிர்கொ(டு) இன்னும்போய்
வானகம் பற்றிலா
வலிமை கூ(று) 'என்றான். உ௬௪

29. இதே ஆங்காரத்தில், பரதனுக்குச் சொல்ல வேண்டியதையும் சொல்லுகிறான். சகோதரர்கள்

---

27. விரை செறி குழலி மாட்டு - வாசனை ஏற்றிய கூந்தலோடு கூடிய கைகேசிக்கு. மெய்யனே - சத்தியத்தைக் காப்பாற்றுகிற அரசனே; காரமான ஹாஸ்யம்.

28. போனகம் - சாப்பாடு. ஊனகம் பற்றிய உயிர் - உடலை விடாது பற்றியுள்ள என் உயிர். வானகம் பற்றிலா - இறந்து வானுலகத்துக்குப் போகாத. வலிமை - உடலுறுதியை.

என்றால், ஒரே வயிற்றில் பிறந்து ஒன்றாக வளர்ந்து ஆபத்து வந்த காலத்தில் ஒருவருக்கு ஒருவர் உயிரைக் கொடுத்து உதவிசெய்கிறவர்கள்தான். அப்படி உதவி செய்யாமல்ப் போனால் அவர்கள் சகோதரர்கள் அல்ல: ஏதோ மூன்று பனைகள் ஒரே இடத்திலிருந்து முளைத்து ஒன்றாக நெடுங்காலம் வளர்ந்துநின்ற கணக்குத்தான். ஒரு மரத்துக்கு ஆபத்து ஏற்பட்டால் மற்ற மரங்கள் சும்மா தானே நிற்கும்? சகோதர பந்தம் அந்த மரங் களுக்கும் கிடையாது, எங்களுக்கும் கிடையாது.

'மின்னுடன் பிறந்தவாள்ப்
பரத வேந்தற்கு,

மன்னுடன் பிறந்திலன்,
மண்கொண்(டு) ஆள்கின்ற

தன்னுடன் பிறந்திலன்,
தம்பி முன்னலன், -

என்னுடன் பிறந்தயான்
வலியன் என்றியால்.' உ௯௫

29. மின்னுடன் பிறந்த வாள் : மின்னலோடு மின்னலாகவே வாள் இருந்தது. அதைப் பிரித்துக் கொண்டு வந்து ஆயுதமாக வைத்திருக்கிறது ; வாள் அவ்வளவு பிரகாசம் பொருந்தியது. மன் - ராமன். தன்னுடன் - பரதனுடன். தம்பி முன்னலன் - சத்துருக்கனுக்கு அண்ணனும் அல்ல. என்னுடன் பிறந்த யான் : நான் தன்னந் தனியாகத்தான் பிறந்தேன் ; மனம் அவ்வளவு கசந்து, சகோதர தர்மத்தில் நம்பிக்கையே அற்றுப்போய் விட்டது. குறிப்பு : அபூர்வமான பாவமும் உருவமும் அமைந்த பாட்டு.

30. பரதன் சம்பந்தமாக லக்ஷ்மணனுடைய கடுஞ்சொல்லைக் கேட்க ராமனுக்குச் சகிக்கவில்லை.

ஆரியன் இளவலை
நோக்கி, ' ஐய ! இச்
சீரிய அல்லன
செப்பல் ' என்றபின் ; -
பாரிடை வணங்கினன்,
பதைக்கு நெஞ்சினன்,
தேரிடை வித்தகன்
சேறல் மேயினன். உசுசு

31. சுமந்திரனுக்கு அந்த இடத்தை விட்டுப் புறப்படமுடியவில்லை. திகைத்துத் தேருக்கு வேண்டிய சாமான்களைச் சேர்த்தான். சேர்த்துவிட்டு நெடுநேரம் அப்படியே நின்றான். பிறகு பூட்டுகிறான்; பூட்டி விட்டு மெள்ள வடக்குமுகமாகக் குதிரையைத் திருப்பு கிறான். அந்த நிலையிலேயே நெடுநேரம் நிற்கின்றன குதிரையும் தேரும்.

கூட்டினன் தேர்ப்பொறி ;
கூட்டிக் கோள்முறை
பூட்டினன் புரவி ; அப்
புரவி போம்நெறி

---

30. ஆரியன் - ராமன். இளவலை - தம்பியை. சீரிய அல்லன செப்பல் - தகாத வார்த்தைகளைச் சொல்லாதே. வணங்கினன் - ராமனை வணங்கிவிட்டு. நெஞ்சினன் - நெஞ்சினனாய். தேரிடை வித்தகன் - தேர் வல்லான். சேறல் - செல்லுதல்.

31. கூட்டினன் தேர்ப்பொறி - தேருக்குரிய சாமான் களைச் சேர்த்தான். கோள் முறை பூட்டினன் - வார் முதலியவைகளை முறையாக மாட்டினன். புரவி போம் நெறி - குதிரை போகவேண்டிய வழி.

காட்டினன் ; காட்டித்தன்
கல்வி மாட்சியால்

ஓட்டினன், ஒருவரும்
உணர்வு றுமலே. உ௩எ

32. வந்திருந்த ஜனங்களுக்குத் தெரியாமல் சுமந்திரன் தேரை ஓட்டிக்கொண்டு போய்விட்டான்.

இனி ராமன் புறப்படுகிறான். அவனுக்குத் துணையாயுள்ள படைகள் : சீதையின் அசையாத தீரமான மனநிலை ஒன்று; தன்னுடைய உயர்ந்த லட்சியத்தில் நிற்கும் ஆண்மை இரண்டு; மூன்றாவதாகத் தம்பி லக்ஷ்மணன். இந்த மூன்றோடு, இன்னும் மூன்று சக்தி வாய்ந்த கருவிகள் : கருணை, அறிவு, சத்தியம், - ஆக ஆறு துணைகள். சொல்லாமலே விளங்கும், ஏழாவது கருவி ஒன்றும்.

தையல்தன் கற்பும்,தன்
நகவும், தம்பியும்,

மையறு கருணையும்,
உணர்வும், வாய்மையும்,

---

31. கல்வி மாட்சியால் - தேர் ஓட்டும் அரிய திறம் கொண்டு. அங்கு வந்த ஜனங்களுக்குச் சத்தம் ஒன்றும் கேளாமல் ஓட்டினான். குறிப்பு : சுமந்திரனுக்கு உடலும் உள்ளமும் ரொம்பவும் திகைத்து மெள்ள மெள்ளத் தொழில்படுகின்றன என்ற விஷயம், வார்த்தைகளை மடக்கி மடக்கிக் கூறும் வகையால் தெரியவருகிறது. அருமையான செய்யுள் பாவம் இது.

செய்யகை வில்லுமே
சேம மாகக்கொண்(டு),
ஐயனும் போயினன்
அல்லின் நாப்பணே. உகூஅ

33. ராமன் லக்ஷ்மணன் சீதை மூவரும், ஒரே இருட்டாக இருக்கும்போதே காட்டுக்குள் மெள்ள மெள்ள நடந்துபோகிறார்கள். அப்படி நடந்துபோகிறவர்களை வழிமறிக்கிற மாதிரி யிருக்கிறது, அந்த இருள். இருள் ஏன் அப்படி வழிமறிக்கிறது என்று கேட்டால், அரக்கர்களுடைய திருட்டுக் காரியங்களுக்கெல்லாம் நெடுகிலும் உடனிருந்து உதவிசெய்து வந்ததுதான் காரணம். ராமனை அப்படியே போகவிட்டுவிட்டால், நடந்து நடந்து, நண்பர்களாகிய அரக்கர்களை ஹதம் செய்துவிடுவான்; ஆதலால் தடுப்போம் என்று இருள் தடுத்தது. இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த வானவர்கள் என்ன செய்தார்கள், பார்க்கலாம்:

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

பொய்வினைக்(கு) உதவும்வாழ்க் கை
அரக்கரைப் பொருந்தி,அன் றோர்
செய்வினைக்(கு) உதவும்நட் பால்
செல்பவர்த் தடுப்ப(து)ஏய்க் கும்

---

32. சேமமாக - பாதுகாக்கும் படையாக. ஐயனும் - ராமனும். அல்லின் நாப்பணே - இருட்டுக்குள்ளே.

33. பொய்வினைக்கு உதவும் வாழ்க்கை - பொய்யாகிய அதிதேவதைக்கு வழிபாடு செய்வது போன்ற வாழ்க்கையையுடைய. செல்பவர்த் தடுப்பது ஏய்க்கும் இருள் -

மைவிளக் கியதேஅன் ன
வயங்(கு)இருள் துரக்க,வா னம்
கைவிளக்(கு) எடுத்த(து)என் ன,
வந்தது கடவுள்த்திங் கள். உகக

34. சந்திரன் உதயமாய்விட்டது. ராமனும் லக்ஷ்மணனும் சௌகரியமாய் நடக்கிறார்கள். சீதையின் மெல்லிய பாதத்துக்குக் காட்டுப்பாதை கஷ்டமாகத்தானே இருக்கும்! இதையறிந்து, சந்திரனானவன் வெண்பஞ்சைப் பரப்பியமாதிரி யிருந்தது, மரங்களினிடையே வந்து தரையில் விழுந்த நிலா ஒளி.

அஞ்சனக் குன்றம்அன் ன
அழகனும், அழகன்தன் மேல்
எஞ்சலில் பொன்போர்த்(து)அன் ன
இளவனும், - இந்துஎன் பான்,

---

ராமன் முதலியோரைத் தடுக்கின்றதோ என்று சொல்லும்படியான இருளை. இருள் துரக்க-அந்த இருளைத் துரத்துவதற்காக. மை - கண்ணுக்கிடும் மை. விளக்கியதே அன்ன : வெண்மை ஏதேனும் ஒட்டியிருந்தால் அதை நீக்கித் துப்புரவு செய்தமாதிரி. வயங்கு - தெள்ளத் தெளிந்த. கடவுள்த் திங்கள் - தெய்விகமான அருளோடு கூடிய சந்திரன். ராமன் முதலியவர்களுக்கு உதவி செய்த நன்றி பாவத்தை, 'கடவுள்' என்ற அடை காட்டுகிறது.

34. ராமன் மை பூசிய குன்றம்போலிருந்தான். அதே சாயலில் இருந்த லக்ஷ்மணனோ, அந்தக் குன்றத்தைப் பொன்னால் பொதிந்ததுபோலிருந்தான். இந்து என்பான் - சந்திரன் என்று சொல்லப்படுகிறவன்.

வெஞ்சிலைப் புருவத்தாள் தன்
மெல்லடிக்(கு) ஏற்பவெண் ணூல்ப்
பஞ்சிடைப் படுத்தால்என் ன,
வெண்ணிலாப் பரப்பப்,போ னார். ௩00

35. இப்படியாக நிலவில் நடந்து, சூரியோதயத்துக்கு முன், இரண்டு யோசனை தூரம் சென்று விட்டார்கள், ராமன் சீதை லக்ஷ்மணன் ஆகிய மூவரும்.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு, அயோத்தியில் சுமந்திரன் போய்ச் சேர்ந்த காரியத்தைப் பார்ப்போம்.

பரிதிவா னவனும்கீழ் பால்ப்
பருவரை பற்றுமுன் னம்,
திருவின்நா யகனும்தென் பால்
யோசனை யிரண்டுசென் றான் ; -
அருவிபாய் கண்ணும்புண் ணாய்
அழிகின்ற மனமும்தா னும்
துரகமான் தேரில்ப்போ னான்
செய்தது சொல்லல்உற் றாம். ௩0௧

---

34. வெஞ்சிலைப் புருவத்தாள் - வில்லைப்போல் வளைந்த புருவத்தோடு கூடிய சீதை. அழகனும் இளவலும் போனார் என்பது முடிபு.

35. பரிதி வானவனும் - சூரியனும், பருவரை - பெரிய மலை, திருவின் நாயகன் - ராமன். மனமும் தானும்: சுமந்திரனது மனசு ராமனையே எண்ணிக்கொண்டிருந்ததால், தான் தேரில் போனதாகத் தெரியவில்லை. சிறிது நேரம் கழித்துத்தான் தெரியவந்தது. துரகமான்-குதிரை.

36. ஆறு நாழிகை நேரத்தில் சுமந்திரன் அயோத்தியை அடைந்துவிட்டான். நேராக வசிஷ்டரிடம் போய் அவரைக் கண்டுகொண்டான்.

கடிகையோர் இரண்டுமூன் றில்
  கடிமதில் அயோத்திகண் டான்;
அடியிணை தொழுதான்ஆ தி
  முனிவனை; அவனும்உற் ற
படியெலாம் கேட்டுநெஞ் சில்ப்
  பருவரல் உழந்தான்; முன் னே
முடி(வு)எலாம் உணர்ந்தான், ' அந் தோ
  முடிந்தனன் மன்னன் ' என் ருன். ௩0௨

37. முனிவர் சொல்லுகிருர்: ' பழி வந்துவிடும் என்று பயந்து, தசரதன் ராமனைத் தடுக்கவில்லை; சத்திய தர்மத்தை நிலைநிறுத்தவேண்டும் என்றதால், ராமனும், நான் சொன்னதைக் கவனிக்கவில்லை. எல்லாம் விதியினுல் விளைந்தது. யாரால் என்ன செய்ய முடியும்! '

---

36. கடிகை - நாழிகை. கடி மதில் - பாதுகாப்புக்காக எடுத்த மதில்சுவர். ஆதி முனிவனை - வயது முதிர்ந்த வசிஷ்டரை. பருவரல் உழந்தான் - துன்பத்தால் மிகவும் கஷ்டப்பட்டான். முன்னே முடிவெலாம் உணர்ந்தான் - இனி வரப்போகிறதையெல்லாம் முன்னமேயே உணர்ந்திருந்த முனிவர்.

'நின்(று)உயர் பழியைஅஞ் சி
நேர்ந்திலன் நடுக்க ; வள் ளல்
ஒன் றுநான் உரைத்தல்நோக் கான்
தருமத்திற் குறுதிபார்ப் பான் ;
வென்றவர் உளரே,மே லை
விதியினை !' என்றுவிம் மி
பொன்திணி மன்னன்கோ யில்
சுமந்திர னோடும்போ னான். ௩0௩.

38. தசரதனைச் சேர்ந்தவர்கள் எல்லோரும்,தேர் வந்துவிட்டது, ராமன் வந்துவிட்டான் என்று உற்சாகத்தோடு வந்துசேர்ந்தார்கள்.

தேர்கொண்டு வள்ளல்வந் தான்
என்றுதம் சிந்தைஉந் த,
ஊர்கொண்ட திங்கள்என் ன
மன்னனை உழையர்சுற் றக்,
கார்கொண்ட மேனியா னைக்
கண்டிலர் ; - கண்ணில்வற் று
நீர்கொண்ட நெடுந்தேர்ப்பா கன்
நிலைகண்டார், நிலையில்த்தீர்ந் தார். ௩0௪

37. நேர்ந்திலன் தடுக்க - தடுக்க நேர்ந்திலன். வள்ளல் - ராமன். பொன்திணி - பொன்மயமான. மன்னன் கோயில் - தசரதனது அரண்மனைக்கு.

38. வள்ளல் - ராமன். ஊர்கொண்ட திங்கள் - ஊர்கோளால் சுற்றப்பட்ட சந்திரன். நிலையில் தீர்ந்தார் - அப்படி அப்படி உணர்வற்றவர்களாய் நின்று விட்டார்கள்.

39. தசரத மன்னன் கண்திறவாது மயக்கத்தி லேயே இருந்தான். பக்கத்திலுள்ளவர்கள் எல்லோ ரும் 'தேர் வந்துவிட்டது, தேர் வந்துவிட்டது' என்று சொன்ன சத்தத்தில், அவனுக்கு மயக்கம் கொஞ்சம் தீர்ந்து, கண்ணை விழித்துப் பார்த்தான்.

'இரதம்வந்(து) உற்ற(து)என் றுங்(கு)
யாவரும் இயம்பலோ டும்
வரதன்வந் துற்றுன்என் று
மன்னனும் மயக்கம்தீர்ந் தான்:
புரைதபு கமலநாட் டம்
பொருக்கென விழித்துநோக் கி,
விரதமா தவனைக்கண் டான்:
'வீரன்வந் தனனோ?'என் றுன். ௩0௫

40. 'ராமன் வந்து விட்டானு?' என்று தசர தன் கேட்டதற்கு, 'இல்லை' என்று சொல்ல முடிய வில்லை வசிஷ்டருக்கு. சுமந்திரனது முகத்தைப் பார்த் தான் தசரதன்; விஷயம் தெரிந்துகொண்டான்.

இல்லைஎன்(று) உரைக்கலாற் றுன்,
ஏங்கினன் முனிவன்; பொன் தேர்
வல்லவன் முகமே 'நம் பி
வந்திலன்' என்னும்மாற் றம்
சொல்லலும், அரசன்சோர்ந் தான், -
துயர்உறும் முனிவன், 'நான் இவ்
அல்லல்காண் கில்லேன்'என் று
ஆங்குநின்(று) அகலப்போ னுன். ௩0௬

---

39. வரதன் - ராமன். என்று - என்று. வீரன் - ராமன். புரைதபு - யாதொரு மாசுமில்லாத.

40. நம்பி - ராமன். அல்லல் - கஷ்டத்தை.

41. தசரதனுடைய உயிர் போய்விடும் என்று அறிந்து, வசிஷ்டர் வெளியே போய்விட்டார். தசரதன், சுமந்திரனைப் பார்த்து, 'எவ்வளவு தூரம் ராமன் போயிருக்கலாம்' என்று கேட்டான். 'தூரமாகவுள்ள காட்டுக்கே போய்விட்டான்' என்று பதில் சொன்னான் சுமந்திரன்.

நாயகன் பின்னும்தன் தேர்ப்
பாகனை நோக்கி, 'நம்பி

சேயனோ அணியனோ' என்(று)
உரைத்தலும், அனையான், 'சேய

வெய்உயர் கானம்தானும்
தம்பியும் மிதிலைப்பொன்னும்

போயினன்' என்றான் ;என்ற
போழ்தத்தே ஆவிபோனான். ௩௦௭

42. உயிர்போன விஷயத்தைக் கோசலை உடனே அறிந்துகொண்டாள்.

---

41. சேயனோ - வெகு தூரம் போய்விட்டானோ. அணியனோ - சமீபத்தில் இருக்கிறானோ. சேய வேய் உயர் கானம் - தூரத்தேயுள்ள மூங்கில்நிறைந்த காடு ; மூங்கில் தூரத்தைக் காட்டுகிறது. மிதிலைப் பொன்னும் : சீதா தேவியும். என்ற போழ்தத்தே - என்று சொன்ன உடனேயே. ஆவி போனான் - உயிர் நீங்கினான். தம்பியும் மிதிலைப் பொன்னும் உடனாகப் போயினன் என்பது முடிபு.

உயிர்ப்பிலன் துடிப்பும்இல் லன்
என்றுணர்ந்(து), உருவம்தீண் டி
அயிர்த்தனள் நோக்கி,மன் னற்(கு)
ஆருயிர் இன்மைதே றி,
மயில்க்குலம் அனையநங் கை
கோசலை மறுகிவீழ்ந் தாள் ;
வெயில்ச்சுடு கோடைதன் னில்
என்பிலா உயிரின்வெந் தாள். ௩௦அ

43. கோசலையின் தடுமாறிய மனசுக்கு, ஏதோ, வேண்டுமென்றே தசரதன் தங்களைவிட்டு வேறோர் இடத்துக்குப் போய்விட்டதாகப் படுகிறது. துக்கத்தின் போக்கு அப்படி !

சந்தம்

தனன தன்ன
தன்னன தன்ன
தனன தன்

'தானே தானே
தஞ்சம்இ லாதான்
தகவில் லான்,
போனான் போனான்
எங்களை நீத்(து)இப்
பொழு(து)' என் று,-

42. உயிர்ப்பு - சுவாசம். துடிப்பு-இதயத் துடிப்பு. அயிர்த்தனள் நோக்கி - சந்தேகித்த வண்ணமாய்ப் பார்த்தாள். மயில்க் குலம் - சிறந்த அழகு வாய்ந்த மயில். மறுகி - மயங்கி. என்பிலா உயிரின் - புழுப்போல.

43. தஞ்சம் இலாதான் - அடைக்கலமாக வந்த தங்களைக் கைவிட்டவன். தகவு இல்லான் - தனக்குக் கடமை ஒன்றிருக்கிறது என்று எண்ணாதவன். என்று - என்று புலம்பி.

வான் நீர் சுண்டி
மண்ணற வற்றி
மறுகுற்ற

மீனே என்ன
மெய்தடு மாறி
விழுகின் ருள். ௩௦௬

44. ஆமாம், உனக்கு என்ன குறை : 'சம்பரனை முன்னமே கொன்ருய் : உன்னுடைய அருளாலேயே தேவர்கள் எல்லோரும் இப்போது சுகமாக வாழ்கிருர் -கள். சரி, சரி.

' அருந்தே ரானைச்
சம்பர னைப்,பண்(டு)
அமர்வென் ருய் ;

இருந்தார் வானோர்
உன்அரு ளாலே
இனி(து) ; இந் நாள்

---

43. வான் நீர் சுண்டி - மழையில்லாமல். மண்ணற வற்றி - ஊற்று நீரும் இல்லாமல். மறுகுற்ற மீனே என்ன - திண்டாடுகிற மீனைப்போல. குறிப்பு : சந்தம், சொல் மடங்கிவருதலினுல் உண்டாகும் ஓசை, எல்லாம் சேர்ந்து, கோசலை விழுந்து விழுந்து அலறுவதைத் தொனிக்கச் செய்கிறது. - இதுதான் அருள்வாக்கு.

44. அருந்தேரானைச் சம்பரனை-போருக்கு வாய்ப்பாயுள்ள தேர் பலகொண்ட சம்பரனை, அமர் வென்ருய் - போரில் வென்ருய்.

விருந்தா கின்றாய் !'
என்றனள் : - வேழத்(து)
அர(சு)ஒன் றைப்

பெருந்தாள் அன்பின்
சூழ்பிடி என்னப்
பிரிவுற் றாள். ௩௪௦

45. அந்த வானவர்களோடு எத்தனையோ காரியங்களை அனுபவித்துக்கொண்டு அங்கே இருப்பாய் என்று தெரிகிறது; யாகங்கள் என்ன, சத்சங்கம் என்ன, நீதிநெறியில் நிர்வாகங்கள் என்ன - எல்லாம் அனுபவித்துக்கொண்டிருக்கிறாய்.

'வேள்விச் செல்வம்
துய்த்திகொல்! மெய்ம்மைத்
துணையின் பச்

சூழிச் செல்வம்
துய்த்திகொல்! தோலா
மனுநூ லின்

---

44. வேழத்து அரசு - மிக்க பலம்கொண்ட ஆண் யானை. பெருந்தாள் அன்பில் சூழ் பிடி என்ன - தளராத அன்போடு இணைபிரியாத பெண் யானைபோல.

45. வேள்வி - யாகம். மெய்ம்மைத் துணை இன்பச் சூழி : சத்சங்கத்தில் ஆனந்தத்தோடு அளவளாவுதல். மனுநூலின் வாழிச் செல்வம் - மனுதர்ம சாஸ்திரத்தை ஒட்டி நிர்வகிக்கும் வாழ்க்கையிலுள்ள சுகம்.

வாழிச் செல்வம்
துய்த்திக்கொல் மன் !' என்
றனள் : வா னோர்

கேள்விச் செல்வம்
துய்க்க வயிற்றோர்
கிளைதந் தாள். ௩கக

46. இப்படியெல்லாம் தசரதனுடைய உடலை நோக்கி அழுது அரற்றிக்கொண்டிருந்த கோசலை கொஞ்சம் ஏறிட்டுப் பார்த்தாள். தலைவிரிகோலமாய் நின்ற கைகேசியைக் கண்டாள். அவ்வளவுதான் : தாங்கமுடியாத இரக்கமும் துயரமும் கொண்டு அரற்ற ஆரம்பித்தாள்.

'வடித்தாய் கூந்தல்
கேகயன் மாதே !
மகிழ்வோ டே

பிடித்தாய் வையம் !
பெற்றனை பேரா
வரம்,என் னே !

---

45. மன் - வளமாக. வானோர் - ஞானிகள். கேள்விச் செல்வம் துய்க்க வயிற்று ஓர் கிளை தந்தாள் : மறை நூல்களில் உள்ள தத்துவங்களை அறிந்து அனுபவிப்பதற்கு இலக்கியமாக ராமனைத் தந்தாள். ராமனுடைய ஒழுக்கமும் வாழ்க்கையும், தத்துவங்களுக்கு வியாக்கியானம் போலிருந்தன.

46. தலைவிரிகோலம் கைம்மைபற்றி. மகிழ்வோடே பிடித்தாய் வையம் - மிக்க திருப்தியோடு ராஜ்யத்தைப் பிடித்துக்கொண்டாய் ; எல்லாம் இந்தக் கோலத்துக்குத் தானா !

முடித்தாய் அன்றே
மந்திரம் !' என்றாள் :
முகில்வாய், மின்

துடித்தால் என்ன,
மன்னவன் மார்பில்த்
துவள்கின்றாள். ௩௧௨

47. பட்ட மகிஷியாகிய கோசலை இவ்வாறு அழுது அரற்ற, சுமித்திரை மயங்கி உயிர்சோர்ந்த நிலையில் கிடக்கிறாள். அரண்மனையிலுள்ளவர்கள் எல்லோரும், ஏதோ உலகமே உலைந்துபோவதற்காகச் சுற்றிக்கொண்டிருக்கிறது என்று எண்ணி மயங்குகிறார்கள். இந்த நிலையில், தசரதனுடைய காதல்க் கிழத்தியர் வந்து மொய்க்கிறார்கள்.

சந்தம்

தான தான தானு தன்
தான தான தானு தன்

ஆழி வேந்தன் பெருந்தேவி
இன்ன பன்னி அழுதரற்ற,
தோழி அன்ன சுமித்திரையும்
துளங்கி ஏங்கி உயிர்சோர,

---

46. முடித்தாய் அன்றே மந்திரம் : ரொம்ப யோசனை செய்து காரியத்தை முடித்தாய், அது என்ன, லாபமான காரியமா ? முகில்வாய் மின் - கருமேகத்திடையே துடிக்கிற மின்னல். குறிப்பு : குடும்பப் பொறுப்பில் ஈடுபட்ட கோசலை, கைகேசியின் கைம்மைக் கோலத்தைக் கண்டவுடன் இரங்குவது ரொம்பவும் உண்மையான நிகழ்ச்சி.

47. ஆழி வேந்தன் : சக்கரவர்த்தியின். பெருந்தேவி - பட்ட மகிஷி. பன்னி - பலபடியாகச் சொல்லி.

ஊழி திரிவ(து) எனக்கோ யில்
உலையும் வேலை, மற்றொழிந் த
மாழை உண்கண் தேவிய ரும்
மயிலின் குழாத்தின் வந்(து)இரைத் தார்.

48. ஆசைக் கிழத்தியர் வந்தார்கள், தங்கள் ஆசைநாயகன் தசரதனது உடலைக் கண்டார்கள். ஏதோ நஞ்சு உள்ளேயிருந்து உடலை நடுங்கச் செய்வது போல நடுங்கினார்கள். ஆனாலும் :

துஞ்சி னானைத் தம்உயி ரின்
துணையைக் கண்டார் ; துணுக்கத் தால்,
நஞ்சு கவர்ந்தால் எனஉட லம்
நடுங்கா நின்றார் ; என்றா லும்,
அஞ்சி அழுங்கி விழுந்தில ரால் ; -
அன்பில் தறுகண் பிறி(து)உண் டோ ?
வஞ்ச மில்லா மனத்தா னை
வானில் தொடர்வான் மனம்வலித் தார்.

---

47. ஊழி திரிவது என - உலகமெல்லாம் சுழன்று தலைகீழாய் விழப்போவதுபோல. கோயில் - அரண்மனையிலுள்ளவர்கள் எல்லோரும். உலையும் வேலை - அயர்ந்து போகும் வேளை. மாழை உண்கண் - மாவடுவை உட்கொண்ட மாதிரியான கண். தேவியரும் - ஆசைக்கிழத்தியரும். இரைத்தார் - என்ன என்னமோ பேசினார்கள்.

48. துஞ்சினானை - இறந்தவனை. துணுக்கத்தால் - பயத்தினால். நடுங்கா நின்றார் - நடுங்கினார். அஞ்சி அழுங்கி - ஒரேபடியாய் அச்சத்தினால் மனம் இடிந்து. அன்பில் தறுகண் பிரிது உண்டோ - அன்பைப்போல மனசை உறுதிபடுத்துகிற காரியம் வேறொன்று உண்டோ. வஞ்சமில்லா மனத்தானை : தசரதனை. வானில் தொடர்வான் - கூடவே உயிர் விடுவதற்காக, மனம் வலித்தார் - மனசைத் திடப்படுத்திக்கொண்டார்கள்.

49. ஆசைக் கிழத்தியர் தம் மனசைத் திடப் படுத்தி நின்றதைப் பார்த்தால், - இந்தப் பூமியிலாகட்டும், தேவலோகத்திலாகட்டும், அதற்கு அப்பாலிருக்கக் கூடிய லோகத்திலேயே யாகட்டும், இவர்களைப்போலக் கற்பென்னும் உறுதிநிலையில் சிறந்தவர்கள் ஒருவருமில்லை என்றே சொல்லத் தோன்றும்; அவர்களுடைய சந்திரன் போன்ற முகத்தில் யாதொரு துயரக் குறிப்பும் இல்லை.

அளங்கொள் அளக்கர் இரும்பரப் பில்,
அண்டர் உலகில், அப்புறத் தில்,
விளங்கும் மாதர் கற்பி னூர்,
இவரின் யாவர் எனநின் றூர்;
களங்கம் நீத்த மதிமுகத் தார்,
கான வெள்ளம் கால்கோப் பத்,
துளங்கல் இல்லாத் தனிக்குன் றில்த்
தொக்க மயிலின்ச் சூழ்ந்திருந் தார். ௩௪௫

50. உயிர் இழக்கும்படியாகவும், மகனை இழக்கும்படியாகவும் நேர்ந்தபோதும், சத்தியத்தைக் கடைசி வரைக்கும் கடைப்பிடித்தான் தசரதன். அத்தகைய

---

49. அளங்கொள் அளக்கர் - உப்போடு கூடிய சமுத்திரம் சூழ்ந்த. இரும் பரப்பில் - விசாலமான உலகத்தில். கானவெள்ளம் கால் கோப்ப - காட்டிலிருந்து வெள்ளம் திடீரென்று வந்து குன்றின் இருபுறமும் பெருவாரியாய் ஓட. துளங்கல் இல்லா - அசைதல் இல்லாத. குன்றில் தொக்க மயிலில் - குன்றின்மேல் குழுமியிருந்த மயில்களைப்போல.

நாயகனது புனித உடலைவிட்டுப் பிரிய அவர்களுக்கு மனம் இல்லை.

கைத்த சொல்லால் உயிர்இழந் தும்,
புதல்வற் பிரிந்தும், கடைபோக
மெய்த்த வேந்தன் திருவுடம் பைப்
பிரியா அரற்றி விட்டில ரால்; -
பித்த மயக்காம் சுற(வு)எறி யும்
பிறவிப் பெரிய கடல்கடக் க
உய்த்து மீண்ட நாவா யில்
நாமும் போவார் ஒக்கின் றார். ௫௰

51. ஆசை நாயகியர் இப்படி இருக்கிறார்கள். கோசலையும் சுமித்திரையும் நைந்துநைந்து ஏங்குகிறார்கள். இந்த நிலையில், அரசனுக்கு உயிர் போய் விட்டது என்ற செய்தியைச் சுமந்திரன் போய்ச் சொன்னான்; அப்படியே வந்தார் வசிஷ்டர்.

---

50. கைத்த சொல்லால் - கைகேசியின் கொடிய சொல்லால். கடைபோக - கடைசிவரையிலும். மெய்த்த வேந்தன் - சத்தியத்திலே உறுதியாக நின்ற மன்னன். பிறவி என்ற உணர்ச்சியிலேயே நாம் இருக்கிறோம். அந்த உணர்ச்சி ஒரு கடல் போன்று அகன்றும் ஆழ்ந்தும் இருக்கிறது. அதை விட்டு நீங்கி ஒரே ஆனந்தமயமாகவுள்ள முத்திநிலையில் சேருவது ஞானிகளுக்கும் அரிய காரியம். அடிக்கடி அறியாமை என்னும் சுறுமீன் வந்து கீழே இழுக்கிறது. இதற்கெல்லாம் ஒரு உபாயம்: சத்தியவந்தனாகிய தசரதனது திருவுடம்பை மரக்கலமாகப் பற்றிக்கொண்டதுபோல நிற்கிறார்கள் அந்தப்பெண்கள்.

மாத ரார்கள் அறுபதி னா -
யிரரும், உள்ளம் வலித்திருப் பக்,
கோதில் குணத்துக் கோசலை யும்
இளைய மாதும் குழைந்(து)ஏங் கச்,
சோதி மணித்தேர்ச் சுமந்திரன் சென்(று)
அரசன் தன்மை சொல,வந் த
வேத முனிவன், விதிசெய் த
வினையை நோக்கி விம்மு வான். ௯௧௭

52. வசிஷ்டர் ரொம்பவும் வருந்துகிறார் : நாலு புத்திரர்கள் இருந்தும், இந்தச்சமயத்தில் உதவுவதற்கு ஒருவரும் இல்லையே ! நடக்கவேண்டிய காரியம் எப்படியும் நடந்து தானே தீரும் ? என்ன பரிதாபமான காரியம் ? சரி, இருக்கட்டும், பரதன் வந்ததும் கிரியைகளை முடித்துக்கொள்ளலாம் என்று சொன்னார்.

' செய்யக் கடவ செயற்குரி ய
சிறுவர் ஈண்டை யார்அல் லர் ;
எய்தக் கடவ பொருள்எய் தா(து)
இகவா ! என்ன இயல்(பு)! 'என் ன,

---

51. அறுபதினாயிரர் : பலர் என்ற பொருளில் வழங்கும் சொல். கோது இல் - குற்றமற்ற. இளைய மாதும் - சுமித்திரையும். வந்த வேதமுனிவன் - வந்து சேர்ந்த வசிஷ்டர்.

52. செய்யக் கடவ - செய்யவேண்டிய கிரியைகளை. செயற்குரிய - செய்யும் உரிமை கொண்டுள்ள. ஈண்டை யார் அல்லர் - இங்கே இல்லை. எய்தாது இகவா - வந்து சேராமல் தீராது. என்ன இயல்பு என்ன - எப்படி இருக்கிறது இயற்கை என்று சொல்லி.

'மையல்க் கொடியாள் மகன்ஈண் டு
வந்தால் முடித்தும் மற்(று)' என் ன,
தையல்க் கடல்நின் றெடுத்(து)அவ னைத்
தைலக் கடலின் தலைஉய்த் தார். ருகஅ

53. தசரதனுடைய உடலை எண்ணெய்த்தொட்டியில் போட்டுவைத்துவிடுகிறார்கள்.

இனி வேறோர் இடத்துக்குப் போவோம் நாம். ராமனைத் தொடர்ந்துபோன அயோத்தி மக்கள், சோலையிலும் ஆற்றங்கரையிலும் யாதொரு ஆகாரமும் இல்லாமல், நித்திரை போயிருந்தார்களே, அந்த இடத்திற்குப் போவோம்.

சூரியன் மிக்க பிரகாசத்தோடு உதித்துவருகிறான். அரசருக்குரிய சின்னங்களோடும் தேரில் புறப்பட்டுவருகிறான். முரசம் ஒரு பக்கத்தில் ஒலிக்கிறது. முனிவர்கள் துதிசெய்கிறார்கள். மற்றவர்களும் வணங்குகிறார்கள். இரு பக்கங்களிலும் ஒளியாகிய

---

52. மையல் கொடியாள்-அறிவு மயங்கிக் கொடுமை இயற்றிய கைகேசி. தையல் கடல் நின்று எடுத்து : தசரதனது உயிர் நீங்கிய உடம்பைச் சூழ்ந்து மொய்த்துக் கொண்டு, எண்ணிறந்த பெண்கள் அரற்றுகிறார்கள் ; அவர்களைவிட்டு அந்த உடம்பை நீக்குவது பெரிய பிரயத்தனமாய்ப் போய்விட்டது. தைலக் கடலின் தலைஉய்த்தார்-பரதன் வரும்வரையும் கெட்டுப்போகாமல் இருப்பதற்காக, உடம்பை ஒரு பெரிய எண்ணெய்த்தொட்டியில் அப்படியே போட்டுவைத்தார்கள்.

வாள் இலங்குகிறது. எதற்காகச் சூரியன் இந்தச் சின்னங்களோடு வருகிருன் ?

மீனுர் வேலே முர(சு)இயம் ப,
விண்ணேர் ஏத்த, மண்இறைஞ் சத்,
தூ நீர் ஒளிவாள் புடையிலங் கச்,
சுடர்த்தேர் ஏறித் தோன்றி னன் :
'வானே புக்கான் அரும்புதல் வன் ;
மக்கள் அகன்ருர் ; வரும்அள வும்,
யானே காப்பன் இவ்வுல கை'
என்பான் போல, எறிகதி ரோன். ௫௩

54. சூரியன் உதிக்கவும், படுத்திருந்த ஆண் பெண் எல்லோரும் விழித்து எழுந்தார்கள். ராமனும் அங்கேயே இருக்கிருன் என்ற எண்ணத்தோடுதான். எழுந்தார்கள். அவனேப் பார்க்கப்போனுர்கள். அவன் எங்கும் தென்படவில்லே.

---

53. மீனுர் வேலே : சமுத்திரம். விண்ணேர் ஏத்த - முனிவர்கள் துதிக்க. மண் இறைஞ்ச - உலகத்திலுள்ள வர்கள் வணங்க. தூ நீர் ஒளி - மாசு மறு அற்று ஒரே பிரகாசமாயுள்ள கிரணங்கள். வாள் : கிரணங்களாகிய வாள். வானே புக்கான் அரும் புதல்வன் - சூரிய குலத்தில் பிறந்த புதல்வனுகிய தசரதன் வானுலகம் போய்ச் சேர்ந்துவிட்டான். மக்கள் அகன்ருர் - ராமன் முதலிய நாலு பிள்ளேகளும் வேறிடங்களுக்குப் போய்விட்டார்கள். வரும் அளவும் - அவர்கள் வரும்வரையும். எறி கதிரோன் - கிரணங்களே வீசும் சூரியன்.

இருந்தான் அங்கு வள்ளலென
இருந்தார் எல்லாம் எழுந்தார்; நம்
பெருந்தாமரைக்கண் கருமுகிலை
யாண்டும் காணூர்; பேதுற்ருர்;
வருந்தா வண்ணம் வருந்தினூர்;
மறந்தார் தம்மை; - 'வல்வினையால்,
பொருந்தா நயனம் பொருந்திநமைப்
பொன்றச் சூழ்ந்த(து)' எனப்புரண்டார்.

55. இந்தத் திகைப்பில், எட்டுத் திசையுமே ஓடிப் போய்ப் பார்ப்போம் என்று எழுந்தார்கள். சோகத்தால் ஓடமுடியவில்லை. அப்படியே கீழே விழுந்தார்கள். நம்மைத் துயர்க்கடலுக்குள் அமிழ்த்திவிட்டுப் போய்விட்டான். ஆகா, ராமனுடைய செயல் மிகக் கொடியது. அவன் போயிருக்கக்கூடிய காடு இந்த உலகத்தில்தானே இருக்கிறது? - என்றெல்லாம் அலறுகிருர்கள்.

எட்டுத் திசையும் ஓடுவான்
எழுவார்; விழுவார்; 'இடர்க்கடலுள்
விட்டு நீத்தான் நமை' என்பார்;
'வெய்ய, ஐயன் வினை' என்பார்;

---

54. கருமுகிலை - ராமனை. பேதுற்ருர் - திகைத்தார். வருந்தா வண்ணம் வருந்தினூர் - இதுவரையிலும் அனுபவியாத வருத்தத்தை அனுபவித்தார். மறந்தார் தம்மை - தம் வசம் அழிந்தார். வல்வினையால் - கொடிய பூர்வ வினையால். பொன்ற - கொல்ல. நம்முடைய கண்ணே நம்மை வஞ்சித்துக் கொல்ல எண்ணியது; எப்படியோ கண்மூடிவிட்டதல்லவா என்கிருர்கள்.

55. ஓடுவான் - ஓடும் பொருட்டு. வெய்ய - மிகக் கொடுமையானது. ஐயன் வினை-ராமன் செயல்.

'ஒட்டிப் படர்ந்த தண்டகம் இவ்
வுலகத்(து) உளதன் றோ ? உணர் வைச்
சுட்டிச் சேர்தல் ஆற்றுது மேல்த்,
தொடர்தும் தேரின் சுவ(டு)' என் பார். ௫௨௧

56. தேரின் சுவடு எங்கே என்று அங்குமிங்கும் பார்த்தார்கள். அயோத்தியை நோக்கித் திரும்பிய சக்கரத்தின் தடத்தையொட்டிப் போய்ப்பார்த்தார்கள். அயோத்திக்குத்தான் போயிருக்கிறது என்று நிச்சயித்துக்கொண்டார்கள்.

தேரின் சுவடு நோக்கு வார்,
திருமா நகரின் மிசைதிரி ய
ஊரும் திகிரிக் குறிஒற் றி
யுணர்ந்தார் ; எல்லாம் உயிர்வந் தார் ;
'ஆரும் அஞ்சல், ஐயன் போய்
அயோத்தி அடைந்தான்' என, அச னிக்
காரும் கடலும் ஒருவழிக் கொண்(டு)
ஆர்த்த என்னக் கடி(து)ஆர்த் தார். ௫௨௨

---

55. ஒட்டிப் படர்ந்த தண்டகம் - மரம் நெருங்கி ஒரேபடியாய் விரிந்த காடு. உணர்வைச் சுட்டிச் சேர்தல் ஆற்றுதுமேல் - அறிவைக் கலங்க விட்டுவிடாமல் கொஞ்சம் ஒழுங்குபடுத்துவோமானுல் ; ராமனே நிச்சயமாய்க் கண்டுகொள்ளலாம் ; அதற்கு வழியிருக்கிறது ; தேரின் சுவட்டைத் தொடர்ந்துபோவோம்.

56. திருமா நகரின் மிசை திரிய ஊரும் திகிரி - அயோத்தியை நோக்கித் திரும்பி ஊர்ந்துபோன தேர்ச் சக்கரத்தின். ஆரும் அஞ்சல் - யாரும் பயப்படவேண்டாம். அசனி - இடியோடு கூடிய. ஒருவழிக் கொண்டு ஆர்த்த என்ன - ஒன்றாகச் சேர்ந்து சப்தித்ததுபோல.

57. போகப்போகத் தேர்ச்சக்கரத்தின் சுவட்டை நன்றாய்ப் பார்த்தார்கள். வழியைவிட்டு வேறு எங்கும் அது விலகவில்லை. மிக்க உவகையோடும் வேகத் தோடும் அயோத்திநகரத்துக்கு மீண்டார்கள்.

ஆறு செல்லச் செல்லத் தேர்
ஆழி கண்டார், அயல்அப் பால்

வேறு சென்ற நெறிகா ணார்,
விம்மா நின்ற உவகைய ராய், -

மாறி உலகம் வகுத்த நாள்
வரம்பு கடந்து போயது மீண்(டு)

ஏறி ஒடுங்கும் எறிகடல் போல்
எயில்மா நகரம் எய்தி னார். ௩௨௩

---

57. ஆறு - வழியில். தேர் ஆழி - தேர்ச் சக்கரத்தின் தடத்தை. விம்மா நின்ற - மேலும் மேலும் எழுந்த. மாறி உலகம் வகுத்த நாள் : ஒரு காலத்தில் பூமி முழுதும் நிலம் என்பது இல்லாதபடி ஒரே சமுத்திரமாய் இருந்தது. உயிர் வர்க்கங்கள் உண்டாவதற்கு நிலம் வேண்டுமென்று கருதி, சமுத்திரத்தை விலகி ஓடிவிடும் படி கட்டளையிட்டான் பிரமன். சமுத்திரமும் அப்படியே ஓடி, எங்கேயோ தூரமாய்ப் போய்விட்டது. நிலத்தை எல்லாம் ஒழுங்குபட அமைத்த பிறகு, திரும்பிவரும்படி சமுத்திரத்துக்குக் கட்டளையிட்டான். சமுத்திரமும் கும் மாளி போட்டு ஓடிவந்தது. ஆனாலும், அதற்கு ஏற்பட்ட வரம்பில் ஒடுங்கிநின்றுகொண்டது. எயில் மா நகரம் - மதில் சூழ்ந்த அயோத்தி நகரம்.

58. அப்படி மீண்டவர்கள் நகரத்துக்குள் புகுந்தார்கள். அங்கே என்ன செய்தி கேட்டார்கள்: சக்கரவர்த்தி இறந்துபோனான் என்ற செய்தியைத்தான் கேட்டார்கள். ராமனும் காட்டுக்குப் போய்விட்டான் என்பதையும் தெரிந்துகொண்டார்கள். என்ன செய்வார்கள்!

புக்கார் ; அரசன் பொன்னுல கம்
போனான் என்னும் பொருள்கேட் டார்,
உக்கார் நெஞ்சம், உயிர்உகுத் தார்
உற்ற(து) எம்மால் உரைப்பரி தால் ;
தக்கான் போனான் வனம்என் னும்
தகையும் உணர்ந்தார் ; - மிகைஆ வி
அக்கா லத்தே அகலு மோ
அவதி என்(று)ஒன்(று) உளதா னல் ?

59. வந்த ஜனங்களைப் பார்த்து, வசிஷ்டர் ஆறுதல் வார்த்தை சொல்லி, அமைதிபெறச் செய்தார். ஏதோ வடவாமுகாக்கினிக்குப் பயந்து சமுத்திரம்

---

58. உக்கார் நெஞ்சம் - இதயம் உடைந்தார்கள். உயிர் உகுத்தார் உற்றது - உயிர்போன நிலையிலிருந்த அவர்களது கஷ்டத்தை. தக்கான்-ராமன். மிகை ஆவி அக்காலத்தே அகலுமோ - உயிரோ அளவுக்கு மிஞ்சியிருக்கிறது ; முழுதும் அந்த நேரத்தில் போய்விடவா செய்யும்? மிச்சம் இருந்துகொண்டு மேல்வரும் துன்பத்தை யெல்லாம் அனுபவித்துவிட்டு, ஏற்பட்ட கெடுவில்தானே போகும்?

அடங்கிநின்ற மாதிரி, ஜனங்களும் அடங்கியிருந்தார்கள்.

வெள்ளத்(து) இடைவாழ் வடஅனலை
அஞ்சி, வேலை கடவாத
பள்ளக் கடலின், முனிபணியால்
பையுள் நகரம் வைகிட, - மேல்
வள்ளல் தாதை பணிஎன்னும்
வானோர் தவத்தால், வயங்(கு)இரவின்
நள்ளில் போன வரிசிலைக் கை
நம்பி செய்கை நடத்துவாம். ருஉரு

---

59. வெள்ளத்திடை வாழ் - சமுத்திரத்தின் மத்தியில் இருக்கிற. வடஅனலை - வடவாமுகாக்கினியை. வேலை - கரை. கடலின்-கடலைப்போல. முனி பணியால்- வசிஷ்டர் சொன்னபடி. பையுள் நகரம் - துயரில் மூழ்கிய நகரத்தார். மேல் - இனிமேல். வள்ளல் தாதை பணி என்னும் வானோர் தவத்தால் : வானோர் தவமே தசரதனுடைய கட்டளையாக விளைந்தது என்பது பொருள். ராமன் காட்டுக்குப் போய்க் கடைசியில் அசுரர்களைக் கொன்று தீர்க்கவேண்டும் என்பதுதானே வானோர்களின் லட்சியம். நம்பி - ராமன். நடத்துவாம் - பேசுவோம்.

# 7. கங்கைப் படலம்

1. ராமன் சீதை லக்ஷ்மணன் ஆகிய மூவரும், அயோத்தி நகரத்தை விட்டுச் சில காததூரத்தேயுள்ள இடத்தில் வந்து தங்கினார்கள். அங்கிருந்து நடுராத்திரியில் காட்டுக்குள் பிரவேசித்தது நமக்குத் தெரியும். இப்போது, நன்செய்ப் பயிர் முதலான வளங்கொண்ட நாட்டுப்புறம் வழியாக நடந்து வருகிறார்கள். சீதை அங்குள்ள பூக்களைக் கொய்து தலையில் நிறையச் சூடிக் கொண்டாள். பக்கத்தில் ராமன் வருகிறான்.

சந்தம்

தான னன தான னன
தான னன தா னா

மாகந் தரும் மகரந் தரும்
அளகம் தர, மதி யின்

பாகந் தரு நுதலா ளொடு
பவளந் தரும் இத ழான்,

---

1. மாகந்தம் - அடர்ந்த வாசனை. மகரந்தம் - புஷ்பத்திலுள்ள மகரந்தத்தூள். அளகம் தர - பூவைச் சூடிய கூந்தலிலிருந்து பரவி வர. மதியின் பாகந்தரு நுதலாள் - பிறைச் சந்திரனுக்குச் சமானமான நெற்றியையுடைய சீதை. பவளம் தரும் இதழான் - பவளத்துக்குச் சமானமான இதழையுடைய ராமன்.

மேகந் தனி வருகின் றது
மின்னோ டெனத், தகை சால்
நாகந் தனி வருகின் றது
பிடியோ டென, நட வா. ௩௨௬

2. இன்னொரு காட்சி : வழியில் கரும்பு ஆலை ஒன்றிருந்தது ; அதன் விசித்திரங்களைப் பார்த்துக் கொண்டே நின்றுவிட்டாள் சீதை. ராமன் கொஞ்சம் முன்னேறி நடந்துவிட்டான். பிந்திப்போன சீதை அப்படியே ஓடிப்போய் அவனது தோளைப் பற்றிக் கொள்கிறாள்.

அருப்பேந் திய கலசத் துணை
அமுதேந் திய மத மா
மருப்பேந் திய எனலாம் முலை
மழையேந் திய குழ லாள்,

1. தகை சால் நாகம் - சிறந்த லட்சணம் பொருந்திய ஆண் யானை. பிடி - பெண் யானை. நடவா - நடந்து. குறிப்பு : ஆண் யானையும் பெண் யானையும் துதிக்கைகளை அசைத்தும் கோத்தும் ஜோடியாய் நடந்து வருவதைப் பார்த்தால்த்தான் அழகு தெரியும்.

2. அருப்பு ஏந்திய கலசத்துணை : தாமரை அரும்பு போன்று அடியைக் கூர்படுத்திய இரண்டு அலங்காரக் கலசங்கள். அமுதேந்திய மதமா மருப்பு : இளம்பருவத்து ஆண் யானையின் சின்னஞ்சிறு தந்தங்கள் ஏதோ பால் நிறைந்து புடைத்ததுபோல. மழை ஏந்திய குழலாள் : ஓடும்போது, காற்றில் பறந்த கூந்தல் மழை மேகம் தொத்திவந்ததுபோல் இருந்தது. மழை - கரு மேகம்.

கருப்பேந் திரம் முதலா யின
கண்டாள், இடர் கா ணாள்,
பொருப்பேந் திய தோளா னொடு
விளையா டினள் போ னாள். ௩௨௭

3. இப்படியாக நடந்து, கங்கைக் கரைக்கே வந்துவிட்டார்கள். அங்கே வசித்துவந்த முனிவர்கள் ராமனைக் காண வருகிறார்கள்.

சந்தம்

தான தன்னன தன்னன தன்னன

கங்கை என்னும்
கடவுள்த் திருநதி
தங்கி வைகும்
தபோதனர் யாவரும்,
'எங்கள் செல்கதி
வந்த(து)' என்(று) ஏமுற,
அங்கண் நாயகற்
காணவந்(து) அண்மினார். ௩௨௮

---

2. கருப்பு எந்திரம் - கரும்பாலை. இடர் காணாள்: அரண்மனைக்குள்ளேயே அடைபட்டிருந்த சீதைக்கு நாட்டுப்புறத்துக் காட்சிகளைக்கண்டமாத்திரத்தில் உல்லாசமே பிறந்துவிட்டது. பொருப்பு - மலை. விளையாடினள் போனாள் - விளையாடிக்கொண்டு போனாள்.

3. நதி தங்கி - நதிக்கரையில் தங்கி. தபோதனர் - முனிவர். எங்கள் செல்கதி - நாங்கள் அடையவேண்டிய பரம்பொருளே. ஏமுற - மிகவும் சந்தோஷமாக. அங்கண் நாயகன் - செந்தாமரைபோன்ற கண்களையுடைய ராமனை.

4. ராமனை, அந்த முனிவர்கள் ஒரு காதல்நோக்கோடு பார்த்து அனுபவித்தார்கள்.

பெண்ணில் நோக்கும்
சுவையில், - பிறர்தமக்(கு)
எண்ணி, நோக்கி,
இயம்பரும் இன்பத்தைப்,
பண்ணில் நோக்கும்
பராஅமு தைப், - பசுங்
கண்ணின் நோக்கினர்,
உள்ளம்க ளிக்கின்றார். ௩௨௬

5. முனிவர்கள் ராமனை ஒரு பேராசையோடு எதிர்கொண்டார்கள், புகழ்ந்தார்கள், பாடினார்கள். கையிலுள்ள மூங்கில்க் கோலும் தாங்களுமாக ஒரு நடனம் ஆடிவிட்டார்கள்.

எதிர்கொ(டு) ஏத்தினர்,
இன்னிசை பாடினர்,
வெதிர்கொள் கோலினர்
ஆடினர், வீரனைக்

4. பெண்ணில் நோக்கும் சுவையில்-ஆடவர் காதல் நாயகியைப் பார்த்து அனுபவிப்பதுபோல். பிறர் தமக்கு எண்ணி, நோக்கி இயம்பரும் இன்பத்தை : மற்றவர்களுக்குக் கருத்தினால் எண்ணமுடியாததும், கண்ணினால் பார்க்கமுடியாததும், வாயினால் சொல்லமுடியாததுமாயுள்ள பேரின்பமாகிய கடவுள் தத்துவம். பண்ணில் நோக்கும் பரா அமுதை : ஆனாலும், அது இசையின் மூலமாகக் கண்டுகொள்ளத் தக்கது ; ராமன் கடவுள் தத்துவமாக இருக்கிறான் என்பது கருத்து. பசும் கண்ணின் நோக்கினர்-ஆனந்தக்கண்ணீரோடு பார்த்தார்கள்.

5. எதிர்கொடு - எதிர்கொண்டு வரவேற்று. ஏத்தினர் - துதித்தார்கள். வெதிர் - மூங்கில்.

கதிர்கொள் தாமரைக்
 கண்ணனைக் கண்ணினால்
மதுர வாரி
 அமுதென மாந்துவார். ௩௩0

6. ஏதோ நெடுநாளாய்க் காணாமல்போன பிள்ளையைக் கண்டவர்போல, அவர்கள் ராமனைக் கண்டு களித்தார்கள்.

மனையின் நீங்கிய
 மக்களை, வைகலும்
நினையும் நெஞ்சினர்
 கண்டிலர் நேடுவார், -
அனையர் வந்துற
 ஆண்(டு)எதிர்ந் தார்களில்,
இனிய மாதவப்
 பள்ளிகொண்(டு) எய்தினார். ௩௩௧

7. காய் கிழங்கு கனிகள் முதலியன தேடிக் கொண்டு வந்தார்கள் முனிவர்கள்.

காயும், கானில்க்
 கிழங்கும், கனிகளும்
தூய தேடிக்
 கொணர்ந்தனர் ; 'தோன்றல் நீ

---

5. கதிர்கொள் - அழகு மிகுந்த. மதுரவாரி அமுது என - இனிய தேவாமிர்தப் பெருக்கு என. மாந்துவார்- பருகினார்.

6. வைகலும் - நாள்தோறும். கண்டிலர் நேடுவார்- காணாதபடி தேடிக்கொண்டிருப்பவர்கள், எதிர்ந்தார் களில் - சந்தித்தவர்களைப்போல, பள்ளிகொண்டு எய்தினார் - ஆசிரமத்துக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள்.

7. தோன்றல் - அரசன்.

ஆய கங்கை
  அரும்புனல் ஆடினை,
தீயை ஓம்பினை,
  செய்யமு(து)' என்றனர். ௫௫௨

8. ராமனும், அப்படியே ஸ்நானம்செய்துவிட்டுத் தெய்வ வழிபாடுகளைச் செய்கிறன்.

துறைந றும்புனல்
  ஆடிச், சுருதியோர்
உறையுள் எய்தி,
  உணர்வுடை யோர்உணர்
இறைவற் கைதொழு(து),
  ஏந்(து)எரி ஓம்பிப்,பின்
அறிஞர் காதல்
  அமைவிருந்(து) ஆகினன். ௫௫௩

9. விருந்து உண்டுவிட்டு, முனிவர்களுடன் சௌகரியமாய் அளவளாவிக்கொண்டு இருக்கிறன்

---

7. புனல் ஆடினை - நீரில் குளித்துவிட்டு. தீயை ஓம்பினை - அக்கினி ஓமம் செய்துவிட்டு. செய் அமுது - சாப்பிடுவாயாக.

8. துறை நறும்புனல் ஆடி - இறங்கு துறையில் நீராடி. நறும் புனல் - வாசனையுள்ள நீர். சுருதியோர் - தத்துவங்களை கேட்டுக் கேட்டு அறியும் முனிவர்கள். உறையுள் எய்தி - தங்கும் சாலையை அடைந்து. உணர்வுடையோர் உணர் இறைவன் - ஞானிகள் அறியத்தக்க கடவுளை. ஏந்து எரி ஓம்பி - அக்கினி ஓமம் செய்து. அறிஞர் காதல் அமைவிருந்து ஆயினன் : வினயம் தெரிந்தவர்கள் அருமையோடு செய்த விருந்தை அனுபவித்தான்.

ராமன். அந்தச் சமயத்தில் வெளியிலே ஒருவன் வந்து நிற்கிருன். அவனைப் பார்ப்போம்.

ஆய காலையின்,
ஆயிரம் அம்பிக்கு
நாய கன்,போர்க்
குகன்எனும் நாமத்தான்,
தூய கங்கைத்
துறைவிடும் தொன்மையான்,
காயும் வில்லினன்,
கல்த்திரள் தோளினுன். ௩௩௪

10. குகனது துடை, வயிரம் பாய்ந்த கருங்காலி மரம்போல் இருந்தது. உயரமோ, கங்கையின் ஆழத்தை அளப்பதற்காக நீண்டு உயர்ந்தமாதிரி யிருந்தது.

காழம் இட்ட
குறங்கினன், கங்கையின்
ஆழம் இட்ட
நெடுமையி னுன்,அரை

---

9. ஆய காலையின் - அந்தச் சமயத்தில். ஆயிரம் அம்பிக்கு நாயகன் - ஆயிரம் படகுகளுக்குத் தலைவன். துறை விடும் தொன்மையான்-தோணித்துறைக்குப் பூர்வமான அதிபதி. காயும் வில்லினன் - எதிரிகளை அதம் பண்ணும் வில்லையுடையவன்.

10. காழம் இட்ட - வயிரம் பாய்ந்த கருங்காலி மரம் போன்ற. குறங்கினன் - துடையை உடையவன்.

தாழ விட்டசெந்
தோலன், தயங்குறச்
சூழ விட்ட
தொடுபுலி வாலினன். ௩௩௫

11. கழுத்தில் சோகிகளைத் தொடுத்துப் பட்டையாக அணிந்திருந்தான். அது, ஏதோ காட்டு மிருகத்தின் பல்லைத்தொடுத்து அணிந்தமாதிரி யிருந்தது.

பல்த்தொ டுத்தன்ன
பல்சூல்க் கவடியன் ;
கல்த்தொ டுத்தன்ன
போலும் கழலினன் ;
அல்த்தொ டுத்தன்ன
குஞ்சியன் ; ஆளியின்
நெல்த்தொ டுத்து
நெரிந்த புருவத்தான். ௩௩௬

12. அரையிலே கச்சணிந்திருந்தான். அதில் கூர்மையான வாளைச் செருகியிருந்தான். மரியாதையாகப் பார்க்கும்போதுகூட, அவனுடைய கண்கள் அச்சத்தை உண்டாக்குவதா யிருக்கும். வார்த்தையோ ஒன்றும் சரியாய் இராது ; பைத்தியக்காரர் பேசுவது

10. அரையில் செந்நிறமான தோல் ஒன்றையுடுத்தி, அதன்மேல் புலியினது வால் கச்சையாகச் சுற்றிவந்தது.

11. சூல்க் கவடி - திரட்சியான சோகி. கல் தொடுத்தனன் போலும் கழலினன்: பெரிய பெரிய கல்லுகளைத் தொடுத்தமாதிரி யிருந்தது, அவன் காலில் அணிந்திருந்த கழல் ; அவ்வளவு பருத்த கழல். அல் - இருள். ஆளியின் - சிங்கத்தைப்போல. நெல் தொடுத்து நெரிந்த புருவத்தான் - நெல் கதிரைத் தொடுத்து வரிசையாய் வைத்த புருவங்களையுடையவன். நெரிந்த - அடர்ந்த.

போலிருக்கும். அவனுடைய இடுப்பு இரும்பினால் செய்தமாதிரி யிருக்கும்.

கச்சொடு ஆர்த்த
 கறைக்கதிர் வாளினன்,
நச்ச ராவின்
 நடுக்குறு நோக்கினன்,
பிச்ச ராம்அன்ன
 பேச்சினன், இந்திரன்
வச்சி ராயுதம்
 போலும் மருங்கினன். ௧௧எ

13. கங்கைக் கரையிலிருந்த சிருங்கிபேரம் என்னும் நகரத்திற்கு அதிபதி.

சிருங்கி பேரம்
 எனத்திரைக் கங்கையின்
மருங்கு தோன்று
 நகருடை வாழ்க்கையன்,
ஒருங்கு தேனொடு
 மீன்உப காரத்தன்,
இருந்த வள்ளலைக்
 காணவந்(து) எய்தினன். ௧௧அ

---

12. ஆர்த்த - சேர்த்த. கறை - ரத்தக்கறை ஏறிய. கதிர் - கூர்மையான. நச்சராவின் - சர்ப்பத்தைப்போல. இந்திரன் வச்சிராயுதம் : காளிகோயிலில் வைத்திருக்கும் ஒரு ஆள் உயரமுள்ள பளுவான கை யீட்டிபோன்றது. மருங்கினன் - இடையை உடையவன்.

13. உபகாரத்தன் - மரியாதைக்குரிய பொருள் கொண்டு காண வந்தவன். இருந்த வள்ளலை - ராமனை.

14. ராமன் இருந்த பர்ணசாலைக்குக் கொஞ்ச தூரத்திலேயே அவனுடைய பரிவாரங்களை நிறுத்தி விட்டு, அம்பறாத்தூணி, வில், வாள் எல்லாவற்றையும் கழற்றிவிட்டான்.

சுற்றம் அப்புறம்
நிற்கச், சுடுகணை
வில்த்து றந்(து), அரை
வீக்கிய வாள்ஒழித்(து),
அற்றம் நீத்த
மனத்தினன், அன்பினன்,
நல்த்தவப் பள்ளி
வாயிலை நண்ணினான். ௩௩௯

15. பர்ணசாலையின் வாசலண்டை வந்து, 'அடியேன்' என்று கூவினான் குகன். லக்ஷ்மணன் வந்து, 'யாரப்பா நீ?' என்று கேட்டான். லக்ஷ்மணனையே ராமன் என்று எண்ணிக் குகன் வணங்கினான்.

கூவா முன்னம்,
இளையோன் குறுகி,' நீ
ஆவான் யார்' என,
அன்பின் இறைஞ்சினான்;

---

14. சுற்றம் - பரிவாரம். கணை - அம்பறாத்தூணி. அரை வீக்கிய - அரையில் கட்டிய. அற்றம் நீத்த - கபடம் யாதொன்றுமில்லாத. தவப்பள்ளி - பர்ணசாலை.

15. கூவா முன்னம் - கூவின உடனேயே. நீ ஆவான் யார் - உன்னை யாரென்று எனக்குத் தெரியவில்லையே. இறைஞ்சினான் - வணங்கிவிட்டு.

'தேவா ! நின்கழல்
சேவிக்க வந்தனன் ;
நாவாய் வேட்டுவன்
நாயடி யேன் 'என்ருன். ௩௪௦

16. இப்படி அன்போடும் பணிவோடும் தன்னைத் தெரிவித்துக்கொண்ட குகனை, ' தயை செய்து கொஞ்சம் நிற்கவேண்டும்' என்று சொல்லிவிட்டு, லக்ஷ்மணன் பர்ணசாலைக்குள்ளே போனுன். ராமனைத் தொழுது சொல்லுகிருன்.

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

' நிற்றிஈண்(டு)' என்றுபுக் கு,
நெடியவன் தொழுது,தம் பி,
' கொற்றவ ! நின்னைக்கா ணக்
குறுகினன், நிமிர்ந்தகூட் டச்

---

15. நாவாய் வேட்டுவன் - தோணி செலுத்தும் வேடர் குலத்தைச் சேர்ந்தவன். நாய் அடியேன் - நாய்க்குச் சமானமான ஊழியன்.

16. நிற்றி ஈண்டு-கொஞ்சம் இங்கே நிற்கவேண்டும். புக்கு - புகுந்து. நெடியவன் - ராமனை. தம்பி - லக்ஷ்மணன். கொற்றவ - வீரனுகிய ராமனே. குறுகினன் - வந்திருக்கிருன்.

சுற்றமும் தானும்,உள் ளம்
தூயவன், தாயின்நல் லான்,
எற்றுநீர்க் கங்கைநா வாய்க்(கு)
இறைகுகன் ஒருவன்'என் றான். ௩௪௧

17. குகனைத் தன்னிடம் அழைத்து வரும்படி ராமனும் சொன்னான்.

அண்ணலும் விரும்பி 'என் பால்
அழைத்திநீ அவனை'என் றான்;
பண்ணவன் 'வருக'என் னப்,
பரிவினன் விரைவில்புக் கான்:
கண்ணனைக் கண்ணின்நோக் கிக்
கனிந்தனன்; இருண்டகுஞ் சி
மண்ணுறப் பணிந்து,மே னி
வளைத்து,வாய் புதைத்துநின் றான். ௩௪௨

18. வாய் புதைத்து ரொம்பவும் பணிந்து நின்றான் குகன். அவனை ராமன் உட்காரச் சொன்னான். உட்காராமல், 'அமுது செய்வதற்குத் தேனும் மீனும்

---

16, நிமிர்ந்த கூட்டச் சுற்றமும் தானும் - பெரிய கூட்டமான சேனையும் தானுமாக. தாயின் நல்லான் - தாயைப்போல அன்புவாய்ந்தவன். எற்று நீர்க் கங்கை - அலைகளுடைய கங்கை. நாவாய்க்கு இறை-படகுகளுக்கு அதிபதி.

17. அண்ணலும் - ராமனும். பண்ணவன் - ஏவலாளன் போலிருந்த லக்ஷ்மணன். பரிவினன் - அன்புருவமாய் நின்ற குகன். கண்ணனை-ராமனை.

கொண்டு வந்திருக்கிறேன் அடியேன். அங்கீகரித்துக் கொள்ள வேண்டும்' என்று குகன் வேண்டுகிறான்.

'இருத்திஈண்(டு)' என்னலோடும்
இருந்திலன், எல்லை நீத்த
அருத்தியன், 'தேனும்மீனும்
அமுதினுக்(கு) அமைவதாகத்
திருத்தினென் கொணர்ந்தேன்: என்கொல்
திருவுளம்?' என்ன, வீரன்
விருத்தமா தவரைநோக்கி,
முறுவலன் விளம்பலுற்றான். ௩௪௩

19. குகன் மீன் கொண்டுவந்த விஷயமாக மற்றவர்கள் ஏளனம் செய்யலாம். அப்படி ஏளனத்துக்கு உரியதல்ல என்பதைக் காட்டும் பொருட்டுச் சிரித்தான் ராமன். முனிவர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்: 'ஒருவன் தனக்கு உவந்ததாயும் கிடைப்பதற்கு அரியதாயும் உள்ள ஒரு வஸ்துவை, தன்னுடைய அடிப்படையான அன்பைத் தெரிவிப்பதற்காக நமக்குக் கொண்டுவந்தால், அந்த வஸ்து எவ்வளவு பிடிக்காததாக இருந்தபோதிலும், தேவாமிர்தத்தை விடச் சிறந்தது. அன்போடு கலந்த காரணத்தால், பிதுர்க்களுக்கே அர்ப்பணம்பண்ணக்கூடிய அவ்வளவுபுனிதமானது. அதை உட்கொள்ளாவிட்டாலும்,

---

18. இருத்தி - உட்காரவேண்டும். எல்லை நீத்த அருத்தியன் - வரம்பில்லாத பேரன்புடையவன். திருத்தினென் கொணர்ந்தேன் - பக்குவம் செய்து கொண்டுவந்திருக்கிறேன். என்கொல் திருவுளம் - அபிப்பிராயம் என்னவோ. விருத்த மாதவரை நோக்கி - வயசான முனிவர்களைப் பார்த்து. முறுவலன் விளம்பலுற்றான் - மெள்ளச் சிரித்துக்கொண்டு சொன்னான்.

உட்கொண்ட மாதிரி நம்முடைய உடலோடு ஒட்டிக் கொள்ளும். அன்பின் விசித்திரம் இது' என்கிறான் ராமன்.

'அரியதாம், உவப்ப,உள் ளத்(து)
அமைதர வந்தகா தல்
தெரிதரக், கொணர்ந்த(து)என் றால்,
அமிர்தினும் சீர்த்த(து)அன் றே !
பரிவினில் தழீஇயஎன் னில்
பவித்திரம் ; எம்முன் னோர்க் கும்
உரியன ; இனிதில்நா மும்
உண்டனெம் அன்றோ !'என் றான். ௩௪௪

20. முனிவர்களைப்பார்த்து இத்தகைய உணர்ச்சியுடன் பேசிவிட்டு, குகனிடன் பேசுகிறான் ராமன்.

சிங்கஏ(று) அனையவீ ரன்
பின்னரும் செப்புவான் : ' யாம்
இங்குறைந்(து), எறிநீர்க்கங் கை
ஏறுதும் நாளை,யா ணர்ப்
பொங்குநின் சுற்றத்தோ டும்
போய்உவந்(து) இனிதுன்ஊ ரில்
தங்கி,நீ நாவாயோ டும்
சாருதி விடிய'என் றான். ௩௪௫

---

19. பரிவினில் தழீஇய - அன்போடு கலந்தவை. பவித்திரம் - மிக்க புனிதமானது. எம் முன்னோர்க்கும் உரியன - பிதுர்க்களுக்கும் உரியன.

20. எறிநீர்க் கங்கை ஏறுதும் நாளை - அலைகளோடு கூடிய கங்கையை நாளைக்குக் கடப்போம். யாணர் - வளமாகவுள்ள. நாவாயோடும் சாருதி - தோணியோடும் வரவேண்டும்.

21. ஊருக்குப் போய் அங்கே செளகரியமாக இரவு தங்கிவிட்டு வா என்று ராமன் சொல்லவும், குகனுக்குத் தாங்கமுடியவில்லை. 'உன்னை இங்கே விட்டுவிட்டுப் போகிறதாவது!' என்கிறான்.

கார்குலாம் நிறத்தான்கூ றக்,
காதலன் உணர்த்துவான்: 'இப்
பார்குலாம் செல்வ! நின் னை
இங்ஙனம் பார்த்தகண் ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான்
நின்அயல் இருக்கைநீங் கித்
தீர்கிலேன்; ஆன(து)ஐ ய,
செய்குவென் அடிமை'என் றான். ௩௪௬

22. குகனது உள்ளத்திலிருந்து வந்த வார்த்தையைக் கேட்டான் ராமன். 'பார்த்தீர்களா, இவனது அன்பை. அடடா, எவ்வளவு அற்புதமானது!' என்ற பான்மையில், சீதையின் முகத்தையும் லக்ஷ்மணன் முகத்தையும் பார்த்தான்.

---

21. கார் குலாம் நிறத்தான் - மேகம் ஒட்டியது போலுள்ள நிறத்து இராமன். காதலன் - குகன். பார் குலாம் செல்வ - உலகம் அனைத்தையும் ஆளவல்ல சக்கரவர்த்தித் திருமகனே. கண்ணை ஈர்கிலா - கண்ணைத் தோண்டி எறியாத. தீர்கிலேன் - விலகமாட்டேன்.

கோதைவில்க் குரிசில்அன் னான்
கூறிய கொள்கைகேட் டான் ; -
சீதையை நோக்கித்,தம் பி
திருமுகம் நோக்கித்,' தீ ராக்
காதலன் ஆகும்'என் று
கருணையின் மலர்ந்தகண் ணன் ;
'யாதினும் இனியநண் ப !
இருத்திஈண்(டு) எம்மொ(டு)'என் றான்.

23. உடனிருக்கலாம் என்று ராமன் சொன்னவுடன், குகனுக்கு மிக்க திருப்தி யுண்டாகிவிட்டது. பிறகு, நகரத்தைவிட்டு இந்தவிதமாக இங்கு வருகிறதற்குக் காரணம் என்ன என்று லக்ஷ்மணனைக் கேட்கிறான்.

'திருநகர் தீர்ந்தவண் ணம்
மானவ ! தெரித்தி'என் ன
பருவரல்த் தம்பிகூ றத்,
தாங்கரும் பையுள்எய் தி,

---

22. கோதை வில் குரிசில் - புஷ்பம் சூட்டி அலங்கரித்த வில்லை ஏந்தும் வீரன், ராமன். குரிசில் - அரசிளங் குமரன். அன்னான் - குகன். தீராக் காதலன் - நம்மை என்றுமே விட்டு நீங்கமுடியாத அன்பன். இருத்தி - நன்றாய் இருக்கலாம்.

23. மானவ - புருஷர்களில் சிறந்த லக்ஷ்மணனே. தெரித்தி - தெரியச் செய்வாய். பருவரல்த் தம்பி - ராமன் காரணமாகத் துயரத்திலிருக்கும் லக்ஷ்மணன். பையுள் - துன்பம்.

இருகணீர் அருவிசோரக்,
குகனும்ஆண்(டு) இருந்தான்:'என்னே!
பெருநிலக் கிழத்திநோற் றும்
பெற்றிலள் போலும்'என்று. உசஅ

24. குகன் காரியம் இப்படி இருக்க, என்ன நேரு கிறது பார்ப்போம்.

தர்மத்துக்காகப் போர் தொடங்குகிறான் ஒரு அரசன். பகையைத் துரத்துகிறான், திசைகளை யெல்லாம் வெல்லுகிறான், ஏகசக்கராதிபதியாக இருக்கிறான். தன் புகழை நிலைநாட்டுகிறான். மக்கள் எல்லோரும் ராஜ பக்தியோடு அவனை மனசில் பாவிக்கிறார்கள். இத் தகைய அரசன், ரத்தமயமான யுத்தகளத்தில் மடிந்து விழுகிறான். இதையெல்லாம் மனசில் வைத்துக் கொண்டு பார்ப்போம்.

விரியிருள்ப் பகையைஓட் டித்,
திசைகளை வென்று,மேல் நின்(று)
ஒருதனித் திகிரிஉந் தி,
உயர்புகழ் நிறுவி,நா ளும்

---

23. பெருநிலக்கிழத்தி நோற்றும் பெற்றிலள்: பூமாதேவி. ராமனைச் சக்கரவர்த்தியாகப் பெறுதற்குத் தவஞ் செய்ததில் குறைவில்லை; ஆனாலும், கொடுத்து வைக்கவில்லை. என்னே - என்ன விசித்திரம். என்று - என்று சொல்லிக்கொண்டு; ஆண்டு இருந்தான்.

24. மேல் நின்று-எல்லோருக்கும் தெரியும்படியாக நின்று. ஒரு தனித் திகிரி - ஏக சக்கரம்.

இருநிலத்(து) எவர்க்கும்உள் ளத்(து)
இருந்தனன், அறத்தின்வீந் த
செருவிடை வீரன்என் னச்
செங்கதிர்ச் செல்வன்சென் ருன். ௩௪௬

25. மாலையில் செய்யவேண்டிய அனுஷ்டானங்களைச் செய்யும் முறைப்படிச் செய்துவிட்டு, படுக்கிற நேரம் வந்ததும், சீதையும் ராமனும் படுத்துக் கொண்டார்கள்.

மாலைவாய் நியமம்செய் யும்
மரபுளி இயற்றி,வை கல்
வேலைவாய் அமிர்தன்னா ளும்
வீரனும், விரித்தநா ணல்
மாலைவாய்ப் பாரின்பா யல்
வைகினன் ; - வரிவில்ஏந் திக்
காலைவாய் அளவும்,தம் பி
இமைப்பிலன் காத்துநின் ருன். ௩௫௦

---

24. உள்ளத்து இருந்தனன் - அந்திநேரத்துத் தியானத்துக்கு உரிய சூரியன். அறத்தின் வீந்த - தர்மம் காரணமாக உயிர்விட்ட. செருவிடை - யுத்த களத்தில். செங்கதிர்ச் செல்வன் சென்ருன் - சூரியன் அஸ்தமித்தான். செவ்வானத்தில் மேற்கே சூரியன் படிகிருன்.

25. மரபுளி - முறைப்படி. வைகல் வேலைவாய் - படுக்கும் நேரம் கிட்டியதும். நாணல் மாலைவாய் - புல்லைச் சேர்த்துப் பரப்பியிருந்த விரிப்பில். பாரின் பாயல் வைகினன் - பூமியே கட்டிலாக படுத்துக் கொண்டான். இமைப்பிலன் - கண் கொட்டாது.

26. இப்படிக் கண்கொட்டாமல் ராமனையும் சீதையையும் காத்துக்கொண்டிருக்கிறான், லக்ஷ்மணன். குகனோ கொஞ்சம் எட்டிநிற்கிறான் : எப்படி ?

தும்பியின் குழாத்தில்ச்சுற் றும்
சுற்றத்தன், தொடுத்தவில் லன்,

வெம்பிவெந்(து) அழியாநின் ற
நெஞ்சினன், விழித்தகண் ணன்,-

தம்பிநின் றானைநோக் கித்,
தலைமகன் தன்மைநோக் கி,

அம்பியின் தலைவன்கண் ணீர்
அருவிசோர் குன்றின்நின் றான். ௩௫௧

27. சேற்றில் உண்டான செந்தாமரை, கிழக்கே தேரில் தோன்றிய சூரியனைப் பார்த்து மலர்ந்தது.

செஞ்செவே சேற்றில்தோன் றும்
தாமரை, தேரில்தோன் றும்

வெஞ்சுடர்ச் செல்வன்மே னி
நோக்கின விரிந்த ;வே றோர்

---

26. யானைக் கூட்டம் மாதிரிச் சுற்றிநின்றது பரிவாரம். தலைமகன் - ராமன். அம்பியின் தலைவன் - குகன். குறிப்பு : குன்றைச் சுற்றி யானைக் கூட்டம் நிற்பதுபோல் பரிவாரம் நின்றது என்பது மிக அழகான வர்ணனை ; இதயம் அனுபவிக்கிற காட்சி.

27. வெஞ்சுடர்ச் செல்வன் : சூரியன். நோக்கின விரிந்த - நோக்கி விரிந்தன.

அஞ்சன ஞாயி(று)அன் ன
ஐயனை நோக்கிச்,செய் ய
வஞ்சியாள் வதனம்என் னும்
தாமரை மலர்ந்த(து)அன் றே. ௫௨

28. காலையில் செய்யவேண்டிய அனுஷ்டானங்களை யெல்லாம் சிரத்தையோடு செய்தான் ராமன். பிறகு கங்கைத் துறைக்குப் போகிறான். முனிவர்களும் தொடர்ந்து போகிறார்கள்.

நாள்முதற்(கு) அமைந்தயா வும்
நயந்தனன் இயற்றி,நா மத்
தோள்முதற்(கு) அமைந்தவில் லான்
மறையவர் தொடரப்போ னான் ;-
ஆள்முதற்(கு) அமைந்தகேண் மை
அன்பனை நோக்கி,'ஐ ய !
கோள்முதற்(கு) அமைந்தநா வாய்
கொணருதி விரைவின்'என் றான். ௫௩

---

27. அஞ்சன ஞாயிறு - கண்ணின் மை போல இருண்ட மேனியையுடைய தனியான ஒரு சூரியன். அன்ன ஐயனை - ஒத்த ராமனை. செய்ய வஞ்சியாள் - அழகிய வஞ்சிக்கொடிபோன்ற சீதையின்.

28. நாள் முதல் - காலை. நயந்தனன் இயற்றி - சிரத்தையோடு செய்து. நாமத் தோள் முதற்கு - அழகிய சிறந்த தோளுக்கு. ஆள் முதற்கு அமைந்த கேண்மை - முதல் தரமான வேலையாளாக அமைந்த நட்போடு கூடிய. அன்பனை - குகனை. கோள் முதற்கு அமைந்த - சௌகரியமாய் ஏற்றிக்கொள்ளக்கூடிய.

29. படகைக் கொண்டுவரும்படியாக ராமன் கட்டளை யிட்டானே இல்லையோ, அவ்வளவுதான், குகனுக்கு உயிர் உடல் எல்லாம் உலைகிற நிலைக்கு வந்துவிட்டன.

சந்தம்

தானன தனன தன்
தானன தனன தன்

ஏவிய மொழிகே ளா,
இழிபுனல் பொழிகண் ணன்,
ஆவியும் உலைகின் றன்,
அடியிணை நிலையில் லான், -
காவியின் மலர்,கா சா,
கடல்,மழை, அனையா னைத்
தேவியொ(டு) அடிதா ழாச்
சிந்தனை யுரைசெய் வான். ௩௫௪

30. என்ன சொல்லுகிறான் குகன்?

---

29. அடியிணை நிலையில்லான் - கால் நிலத்தில் நிலை கொள்ளவில்லை. நீலோற்பல மலர், காசாமலர், கடல், மேகம் இவை நான்கும் நீலநிறம் கொண்டவை. இவ்வளவையும் சேர்த்து உவமிக்கும்போது, ராமனது திருமேனியின் அருமையும் அழகும் நம்மைக் கனியச் செய்கிறது. ராமன் பக்கத்திலேயே நின்ற சீதையையும் சேர்த்து வணங்கினான் குகன். அடி தாழா - அடியில் தாழ்ந்து.

'பொய்ம்முறை யிலரேம், எம்
புகலிடம் வனமே யால் ;
கொய்ம்முறை உறுதா ராய் !
குறைவிலெம், வலியே மால் ;
செய்ம்முறை குற்றே வல்
செய்குதும், - அடியோ மை
இம்முறை உறவென் ன
இனி(து)இரு நெடி(து)எம் மூர். ' ௩௫௫

31. தன்னுடனேயே இருக்கவேண்டும் என்று குகன் வேண்டிக்கொண்டான். அவனது அன்பு இதயம் நிறைந்தவண்ணமாக இருந்ததை ராமன் உணர்ந்து கொண்டான். அப்படியே சிரித்தான்.

அண்ண லும் அதுகே ளா,
அகம்நிறை அருள்மிக் கான்,
வெண்ணிற நகைசெய் தான்,
' வீர ! நின் உழையாம் அப்

0. பொய்ம்முறையிலரேம்-எங்களிடத்தில் ஏமாற்றம் கிடையாது. எம்புகலிடம் வனமேயால் - எங்களுக்கு வாழக்கூடிய இடம் வனந்தான் ; நகரத்துக்கு ஒருநாளும் போகமாட்டோம். கொய்ம்முறை உறு தாராய் - அழகாகக் கட்டிய மாலையை அணிந்தவனே. செய்ம்முறை குற்றேவல் - செய்யவேண்டிய முறைப்படி எந்தச் சிறு வேலையையும். அடியோமை இம்முறை உறவு என்ன - எங்களை இந்தப் பணியாளர் உறவில் வைத்து.

31. அண்ணலும் அது கேளா - ராமனும் அதைக் கேட்டு. அகம்நிறை அருள் மிக்கான் - உள்ளம் நிறைந்த அருளோடு கூடியவனாய். வெண்ணிற நகைசெய்தான் - பல்லெல்லாம் தெரியும்படியாக உள மகிழ்ச்சியோடு சிரித்தான். நின் உழை - உன்னிடம் திரும்ப.

புண்ணிய நதியா டிப்,
புனிதரை வழிபா(டு) உற்(று),
எண்ணிய சிலநா ளில்
குறுகுதும் இனி(து)'என் றான். ௩௫௬

32. ராமனுடைய மனதை அறிந்துகொண்டு சீக்கிரமாகப் போய்ப் படகைக் கொண்டுவந்தான் குகன்.

சிந்தனை உணர்கிற் பான்
சென்றனன் விரைவோ டும்,
தந்தனன் நெடுநா வாய்;
தாமரை நயனத் தான்
அந்தணர் தமைஎல் லாம்
'அருளுதிர் விடை'என் றான்,
இந்துவின் நுதலா ளோ(டு)
இளவலொ(டு) இனி(து)ஏ று. ௩௫௭

---

31. புனிதரை - முனிவரை. எண்ணிய - விரல் வைத்து எண்ணக்கூடிய. குறுகுதும் - வந்து சேருவோம். குறிப்பு: சில நாளில் குறுகுதும் என்று சொல்லுவதில், குகனது அறியாமையை நோக்கிய பரிதாபம், தாங்கமுடியாத சோகம், இன்னும் எத்தனையோ பாவங்கள் கலந்து கிடக்கின்றன.

32. தாமரை நயனத்தான் - ராமன். அருளுதிர் விடை என்றான் - விடை கொடுக்கும்படியாகச் சொல்லி விட்டு. இந்துவின் நுதலாள் - பிறைச்சந்திரன் போன்ற நெற்றியையுடைய சீதை. இளவல் - தம்பி. இனிது ஏறு - சௌகரியமாக ஏறி.

33. வேகமாகப் படகை விடும்படிச் சொன்னான். குகனும் அப்படியே வேகமாக ஓட்டினான். படகும் அன்னம்போல் சுகமாக ஓடியது.

'விடுகுதி கடி(து)' என்றான்;
மெய்உயிர் அனையானும்
முடுகினன், நெடுநாவாய்
முரிதிரை நெடுநீர்வாய்
கடிதினின் மடஅன்னக்
கதிஅது செல, நின்ற
இடருறும் மறையோரும்
எரியுறு மெழுகானார். ௫௫அ

34. அக்கரை சேர்ந்தது படகு. 'சித்திரகூட பர்வதத்திற்குச் சொல்லும் வழி எது அப்பா' என்று கேட்டான் ராமன்.

அத்திசை உற்(று), ஐயன்,
அன்பனை முகம்நோக்கிச்,
'சித்திர கூடத்துச்
செல்நெறி பகர்' என்னப், -

---

33. முடுகினன் - விரைவாக ஓட்டினான். முரிதிரை - மடங்கும் அலையோடு கூடிய. கதி அது செல - வேகமாகப் போக. நின்ற - கரையில் நின்ற. எரியுறு - நெருப்பிலிட்ட.

34. அத்திசை - எதிர்த் திசையிலுள்ள கரை.

பத்தியின் உயிர்ஈ யும்
பரிவினன் அடிதா ழா,

'உத்தம ! அடிநா யேன்
ஓதுவ(து) உள(து) 'என் றான். ௩௫௯

35. 'வழியில்லாத காட்டுக்குள்ளும் வழியைக் கண்டுபிடிப்பேன்' என்கிறான் குகன்.

' நெறியிலா நெறியெல் லாம்
நேடுவன் வழுவா மல் ;

நறியன கனிகா யும்
நற(வு)இவை தரவல் லேன்;

உறைவிடம் அமைவிப் பேன் ;
ஒருநொடி வரைஉம் மைப்

பிறிகிலென் ; - உடன்ஏ கப்
பெறுகுவன் எனில்நா யேன்.' ௩௬0

36. இப்படி உடன் வருவேன் என்ற குகனுக்குப் பதில்சொல்லுகிறான் ராமன்.

---

34. பத்தியின் உயிர் ஈயும்-பக்தியினால் உயிரையே தத்தம் செய்யக்கூடிய. பரிவினன் - அன்பினன். அடி தாழா - அடி தாழ்ந்து. உத்தம - உத்தமனே. ஓதுவது - சொல்லுவது.

35. நறவு - தேன். உடன் ஏகப் பெறுகுவன் எனில் - உன்னுடன் காட்டுக்கு வர அனுமதி கிடைத்தால்.

அன்னவன் உரைகேளா,
அமலனும் உரைநேர்வான் :
'என்உயிர் அனையாய் நீ,
இளவல்உன் இளையான், இந்
நன்னுதல் அவள்நின் கேள்,
நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடை யது,நான் உன்
தொழில்உரி மையின்உள் ளேன்.' ௩௬க

37. மேலும் சொல்லுகிறான் ராமன்: இந்த உலகத்தில் துன்பம் இல்லை என்றால், சுகம் இல்லை தானே ? ஏதோ இடையில் பிரிவு ஏற்படுகிறது என்று வருந்தவேண்டாம் அப்பா !

' துன்புள(து) எனின்அன் றோ
சுகமுள(து) ; அதுஒன் றுப்
பின்புள(து) ; இடைமன் னும்
பிரிவுள(து) எனஉன் னேல் ;
முன்புளெம் ஒருநால் வேம் ;
முடிவுள(து) எனஉண் டோ ? -
அன்புள இனிநாம் ஓர்
ஐவர்கள் உளரா னேம்.' ௩௬உ

---

36. அமலனும் உரை நேர்வான் - ராமன் பதில் சொல்லுகிறான். இளவல் - தம்பி லக்ஷ்மணன். நன்னுதல் அவள் நின் கேள் - சீதை உன் மைத்துனி. உன் தொழில் உரிமையின் உள்ளேன் - தம்பியென்று உன்னை ஏவக்கூடிய உரிமை எனக்கு உண்டு.

37. ஒன்றுப் பின்புளது - நிச்சயமாகப் பின்பு உண்டு. முடிவுளது என உண்டோ - சகோதரர்கள் நான்கு பேர்தான் என்று முடிவு கட்டிவிடலாமா !

38. அயோத்தியை ஆளுகிறதற்கு உன் தம்பி பரதன் இருக்கிறான். அவன் கடமையை யுணர்ந்து அமைதியாய் இருக்கிறான் :

' அங்குள கிளைகா வற்(கு)
அமைதியின் உளன்உம் பி ;

இங்குள கிளைகா வற்(கு)
யாருளர், உரைசெய் யாய் !

உன்கிளை என(து)அன் றோ,
உறுதுயர் உறலா மோ ? -

என்கிளை இதுகா, என்
ஏவலின், இனி(து)' என்றான். ௩௬௩

39. குகனுக்கு விஷயம் நன்றாகத் தெரிந்துவிட்டது. ராமன் சொன்னபடி கேட்டுத் தீரவேண்டியது தான் என்று உறுதிபண்ணிக்கொண்டான். எந்தத் துன்பத்தையும் அனுபவிக்கப்பின்வாங்காதவன் அவன். பிரிவானது அவனை ஒரு நோயாக வருத்துகிறது. தாங்கமுடியவில்லை. அப்பாவி, என்ன செய்வான்.

---

38. அங்குள கிளை - நெருங்கிய உறவினர் போன்ற அயோத்தி ஜனங்களை. உம்பி - உன் தம்பி பரதன். உறு துயர் உறலாமோ - ஏதோ வர நேர்ந்த துயரத்திற்கு நாம உள்ளாகிவிடலாமா. என் கிளை இது கா - இதோ இங்கே நிற்கிற என் உறவினர்களை எனக்காக நீ காக்க வேண்டும்.

ராமனிடம் விடை பெற்றுக்கொண்டு, அப்படியே வீட்டைப் பார்த்துத் திரும்பிப் போய்விடுகிருன்.

பணிமொழி கடவா தான்,
பருவரல் இகவா தான்,
பிணிவுடை யவன்என் றும்
பிரிவினன், விடைகொண் டான்; -
அணியிழை மயிலோ டும்
ஐய னும் இளையோ னும்
திணிமரம் நிறைகா னிச்
சேணுற நெறிசென் ருர். ௩௯

---

39. பணிமொழி - ராமனது கட்டளை. பருவரல் இகவாதான் - துன்பத்தைத் தள்ளிவிட முடியாது சகித்துக் கொள்ள வல்லவன். விடை கொண்டான் - விடை கொண்டு திரும்பிப்போய்விட்டான். அணி இழை மயில்: அழகு செய்த மயிலுக்குச் சமானமான சீதை. திணி மரம் - அடர்ந்த மரங்கள். சேணுற - தூரமாகவுள்ள. குறிப்பு: குகனை முதலில் விடைகொண்டு வீட்டுக்குப் போகும்படி செய்ததும், அதன் பிறகே ராமன் முதலியோரைக் காட்டுக்குப் பிரவேசிக்கச் செய்ததும் அருமையான பாவம்; அருமையான நாடகப்பண்பு.

## 8. சித்திரகூடப் படலம்

1. குகனை விட்டுப் பிரிந்த ராமன் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும் காட்டுக்குள் நடந்து சென்றார்கள். பாலைவனமாக இருந்த பிரதேசமும் கிட்டியது. ஆனால், அந்தப் பருவத்தில் நல்ல வேளையாக மழை பெய்து, பாலைக்குரிய மரம் செடி கொடிகளிலெல்லாம், புஷ்பங்கள் பூத்திருந்தன. குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. ஒரே மேக சஞ்சாரமாய் இருந்ததால், வெயிலே நிலவுபோல் இறங்கியது. பாலையை இப்படி சுகமாகக் கடந்தார்கள். கடைசியில், சித்திரகூட பருவதம் போய்ச் சேர்ந்தார்கள். நிலங் கீறுகிற சமயம் : மலையில் ஒரு காட்சி.

ஒரு கருமேகம் மலைச்சிகரத்தில் தோன்றியது. அதற்குள் பிறைச்சந்திரன் மறைந்தது. இடிச்சத்தமும் லேசாகக் கேட்டது. அந்த மேகத்தைப் பெண் யானை என்று கருதி அடுத்துநின்ற ஆண் யானை துதிக்கையை நீட்டியதோ என்று சொல்லும்படியான காட்சி.

சந்தம்

தான தன்னன
தானன தானன
தா ன

வெளிறு நீங்கிய
பாலையை மெல்லெனப்
போனார் ;

குளிறு வான்மதிக்
குழவிதன் சூல்வயிற்(று)
ஒளிப் பப்

பிளிறு மேகத்தைப்
பிடியெனப் பெரும்பனைத்
தடக் கைக்

களிறு நீட்டும்அச்
சித்திர கூடத்தைக்
கண் டார். ௩௬௫

2. அதிகாலையில் சித்திரகூட பருவதம்போய்ச் சேர்ந்துவிட்டார்கள். ராமனும் சீதையும் அங்குள்ள ஆற்றங்கரையோரமாக மரநிழலில் பகல் முழுதும் தங்கினார்கள். அந்திநேரம் ஆகிவிட்டது. கிழக்கே யிருந்த மலைச்சிகரம் ஒன்றில் காலையில் தோன்றிய சூரியன், வான முகட்டின் வழியாக வளைந்து சென்று, மேல்த்திசையில் நின்ற மொட்டைச்சிகரத்திற்கு

1. மதிக்குழவி - பிறைச்சந்திரன். பிளிறு மேகம் : இடியோசையோடு கூடிய மேகம். பிடி - பெண் யானை. களிறு - ஆண் யானை.

அப்பால் போய் நின்றது. இந்தக் காட்சி எதுபோல் இருந்தது :

சந்தம்

தானன தானன
தான தன்னன

மாவியல் உதயமாம்
துளப மாலவன்,
மேவிய பகைஇருள்
அவுணர் வீந்துகக்,
காவியல் குடவரைக்
கால நேமிமேல்
ஏவிய திகிரிபோல்,
இரவி ஏகினன். ௩௬௬

3. மேலே சொன்ன விஷ்ணுமூர்த்தியின் சக்கரம் அந்த அசுரன்தலையில் தாக்கியமாத்திரத்தில், பொங்கி வந்த ரத்தம் நாலாபக்கமும் பரவியது. அது போலிருந்தது, மேற்கே விரிந்துகிடந்த செவ்வானம்.

---

2. மா இயல் உதயமாம் துளப மாலவன்-பெருத்த உதயகிரியாகிய விஷ்ணுமூர்த்தி. மேவிய-எதிர்த்துவந்த. பகை இருள் அவுணர் - பகையாகிய இருள் என்னும் அரக்கர். வீந்துக - தொலைய. கா இயல் - காடுகள் நிறைந்த. குடவரைக் கால நேமி மேல் - மேற்கு மலைச் சிகரமான கால நேமி என்ற அவுணர் தலைவன்மேல். ஏவிய திகிரிபோல் - ஏவிவிட்ட சக்கராயுதம்போல். இரவி ஏகினன் - சூரியன் போய் விழுந்தான். நீல மேனியனுன விஷ்ணு, கருமேனியோடு கூடிய காலநேமி மேல் சக்கரத்தை ஏவியது நயமான உவமானம்.

சக்கரம் தானவன்
நலையில் தாக்குற
எக்கிய சோரியில்ப்,
பரந்தது எங்கனும்
செக்கர், - அத் தியவன்
வாயில்த் தீர்ந்துவே(று)
உக்கவான் தனிஎயி(று)
ஒத்த(து) இந்துவே. ௩௬௭

4. மலைப்பிரதேசத்தில் ஆறும் பெரிய தடாகங்களும் உண்டு. அவைகள் பக்கம் அந்தி நேரத்தில் நாம் உட்கார்ந்திருக்க நேர்ந்தால் என்ன பார்ப்போம்:

மந்தியும் கடுவனும்
மரங்கள் நோக்கின ;
தந்தியும் பிடிகளும்
தடங்கள் நோக்கின ;

---

3. தானவன் - அசுரனான காலநேமி, எக்கிய சோரியில் - பொங்கி வந்த ரத்தத்தைப்போல, எங்கனும் - நாலா பக்கமும். செக்கர் - செவ்வானம். அத் தியவன் - அந்த அசுரனது, வாயில் தீர்ந்து வேறு உக்க - வாயைவிட்டு முரிந்து வேருகப் போய் விழுந்த. வான் தனி எயிறு - பெருத்ததொரு வக்கிர தந்தம். ஒத்தது இந்துவே - ஒத்திருந்தது பிறைச் சந்திரன். குறிப்பு: இந்தச் செய்யுளிலுள்ள வல்லோசைகளைக் கவனிக்க வேண்டும்; விஷயத்தோடு ஒட்டி ஒலிக்கின்றன.

4. மந்தியும் கடுவனும் - பெண் குரங்கும் ஆண் குரங்கும், மரங்கள் நோக்கின - மரத்தின்மேல் ஏறச் சென்றன. தந்தியும் பிடிகளும் - ஆண் யானைகளும், பெண் யானைகளும், தடங்கள் நோக்கின - குளிப்பதற்காகத் தடாகங்களுக்குள் இறங்கின.

நிந்தையில் சகுந்தங்கள்
நீள நோக்கின ;

அந்தியை நோக்கினன்
அறிவை நோக்கினன். ௩௬௮

5. மிருகங்களையும் பறவைகளையும் பார்த்தாய் விட்டது. இனிப் புஷ்பங்களைப் பார்ப்போம். தாமரை போன்ற பகல் பூக்கள் குவிகின்றன. ஆம்பல் போன்ற இராப்பூக்கள் மலர்கின்றன. இவை போக, குவிகிற வேறு சில பூக்களையும் அங்கே பார்க்கிறோம்.

மொய்யுறு நறுமலர்
முகிழ்த்த வாம்சில ;

மையறு நறுமலர்
மலர்ந்த வாம்சில ;—

---

4. நிந்தையில் சகுந்தங்கள் - அழகான சகுந்த பட்சிகள். நீள நோக்கின - உயர்ந்த பாறைகளிலுள்ள கூடுகளுக்குப் பறந்து சென்றன. அறிவை நோக்கினன் - உள்ளத்துக்குள் மறைந்து அறிவு மயமாய் இருக்கிற கடவுளைத் தியானிக்க வல்ல ராமன். ராமன் எதைப் பார்த்தான்? மேற்குத் திசையில் சூரியன் அஸ்தமிப்பதைப் பார்த்தான். குறிப்பு : குரங்குகள் மேலே சென்றன, யானைகள் கீழே நோக்கிச் சென்றன என்றும், சகுந்தங்கள் மேலே நோக்கிச் சென்றன, ராமனுடைய மனமோ கீழே (சூரியன் படிகிற இடத்தை) நோக்கிச் சென்றது என்றும் சொல்லி, விஷயங்களை மேலுங் கீழுமாக இயங்கச் செய்வதில் தனியான சுவை இருக்கிறது. சுவை, தாள இயலால் ஏற்படுவது. இந்தத் தாள இயலை 'ரிதும்' என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள்.

5. மொய்யுறு நறுமலர் - நிறபேதங்கள் அமைந்த பகல் பூக்கள். மையறு நறுமலர் - நிறபேதங்கள் அற்ற இராப்பூக்கள். ராமனுக்கும், தம்பிக்கும், சீதைக்கும்,

ஐயனோ(டு) இளவற்கும்,
அமு(து)அன் னாளுக்கும்,
கைகளும் கண்களும்
கமலம் போன்றவே. ௩௬௯

6. ராமன் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும் ஏகாந்தமான மலைத் தடாகத்தின் அருகே நின்று தியானம் செய்த அழகைப் பார்த்தோம். தங்கும் இடம், மலையின் சரிவில் கொஞ்ச உயரத்தில் அமைந்திருக்கிறது என்று லக்ஷ்மணன் சொன்னான்.

மாலைவந்(து) அகன்றபின்,
மருங்கி லாளொடும்
வேலைவந்(து) உறைவிடம்
மேய நாம்எனக்,
கோலைவந்(து) உமிழ்சிலைத்
தம்பி கோலிய
சாலைவந்(து) எய்தினான்,
தவத்தின் எய்தினான். ௩௭௦

---

கைகளும் கண்களும் அங்கே தடாகத்திலிருந்த தாமரை மலர்கள்போலக் குவிந்திருந்தன. அவர்களுடைய தியான நிலையைச் சுட்டிக் காட்டிய விதம் இது. இந்த வர்ணனையிலும் மேலே சொன்ன தாளஇயல் நயமாக அமைந்திருக்கிறது.

6. மாலைவந்து அகன்றபின்-அந்திநேரம் கழியவும். மருங்கிலாள் - மெல்லிய இடையளான சீதை. கோலை வந்துமிழ் சிலைத் தம்பி - அம்பை எய்து கொட்டக்கூடிய வில் வீரனான லக்ஷ்மணன். கோலிய சாலை - கட்டி அமைத்த பர்ணசாலை. தவத்தின் எய்தினான் - மக்கள் செய்த தவத்தின் காரணமாகவந்து அவதரித்தவனான ராமன். ராமன் சாலைவந்து எய்தினான்.

7. பர்ணசாலையை லக்ஷ்மணன் எப்படிச் செய்தான் என்பதைப் பார்ப்போம்:

நீண்ட மூங்கில்களை எடுத்து வெட்டி, அவைகளை வரிசையாக மண்ணில் பதிய நிறுத்தி, மேல்மட்டம் பார்த்துக் கொண்டான். அகலமாகவும் நீளமாகவும் மூங்கில்களை வைத்து இடம் அமையும்படி முக்குச் சட்டங்களை இறக்கிவிட்டான். இடையில் ஆங்காங்கு கைகளை ஏற்றினான். கைகளின் மேல் நேரான ஈர்த்த கழிகளைக் கொண்டுபோய் இடை விட்டுவிட்டுப் பரப்பிக் கட்டினான்.

நெடுங்கழைக் குறுந்துணி
நிறுவி, மேல்நிரைத்(து),

ஒடுங்கலில் நெடுமுக(டு)
ஒழுக்கி, ஊழுற

இடுங்கலில் கைவிசித்(து)
ஏற்றி, எங்கணும்

முடங்கலில் வரிச்சுமேல்
விரித்து மூட்டியே. ௩௪௧

7. கழை - மூங்கில். குறுந்துணி - ஐந்தாறு அடி நீளமுள்ள கட்டைத் துண்டுகள். நிறுவி - நட்டு. மேல் நிரைத்து - மேல் மட்டத்தை ஒழுங்குபடுத்தி. ஒடுங்கலில் - அகலமான. ஒழுக்கி - நாலு முக்குகளிலும் சட்டம் வைத்து இறக்கி. ஊழ் உற - நல்ல ஒழுங்குபட. இடுங்கலில் - முக்குகளுக்கு இடையேயுள்ள பத்தியில். கை - மூங்கில் கை. விசித்து - கட்டி. முடங்கலில் வரிச்சு - ஈர்கழியாகிய கோணல் இல்லாத வரிச்சுகளை. விரித்து - எட்டி எட்டி.

8. வரிச்சுகளை விட்டு விட்டு அமைத்ததைப் பார்த்தோம். இந்த வரிச்சுக்குமேல் தேக்கு மரத்தின் அகன்ற பளபளப்பான இலைகளை நெருக்கமாகப் பரப்பினான். அதன்மேல், பூவோடு கூடிய நாணல் புல்லை வேய்ந்துவிட்டான். பிறகு கீழே இறங்கி, நாட்டிய தூண்களுக்கு இடையே ஈர்க்கழிகளை அடை சுவராக நெருக்கி அமைத்தான். ஈர்க்கழிகள்மேல் களிமண்ணை அப்பி, அதைத் தண்ணீர்விட்டுத் தீற்றி ஒழுங்கு செய்தான்.

தேக்கடைப் படலையில்
செறிவு செய்து,பின்

பூக்கிளர் நாணலின்
புல்லு வேய்ந்து,கீழ்

தூக்கிய வேய்களில்ச்
சுவரும் சுற்றுறப்

போக்கி,மண் எறிந்(து)அவை
புனலில்த் தீற்றியே. ௩௭௨

9. மேலே சொன்னபடி மண் தீற்றிச் சுவரும் அமைத்துவிட்டான். ராமனுக்கு நல்ல இடம் அமைந்து விட்டது. அதை யொட்டிச் சீதைக்குத் தனியான இடம் அமைத்திருக்கிறான்.

---

8. தேக்கடை - தேக்க மரத்தின் இலை. படலையில் செறிவு செய்து - படலமாக நெருக்கி வைத்து. தூக்கிய வேய்களில் - குறுக்காகத் தொங்கவிட்ட ஈர்க்கழிகளில். மண் எறிந்து - மண் அப்பி. புனல் - தண்ணீர்.

வேறிடம் இயற்றினன்
மிதிலை நாடிக்கும்,

கூறின நெறிமுறை
குயிற்றி, குங்குமச்

சேறுகொண்(டு) அழகுறத்
திருத்தித், திண் சுவர்

ஆறிடு மணியொடும்
கனகம் அப்பியே. ௩௭௩

10. இப்படியெல்லாம் சமைத்த சாலையில், பொன் நிறமான சீதையும் நீலநிறமான தானுமாய்க் குடிபுகுந்தான், கடவுள் அவதாரமேயான ராமன்.

இன்னணம் இளையவன்
இழைத்த சாலையில்,

பொன்நிறத் திருவொடும்
குடிபுக் கானரோ, -

நல்நெடுந் திசைமுகன்
அகத்தும், நம்மனோர்க்(கு)

உன்னரும் உயிருளும்,
ஒக்க வைகுவான். ௩௭௪

---

9. மிதிலை நாடிக்கும் - சீதைக்கும். குங்குமச் சேறு - செம்மண் குழம்பு. அந்தச் சுவரில் பலநிறக் கல்லுகள் சிப்பிகள் இவைகளைப் பதித்து அழகு செய் திருந்தான்.

10. நல்நெடும் திசைமுகன் அகத்தும் : சிருஷ்டி தத்துவம் எல்லையில்லாதபடி, நாலா திக்குகளிலுமே

11. லக்ஷ்மணன் அருமையாய்க் கட்டிய சாலையைப் பார்த்த அளவில் ராமனுக்கு இதயத்தில் என்றுமில்லாத ஆனந்தம் பொங்கிவிட்டது. எப்படி அனுபவிக்கிருன் பாருங்கள்.

சந்தம்

தான தன்னன
தன்னன தன்னன

மேவு கானம்
மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய
பாதமும் போந்தன ;
தாவில் எம்பிகை
சாலை சமைத்தன ; -
யாவை யாதும்
இலார்க்கியை யாதவே ! ௩௭௫

பரவி யிருக்கிறது ; அதிலெல்லாம் இறைவனிருந்து தொழில்ப்படுகிருன். நம்மனோர்க்கு உன்னரும் உயிருளும் : உயிர்த் தத்துவம் இப்படிப்பட்டது என்று நமக்குத் தெரியவில்லைதான். அந்த உயிர்த் தத்துவத்துக்குள்ளும் இறைவனிருந்து தொழிற்படுகிருன். ராமனை இங்கே கடவுளாகக் கருதுகிருர் கவிஞர்.

11. மேவு கானம் - எதிர்ப்பட்ட காட்டின்வழியாக. மிதிலையர்கோன் மகள் - ஜனகன் மகள், சீதை. போந்தன - நடந்தன. தாவில் எம்பி கை - ஒப்பற்ற லக்ஷ்மணனது கைகள். யாதும் இலார்க்கு இயையாத - யாதொரு பொருளும் இல்லாத ஆண்டியாகிய எனக்குக் கிடைக்காதது ஒன்றுமே இல்லை போலிருக்கிறதே ! என்னைவிடப் பாக்கியசாலி இந்த உலகத்தில் யார் !

12. இப்படியெல்லாம் சிந்தித்துக்கொண்டிருந்தான் சிறிது நேரம். பிறகு, தம்பி லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்லுகிறான்.

என்று சிந்தித்து,
இளையவற் பார்த்(து),' இரு

குன்று போலக்
குவவிய தோளினாய் !

என்று கற்றனை
நீயிது போல் ? 'என்றான், -

துன்று தாமரைக்
கண்பனி சோர்கின்றான். ௩எசு

13. ராமனது உள்ளத்தில் இப்படியெல்லாம் இன்பம் பொங்கியது. அது எப்படி மாறுகிறதென்று பார்ப்போம். சக்கரவர்த்தியாகிய தந்தை ராஜ்யத்தை எனக்கு முதலில் கொடுத்தான். அடுத்தாற்போல், சத்திய தர்மத்தைப் பாதுகாக்கவேண்டும் என்று கட்டளையிட்டான். நானும் அப்படியே பாதுகாத்துப் புகழைச்

---

12. இளையவற் பார்த்து - இளையவனைப் பார்த்து. குவவிய - திரண்ட. எப்போதப்பா இதுபோலச் சாலை கட்டக் கற்றுக்கொண்டாய் என்றான் ராமன். துன்று தாமரைக் கண் - முதிர்ந்த தாமரை போன்ற கண். பனி சோர்கின்றான் - கண்ணீர் சொரிந்த வண்ணமாய்.

சூடிக்கொண்டேன் என்றெல்லாம் சொல்கிறார்கள் -ஆனல், அதெல்லாம் ஒன்றுமில்லை.

'அடரும் செல்வம்
அளித்தவன் ஆணையால்

படரும் நல்லறம்
பாலித்(து), இரவியில்ச்

சுடரும் மெய்ப்புகழ்
சூடினென் என்பதென்? -

இடர்உ னக்கிழைத்
தேன்நெடு நாள்'என்றான். ௧௩

---

13. அடரும் செல்வம் - மிகுதியான செல்வம், ராஜ்யம். பாலித்து - பரிபாலித்து. இரவியில் சுடரும் மெய்ப்புகழ் - சூரியனைப்போல் பிரகாசிக்கும் புகழ். என் - என்ன விஷயம், ஒன்றுமில்லை.

# 9. பள்ளி அடைப் படலம்

1. ராமன் சீதை லக்ஷ்மணன் ஆகிய மூவரும் சித்திரகூட பருவதத்தில் சௌகரியமாய் இருக்கிறார்கள். சரி, அவர்களை விட்டுவிட்டு, இனி நாம் போகவேண்டிய இடம் கேகயநாடு. பரதன் அங்கே போயிருக்கிறான். அயோத்தியில் நடந்த விஷயம் ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

தசரதன், கைகேசிக்கு வரத்தைக் கொடுத்துவிட்டு, நீயும் பரதனும் எப்படியேனும் தொலைந்து போங்கள் என்று சொல்லி மூர்ச்சையாய்ப் போன விவரம் நமக்குத் தெரியும். கைகேசி அப்படியே உறங்கிவிட்டாள் என்பதும் தெரியும். விழித்தெழுந்ததும் அவள், தசரதன் சொன்னதாகவே சொல்லித் தூதர்களை அவசரம் அவசரமாய் பரதன் போயிருந்த கேகயநாட்டுக்கு அனுப்பினாள். தூதர்களும் தசரதன் கட்டளை என்று எண்ணியே போகிறார்கள். பரதன் இருந்த அரண்மனையை வந்தடைகிறார்கள்.

பொருவில் தூதுவர்
போயினர்: பொய்யிலார்

இரவும் நண்பக-
லுங்கடி(து) ஏகினர்;

---

1. பொருவில் - ஒப்பற்ற, ரொம்பவும் விசுவாசமுள்ள.

பரதன் கோயில் உற் -
றுர், ' படி காரிர் ! எம்
வரவு சொல்லுதிர்
மன்னவற் கே'என்றுர். ௩எஅ

2. காவலாளர்கள் பரதனிடம் போய், உன்னு டைய தந்தை சொல்லிவிட்டதாகத் தூதுவர் வந்திருக் கிறுர்கள் என்று சொன்னுர்கள். அப்படியா, நானே போய்ப் பார்க்கிறேன் என்று எழுந்தான் பரதன்.

' தூதர் வந்தனர்
உந்தைசொல் லோ(டு)'எனக்,
காதல் உந்திக்
களிக்கின்ற சிந்தையான்,
' போது கென்'எனப்,
புக்கவர் கைதொழத்,
' தீதி லன்கொல் ?
திருமுடி யோன்'என்றுன். ௩எகூ

3. கைகேசி சொல்லக்கேட்டு வந்ததால், தசரதன் சௌக்கியமாய் இருப்பதாகவே தூதர்கள் எண்ணி

1. படிகாரிர் - காவலாளரே.

2. உந்தை - உன் தந்தையாகிய தசரதன். காதல் உந்தி - அன்பானது தள்ள. போதுகென் என - நானே போகிறேன் என்று சொல்ல. புக்கவர் - அதற்குள் அவன் முன்னிலையில் வந்த தூதுவர். தீதுஇலன்கொல் திருமுடியோன் - சக்கரவர்த்தி சௌக்கியமாய் இருக் கிறுரா ? குறிப்பு : அவசரத்தைக் காட்டும் பாவம் செய் யுளில் இருப்பதைக் காணலாம்.

வந்தார்கள். அதனுல் சௌக்கியமாய் இருக்கிருர் என்றே சொன்னுர்கள். பரதனும் திருப்தி யடைந்து, தமையன் ராமன் சுகமாக இருக்கிருனு என்று கேட்டான்.

‘ வலியன் ’ என்றவர்
கூற மகிழ்ந்தனன் ;
‘ இலைகொள் பூண்இளங் -
கோன்எம்பி ரான்அவன்
உலைவில் செல்வத்த -
ஞே ? ’ என, ‘ உண்(டு) ’ எனத்,
தலையின் ஏந்தினன்
தாழ்தடக் கைகளே. ௩அ௦

4. இராமனுடைய யோகக்ஷேமத்தை விசாரித்து விட்டு, மற்ற உறவினர் உற்ருர் சம்பந்தமாகவும் க்ஷேமம் விசாரித்தான் பரதன்.

மற்றும் சுற்றத்(து)உள் -
ளார்க்கும், வரன்முறை
உற்ற தன்மை
வினுவி உவந்தபின்,

---

3. வலியன் - ஆரோக்கியமாய் இருக்கிருன். இலை கொள் பூண் - சின்னஞ்சிறு பதக்கங்கள் தொங்கவிட்ட தோள் வளையம் அணிந்த. இளங்கோன் எம்பிரான் - இளவரசனுகிய ராமன். உலைவில் செல்வத்தனே - யாதொரு குறைவுமில்லாமல் இருக்கிருனு. உண்டு என - அப்படியே இருக்கிருன் என.

4. சுற்றத்து உள்ளார்க்கும் - உற்ருர் உறவினர் சம்பந்தமாக. வரன்முறை - வரிசைக் கிரமமாக. உற்ற தன்மை வினுவி - யோக க்ஷேமங்களை விசாரித்து.

'இற்ற தாகும்,
எழு(து)அரு மேனியாய் !
கொற்ற வன்தன்
திருமுகம், கொள்(க) 'என்றார். ௩அக

5. தந்தை விட்ட திருமுகம் என்று தூதர் சொன்னதும், தந்தையை வாழ்த்தி வணங்கினான்.

என்று கூறலும்,
ஏத்தி இறைஞ்சினன்,
பொன்தி ணிந்த
பொருவில் தடக்கையால், -
நின்று வாங்கி
உருகிய நெஞ்சினன்,
துன்று நாண்மலர்ச்
சென்னியில்ச் சூடினான். ௩அஉ

6. மங்களகரத்தைக் குறிக்கும்படியாக, சந்தனம் கலந்த மண்ணை ஓலையின்மேல் ஒட்டி, முத்திரை வைத்திருந்தது. அதை நீக்கி, எழுதியிருந்த விஷயத்தை வாசித்துப் பார்த்தான்.

---

4. இற்றது ஆகும் திருமுகம் - இதுதான் கடிதம். எழுது அருமேனியாய் - சித்திரத்தில் எழுதமுடியாத அழகு வாய்ந்தவனே. கொற்றவன் - சக்கரவர்த்தியின்.

5. பொன் திணிந்த பொருவில் தடக்கையால் - ஆபரணங்கள் அணிந்த ஒப்பற்ற பெரிய கையினால். துன்று நாண்மலர்ச் சென்னியில் சூடினான் - பூமாலை அணிந்த தலையில் அதைச் சூடிக் கொண்டான்.

சூடிச் சந்தனம்
　　தோய்த்துடை சுற்றுமண்
மூடு தோட்டின்
　　முடங்கல் நிமிர்த்தனன்,
ஈடு நோக்கி,வந்(து)
　　எய்திய தூதர்க்குக்
கோடி மேலும்
　　நிதியம் கொடுத்தனன். ௩அ௩

7. தூதர்களுக்கு வெகுமதியெல்லாம் கொடுத்து விட்டு, ராமனது பாதங்களைத் தியானித்துப் பூவினால் அர்ச்சித்தான்.

வாணி லாநகை
　　தோன்ற, மயிர்ப்புறம்
பூண, வானுயர்
　　காதலிற் பொங்கினான்,
தாள்நி னைந்(து),அலர்
　　தூவினன், தம்முனைக்
காண லாம்என னும்
　　ஆசை கடாவவே. ௩அச

6. தோட்டின் முடங்கல்-வட்டமாகச் செய்த கூட்டுக்குள் இருந்த ஓலையை. ஈடு - எழுதியிருந்த விஷயம். கோடி மேலும் - கொள்ளை கொள்ளையாக.

7. வாள் நிலா நகை தோன்ற : ஆனந்தத்தினால் சிரித்தே விட்டான் பரதன். மயிர்ப்புறம் பூண - புளகாங்கித மடைந்தான். வானுயர் காதலில் பொங்கினான் - தெய்வ பக்திக்கும் மேலான ஒரு உணர்ச்சி பொங்கி. தாள் நினைந்து - ராமன் பாதத்தை நினைந்து. தம்முனை - ராமனை. கடாவவே - தூண்டவே.

8. பரதனுக்கு ராமனைக் காணவேண்டுமென்ற ஆசை அபாரமாய்ப் பொங்கிவிட்டது. அவசர அவசரமாகச் சேனையைப் புறப்படச் சொன்னான். உள்ளே போய், கேகய ராஜனிடம் அப்படியே விடைபெற்றுக் கொண்டு,வெளியே வந்து,தேரை ஒரு கையால் பிடித்த வண்ணமாய், சத்துருக்கனை ஏறச்சொல்லித் தானும் ஏறுகிறான்.

'எழுக சேனை 'என்(று)
ஏவினன், எய்தினன்

தொழுது கேகயர்
கோமகன் சொல்லொடும்,

தழுவு தேரிடைத்
தம்பியொ(டு) ஏறினன், -

பொழுதும் நாளும்
குறித்திலன் போயினான். ௩அ௫

9. பரதன் ஏறிய தேர் புறப்படவும், யானைப் படைவந்து சுற்றியது, தேர்பல வந்து சூழ்ந்தன, அரசர்களும் வந்து கூடிவிட்டார்கள், காலாட்படையும் சூழ்ந்துவிட்டது.

---

8. தழுவு தேரிடை - ஒரு கையால் பிடித்த தேரின் மேல். பொழுதும் நாளும் குறித்திலன் போயினான் - நல்ல நேரமா, நல்ல நாளா என்று ஒன்றும் கவனியாதபடி போனான். குறிப்பு : கவியின் உருவத்தில் துரிதபாவம் வெளிப்படையாக இருக்கிறது.

யானை சுற்றின,
 தேரிரைத்(து) ஈண்டின,
மான வேந்தர்
 குழுவினர், வாளுடைத்
தானை சூழ்ந்தன,
 சங்கு முரன்றன,
மீன வேலையின்
 விம்மின பேரியே. ௩௮௬

10. பரதன் புறப்படுகிறதைக்குறித்த இவ்வளவு சப்தமும் ஓடுங்கின. அடுத்தாற்போல், பாடகர்கள் பாடும் இனிய இசையைக் கேட்கிறோம். அந்த இசைக்குள் அடங்கி ஒலிக்கிற மத்தளத்தின் தாள ஓசையையும் கேட்கிறோம்.

ஊன்அ ளைந்த
 உடற்குயி ராம்எனத்
தான்அ ளைந்து
 தழுவின தண்ணுமை ;

---

9. இரைத்து ஈண்டின - சப்தித்துக் கொண்டு நெருங்கின. வாளுடைத் தானை - காலாட் படை. மீன வேலையின் - மீன்களோடு கூடிய சமுத்திரத்தைப் போல.

10. பாடல், உடல்போல் துலாம்பரமாய்த் தெள்ளத் தெளிய இருந்தது. மத்தளத்தின் தாள ஓசையோ அதற்குள் அடங்கிநின்று உயிர்நாடிபோல் ஒலித்தது. தண்ணுமை - மத்தளம்.

தேன்அ ளைந்து
செவியுற வார்த்தென,
வான்அ ளைந்தன
மாகதர் பாடலே. ௩௮௭

11. தேர் ஓட ஆரம்பித்தது. ஆறுகள் மலைகள் எல்லாவற்றையும் கடந்து, கடைசியாக ஏழாம் நாள் கோசல நாடு போய்ச் சேர்ந்தான்.

ஆறும் கானும்
அகன்மலை யும்கடந்(து)
ஏறி ஏழ்பகல்
நீங்கிப், பின்,எந்திரத்(து)
ஊறு பாகு
மடையுடைத்(து) ஒண்முளை
நாறு பாய்வயல்
கோசலை நண்ணினான். ௩௮௮

---

10. வார்த்தென - வார்த்தது என. வானளைந்தன - வானத்தை முட்டின. மாகதர் பாடலே - சமஸ்தான வித்துவான்களின் பாடல்கள்.

11. அகன் மலையும் - அகன்ற மலைப்பிரதேசங்களை யும். எந்திரத்து ஊறு பாகு மடையுடைத்து - கரும் பாலையிலிருந்து வடிந்த சாறானது அதற்குரிய வாய்க் காலின் மடையை உடைத்து. ஒண்முளை நாறு பாய் - பச்சைப் பசேல் என்று முளைத்துவரும் நாற்றங் காவில் பாய்கிற.

12. அவ்வளவு வளமான கோசல நாட்டை அடைந்தான். அவன் எதிர்பாராத விதமாக, அங்கே காட்சி: வயலில் ஏர் உழுவோர் இல்லை. ஆடவர்கள் தோளில் மாலையில்லை. வயலுக்கு நீர்ப்பாய்ச்சலில்லை.

ஏர்து றந்த
வயல் ; இள மைந்தர்தோள்

தார்து றந்தன ;
தண்தலை நெல்லினும்

நீர்து றந்தன ;—
தாமரை நீத்தெனப்

பார்து றந்தனள்
பங்கயச் செல்வியே. ௩௨அ௬

13. அயோத்தியில் நடன மண்டபங்கள் பல. அவைகளில், பாடலோ குழலோசையோ நாட்டியமோ ஒன்றுமில்லை. கோபுரத்துத் தூபிகளில் தோரணமாலைகளைக் கட்டி அலங்கரித்திருப்பார்கள். மாடங்களிலிருந்து அருமையான வள்ளைப்பாட்டுகள் வந்த வண்ணமாயிருக்கும். இப்போது அவை ஒன்றுமில்லை.

---

12. தண்தலை நெல்லினும் - நந்தவனத்திலும் வயலிலும். தாமரை வாடிப் போதற்குச் சில நாள் ஆகிறது, அதுவரையும் அதில் லக்ஷ்மி வசிக்கிறாள் என்று சொல்லுகிறோம். நாட்டைவிட்டும் லக்ஷ்மி போய்விட்டாள் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. பங்கயச் செல்வி - லக்ஷ்மி.

பாடல் நீத்தன
பண்,தொடர் பண்குழல்

ஆடல் நீத்த
அரங்கம், அகன்புனம்

கூடல் நீத்தன
சூடிகை, சூளிகை

மாடம் நீத்தன
மங்கல வள்ளையே. ௩௬௦

14. அயோத்தியிலுள்ளவர்கள் ஒரே உல்லாசமாய் இருப்பார்கள். இப்போது அவர்கள் முகத்தில் மலர்ச்சியே இல்லை.

நகை இழந்தன
வாள்முகம், நா(று)அகில்ப்

புகைஇ ழந்தன
மாளிகை, பொங்(கு)அழல்ச்

---

13. அரங்கம் - நாட்டிய மண்டபம். அகன் புனம் - காட்டுக் குழைகளால் கட்டிய கனத்த தோரண மாலை. சூடிகை - கோபுரத்துத் தூபங்கள். சூளிகை மாடம் - அலங்காரக் கலசம் அமைத்த கைப்பிடிச்சுவரோடு கூடிய மாடம். வள்ளை - வள்ளைப் பாடல்கள்.

14. நகை - மலர்ச்சி. வாள் முகம் - விளக்கத்தோடு கூடிய முகம். அகில்ப்புகை : கூந்தலுக்கு இடும் அகில்ப்புகை. அழல்ச்சிகை - சுடர்ப்பிழம்பு.

சிகைஇ ழந்தன
தீவிகை, தேமலர்த்

தொகைஇ ழந்தன
தோகையர் ஓதியே. ௩௬௧

இப்படி அழகிழந்த நாடு நகரத்தைப் பார்க்கிருன் பரதன். அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

என்ற நாட்டினை
நோக்கி இடருழந்(து),

ஒன்றும் உற்ற(து)
உணர்ந்திலன், உன்னுவான் ;

' சென்று கேட்பதோர்
தீங்குள தாம் 'என,

நின்று நின்று
நெடிதுயிர்த் தானரோ. ௩௬௨

16. தசரத மன்னனை ஆசையோடு பார்க்கப் போனுன். சௌகரியமாக இருப்பதற்கான இடங்களிலெல்லாம் போய்ப் பார்த்தான். காணவில்லை. இது

---

14. தீவிகை - விளக்கு. தேமலர்த்தொகை - தேனூறும் மலர் மாலையை. தோகையர் ஓதியே - பெண்களுடைய கூந்தல்.

15. இடர் உழந்து - துன்புற்று. உன்னுவான் - யோசிக்கலானுன். சென்று கேட்பதோர் தீங்குளதாம் என - போய் விசாரித்தால் தீமையான சமாசாரம் ஒன்று வரும் போலிருக்கிறது என்று பயந்து. நெடிதுயிர்த்தான் - பெருமூச்சு விட்டான்.

ஏதோ ஒரு பெரிய விபத்தைக் காட்டுகிறது என்று மனசில் சந்தேகம்கொண்டான்.

விருப்பின் எய்தினன்,
 வெந்திறல் வேந்தனை
இருப்பு நல்லிடம்
 எங்கணும் கண்டிலன்,
' அருப்பம் அன்றி(து) 'என்(று)
 ஐயுற(வு) எய்தினன் :
பொருப்பு நாண
 உயர்ந்த புயத்தினன். ௧௬

17. தந்தை அங்கேயில்லை என்று எண்ணி, அண்ணன் ராமன் இருக்கும் இடம் நோக்கி விரைந்து போகிறான் ; அப்போது ஒரு பெண் வந்து, அன்னை அழைக்கிறாள் என்று சொல்லுகிறாள்.

ஆய காலையில்,
 ஐயனை நாடித்தன்
தூய கையில்
 தொழலுறு வான்தனை,

---

16. இருப்பு - அமைந்திருப்பதற்கான. அருப்பம் அன்று இது - சாதாரண காரியத்தைக் காட்டவில்லை இது. பொருப்பு நாண - மலையே நாணும்படியாக.

17. ஆயகாலையில் - அந்த நேரத்தில். ஐயனை நாடி - ராமனைத் தேடி (கைகூப்பிய வண்ணமாய்).

‘கூயள் அன்னை,
குறுகுதிர் ஈண்(டு)’ என
வேய்கொள் தோளி
ஒருத்தி விளம்பினாள். ௩௧௪

18. கைகேசியிடம்போய் அவளை வணங்குகிறான் பரதன்.

வந்து தாயை
அடியில் வணங்கலும்,
சிந்தை யாரத்
தழுவினள்; ‘நிதிலர்
எந்தை, என்னையர்,
எங்கையர்?’ என்றனள்;
அந்த மில்குணத் -
தானும், ‘அநாம்’என்றான். ௩௧௫

19. பரதனுக்கு ஒரே ஆசை : ‘தந்தையை வணங்கவேண்டும். என் மனசு ஒரு பரபரப்பில்

---

17. கூயள் - கூப்பிட்டு விட்டாள். குறுகுதிர் ஈண்டு என - இப்போதே வரவேண்டும் என்று. வேய்கொள் தோளி - வேய் போன்ற தோளையுடைய பெண்.

18. தழுவினள் - தழுவிக் கொண்டு. நிதிலர் - சௌக்கியமாய் இருக்கிறார்களா. எந்தை - தந்தை. என்னையர் - தாய்மார். எங்கையர் - தங்கைமார். அந்த மில் குணத்தான் - மிக உயர்ந்த குணத்தானாகிய பரதன். அநாம் என்றான் - ஆமாம் என்றான். குறிப்பு : பரதனது மனம் எல்லாம், வேறு காரியத்தில் இருப்பதால், சிரத்தை இல்லாமல் ஆமாம் என்கிறான்.

இருக்கிறது. சக்கரவர்த்தி எங்கே இருக்கிறார், சொல் லம்மா ' என்கிறான்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

மூண்டெழு காதலான்,
' முளரித் தாள்தொழ

வேண்டினென் எய்தினென்,
உள்ளம் விம்முமால்,

ஆண்தகை நெடுமுடி
அரசர் கோமகன்

யாண்டையான் ? பணித்திர் ' என்(று)
இருகை கூப்பினான். ௩௯௬

20. பரதன் எவ்வளவோ மனம் திகைத்து வருந்துகிறான் என்பது கைகேசிக்கு நன்றாய்த் தெரிகிறது. அதை அவள் கொஞ்சமும் பொருட்படுத்தாமல், ஒரு எக்களிப்பான பாவத்தோடு பதில் சொல்லுகிறாள்.

---

19. மூண்டெழு காதலான் - மேலே மேலே எழுகின்ற அன்புடையவனாய். அரசர் கோமகன் : சக்கரவர்த்தி. யாண்டையான் - எங்கே யிருக்கிறான். பணித்திர் - தயவுசெய்து சொல்லவேண்டும்.

ஆனவன் உரைசெய,
அழிவில் சிந்தையாள்,

'தானவர் வலிதவ
நிமிர்ந்த தானைஅத்

தேனமர் தெரியலான்,
தேவர் கைதொழ,

வானகம் எய்தினன்;
வருந்தல் நீ' என்றாள். ௩௧௭

21. யாதொரு வருத்தமுமில்லாமல், ஒருவித கோபத்தோடு சொன்ன கைகேசியின் வார்த்தை காதில் விழுந்ததும், பரதன் அப்படியே கீழே விழுந்துவிடுகிறான்.

எறிந்தன கடியசொல்
செவியுள் எய்தலும்,

நெறிந்தலர் குஞ்சியான்
நெடிது வீழ்ந்தனன்:

---

20. ஆனவன் - அந்த பரதன். அழிவில் சிந்தையாள் - சிறிதும் கலக்கமில்லாத சிந்தையளான கைகேசி. தானவர் வலி தவ - அசுரர்களுடைய பலமெல்லாம் ஒழியும்படி. நிமிர்ந்த தானை - அவ்வளவாகப் பெருத்த சேனையை யுடைய. தேனமர் தெரியலான் - தேன்படிந்த மாலையையுடையவன்; தசரதன். வருந்தல் நீ - நீ வருந்த வேண்டாம்.

21. எறிந்து அன கடிய சொல் - வீசியெறிந்தது போல் வேகத்தோடு சொன்ன சொல். நெறிந்து அலர் குஞ்சியான் - ஒழுங்காக நெளிந்து விரிந்து கிடந்த முடியையுடைய பரதன்.

(அறிந்திலன், உயிர்த்திலன்)
அசனி ஏற்றினல்

மறிந்(து)உயர் மராமரம்
மண்ணுற்(று) என்னவே. ௩௧௮

22. சிறிதுநேரம் கழித்துப் பரதனுக்கு உணர்ச்சி வந்தது; உதடு எல்லாம் வெளுத்துவிட்டது; கண்ணீர் கொட்டிக்கொண்டிருக்கிறது; பேசுகிறான்

வாயொளி மழுங்கத், தன்
மலர்ந்த தாமரை

ஆயலர் நயனங்கள்
அருவி சோர்தர,

'தீயெரி செவியில்வைத்(து)
அனைய தீயசொல்

நீயல(து) உரைசெய
நினைப்ப ரோ?' என்றான். ௩௧௯

23. உன்னுடைய குடை (ராஜ்ய பரிபாலனம்) எல்லா மக்களுக்கும் பாதுகாப்பைத் தந்தது; இப்போது அந்தப் பாதுகாப்பு இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள்.

---

21. அறிந்திலன் - உணர்ச்சியற்றவனாய். உயிர்த்திலன் - மூச்சு அடங்கியவனாய். அசனி ஏற்றினல் - பேரிடியினல். மறிந்து - அடியற்று.

22. தாமரை ஆய் அலர் நயனங்கள் : கண்கள் தாமரையே ஆகி மலர்ந்தனவாம். தீயெரி செவியில் வைத்து அனைய தீய சொல் : காதில் சொல் விழுந்தது, தீ விழுந்தது மாதிரியே இருந்தது.

இதையெல்லாம் கண்ணெடுத்துப் பாராமல் கற்பகத் தருவின் நிழலை விரும்பிப் போய்விட்டாயே!

‘பற்பகல் நிழற்றும்நின்
கவிகை பாய்நிழல்
நிற்பன பல்லுயிர்
உணங்க, நீநெடும்
கற்பக நறுநிழல்
காத லித்தியோ!
மற்பக மலர்ந்ததோள்
மன்னர் மன்னனே!’ ௨00

24. இந்த உலகத்தை விட்டு ஓடிவிட்டாய். வானவர் தங்கள் இருக்கையை மறுபடியும் இழந்து, உன்னிடம் அடைக்கலம் புகுந்தார்களோ?

‘இம்பர்நின்(று) ஏகினை,
இருக்கும் சார்பிழந்(து)
உம்பர்வந்(து) உன்கழல்
ஒதுங்கி னூர்கொலாம்:

23. பற்பகல்-பலநாளாக; அனேக வருஷங்களாக. நிழற்றும் - நிழலைத்தரும். நின் கவிகை - உன்னுடைய ராஜ்ய பரிபாலனத்தைத் தெரிவிக்கும் குடையின். நிழல் நிற்பன - நிழலில் நின்று சுகமாக வாழ்ந்து வந்த. உணங்க - வருந்த. கற்பகம் - வானலோகத்திலுள்ள கற்பகத் தருவின். காதலித்தியோ - விரும்பினையோ. மல் பக மலர்ந்த தோள்: மல்யுத்தத்தின் சக்தியே வெளி வருகிறது என்று தோன்றும்படி விரிந்த தோள்.

24. இம்பர்நின்று - இந்த உலகத்திலிருந்து. உம்பர் - தேவர்கள்.

சம்பரன் அனைய அத்
தானைத் தானவர்
அம்பரத்(து) இன்னமும்
உளர்கொலாம் ஐயா !' ௪0௧

25. துயரத்தைத் தாங்க முடியாதபடி இப்படியெல்லாம் புலம்பி பரதன் நைகிறான். பக்கத்திலுள்ளவர்கள் கொஞ்சம் தேற்றினார்கள்.

ஆற்றலன் இன்னன
பன்னி, ஆவலித்(து)
ஊற்றுறு கண்ணினன்,
உருகு வான்தனைத்,
தேற்றினர் ஒருவகை,
சிறிது தேறிய
கூற்றுறழ் வரிசிலைக்
குரிசில் கூறுவான். ௪0௨

26. பரதன் ஏதோ எல்லோராலும் கைவிடப்பட்டவனாகத் தன்னை எண்ணுகிறான். ஆனால், தனக்குத்

---

24. சம்பரன் - சம்பராசுரன். தானைத் தானவர்- பெரிய படைகளையுடைய அசுரர். அம்பரத்து - வானுலகத்தில். அந்த அசுரர்களைச் சங்காரம் செய்யத்தான் வானுலகம் போனாயோ.

25. ஆவலித்து - மிக வருந்தி. ஊற்றுறு - கண்ணீர் ஊற்றாய்ப் பாய்ந்துகொண்டிருக்கிற. கூற்றுறழ் - எமனுக்குச் சமானமான. குரிசில் - வீரன்.

தந்தை தாய் தெய்வம், எல்லாம் ராமனே, என்று எண்ணுகிறான்.

‘ எந்தையும் ஆயும்எம்
பிரானும் எம்முனும்
அந்தமில் பெருங்குணத்(து)
இராமன் ஆதலால்,
வந்தனை அவன்கழல்
வைத்த போதலால்
சிந்தைவெங் கொடுந்துயர்
தீர்க லா(து)’ என்றான். ௪0௫

27. ராமனைப் பற்றி பரதன் இந்த வார்த்தை சொல்லவும், கைகேசிக்குப் பெருங் கோபம் உண்டாகி இடிமுழக்கம் போல் கர்ச்சிக்கிறாள்.

அவ்வுரை கேட்டலும்,
அசனி ஏறென
வெவ்வுரை வல்லவள்
மீட்டும் கூறுவாள் :
‘ தெவ்வடு சிலையினாய் !
தேவி தம்பியென்(று)
இவ்விரு வோரொடும்
கானத் தான்’ என்றாள். ௪0௬

26. ஆயும் - தாயும். எம்முனும் - தமையனும். வந்தனை - வணக்கத்தை. சிந்தை வெம் கொடுந்துயர் - என் சிந்தையில் நிற்கிற கொடும் துயர். தீர்கலாது - என்னைவிட்டு அகலாது.

27. அசனி ஏறு - பேரிடி. தெவ் - பகைவர். தெவ் அடு சிலையினாய் : பகைவரை யெல்லாம் வெல்லக்கூடிய வில் ஏந்திய வீரனாச்சே நீ. நீ சுத்த அசடு ! ராமனையா தேடுகிறாய் ? காட்டிலிருக்கிறான் ராமன். சீதையும் லக்ஷ்மணனும் கூடப் போயிருக்கிறார்கள் துணைக்கு !

28. 'காட்டிற்கு அனுப்பியாகிவிட்டது ராமனை' என்ற வார்த்தையை யோசித்துப்பார்த்தான். இந்தச் சூழ்ச்சியெல்லாம் இன்னும் என்ன என்ன காரியங்களை விளைவிக்கப் போகிறதோ, என்று திகைக்கிருன்.

'வனத்தினன்' என்றவள்
இசைத்த மாற்றத்தை
நினைத்தனன், இருந்தனன்
நெருப்பு ண்டான்என ; -
'வினைத்திறம் யாதினி
விளைப்ப(து), இன்னமும்
எனைத்துள கேட்பன
துன்பம்! யான்' என்ருன். ௬0௫

29. ஏங்கிக் கொண்டும் விம்மிக் கொண்டும் புலம்புகிருன்.

ஏங்கினன் விம்மலோ(டு)
இருந்த ஏந்தல், - 'அப்
பூங்கழல்க் காவலன்
வனத்துப் போயது,

---

28. இசைத்த - ஆங்காரத்தோடு அழுத்தமாய்ச் சொன்ன. மாற்றத்தை - சொல்லை. வினைத்திறம் - சூழ்ச்சி. எனைத்துள கேட்பன துன்பம் - கேட்டுத் துன்புற வேண்டிய விஷயங்கள் வேறு எத்தனை உளவோ.

29. ஏந்தல் - பரதன். பூங்கழல் காவலன் : ராமன்.

தீங்கிழைத்(து) அதனிலோ,
தெய்வம் சிறியோ,

ஓங்கிய விதியிலோ,
யாதிலோ?'என. ௨0௬

30. ராமன் பாதகமே செய்துவிட்டான் என்று வைத்துக் கொள்ளுவோம். அதை உலகத்தார் எப்படி எண்ண வேண்டும்? பெற்ற தாயின் செயல் என்றல்லவா எண்ணவேண்டும்? சரி, இருக்கட்டும், தயவுசெய்து சொல்லுங்கள்: ராமன் காட்டுக்குப் போன காரியம், தந்தை இறந்ததற்குப் பிறகா அல்லது முன்பா?

'தீயன இராமனே
செய்யு மேல்,அவை
தாய்செயல் அல்லவோ
தலத்து ளோர்க்கெலாம்?
போயது தாதைவிண்
புக்க பின்னரோ,
ஆயதன் முன்னரோ?
அருளுவீர்' என்றான். ௨0௭

---

29. தீங்கு இழைத்து அதனிலோ - பாதகம ஏதாகிலும் செய்ததனாலா. தெய்வம் சிறியோ - தெய்வ கட்டளையினாலா, என - என்று ஏங்கினன்.

30. போயது - காட்டுக்குப் போன காரியம், ஆயதன் - (தந்தை இறந்த) அந்தக் காரியத்தின். அருளுவீர் - சொல்லுவீர்.

31. கைகேசியே பதில் சொல்லுகிருள்.

‘ குருக்களை இகழ்தலின்
அன்று, கூறிய
செருக்கினுல் அன்(று),ஒரு
தெய்வத் தாலும்அன்(று) ;
அருக்கனே அனையஅவ்
அரசர் கோமகன்
இருக்கவே வனத்தவன்
ஏகி னுன் ’என்ருள். சo அ

32. ஒரு குற்றமும் செய்யவில்லை ராமன்; தந்தை சக்கரவர்த்தியாய் இருக்கும்போது, வேறு யாரோ அயலார் வந்து பிள்ளையைக் காட்டுக்குத் துரத்திவிட்டார் என்பது ஏற்படுமா? சக்கரவர்த்தியும் இறந்ததற்குக் காரணம் என்ன ?

‘ குற்றம்ஒன் றில்லையேல்,
கொதித்து வேறுளோர்
செற்றதும் இல்லையேல்,
தெய்வத் தால்அன்றேல்,
பெற்றவன் இருக்கவே
பிள்ளை கான்புக
உற்றதென், முன்னவன்
உலந்த தென் ? ’என்ருன். சo கூ

---

31. அருக்கனே அனைய-சூரியனுக்குச் சமானமான. அரசர் கோமகன் இருக்கவே - சக்கரவர்த்தி உயிரோடிருக்கும்போதே.

32. கொதித்து வேறுளோர் செற்றதும் - பகைவர் ராமனை எதிர்த்து வலி அழித்தார்கள் என்பதும். முன்னவன் - தந்தை தசரதன். உலந்தது - உயிர் துறந்தது.

33. இவ்வளவு ஆற்ருமையோடு கேட்ட பரதனுக்கு, எக்களிப்போடு பதில் சொல்லுகிருள். கைகேசி.

‘ வாக்கினுல் வரம்தரக்
கொண்டு, மைந்தனைப்

போக்கினேன் வனத்திடைப்,
போக்கிப் பார்உனக்(கு)

ஆக்கினேன் ; அன்னது
பொறுக்க லாமையால்,

நீக்கினுன் தன்னுயிர்
நேமி வேந்(து) ’என்ருள். சக0

34. ராமனைத் தியானித்துத் தலையில் கையைக் குவித்த வண்ணமாய் இருந்தான் பரதன். கைகேசியின் கொடிய சொல்லைக் கேட்டதும் தாங்கமுடியாமல், கைகளைத் தலையிலிருந்து இறக்கிக் காதைப் பொத்திக் கொண்டான்.

---

33. வாக்கினுல் - வெளிப்படையாகச் சொல்லி. கொண்டு - நான் பெற்றுக்கொண்டு. நீக்கினுன் தன்னுயிர் - உயிர் விட்டான். நேமிவேந்து - சக்கரவர்த்தியாகிய உன் தந்தை. குறிப்பு : செய்யுளின் வல்லோசைகளில் அழுத்தமாய்ச் சொன்ன பாவம் கிடக்கிறது. ‘ தானே உயிரை மாய்ந்துக் கொண்டான். அதற்கு நாறு பழி ? ’ என்பது பாவம்.

சூடின மலர்க்கரம்,
சொல்லின் முன்,செவி
கூடின, புருவங்கள்
குநித்துக் கூத்துநின்(று)
ஆடின, உயிர்ப்பினோ(டு)
அழல்க்கொ ழுந்துகள்
ஓடின, உமிழ்ந்தன
உதிரம் கண்களே. சகக

35. பரதனுக்கு அடங்காத ஆங்காரம்தான். கைகேசியை எதுவும் செய்யத் தயாராக இருந்தான். பெற்ற தாயாயிற்றே அவள் என்ற எண்ணம் கூடத் தடுக்கவில்லை. அவனைத் தடுத்தது வேறு விஷயம்.

கொடிய வெங் கோபத்தால்க்
கொதித்த கோளரி,
கடியவள், தாய்எனக்
கருது கின்றிலன் ;
நெடியவன் முனியும்என்(று)
அஞ்சி நின்றனன், -
இடியுரும் அனையவெம்
மொழிஇ யம்புவான். சகஉ

---

34. உயிர்ப்பினோடு - சுவாசத்தோடு. அழல்க் கொழுந்துகள் - நெருப்புச் சுவாலைகள். உதிரம் - இரத்தம்.

35. கோளரி - சிங்கம், அதாவது பரதன். கடியவள் - இரக்கமற்ற கைகேசி. நெடியவன் - ராமன். முனியும் - கோபிப்பான். நின்றனன் - அடங்கி நின்று விட்டான். இடிஉரும் அனைய - பேரிடிக்குச் சமான மான

36. உன்னுடைய சூழ்ச்சியினால் தந்தை மாண்டான், தமையன் காட்டுக்குப் போய்விட்டான் என்று கேட்டவுடன், உன்னுடைய அந்த வாயை அப்படியே நான் கிழித்துவிட வேண்டாமா? அது செய்யவில்லையே. இதன் பொருள் என்ன?

'மாண்டனன் எந்தை, என்
 தம்முன் மாதவம்
பூண்டனன், நின்கொடும்
 புணர்ப்பி னால்என்றால்,
கீண்டிலென் வாயது, -
 கேட்டு நின்றயான்
ஆண்டன னேஅன்றோ,
 அரசை ஆசையால்.' ௪௧௩

37. இந்தக் கோபாவேசம் பரதனது மனசைக் கொதிக்கப் பண்ணிவிட்டது. உலகத்தை விட்டுத் தருமமே போய்விட்டது என்று பயந்துவிட்டான். மனசு ஸ்தம்பித்துவிட்டது. சிறிது நேரம் கழித்துத் தேறுதலும் நம்பிக்கையுமே உண்டாகின்றன: தர்மத்துக்கு அழிவு ஏது? சூழ்ச்சிசெய்து வைத்திருக்கிற இந்த அக்கிரமம் நிலையான காரியமா? காலம் கெட்டுப் போகவில்லை. இன்றைக்குத்தானே ஒரு அரசன் உயிர் துறந்திருக்கிறான்! ஒரு வீரன் தனக்குரிய ராஜ்யத்தையே துறந்து காட்டுக்குப் போனதும் இன்றைக்குத்தானே!

---

36. புணர்ப்பு - சூழ்ச்சி. கீண்டிலன் - கிழிக்கவில்லை.

இந்த இரண்டு செயலும் தர்மம் நிலைத்திருக்கிறது என்பதை அல்லவா காட்டுகிறது ?

‘ மாளவும் உளன்ஒரு
மன்னன் ; வன்சொலால்

மீளவும் உளன்ஒரு
வீரன் ;— மேயபார்

ஆளவும் உளன்ஒரு
பரதன் ஆம்எனில்,

கோள்அல(து) அறநெறி
குறையுண் டாகுமோ ? ’ சகச

38. இப்படிப் பேசிவிட்டு, இந்தப் பாவி பக்கத்தில் என்னால் இருக்கமுடியாது என்கிறான்.

---

37. மன்னன் - தசரதன். மீளவும் - அப்படியே போகவும். வீரன் - ராமன். மேய பார் - தனக்கு வந்த ராஜ்யத்தை. ஒரு பரதன் : பாதகன் எனும் பாவத்தில் வந்தது. கோள்அலது - கிரகங்களின் கதிபேதம் காரணமாக அல்லாமல். அறநெறி குறைவுண்டாகுமோ - தரும மார்க்கத்துக்கு அழிவு ஏதாகிலும் உண்டாகுமோ. குறிப்பு : பரதனுடைய தனித்த குணம், நீதியில் உறுதியாக நிற்பது. நீதி உலைந்துவிட்டால் உலகமே உலைந்துவிடும் என்ற கொள்கையை யுடையவன். இந்தப் பண்பைச் செய்யுளின் உருவம் அருமையாய் எடுத்துக் காட்டுகிறது. தன்னுடைய இழிவான தன்மையை எடுத்துச் சொல்வதற்கு, வார்த்தை கிடையாமல், பரதன் என்ற தன் பெயரையே சொல்லுவது அபூர்வமான பாவம்.

இன்னணம் இனையன
இயம்பி, 'யானும் இப்
பன்னரும் கொடுமனப்
பாவி மா(டு)இரேன்;
துன்னரும் துயர்கெடத்
தூய கோசலை
பொன்னடி தொழுவன்'என்(று)
எழுந்து போயினன். சகரு

39. பரதன் கோசலையின் அருகே போகிறான்.

ஆண்தகை கோசலை
அருகர் எய்தினன்:
கீண்டுமண் கிழிதர
வீழ்ந்து, கேழ்கிளர்
காண்தகு நடக்கையில்க்
கமலச் சீறடி
பூண்டனன் கிடந்தனன்,
புலம்பி னன்அரோ. சகசு

---

38. இன்னணம் - இப்படி. இனையன - மேலே சொன்ன. பன்னரும் - வாய்விட்டுச் சொல்லமுடியாத. பாவி மாடு - கைகேசியின் அருகே. துன்னரும் துயர் - தாங்க முடியாத துயரம்.

39. ஆண்தகை - வீரனான பரதன். கீண்டு மண் கிழிதர வீழ்ந்து - தரை வெடித்துக் கிழியும்படியாக வீழ்ந்து. கேழ்கிளர் - சிவந்த. காண்தகு - அழகிய. சீறடி பூண்டனன் - சிறிய அடியைப் பற்றிக்கொண்டு.

40. கோசலையின் பாதங்களைப் பற்றியவண்ண மாய்ப் புலம்புகிறான்.

‘ எந்தைஎவ் வுலகுளான்,
எம்முன் யாண்டையான் ?

வந்தது தமியன், இம்
மறுக்கம் காணவோ ?

சிந்தையின் உறுதுயர்
தீர்த்தி ரால் ’ எனும்,

அந்தரத் தமரரும்
அழுது சோரவே. சகள

41. ஐயோ, தந்தையினுடைய பாதங்களைக்கண்டு தொழக் கொடுத்துவைக்கவில்லையே. ராஜ்யத்தை ஆண்டுவந்தவன் எப்படி விட்டுவிட்டுப் போகலாம் ?

‘ அடித்தலம் கண்டிலன்
யான்என் ஐயனைப்,

படித்தலம் காவலன்
பெயரற் பாலனோ ?

---

40. எந்தை - தந்தை. எம்முன் - தமையன். மறுக்கம் - துன்பத்தை. தீர்த்திரால் எனும் - தீர்த்துவிட வேண்டும் என்று புலம்புகிறான். நம் கண்ணுக்கு எட்டாத விண்ணிலுள்ள தேவர்களும் பரதனது சோகத்தைப் பார்த்தால் சகிக்கமாட்டார்கள்.

41. படித்தலம் பெயரற் பாலனோ - ராஜ்யத்தை விட்டு எப்படி வெளியே போகலாம். காவலன் - காவற் கடமையில் உள்ளவன்.

பிடித்திலிர் போலும்நீர்,
 பிழைத்தி ரால்'எனும்,
பொடித்தலம் தோளுறப்
 புரண்டு சோர்கின்ருன். சகஅ

42. இந்தக் கொடுமைக் கெல்லாம் காரணமாய் இருந்தவர்கள் குலத்தோடு அப்படியே அழிந்து போயிருக்க வேண்டுமே! ஆனால், அதைப்பற்றி நான் எப்படிச் சொல்ல முடியும். நானே ஒழியவில்லையே! நான் ஒழிந்தால் எல்லாத் துயரமும் ஒழிந்துவிடுமே!

'கொடியவர் யாவரும்
 குலங்கள் வேரற
நொடிகிலர்! யான்அது
 நுவல்வ(து) எங்ஙனம்! -
கடியவள் வயிற்றினிற்
 பிறந்த கள்வனேன்
முடிகிலென், அருந்துயர்
 முடிய' என்னுமால். சகக

---

41. பிடித்திலிர் போலும் - சக்கரவர்த்தியை ஏன் பிடிக்காமல் விட்டுவிட்டீர்கள். பிழைத்திரால் - பெரிய தவறுசெய்து விட்டீர்கள். இந்த வார்த்தை யெல்லாம் துயர வெறியில் வருவது. பொடித்தலம் - புழுதிபட்ட தரை.

42. நொடிகிலர் - இறந்து ஒழியவில்லை. நுவல்வது எங்ஙனம் - எடுத்துப் பேசுவது எப்படி. கடியவள் - பாதகி கைகேசி. முடிகிலென் - இறந்து ஒழியவில்லை. அருந்துயர் முடிய - எல்லோருக்குமே ஏற்பட்ட தாங்க முடியாத துயரம் திரும்படி. தன்னாலே தான் ராமன் பிரிந்து விட்டான் என்பது பொருள்.

43. சூரியனைப்போல் விளக்கம்பெற்று வந்த குலத்துக்கு ஒரு பழி வந்துவிட்டது.

'இரதம்ஒன்(று) ஊர்ந்துபார்
இருளை நீக்கும்அவ்
வரதனில் ஒளிபெற
வளர்ந்த தொல்குலம்,
பரதன்என்(று) ஒருபழி
படைத்த(து)' என்னுமால்,
மரகத மலையென
வளர்ந்த தோளினன். ௪௨0

44. கடைசியாக அலறுகிறான். சக்கரவர்த்தி இறந்துபோகவும் இளவரசன் ராமன் காட்டுக்குப் போகவும் நேர்ந்துவிட்டது. அடடா, நாட்டிலுள்ளவர்களின் பாடு எப்படியாகிவிட்டது.

'வாள்தொடு தானையான்
வானில் வைகிடக்,
காடொரு தலைமகன்
எய்தக், கண்ணிலா

---

43. இரதம் ஒன்று ஊர்ந்து - ரதத்தில் ஏறிச்சென்று. பார் இருளை நீக்கும் அவ்வரதனில் - உலகத்திலுள்ள இருளை நீக்கும் அந்த சூரியனைப்போல. ஒளிபெற - நல்ல விளக்கம்பெற.

44. வாள் தொடு தானையான் - வாள் ஏந்திய சேனையையுடையவன்; தசரதன். தலைமகன் - ராமன். கண்ணிலா நாடு - கிர்க்கதியாய்ப்போன குடிகள்.

நாடொரு துயரிடை
நைவ தே !' எனும்,
தாள்தொடு தடக்கைஅத்
தரும மேயனான். ௪௨௪

45. பரதன் இப்படியெல்லாம் சொன்ன வார்த்தையைக் கேட்டதும், ராமனே காட்டிலிருந்து திரும்பி வந்துவிட்டதாகக் கோசலை மனசுக்குப் பட்டது. அப்படியே பரதனைத் தழுவிக்கொண்டாள்.

சந்தம்

தான தன்னன
தான தன்னன

தூய வாசகம்
சொன்ன தோன்றலை,
தீய கானகம்
திருவின் நீங்கிமுன்
போயினான்தன்முன்
போந்து ளான்என
ஆய காதலாள்
அழுது புல்லினாள். ௪௨௫

---

44. நைவதே - கஷ்டப்படலாமா. தாள் தொடு தடக்கை - முழங்கால் வரை நீண்ட கையையுடைய. தருமமே அன்னான் - தருமதேவதையாய் நின்ற பரதன்.

45. தோன்றலை - பரதனை. தீய கானகம் - காட்டுக்கு. திருவின் நீங்கி முன் போயினான் - தனக்குரிய ராஜ்யத்தை விட்டுப்போன ராமனே. தன்முன் போந்துளான் என ஆய காதலாள் - தன்முன் வந்துவிட்டதாகப் பாவித்த அன்பினளாகிய கோசலை; தோன்றலைப் புல்லினாள் என்று முடிக்க.

46. உன்னுடைய குலத்து மூதாதையர் யார் உன்னை ஒப்பவர் என்று சொல்லுகிறாள் கோசலை. சக்கரவர்த்தியே என்றும் அவனை வாழ்த்தினாள்.

'முன்னை நுங்குல
முதலு ளோர்கள்தாம்
நின்னை யாவரே
நிகர்க்கு நீர்மையார்?
மன்னர் மன்னவா!'
என்று வாழ்த்தினாள்,
உன்ன உன்னநைந்(து)
உருகி விம்முவாள். சஉ௩

47. கோசலை, தன்னைச் சக்கரவர்த்தியென்று கூடச் சொல்லிவிட்டாளே என்று எண்ணி, ரொம்பவும் கஷ்டப்பட்டுப்போய் விட்டான் பரதன்.

உன்ன உன்னநைந்(து)
உருகி அன்புகூர்
அன்னை தாளின்வீழ்ந்(து)
இளைய அண்ணலும்,

---

46. நிகர்க்கும் நீர்மையார் - ஒப்பவர். மன்னர் மன்னவ - சக்கரவர்த்தியே. உன்ன உன்ன - பரதனது துயரை நினைக்க நினைக்க.

47. அன்னை - கோசலை. இளைய அண்ணலும் - பரதனும்.

சொன்ன நீர்மையால்
  தொழுது மாழ்கினன் ;-
இன்ன வேலைவாய்
  முனிவன் எய்தினன். ௪உ௪

48. அங்குவர நேர்ந்த வசிஷ்டர்காலில் விழுந்து புலம்புகிறான் பரதன். வசிஷ்டருக்குப் பேசமுடிய வில்லை ; கண்ணீர் விட்டுக்கொண்டு பரதனைத் தழுவிக் கொள்கிறார்.

வந்த மாதவன்
  தாளின் வள்ளலவ் வீழ்ந்(து),
' எந்தை யாண்டையான்?
  இயம்பு விர் ' என
நொந்து மாழ்கினன் ;
  நுவல்வது ஓர்கிலா(து)
அந்த மாதவன்
  அழுது புல்லினன். ௪உ௫

---

47. சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினன் : சக்கரவர்த்தியே என்று தன்னைக் குறித்துக் கோசலை சொன்ன சொல்லால், ஒரு வார்த்தையும் சொல்லமுடியாதபடி அவ்வளவு துன்பப்பட்டு அவள் பாதங்களில் விழுந்து அயர்ந்தான். இன்ன வேலைவாய் - இந்தச் சமயத்தில். முனிவன் - வசிஷ்டர்.

48. நுவல்வது ஓர்கிலாது - பேச முடியாமல்.

# 10. ஆற்றுப் படலம்

1. வசிஷ்டர் பரதனை ஒருவாறு தேற்றி ஓரிடத்தில் அவனோடு தங்கியிருந்தார். ஜனங்கள் விசாரித்து, மெள்ள பரதனிடம் போய் வணங்குகிறார்கள்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

வரன்முறை தெரிந்துணர்
மரபை ஓதிய
அருமறை முனிவனும்
ஆண்டை யான்என,
விரைவின்வந்(து) ஈண்டினர்,
விரகின் எய்தினர்,
பரதனை வணங்கினர்
பரியும் நெஞ்சினர். சஉசு

---

1. வரன்முறை தெரிந்துணர் மரபை - வாரிசு பரம்பரையைத் தெரிந்த நீதியை. ஓதிய அருமறை முனிவனும் - எடுத்துச் சொன்ன அரிய சாஸ்திரங்களைக் கற்ற வசிஷ்டரும். ஆண்டையான் என - பரதனோடு ஓரிடத்திலிருக்கிறான் என்று தெரிந்து. ஈண்டினர் - கூட்டமாய் வந்தார்கள். விரகின் எய்தினர்-மெள்ளப் பக்குவமாகப் போனார்கள். பரியும் நெஞ்சினர் - துக்கம் விசாரிக்கப் போனவர்கள்.

2. மந்திரிமார்களும் நகரத்தலைவர்களும் சேனைத் தலைவர்களுமாக வந்து பரதனைச் சூழ்ந்தார்கள்.

மந்திரக் கிழவரும்,
நகர மாந்தரும்,
தந்திரத் தலைவரும்,
தரணி பாலரும்,
அந்தர முனிவரோ(டு)
அறிஞர் யாவரும்
சுந்தரக் குரிசிலை
மரபில்ச் சுற்றினர். சஉஎ

3. எல்லோரும் உட்கார்ந்த பிறகு, சுமந்திரன் வசிஷ்ட முனிவர் முகத்தைப் பார்க்கிறன்.

சுற்றினர் இருந்துழி,
சுமந்தி ரப்பெயர்ப்
பொற்றடம் தேர்வலான்,
புலமை யுள்ளத்தான்,
கொற்றவற்(கு) உறுபொருள்
குறித்த கொள்கையான்,
முற்றுணர் முனிவனை
முகத்து நோக்கினன். சஉஅ

---

2. தந்திரத் தலைவர் - சேனை நடத்தும் தலைவர். தரணிபாலர் - சிற்றரசர்கள். அந்தர முனிவர் - தவ ஒழுக்கத்தில் மிகச் சிறந்தவர்கள்.

3. பொன் தடம் தேர்வலான் : சுமந்திரன். புலமை உள்ளத்தான் - மிக்க அறிவுடையவன். உறு பொருள் - சொல்லவேண்டிய விஷயத்தை. குறித்த கொள்கையான் - சொல்லவேண்டும் என்ற எண்ணம் கொண்டவன்.

4. சுமந்திரன் குறித்த விஷயத்தை வசிஷ்டரும் உணர்ந்துகொண்டு, பரதனிடம் சொல்கிறார்.

நோக்கினுல்ச் சுமந்திரன்
நுவலல் உற்றதை,
வாக்கினுல் அன்றியே
உணர்ந்த மாதவன்,
'காக்குதி உலகு, நின்
கடன்அ தாம்'எனக்
கோக்கும ரனுக்கது
தெரியக் கூறுவான். சஉகூ

5. பலரும் இங்கு வந்திருக்கிறார்கள். அவர்களுடைய காரியம், நீதியும் தர்மமும் நாட்டிற்கு அமைய வேண்டும் என்பதுதான். நீ இதைத் தயவுசெய்து அங்கீகரிக்கவேண்டும்.

'வேதியர், அருந்தவர்,
விருத்தர், வேந்தர்கள்
ஆதியர் நின்வயின்
அடைந்த காரியம்
நீதியும் தருமமும்
நிறுவல் : நீ இது
கோதறு குணத்தினுல்
மனத்துள்க் கோடியால்.' சஙO

---

4. நுவலல் உற்றதை - சொன்னதை. காக்குதி உலகு - ராஜ்யத்தை நீ காக்கவேண்டும். கோக் குமரனுக்கு - இளவரசனுக்கு.

5. விருத்தர் - முதியோர். ஆதியர் - முதலானவர்கள். நிறுவல் - நிலைபெறச் செய்தலே.

6. அரசன் என்பவன் ஒருவன் இல்லையானால் உலகம் கஷ்டப்பட்டுவிடும்.

‘ வள்ளுறு வயிரவாள்
அரசில் வையகம்,
நள்ளுறு கதிரிலாப்
பகலும், நாளொடும்
தெள்ளுறு மதியிலா
இரவும், தேர்வரும்
உள்ளுறை உயிரிலா
உடலும் ஒக்குமே. ’ சா௩௧

7. உலகத்தில் எங்கே போனாலும், - அக்கிரமம் தாண்டவமாடுகிற தேசமானாலும் சரி, - மக்களைக் காக்கிற தலைவன் ஒருவன் இருந்து தீரவேண்டும்.

‘ தேவர்தம் உலகினும்,
தீமை செய்துழல்
மாவலி அவுணர்கள்
வைகும் நாட்டினும்,

---

6. வள்ளுறு - கூர்மையான. வயிர வாள் அரசுஇல் வையகம் - சக்திவாய்ந்த அரசன் இல்லாத ராஜ்யம். நள்ளுறு கதிரிலாப் பகல்-நெருங்கிய கிரணங்கொண்ட சூரியன் இல்லாத பகல் ; அதாவது பூரண சூரியகிரணத்தின் போது இருட்டிவிடுவதுபோல. நாளொடு - கிரகங்களோடு. தெள்ளுறு - தெளிந்த. தேர்வரும் - அறிதற்கு அரிய. உள்ளுறை உயிரிலா - மறைந்து தங்கும் உயிரில்லாத. சிதறிப்போய்விடும் என்பது பொருள்.

7. தேவர்தம் உலகினும் - மிக உயர்ந்த நீதி ஒழுக்கத்தில் தங்குகிற தேசத்திலும். மாவலி அவுணர்கள் வைகும் - மிக்க பலம் பொருந்திய அசுரர்கள் வசிக்கிற.

ஏவெவை உலகமென்(று)
இசைக்கும் அன்னவை, -
காவல்செய் தலைவரை
இன்மை கண்டிலம்.' ௪௩௨

8. எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்து முடிவு கட்டப் பார்ப்போமானால், எத்தனையோ பொருள்கள் எவ்வளவாகவோ விரிந்து கிடக்கின்றன : பூமியைப் பார்த்தாலும் சரி, வானத்தைப் பார்த்தாலும் சரி, நிற்பனவாயும் இயங்குவனவாயும் எண்ணிறந்த பொருள்கள் ; அவைகளை யெல்லாம் நெடுகிலும் பாதுகாத்து நிற்பது ஒரு அரச தத்துவந்தான். அந்தத் தத்துவம் இல்லாத வர்க்கமே கிடையாது.

'முறைதெரிந்(து) ஒருவகை
முடிய நோக்குறின்,
மறையவன் வகுத்தன
மண்ணில் வானிடை
நிறைபெரும் தன்மையின்
நிற்ப செல்வன ;
இறைகளை யில்லன
யாவை காண்கிலம்.' ௪௩௩

---

7. ஏவெவை உலகம் என்று இசை[illegible] - என்ன என்னவோ உலகம் என்று சொல்லுகிறார்கள். அன்னவை - அங்கெல்லாம். இன்மை - இல்லாதிருத்தலை.

8. மறையவன் - பிரமன். இறைகளை - அடக்கியாளும் தத்துவங்களை. இல்லன யாவை - வைத்துக் கொள்ளாதன யாவை. காண்கிலம் - நம்மால் காண முடியாது அவ்விதமான வஸ்துவை.

9. வசிஷ்டர் தம் அபிப்பிராயம் இன்னது என்று பரதனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

‘ உந்தையோ இறந்தனன்,
உம்முன் நீத்தனன்,
வந்ததும் அன்னைதன்
வரத்தின் : மைந்தநீ,
அந்தமில் பேரர(சு)
அளித்தி ; அன்னது
சிந்தனை எமக்(கு) ’எனத்
தெரிந்து கூறினான். சங்ச

10. இந்த ராஜ்யம் உன்னுடைய அடைக்கலப் பொருளாக இருக்கிறது என்று முனிவர் மிக்க பரிவுடன்தான் சொன்னார்.

‘ தஞ்சம்இவ் உலகம்,நீ
தாங்கு வாய் !’ எனச்
செஞ்செவே முனிவரன்
செப்பக் கேட்டலும்,
நஞ்சினை நுகரென
நடுங்கு வாரினும்,
அஞ்சினன், அயர்ந்தனன்
அருவிக் கண்ணினான். சஙரு

9. உந்தை - உன் தந்தை. உம்முன் - உன் தமையன். வந்ததும் - ராஜ்யம் உனக்கு வந்ததும். அந்தமில் பேர் அரசு - என்றென்றும் நிலைத்து நிற்கும் பெரிய ராஜ்யத்தை. அளித்தி - பாதுகாப்பாயாக.

10. செஞ்செவே - உண்மையான உணர்ச்சியுடனேயே. அயர்ந்தனன் - மயக்கத்தை அடைந்தான்.

11. பரதன் பட்டபாட்டை இன்னது என்று சொல்ல முடியாது. பெண்களுக்கு நெஞ்சம் கரைகிற மாதிரி அவனுக்கும் கரைந்தது; உயிர் ஒடுங்கிவிட்டது. நெடுநேரம் கழித்து எப்படியோ உணர்ச்சி வந்தது.

நடுங்கினன் நாத்தடு
மாறி, நாட்டமும்

இடுங்கினன், மகளிரின்
இரங்கு நெஞ்சினன்,

ஒடுங்கிய உயிரினன்,
உணர்வு கைதரத்,

தொடங்கினன் அரசவைக்(கு)
உள்ளம் சொல்லுவான். ௪௩௬

12. பரதன் சொல்லுகிறான்: மூன்று உலகத்தையும் சேர்த்து ஆளும் சக்தி வாய்ந்த தமையன் இருக்க, நான் மகுடம் சூடவேண்டும் என்கிறீர்களே! பெரியவர்களாகிய நீங்களே அப்படி நான் முடிசூடுதல் தருமம் என்கிறீர்கள்!

'மூன்றுலகி னுக்கும்ஓர்
முதல்வ னாய்,முதல்

தோன்றினன் இருக்க,யான்
மகுடம் சூடுதல்,

---

11. நாட்டமும் இடுங்கினன் - கண்ணும் சிறுத்துப் போய்விட்டது. உணர்வு கைதர - உணர்ச்சி கொஞ்சம் வர. உள்ளம் சொல்லுவான் - மனசிலுள்ளதைச் சொல்லத் தொடங்கினான்.

சான்றவர் உரைசெயத்
தருமம் ஆதலால்,

ஈன்றவள் செய்கையில்
இழுக்குண் டாகுமோ?' சஉஎ

13. அரசர்களைப் பார்த்து அடுத்தாற்போல் கேட்கிறான்.

' வேத்தவை இருந்தநீர்,
விமலன் உந்தியில்

பூத்தவன் முதலிய
புவியுள்த் தோன்றினர்,

மூத்தவர் இருக்கவே
முறைமை யால்நிலம்

காத்தவர் உளர்எனில்,
காட்டிக் காண்டிரால்.' சஉஅ

14. நீங்கள் சொல்லுகிற தர்மம் ரொம்ப அழகாய் இருக்கிறது! இந்த ராஜ்யத்திலுள்ள மக்களைப் பாதுகாக்கிறது என்பது என்னால் முடியாத காரியம்.

---

12. ஈன்றவள் - கைகேசி. இழுக்கு - பழுது.

13. வேத்தவை - அரச சபையில். விமலன் உந்தியில் பூத்தவன் - விஷ்ணுவின் உந்திக் கமலத்தில் அவதரித்த பிரமன். முதலிய புவியுள் தோன்றினர் : அரசர்கள் எல்லோரும் பிரமனின் சந்ததிகள் என்பது ஐதிகம். நிலம் காத்தவர் - அரசாண்டவர்கள். காட்டிக் காண்டிரால் - எடுத்துச் சொல்லி விளக்குங்கள்.

‘ நன்னெறி ! அழகிது !
யான்இந் நானில
மன்னுயிர்ப் பொறைசுமந்(து)
இருந்து வாழ்கிலேன் ;
அன்னவன் தனைக்கொணர்ந்(து),
அலங்கல் மாமுடி
தொல்நெறி முறைமையில்
சூட்டிக் காண்டிரால். ’ ௪௩௯

**15.** ராமனுக்கு நீங்கள் முடி சூட்டாமல்ப் போனல், நான் என்னசெய்வேன் என்பதைச் சொல்லு கிறேன். நானும் காட்டுக்குப்போய்ச் சௌகரியமாகத் தவம் செய்ய ஆரம்பிப்பேன்.

‘ அன்(று)எனில், அவனொடும்
அரிய கானிடை
நின்றினி(து) இரும்தவ
நெறியின் ஆற்றுவென் ;
ஒன்றினி யுரைப்பின்,என்
உயிரை நீக்குவென் ’
என்றனன் ; என்றபோ(து), -
இருந்த பேரவை. ௪௪0

*14.* நானில மன்னுயிர்ப் பொறை - ராஜ்யமாகிய மக்களைக் காக்கும் கடமை. அன்னவன்தனை - ராமனை. அலங்கல் - புஷ்பமாலையோடு கூடிய. தொல்நெறி முறையில் - பூர்வமான முறைப்படி. சூட்டிக் காண்டிரால் - சூட்டித் திரவேண்டும்.

*15.* இனிது இரும் தவ நெறியில் - சௌகரியமாக உயர்ந்த தவ நெறியில். ஆற்றுவென் - ஒழுகுவேன். ஒன்று இனி உரைப்பின் - மாறு ஏதாகிலும் ஒன்று சொல்லுவீர்களானல்.

16. பரதனது மனஉறுதியைக் கண்டுகொண்டார்கள் சபையோர்கள். உடனே ஒரே ஆர்வத்தோடு அவனை வாழ்த்த ஆரம்பித்தார்கள்: சக்கரவர்த்தியாக இருந்து அறங்கள் எத்தனையோ செய்து வேள்விகளையும் இயற்றிப் புகழை வளர்க்கிறார்கள் பிறர். ஆனால் அது வேண்டாத காரியம் :

' ஆழியை உருட்டியும்,
அறங்கள் போற்றியும்,

வேள்வியை இயற்றியும்,
வளர்க்க வேண்டுமோ !

ஏழினோ(டு) ஏழ்எனும்
உலகும் எஞ்சினும்

வாழிய நின்புகழ் ! '
என்று வாழ்த்தினர். ௪௪௧

17. சபையோர் எல்லாம் அப்படி வாழ்த்திய வுடன், பரதன் சத்துருக்கனைக் கூப்பிட்டுச் சொல்லுகிறான்.

---

16. ஆழியை உருட்டியும் - சக்கரவர்த்தியாய் இருந்தும். ஏழினோடு ஏழ் எனும் உலகும் எஞ்சினும் - பதினாலு உலகமும் அழிந்து போனாலும். வாழிய நின் புகழ் - உன் புகழ் வாழத்தக்கது.

குரிசிலும் தம்பியைக்
கூவிக், 'கொண்டலின்

முர(சு)அறைந்(து) இந்நகர்,
முறைமை வேந்தனைத்

தருதும்ஈண்(டு) என்பது
சாற்றித், தானையை

விரைவினில் எழுகென
விளம்புவாய்' என்றான். ௪௪௨

18. பரதன் சொல்லிச் சத்துருக்கன் கட்டளை யிடவும், வருந்தியிருந்த நகரத்துமக்கள் எல்லோரும் ஒரே உற்சாகத்தில் கிளம்பினார்கள்.

நல்லவன் உரைசெய
நம்பி கூறலும்,

அல்லலில் அழுங்கிய
அன்பின் மாநகர்

---

17. குரிசில் - பரதன். கொண்டலின் முரசு அறைந்து-மேக முழக்கம்போல் முரசு அறையச்செய்து. இந்நகர் - இந்நகர் முழுதும். முறைமை வேந்தனைத் தருதும் - அரசனாக இருக்கவேண்டிய ராமனை இங்கே கொண்டுவருகிறோம். தானையை - சேனையை.

18. அல்லலில் அழுங்கிய - வருத்தத்தில் சோர் வடைந்திருந்த.

ஒல்லென இரைத்ததால் :
உயிரில் யாக்கைஅச்
சொல்லெனும் அமிழ்தினல்
துளிர்த்த தென்னவே. சசங

19. சமுத்திரம்போல எழுந்தது சேனை. ஆனந்த வெறியில் ஜனங்கள் போட்ட இரைச்சல் ஜனங்கள் எழுவதற்கு முன்னே எழுந்தது. இதெல்லாம் காரண மாக :

எழுந்தது பெரும்படை
ஏழு வேலையின் :
மொழிந்த பேருவகைதான்
முழுங்கி முந்தெழ,
அழிந்தது கேகயன்
மடந்தை ஆசைபோய்க் ;
கழிந்தது துயர், நெடும்
காதல் தூண்டவே. சசச

20. அயோத்தியிலுள்ள மக்கள், மந்திரிமார், சேனைத்தலைவர்கள், வேதியர்கள், தாய்மார் எல்லோரு மாகத் தேர்களிலும் குதிரைகளிலும் யானைகளிலும்

---

18. உயிரில் யாக்கை - உயிரில்லாத உடம்பு. அச் சொல் எனும் அமிழ்தினல் துளிர்த்தது : உயிர் வந்தது.

19. வேலையின் - சமுத்திரத்தைப்போல. முந்து எழ - ஜனங்கள் எழுவதற்கு முன் இரைச்சல் எழுந்தது. கைகேசியினுடைய ஆசை ஒரேயடியாய்த் தொலைந்து போயிற்று. காதல் தூண்டவே : ஆனந்தம்வந்து வெருட் டவும், துயர் கழிந்தது.

ஏறிச் செல்கிறார்கள். அப்போது பரதன் கேட்டான், தமையன் எப்படி வனத்துக்குப் போனான் என்று. காலினால் நடந்துதான் போனான் என்றார்கள்.

'ஆண்டுநின்(று) ஆண்தகை
அடியின் ஏகினான்
ஈண்டிய நெறி' எனத்
தானும் ஏகினான்:-
தூண்டிடு தேர்களும்,
துரக ராசியும்,
காண்தகு கரிகளும்
தொடரக், - காலினே! ௨௨௫

---

20. ஆண்டு நின்று - அயோத்தியிலிருந்து. ஆண் தகை அடியின் ஏகினான் - ராமன் காலால் நடந்து போனான். துரக ராசியும் - குதிரைத்தொகுதியும். காண் தகு கரிகளும் - கம்பீரமான யானைகளும். குறிப்பு: ஏறிச் செல்லத் தேர், குதிரை, யானை எல்லாம் இருந்த போதிலும், பரதன் எப்படிப் போனான் தெரியுமா? அடடா, காலினால் அல்லவா நடந்துபோகிறான்! இந்தச் சோக பாவம், 'காலினே' என்ற வார்த்தையைத் துண்டாக எடுத்துக் கடைசியில் வைத்திருப்பதில் காண்கிறோம். இது ஒரு அருமையான உத்தி.

# 11. குகப் படலம்

1. காலில்க் கழல் அணிந்தும், கையில் வில் ஏந்தி யும், படைகள் அணிவகுத்து வந்தன. ஆனாலும், அவைகளுக்குத் தலைவனான பரதன், மிக்க துயரத்தோடு காலினாலேயே நடந்துசெல்லுகிறான்.

பூவிரி பொலன்கழல்ப்
　　பொருவில்த் தானையான் :
காவிரி நா(டு)அன
　　கழனி நா(டு)ஒரீஇத்,
தாவர சங்கமம்
　　என்னும் தன்மைய
யாவையும் இரங்கிடக்,
　　கங்கை எய்தினான். சசசு

---

1. பூவிரி பொலன் கழல் - பூவேலை செய்த அழகிய கழல். பொருவில்த் தானை - போர் செய்வதற்கான நல்ல வில் ஏந்திய படைகள். தாவரம், சங்கமம் - நிலையான மரம் செடிகளும், பசு முதலிய பிராணிகளுமே. இரங் கிட : அனுதாபப்படுவதுபோலத் தோன்றுகிறதாம். நம் முடைய மனசிலுள்ள அனுதாபத்தை மரம் செடிகளுக் குக்கூட ஏற்றுவது உள்ளத்தின் இயல்பு. குறிப்பு : கம்பர் காவிரி நாட்டில் பிறந்து வளர்ந்தவரானதால் அதை வைத்தே மதிப்பிடுகிறார் கோசல நாட்டின் நன்செய் வளத்தை. கழனி - நன்செய்.

2. கங்கைக் கரை அடைந்த பரதனைப் பின் தொடர்ந்த படையின் பெருக்கம் :

கான்தலை நண்ணிய
  கானை பின்படர்
தோன்றலை, அவ்வழி
  தொடர்ந்து சென்றன,
ஆன்றவர் உணர்த்திய
  அக்கு ரோணிகள்
மூன்றுபத் தாயிரத்(து)
  இரட்டி முற்றுமே. ௨௭௭

3. இவ்வளவு பெரும் படைகளும் ராமனை அல்லவா தாக்க வருகின்றன என்று எதிர்கரையிலிருந்த குகன் எண்ணுகிறான்.

அப்படை கங்கையை
  அடைந்த ஆயிடை,
' துப்புடைக் கடலின்நீர்
  சுமந்த மேகத்தை

---

2. கான்தலை நண்ணிய கானை - காட்டுப் பிரதேசத்தை அடைந்த ராமனை. பின் படர் தோன்றலை - தேடிப்போன பரதனை. தொடர்ந்து சென்றன - தொடர்ந்துபோன சேனை. ஆன்றவர் உணர்த்திய-கணித நூல் வல்லார் சொன்ன. அக்குரோணி : ஏதோ ஒரு பெருந்தொகைகொண்ட படை ; அப்படி அறுபதினாயிரம் படைகள்.

3. ஆயிடை - அந்த நேரத்தில். துப்புடைக் கடலின் நீர் சுமந்த மேகத்தை - பவழத்தையுடைய கடல் நீர் மயமான மேகத்தை.

ஒப்புடை அண்ணலோ(டு)
உடற்ற வேகொலாம்,
இப்படை எடுத்த(து)' என்(று)
எடுத்த சீற்றத்தான். ௪௪அ

4. கோபம் பொங்கி வரவும், பரதனுடைய சேனையை யெல்லாம் தூள் என்றே கருதுகிறான்.

குகன்எனப் பெயரிய
கூற்றின் ஆற்றலான்,
தொகைமுரண் சேனையைத்
துகளின் நோக்குவான், -
நகைமிகக், கண்கள்தீ
நாற, நாசியில்
புகையுறக், குனிப்புறும்
புருவப் போர்விலான். ௪௪௯

---

3. ஒப்புடை அண்ணலோடு - ஒத்த ராமனோடு. உடற்றவே கொலாம் - எதிர்த்துப் போர் புரியவே. எடுத்த சீற்றத்தான் - மனசில் பொங்கிவந்த கோபத்தை யுடையவனாய்.

4. கூற்றின் ஆற்றலான்-எமனைப் போல் எதிரியை நிர்மூலம் செய்யக்கூடியவன். தொகைமுரண் சேனையை-தொகையாலும் பலத்தாலும் மிகுந்த சேனையை. குனிப்புறும் புருவப் போர்விலான் : புருவமானது துடிக்கிறது, ஏதோ வில், போர் செய்யத் துடித்த மாதிரி.

5. கத்தியை உறையில் கட்டிக் கொண்டான், உதட்டைக் கடிக்கிறான், கோப வெறியில் சொல்லும் வார்த்தைகள் வெட்ட வருவனபோலத் தொனிக்கின்றன.

சுட்டிய சுரிகையன்,
கடித்த வாயினன்,
வெட்டிய மொழியினன்,
விழிக்கும் தீயினன்,
கொட்டிய துடியினன்,
குறிக்கும் கொம்பினன்,
கிட்டிய தமர்எனக்
கிளர்ந்த தோளினான். ௪௫௦

6. பக்கத்திலிருந்த கங்கையின் தென்கரை ஓரமாக வந்துநின்றான். அவனுடைய படைகளும் பெரிய ஆரவாரம் செய்துகொண்டு அவனைச் சூழ்ந்துநின்றன.

மருங்(கு)அடை தென்கரை
வந்து தோன்றினான்,
ஒருங்(கு)அடை நெடும்படை
ஒல்லென் ஆர்ப்பினோ(டு),

---

5. சுரிகை - கத்தி. துடியைக் கொட்டுவதும் கொம்பை ஊதுவதும் சேனையைக் கூட்டுவதற்கான குறிகள். கிட்டிய தமர் என - நெருங்கிய சுற்றம் போலத் துணையாயுள்ள. கிளர்ந்த தோளினான் - வலிமையால் பருத்த தோளையுடையவன். குறிப்பு : 'கிட்டியது அமர்' எனப் பிரித்தால் 'கிளரும் தோளினான்' என்று பாடம் இருக்கவேண்டும்.

6. ஒருங்கு அடை நெடும்படை-ஒன்றாய்த் திரண்டு வந்த பெரிய சேனை.

அருங்கடை யுகந்தனில்
அசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக்,
கலந்து சூழவே. சருக

7. சூழ்ந்துநின்ற வேடர்களைப் பார்த்து, அக்கிர மம் செய்ய நினைத்து வந்த பரதன் சேனையையெல்லாம் கொன்றுவிடவேண்டும் என்று சொல்லுகிறான்.

தோன்றிய புளினரை
நோக்கிச், ' சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை
உம்பர் ஏற்றுதற்(கு)
ஏன்றனன், என்னுயிர்த்
துணைவற்(கு) ஈகுவான்
ஆன்றபேர் அரசு, நீர்
அமைதி ரால் 'என்றான். சருஉ

6. அருங்கடையுகம்தனில் - உலகமெல்லாம் முடியும் காலத்தில். அசனி மாமழை கருங்கடல் கிளர்ந்தென - இடியோடு கூடிய மேகமும் கொந்தளிக்கும் கடலுமே ஒன்று சேர்ந்து திரண்டுவந்ததுபோல.

7. புளினரை - வேடர்களை. சூழ்ச்சியின் ஊன்றிய - அக்கிரமம் செய்யவேண்டுமென்ற நினைவில் வந்த. உம்பர் ஏற்றுதற்கு ஏன்றனன் - வானுலகத்துக்கே அனுப்பிவிட வேண்டுமென்று நான் எண்ணுகிறேன். என் உயிர்த் துணைவற்கு : ராமனுக்கு. நீர் அமைதிரால் - நீங்கள் தயாராய் இருங்கள்.

8. ராமனது அரிய குணங்கள் குகனுக்கு ஞாபகத்துக்கு வந்தன. உடனே எதிர் கரையைப் பார்த்தான். கோபாவேசம் பொங்கிவிட்டது.

சந்தம்

தானன தன்னன
தன்னன தன்னன
தனன தன்

' ஆழநெ டுந்திரை
ஆறுக டந்(து)இவர்
போவா ரோ !

வேழநெ டும்படை
கண்டுவி லங்கிடும்
வில்லா ளோ !

தோழமை என்றவர்
சொல்லிய சொல்ஒரு
சொல்அன் றோ ?

ஏழமை வேடன்
இறந்திலன் என்றெனை
ஏசா ரோ ? ' சஙுரு

9. தமையன் என்றும் கருதவில்லை. தம்பி ஒருவன் புலிபோல் நிற்கிறான் என்பதையும் கருதவில்லை.

---

8. ஆழ நெடும் திரை ஆறு : கங்கை. வேழ நெடும் படை - யானைப் படை. விலங்கிடும் - பயந்து ஓடும். தோழமை என்று - என்னைப் பார்த்துத் தோழன் என்று. அவர் - ராமன். ஏழமை வேடன் : ஒன்றுக்கும் உதவாத வேடப்பயல் என்று என்னை மக்கள் ஏசமாட்டார்களா ?

அதுதான் போகட்டும், இந்த எல்லையைக் கடந்து இங்கே வந்து, எப்படி என்னை இகழலாம் இந்தப் பரதன்!

‘ முன்னவன் என்றுநி -
ளைந்திலன், மொய்புலி
அன்னான், ஓர்

பின்னவன் நின்றனன்
என்றிலன், அன்னவை
பேணு னேல்,

என் இவன் என்னை
இகழ்ந்த(து)? இவ்எல்லை
கடந்(து)இங் கே, -

மன்னவர் நெஞ்சினில்
வேடர்வி டும்சரம்
வாயா வோ ? ’ சருச

10. ராம லக்ஷ்மணர்களுடைய அம்புக்குச் சிறிதும் போதாத இந்தச் சேனை கிடக்கட்டும். தேவர்களே போர்செய்ய வந்தால், என்னுடைய வில்லாகிய மேகத்திலிருந்து அம்பாகிய மழை பொழியுமே, அப்போது என்ன நடக்கும் தெரியுமா!

---

9. முன்னவன் - தமையன். மொய்புலி - வலிமிகுந்த புலி. பின்னவன் - தம்பி லக்ஷ்மணன். அன்னவை பேணுனேல்: அதைப் பொருட் படுத்தாமல் இருக்கலாம். இவன் என்னை இகழ்ந்தது என் - இவன் என்னை எப்படி இகழலாம். சரம் - அம்பு. வாயாவோ - தைக்காவோ.

' போனப டைத்தலை
வீரர்த மக்கிறை
போதா இச்

சேனைகி டக்கிட,
தேவர்வ ரில்ச்சிலை
மாமே கம்

சோனைப டத்,தனி
யானைப டச்,சுடர்
வாளோ டும்

தானைப டக்,குடர்
சூறைப டத்திரள்
சாயே னோ ?' ௪௫

11. இந்தப் பரதனுக்கு நம்முடைய ராமன் நாட்டையே கொடுத்துவிட்டான். அப்படிக் கொடுத்த ராமனுக்கு, இந்தப் பாவிகள் காடுகூடக் கொடுக்கக்

---

10. வீரர் தமக்கு - அந்த ராம லக்ஷ்மணர்களுக்கு. இறை போதா - எதிரியாகக் கொஞ்சமும் நிற்கமுடியாது. இச்சேனை கிடக்கிட - இந்தப் பரதனுடைய சேனை கிடக்கட்டும். சோனை பட-பெருமழையாய் அம்புகள் பொழியவும். தனி யானை பட - பெரும் பெரும் யானைகள் எல்லாம் சாய்ந்து விழ. வாளோடும் தானை பட-வாளை ஏந்திய வண்ணமாய்க் காலாட்படைகள் கீழே விழ. குடர் சூறை பட - பிணங்களின் குடல்களைக் கழுகும் பருந்தும் வந்து பிடுங்கிச் சூறையிட. திரள் சாயேனோ - திரள் திரளாய் விழச் செய்யேனோ.

கூடாது என்ற பான்மையில் படையெடுத்து வருகிற தைப் பார்த்தீர்களா!

‘ நாடுகொ டுத்தஎன்
நாயக னுக்கிவர்,
நாம்ஆ ளும்

காடுகொ டுக்கிலர்
ஆகிஎ டுத்தது
காணீ ரோ!

ஆடுகொ டிப்படை
சாடி,அ றத்தவ -
ரேஆ ள

வேடுகொ டுத்தது
பார்,எனும் இப்புகழ்
மேவீ ரோ!’ சருசு

11. நாம் ஆளும் காடு - அரசர்கள் வசிக்க ஒவ்வாததும் நமக்கே உரியதுமான காட்டுப் பிரதேசம். எடுத்தது- கொள்ளும்படியாகப் படையெடுத்தது. ஆடு கொடிப் படை சாடி - ரொம்ப எடுப்போடு கொடிகளையெல்லாம் பறக்கவிட்டுக் கொண்டிருக்கிற இந்தப் படை. அறத்தவரே ஆள - ராமபிரானே ஆளும்படி. வேடு கொடுத்தது-ராஜ்யம் வேடர்களே கொடுத்தது. குறிப்பு: மேலே சொன்ன ‘ஆழ நெடுந் திரை’ முதலிய நான்கு பாடல்களும், வீர பாவத்தை, எடுத்துச் சொல்லவேண்டாதபடி, அற்புதமாய் எடுத்துக்காட்டுகின்றன. சந்தம், துள்ளலோடு வந்தாலும், மிக்க சவுக்கத்திலேயே ஆங்காங்குப் பொருளோடு நின்றுநின்று பாடவேண்டும். அப்படிப் பாடினால்தான் வீர பாவம் தெரியவரும்.

12. இந்த வார்த்தைகளை எல்லாம் வேடர் முன் பேசிவிட்டுக் குகன் கரையில் வந்து நிற்கிறான். அவன் இப்படி வந்து நிற்பதை அக்கரையிலிருந்த சுமந்திரன் கண்டுகொண்டான்.

என்பன சொல்லி,இ -
ரும்பன மேனியர்
ஏனோர் முன்,

வன்பணை வில்லினன்,
மல்உயர் தோளினன்,
வாள்வீ ரற்(கு)

அன்பனும் நின்றனன்; -
நின்றது கண்(டு)அரி
ஏ(று)அன் னான்

முன்பினில் வந்துமொ -
ழிந்தனன், மூரிய
தேர்வல் லான். சருள

---

12. இரும்பு அன்ன மேனியர் ஏனோர்முன் - இரும்பில் வார்த்தமாதிரியுள்ள தேகம்படைத்த இதர வேடர்கள் முன்பாக. வன்பணை வில்லினன் - வலிய பெரிய வில்லை ஏந்தியவன். மல்லுயர் தோளினன் - மல்யுத்தம் செய்துசெய்து பருத்த தோளையுடையவன். வாள் வீரற்கு அன்பனும் - ராமனுக்கு நண்பனுமான குகன். நின்றனன் - கங்கையின் தெற்குக் கரையில் நின்றான். அரி ஏறு அன்னான் முன்பினில் - ஆண்சிங்கம்போன்ற பரதன் முன்பாக வந்து. மூரிய தேர்வல்லான் - சுமந்திரன்; வடக்குக் கரையில் நின்ற சுமந்திரன்.

13. நாம் இப்போது வடகரைக்குப்போகிறோம். தெற்குக்கரையில் நிற்கிறான் குகன். அவனைப் பார்த்த சுமந்திரன், பரதனிடம் போய்ச் சொல்லுகிறான்.

சந்தம்

*தானன தானன*
*தானன தானன*

*'கங்கையிரு கரையுடையான்,*
*கணக்கிறந்த நாவாயான்,*

*உங்கள்குலத் தனிநாதற்(கு)*
*உயிர்த்துணைவன், உயர்தோளான்,*

*வெங்கரியின் ஏ(று)அனையான்,*
*வில்பிடித்த வேலையினான்,*

*கொங்கலரும் நறும்தண்தார்*
*குகன்என்னும் குறியுடையான்.'* சருஅ

14. எதற்காக வருகிறான் தெரியுமா என்கிறான் சுமந்திரன்.

---

13. உங்கள் குலத் தனிநாதற்கு : ராமனுக்கு. வெங்கரியின் ஏறு அனையான் - வீரம் கொண்ட ஆண் யானையை ஒத்தவன். வில் பிடித்த வேலையினான் - வில் ஏந்திய காலாட் படையை மிகுதியாகக் கொண்டவன் ; வேலை - சமுத்திரம். கொங்கு அலரும் நறும் தண்தார் - தேனும் வாசனையும் நிறைந்த மாலை சூடிய. குறியுடையான் - பெயர் உடையவன்.

'கல்காணும் திண்மையான்,
கரைகாணுக் காதலான்,
அல்க்காணில் கண்டனைய
அழகமைந்த மேனியான், -
மல்க்காணும் திருநெடுந்தோள்
மழைகாணும் மணிநிறத்தாய் !
நிற்காணும் உள்ளத்தான்,
நெறிஎதிர்நின் றனன்' என்றான். சுருக

15. தனக்கு முன்னே வந்து சுமந்திரன் இந்த விதமாகப் பேசப் பேசப் பரதனுக்கு அளவிறந்த ஆனந்தம்.

தன்முன்னே அவன்தன்மை
தன்துணைவன் முந்துரைத்த
சொல்முன்னே உவக்கின்ற
துரிசிலாத் திருமனத்தான்,

---

14. கல்காணும் திண்மையான், கரைகாணுக் காதலான் - தேகத்தின் திட்பத்தைப் பார்த்தால் கல்லாகவே தோன்றும்; இதயத்தைப் பார்த்தாலோ, ஒரே அன்பு மயமாய் இளகிநிற்கும். அல் காணில் கண்டு அனைய : இருளையே ஒத்த ; அல் - இருள். அழகு அமைந்த மேனியான் : குகன். மல் காணும் திரு நெடும் தோள் மழை காணும் மணி நிறத்தாய் : பரதன். மல் - மல்யுத்தம். மழை - நீலமேகம். நிற் காணும் - நின்னைக் காணும் படியான.

15. தன் முன்னே - தனக்கு முன்னாக. அவன் தன்மை - குகனது தன்மையை. தன் துணைவன் - சுமந்திரன். துரிசிலாத் திருமனத்தான் - களங்கமற்ற பரதன்.

'மன்முன்னே தழீஇக்கொண்ட
மனக்கினிய துணைவனேல், -
என்முன்னே! அவற்காண்பென்
யானேசென்(று)' எனஎழுந்தான். ௪௬௦

16. அவசர அவசரமாகப் பரதன் தம்பியோடு எழுந்து கங்கைக் கரையை அடைந்து நின்றான். அப்படி நின்றவனைக் குகன் நோக்கினான்.

என்றெழுந்து, தம்பியொடும்
எழுகின்ற காதலொடும்,
குன்றெழுந்து சென்ற(து)எனக்
குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை, - நோக்கினான்,
திருமேனி நிலைஉணர்ந்தான்,
துன்றுகரும் நறும்குஞ்சி
எயினர்கோன் துண்என்றான்! ௪௬௧

17. குகன் எண்ணியது, ராமனைக் கொல்லுவதற்காக யுத்த சன்னத்தனாய்ப் பரதன் எதிர்ப்படுவான்

---

15. மன் - ராமன். துணைவனேல் - நண்பனாகில். என் முன்னே - எனக்குத் தமையனே ஆகிறான்.

16. எழுகின்ற காதலொடும் - உள்ளத்தில் பொங்கி வந்த ஆசையோடும். கங்கைக்கரை குறுகி நின்றவனை: பரதனை. துன்று கரும் நறும்குஞ்சி - அடர்ந்த குடுமிமேல் வாசனையுள்ள மாலையை அணிந்திருந்த. எயினர் கோன் - வேடர்களுக்கு அரசன், குகன். துண் என்றான் - திடுக்கிட்டுப்போனான்.

என்று. ஆனால், என்ன நிலையில் நிற்கிறான் பரதன்?

வற்கலையின் உடையானை,
மாசடைந்த மெய்யானை,
நற்கலையில் மதியென்ன
நகைஇழந்த முகத்தானை,
கல்க்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்றான்;
வில்க்கையினின்(று) இடைவீழ
விம்முற்று நின்(று)ஒழிந்தான். சசஉ

---

17. வற்கலை - மரஉரி. மெய் - உடல். நற்கலையில் மதியென்ன நகை இழந்த முகத்தானை: இரவு பூர்ண சந்திரன் பிரகாசமாயும் அழகாயும் இருக்கிறது. அது மேற்கே அடையும் தருவாயில் சூரியன் கிழக்கே உதிக்கப் பார்க்கிறான். அப்போது சந்திரன் பூரணமாய்த் தான் இருக்கும்; ஆனால், பிரகாச மில்லாமல் வெளுத்துப் போயிருக்கும். அப்படி வெளுத்துப்போன நிலையிலிருந் தது, பரதனது முகம். கல்கனியக் கனிகின்ற துயரானை: துயரத்தினால் கனிகின்ற பரதனைப் பார்த்தால், கல்லில் செதுக்கிய சிலைகூட அப்படியே கனிந்து விடும். வில் கையில் நின்று இடை வீழ - குகன் உணர்ச்சியற்று நின்ற காரணமாக கையிலிருந்த வில் தானாகவே நழுவி நிலத்தில் விழுந்துவிட்டது. விம்முற்று நின்று ஒழிந்தான்- அப்படியே நின்றான்: எவ்வளவு நேரம் நின்றான் என்பது சொல்லமுடியாது.

18. மயக்கம் தெளிந்து, குகன் தனக்குள்ளேயே எண்ணிக்கொள்ளுகிறான்.

'நம்பியும்என் நாயகனை
ஒக்கின்றான் ; அயல்நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான் ;
தவவேடம் தலைநின்றான் ;
துன்பம்ஒரு முடிவில்லை ;
திசைநோக்கித் தொழுகின்றான் ;
எம்பெருமான் பின்பிறந்தார்
இழைப்பரோ பிழைப்(பு) !' என்றான். சகூங.

19. இப்படியெல்லாம் எண்ணிவிட்டுத் தன்னைச் சுற்றிநின்ற வேடர்களைப் பார்த்துச் சொல்லுகிறான்: 'அதோ நிற்கிற பரதனுக்கு ஏதோ கஷ்டம் உண்டு என்று தெரிகிறது. பேரன்பு உடையவனாகவே தோற்றுகிறான். மேலும், தவவேடம் கொண்டிருக்கிறான்,

---

18. நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்-பரதனது உருவம் ராமனைப்போல் இருக்கிறது. அயல் நின்றான் தம்பியையும் ஒக்கின்றான் - பக்கத்தில் இருக்கிறவனும் லக்ஷ்மணனை ஒத்து இருக்கிறான். தவக்கோலம் அல்லவா தாங்கி நிற்கிறான்! சக்கரவர்த்திக்கான கோலம் ஒன்றும் தென்படவில்லையே! திசை நோக்கி - ராமன் போயிருக்கிற தென்திசை நோக்கி.

பார்த்தீர்களா' என்றெல்லாம் பேசுகிருன். கொண்டிருந்த கோபமெல்லாம் எங்கேயோ போய் விட்டது.

'உண்(டு)இடுக்கண் ஒன்றுடையான்,
உலையாத அன்புடையான்,

கொண்டதவ வேடமே
கொண்டிருந்தான் குறிப்(பு) எல்லாம்,

கண்(டு)உணர்ந்து பெயர்கின்றேன்,
காமின்கள் நெறி'என்று,

தண்துறையோர் நாவாயில்
ஒருதனியே தான்வந்தான். சசுச

20. இப்படித் தன்னந் தனிமையாகப் படகில் வந்த குகன் கரையேறினுன். கரையில் தொழுது கொண்டு நின்ற பரதனைக் குகனும் வணங்கினுன். குகன் வணங்குவதைப் பார்த்த பரதன், அப்படியே குகனது அடியில் விழுந்தான். அடியில் விழுந்த

---

19. குறிப்பு எல்லாம் - பரதனுடைய நோக்கம் இன்னது என்று. காமின்கள் நெறி என்று : ஜாக்கிரதை யாக இருங்கள், எதிரிகள் வரக்கூடிய வழிகளை நன்ருய்க் காத்து நில்லுங்கள். தண்துறை ஓர் நாவாயில் : தோணித் துறையிலிருந்த ஒரு படகில். ஒரு தனியே தான் வந்தான் - தன்னந் தனியாகவே வந்தான் குகன்.

பரதனைக் குகன் கையால் எடுத்துத் தந்தை மகனைத் தழுவுவதுபோலத் தழுவிக்கொண்டான்.

வந்(து),எதிரே தொழுதானை
வணங்கினன் ; - மலர்இருந்த
அந்தணனும் தனைவணங்கும்
அவனும்,அவன் அடிவீழ்ந்தான் ;
தந்தையினும் களிகூரத்
தழுவினன் : தகவுடையோர்
சிந்தையினும் சென்னியினும்
வீற்றிருக்கும் சீர்த்தியான். சசுரு

21. பரதனைத் தழுவிக் கொண்டவனாய், குகன் கேட்கிறான் : இங்கு வந்தது எதன்பொருட்டு என்று.

---

20. வந்து - படகில் வந்து. எதிரே தொழுதானை - தனக்கு எதிரே கரையில் நின்று தொழுத பரதனை. மலர் இருந்த அந்தணனும் தனை வணங்கும் அவனும் - தாமரை மலரிலிருக்கும் பிரமனே தன்னை வணங்கும் படியான அவ்வளவு ஞானம் படைத்துள்ள பரதனும். அவன் அடி வீழ்ந்தான் - குகனது அடியில் வீழ்ந்தான். தந்தையினும் களிகூரத் தழுவினன் - தந்தை பிள்ளையைக் கண்டு அன்பு கூர்ந்து தழுவுவது போலத் தழுவினன். தழுவினது யார்? பக்தர்களுடைய சிந்தையிலும் தலையிலும் சதா வீற்றிருக்கும் சிறப்புப் பொருந்திய குகப்பெருமான்தான்.

சந்தம்

தானன தானன தன்
தானன தானன தன்

தழுவின புளிஞர்வேந் தன்,
தாமரைச் செங்கணு னை,

'எழுவினும் உயர்ந்ததோ ளாய்!
எய்திய(து) என்னை?' என் ன,

'முழுதுல(கு) அளித்ததந் தை
முந்தையோர் முறையினின் றும்

வழுவினன், அதனை நீக் க
மன்னனைக் கொணர்வான்' என் றான்.

22. பரதன் இப்படிச் சொல்லக் கேட்டவுடன், குகனுக்கு மிக்க மன எழுச்சி அபாரமாய் உண்டாகி விட்டது.

---

21. புளிஞர் வேந்தன் - வேடர்களுக்கு அரசனான குகன். தாமரைச் செங்கணானை : பரதனைப் பார்த்து. எழுவினும் உயர்ந்த தோளாய் - தூணைவிட உயர்ந்த தோள்கொண்ட பரதனே. எய்தியது என்னை - இங்கு வந்தது எதை உத்தேசித்தோ. முழுது உலகு அளித்த தந்தை : தசரதன். முந்தையோர் - மூதாதைகள் அனுசரித்து வந்த. முறையினின்றும் - பரம்பரையான கிரமத்தைவிட்டு. மன்னனை - ராமனை.

கேட்டனன் கிராதர்வேந் தன்,
கிளர்ந்(து)எழும் உயிரனு கி

மீட்டுமண் அதனில்வீழ்ந் தான்,
விம்மினன், உவகைவீங் கத்

தீட்(டு)அரு மேனிமைந் தன்
சேவடிக் கமலப்பூ வில்ப்

பூட்டிய கையன்,பொய் யில்
உள்ளத்தன், புகலலுற் ருன். சசுஎ

23. பரதனுடைய எண்ணுதற்கரிய குணத்தைக் கண்டு, குகன் மெய்ம்மறந்தவனாய்ப் பேசுகிருன்.

'தாயுரை கொண்டு, தா தை
உதவிய தரணிதன் னைத்,

தீவினை என்னநீத் துச்,
சிந்தனை முகத்தில்தேக் கிப்,

---

22. கிராதர் வேந்தன் - குகன். மீட்டும் மண் அதனில் வீழ்ந்தான் - விஷயங்களை விசாரித்துக்கொண்டிருக்கிற நிலையில் திடீரென்று நிலத்தில் வீழ்ந்தான். உவகை வீங்க - ஆனந்தம் பொங்க. தீட்டு அரும் மேனி மைந்தன் - சித்திரத்தில் எழுத முடியாதபடி அவ்வளவு அழகுவாய்ந்த பரதன். சேவடிக் கமலப்பூவில் - சிவந்த பாதங்களாகிய தாமரைப்பூவில். பூட்டிய கையன் - ஒரே பிடியாய்ப் பற்றிக்கொண்டவனாய்.

23. தாயுரை கொண்டு - கைகேசி கேட்டுக் கொண்டபடி. தரணி தன்னை - ராஜ்யத்தை. தீவினை என்ன நீத்து - கொடிய பாதகம் என்று நினைத்து உதறித் தள்ளி.

போயினை ! என்றபோழ் து,
புகழினேய் ! தன்மைகண் டால், -
ஆயிரம் இராமர்நின் கேள்
ஆவரோ, தெரியின்அம் மா ? ' சசஅ

24. மேலும், வெறும் வேடனை நான் தரமா உன்னைப் புகழ்வதற்கு !

' என்புகழ் கின்ற(து)ஏ ழை
எயினனேன் ! இரவிஎன் பான்
தன்புகழ்க் கற்றை,மற் றை
ஒளிகளைத் தவிர்க்குமா போல்,
மன்புகழ் பெருமை நுங் கள்
மரபினேர் புகழ்கள்எல் லாம்,
உன்புகழ் ஆக்கிக்கொண் டாய்,
உயர்குணத்(து) உரவுத்தோ ளாய் ! ' சசகூ

23. போயினை - ராமனைத் தேடி இங்கு வந்தாய். புகழினேய் - எல்லாப் புகழுக்கும் உறைவிடமாகவுள்ள உன் குணத்தை. நின் கேள் - உனக்குச் சமானம். தெரியின் அம்மா - சீர்தூக்கிப் பார்த்தால், அடடா ! குறிப்பு : அதிசய பாவம் வெகு அழகாய் அமைந்திருக்கிறது.

24. என் புகழ்கின்றது - எப்படிப் புகழ முடியும். ஏழை எயினனேன்-ஒன்றும்தெரியாத வேடனுகிய நான். இரவி என்பான் தன் புகழ்க் கற்றை - சூரியனது கிரணங்களின் தொகை. மற்றை ஒளிகளைத் தவிர்க்குமா போல் - சந்திரன், நக்ஷத்திரங்கள், விளக்குகள் இவைகளின் பிரகாசத்தையெல்லாம் தன்னுள் அடக்கி இல்லாததுபோல் செய்யும் முறையில். மன்புகழ் பெருமை - தெய்வ கீர்த்தி யென்று சொல்லக் கூடிய பெருமை வாய்ந்த. நுங்கள் மரபினேர் - உங்கள் மூதாதைகளின். உயர் குணத்து உரவுத் தோளாய் - உயர் குணமும் புஜ பலமும் அற்புதமாய் ஒருங்கே அமைந்த வீரனே.

25. குகன் அப்படிச் சொல்லவும், தென்திசை நோக்கித் தொழுதுகொண்டு மிக்க பரிவுடன் பரதன் கேட்கிறான்.

அவ்வழி அவனைநோக் கி,
அருள்தரு வாரிஅன் ன
செவ்வழி உள்ளத்தண் ணல்,
தென்திசைச் செங்கைகூப் பி,
'எவ்வழி உறைந்தான்நம் முன்?'
என்றலும், - எயினர்வேந் தன்,
'இவ்வழி, வீர!யா னே
காட்டுவல், எழுக'என் றான். சஎ0

26. காட்டுகிறேன் என்று குகன் சொல்லவும், அப்படியே எழுந்து ஓடுகிறான் பரதன்.

கார்எனக் கடிதுசென் றான்,
கல்லிடைப் படுத்தபுல் லில்
வார்சிலைத் தடக்கைவள் ளல்
வைகிய பள்ளிகண் டான்,

---

25. அருள்தரு வாரி அன்ன - அருளைப் பொழிகிற சமுத்திரத்துக்குச் சமானமான. செவ்வழி உள்ளத்து அண்ணல் - நீதியிலேயே நிற்கும் உள்ளத்தனான பரதன். எவ்வழி உறைந்தான் நம்முன் - எங்கே தங்கினான் நம்முடைய தமையனான ராமன். எயினர் வேந்தன் - குகன். இவ்வழி - இங்கேதான். காட்டுவல் - காட்டுகிறேன்.

26. கார் எனக் கடிதுசென்றான்-மேகத்தைப்போல் வேகமாகப் போனான். கல்லிடைப் படுத்த புல்லில் - கல்லில் பரப்பிய புல்லின்மேல். வைகிய பள்ளி கண்டான் - படுத்த இடத்தைக் கண்டான். வார்சிலைத் தடக்கை வள்ளல் : ராமன்.

பார்மிசைப் பதைத்துவிழ்ந் தான்,
பருவரல்ப் பரவைபுக் கான்,

வார்மணிப் புனலால்மண் ணை
மண்ணுநீர் ஆட்டும்கண் ணுன். ௨௭௬

27. இப்படிக் கண்ணீர் விட்டு அழுது, ராமா! என்று விளித்துப் புலம்புகிருன் பரதன்.

'இயன்ற(து)என் பொருட்டினுல் இவ்
இடர்உனக்(கு), என்றபோழ் தும் ;

அயின்றனை கிழங்குங்கா யும்
அமிர்தென, அரியபுல் லில்த்

துயின்றனை எனவும் ; ஆவி
துறந்திலென், - சுடரும்கா சு

குயின்றுயர் மகுடம்சூ டும்
செல்வமும் கொள்வான்,யா னே !' ௨௭௨

---

26. பருவரல் பரவை புக்கான் - துயரமாகிய கடலுக்குள் விழுந்தான். வார்மணிப் புனலால் - வடிந்த முத்துப்போன்ற கண்ணீரால். மண்ணை - நிலத்தை. மண்ணு நீர் ஆட்டும் - துடைத்துக் கழுவும்.

27. இயன்றது - ஏற்பட்டது. அயின்றனை - தின்ருய். துயின்றனை - தூங்கினுய். சுடரும் காசு குயின்று - மாணிக்கம் அழுத்திய. மகுடம் சூடும் செல்வமும் கொள்வான்-மகுடம் சூடி அதனுல் உரியதாகும் ராஜ்யத்தையும் கொள்ளும்பொருட்டே, ஆவி துறந்திலேன் என்பது கருத்து.

28. மேலும் விசாரிக்கிறான் பரதன்.

தூண்தர நிவந்ததோ ளான்
பின்னரும் சொல்லுவான், ' அந்
நீண்டவன் துயின்றசூ ழல்
இதுஎனில், - நிமிர்ந்தநே யம்
பூண்டவன், தொடர்ந்துபின் னே
போந்தவன், பொழுதுநீத் த(து)
யாண்(டு) ? ' என இனிதுகேட் டான்,
எயினர்கோன் இதனைச்சொன் னான். ௪௭௩

29. குகன் பதில் சொல்லுகிறான்.

' அல்லையாண் டமைந்தமே னி
அழகனும் அவளும்துஞ் ச,
வில்லைஊன் றியகையோ டும்
வெய்துயிர்ப் போடும்வீ ரன், -

---

28. தூண்தர நிவந்த தோளான் - பரதன். அந் நீண்டவன் - ராமன். துயின்ற சூழல் - படுத்திருந்த இடம். நிமிர்ந்த நேயம் பூண்டவன் - நம் உணர்ச்சிக்கு எட்டாத அன்பு பூண்ட லக்ஷ்மணன். பொழுது நீத்தது யாண்டு - எப்படி அப்பா இராப்பொழுதைக் கழித்தான். எயினர் கோன் - குகன்.

29. அல்லையாண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச - ராமனும் சீதையும் தூங்க; அல்லை - இருளை. வெய்துயிர்ப்போடும் - பெருமூச்சோடும்.

கல்லையாண்(டு) உயர்ந்ததோ ளாய்!
கண்கள்நீர் சொரியக்,கங் குல்
எல்லைகாண் பளவும்நின் றான்,
இமைப்பிலன் நயனம்'என் றான். ௪௭௪

30. லக்ஷ்மணன் இந்தவாறாகக் கண்ணீர்விட்டுக் கொண்டு காத்துநின்றான், என்று குகன் சொன்னதைக்கேட்ட பரதன் தன்னை நொந்துகொள்ளுகிறான்.

என்பத்தைக் கேட்டமைந் தன்,
'இராமனுக்(கு) இளையார்என் று
முன்(பு)ஒத்த தோற்றத்தே மில்,
யான்என்றும் முடிவிலா த
துன்பத்துக்(கு) ஏதுவா னேன்,
அவன்அது துடைக்கநின் றான்;
அன்பத்துக்(கு) எல்லையுண் டே!
அழகி(து)என் அடிமை!'என் றான். ௪௭௫

29. கல்லையாண்டு உயர்ந்த தோளாய்: பரதனே. கங்குல் எல்லை காண்பளவும் - இரவுநீங்கி விடியுமட்டும். இமைப்பிலன் நயனம் - கண் கொட்டவில்லை.

30. என்பத்தை - என்று சொன்னதை. மைந்தன் - பரதன். ராமனுக்கு இளையார் என்று - ராமனுக்குத் தம்பிகள் என்று. முன்பு ஒத்த தோற்றத்தேமில் - முன்பு எல்லாரும் ஒத்த மாதிரியாகவே மூன்றுபேர் பிறந்தோம்; அதில். துன்பத்துக்கு ஏதுவானேன்-ராமன் விஷயமாகத் துன்பம் விளைக்கக் காரணமானேன். அவன் அது துடைக்க நின்றான் - லக்ஷ்மணனே அந்தத் துன்பத்தை நீக்குவதற்காக ஊழியம் செய்து நிற்கிறான். அன்பத்துக்கு எல்லையுண்டே - லக்ஷ்மணனது அன்பு என்

31. பரதனும் குகனும் இந்தவிதமாக எல்லாம் அழுதும் புலம்பியும் பேசித் தீர்ந்தது. படைகளையும் அயோத்திமக்களையும் கடத்துவதற்காகப் படகுகளைக் கொண்டுவரும்படி பரதன் சொன்னான். படகுகள் வந்தன. அவைகளில் :

சந்தம்

தானன தானன
தான தன்னன

அறுபதி னாயிரம்
அக்கு ரோணியென்(று)

இறுதிசெய் சேனையும்,
எல்லை தீர்நகர்

மறுகுறு மாக்களும்,
மகளிர் வெள்ளமும்,

செறிதிரைக் கங்கைபின்
கிடக்கச், சென்றவே. சஎசு

---

உணர்ச்சிக்கு அப்பால் எங்கேயோ போய் நிற்கிறது. உண்டே - உண்டோ. அழகிது என் அடிமை என்றான் - என்னுடைய அன்போ ரொம்ப அழகாய் இருக்கிறது! எவ்வளவு கேவலம், நான் செய்யும் ஊழியம்!

31. அக்குரோணி-படைகளின் ஒரு பெருந்தொகுதி. இறுதி செய் - கணக்கிட்டு முடிவுசெய்த. எல்லை தீர் - எண்ணிறந்த. நகர் மறுகுறு மாக்கள் - வருந்துகின்ற நகரத்து ஜனங்கள். மகளிர் வெள்ளம் - பெண்களது கூட்டம். செறிதிரைக் கங்கை பின் கிடக்க - நெருங்கிய அலைகளோடு கூடிய கங்கைநதி வெகு சீக்கிரத்தில் பின்னால் கிடக்கும்படி. சென்றவே - கரையேறிவிட்டன.

32. கங்கையைப் படகுகள் எல்லாம் கடந்து போய் விட்டன என்று பரதனுக்குத் தெரிந்தது. தானும் படகில் ஏறிக்கொண்டான்:

சூழித்துநீர் வருதுறை
ஆற்றைச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக்,
கள்ள ஆசையை
அழித்துமற்(று) அவனிபண்(டு)
ஆண்ட வேந்தரை
இழித்துமேல் ஏறினன்,
தானும் ஏறினன். ௪எஎ

32. சூழ்படை கழித்து நீங்கியது என - தன்னைச் சூழ்ந்த படைகள் ஆற்றைக் கடந்து நீங்கிவிட்டது என்று சொல்லக் கேட்டான் பரதன். கள்ள ஆசையை அழித்து- புலன்களின் ஏமாற்றத்தினுல் உண்டாகும் ஆசையை யெல்லாம் ஒழித்து. மற்று அவனி பண்டு ஆண்ட வேந் தரை இழித்து மேல் ஏறினன் : ஆசையை ஒழித்ததன் காரணமாகவே, மூதாதையர்களான புகழ்வாய்ந்த அரசர் களையெல்லாம் கீழாக்கித் தான் தனித்து மேலானவ னை பரதன். தானும் ஏறினன் - படகில் தானும் ஏறிக் கொண்டான். குறிப்பு : ரகு வம்சத்து அரசர்களையெல் லாம் கீழே தள்ளி அமுக்கித் தான் அவர்களுக்கு மேலேறு வதான தொனி செய்யுளில் கிடக்கிறது.

33. தான் படகில் ஏறிய பிறகு, தம்பி தாயர் முதலானவர்களை ஏறச் செய்கிறான்.

தன்னன தம்பியும்,
தாயர் மூவரும்,
சொன்னதேர் வலவனும்,
தூய தோழனும்,
துன்னினர் ஏறலும்,
துழாது டுப்(பு)எனும்
நல்நயக் காலினால்
நடத்தல் மேயினான். சஎஅ

34. இவர்களும் மற்றும் பலரும் ஒரு பெரிய படகில் இருக்கிறார்கள். படகு கங்கையில் மெள்ளச் சென்றுகொண்டிருக்கிறது. உறவினரும் முனிவர்கள் முதலான பெரியவர்களும் கோசலாதேவியை மரியாதையுடன் தொழுதுநிற்கிறார்கள். குகனும் தொழுது, அத்தேவி யார் என்று பரதனைப் பார்த்துக் கேட்கிறான்.

---

33. தன்னன தம்பியும் - தன் உயிருக்குச் சமான மான தம்பியும். தூய தோழனும் - குகனும். துன்னினர் ஏறலும் - ஓட்டி வந்து ஏறவும். துழா துடுப்பு எனும் நல்நயக் காலினால் - துழாவுகின்ற துடுப்பென்னும் அழகிய கால்களினால். நடத்தல் மேயினான் - படகில் சென்றான்.

சந்தம்

தானன தானன
தானன தானன
தானன தன்.

சுற்றத்தார் தேவரொடும்
தொழநின்ற கோசலையைத்
தொழுதுநோக்கி,
'வெற்றித்தார்க் குரிசில்! இவர்
ஆர்' என்று குகன்வினவ, -
'வேந்தர்வைகும்
முற்றத்தான் முதல்த்தேவி,
மூன்றுலகும் ஈன்றானைப்
முன்ஈன்றானைப்
பெற்றத்தால் பெருஞ்செல்வம்
யான்பிறத்த லால்த்துறந்த
பெரியாள்' என்றான். ௪௭௬

34. சுற்றத்தார் - உறவினர். தேவரொடும் - முனிவர்கள் முதலான பெரியவர்களோடும். வெற்றித்தார் குரிசில் - போரில் பகைவரைவென்று வெற்றி மாலையை அணியத் தகுந்த பரதனே. இவர் - இந்தத் தேவியார். வேந்தர் வைகும் முற்றத்தான் முதல் தேவி ; தசரதனைப் பேட்டி காணச் சமயம் கிடையாமல் அரசர்கள் பல நாளாகக் காத்து முற்றத்தில் தங்குவார்கள். அப்படி அரசர் தங்கும் முற்றத்துக்கு உரியவனான சக்கரவர்த்தியின் முதல் மனைவி. மூன்று உலகும் ஈன்றானை - பூமியென்றும் வான் என்றும் பாதாளம் என்றும் மூன்று உலகங்களைப் படைத்த பிரமனை. முன் ஈன்றானை - ஆதியில் உண்டாக்கின விஷ்ணு மூர்த்தியின் அவதாரமான ராமனை. பெற்றத்தால் பெருஞ் செல்வம் - பெற்றதால் ஆகிய பெரும் பாக்கியத்தை. துறந்த - இழந்த.

35. ராமனைப் பெற்ற தாய் என்று சொன்னதும், குகன் அப்படியே அவள் பாதத்தில் விழுந்து அழத் தொடங்கினன். கோசலை பார்த்து, இவன் யார் அப்பா, என்று கேட்கிருள்.

என்றலுமே, அடியின்மிசை
நெடிதுவீழ்ந்(து) அழுவானை,
'இவன்யார்' என்று

கன்றுபிரி காராவின்
துயருடைய கொடிவினவக்,
கழல்க்கால்மைந் தன்,

'இன்துணைவன் இராகவனுக்(கு),
இலக்குவற்கும் இளையவற்கும்
எனக்கும்மூத் தான்,

குன்(று)அனைய திருநெடுந்தோள்க்
குகன்என்பான் இந்நின்ற
குரிசில்' என்ருன். சஅ0

36. குகன் அழவும், பரதனுக்கும் சத்துருக்க னுக்கும் கண் கலங்கிவிட்டது அவர்களைப் பார்த்து,

---

35. கன்று பிரி காராவின் துயருடைய கொடி - கன்றைவிட்டுப் பிரிந்த கறவைப்பசுவைப்போல, ராமனை விட்டுப் பிரிந்திருக்கிற கோசலா தேவி. கழல்க்கால் மைந் தன் - பரதன். இன்துணைவன் இராகவற்கு-ராமனுக்குச் சினேகிதன். இளையவற்கும் - சத்துருக்கனுக்கும். குகன் என்பான் - குகன் என்று அழைக்கப்படுபவன். இந்நின்ற குரிசில் - இதோ நிற்கிற வீரன்.

கோசலை, 'பிள்ளைகளே, ஏன் வருந்துகிறீர்கள்' என்று ஆறுதல் சொல்லுகிறாள்.

'நைவீர்அலீர், மைந்தீர்!
இனித்துயரால்; நா(டு)இறந்து
காடுநோக்கி

மெய்வீரர் பெயர்ந்ததுவும்
நலமாயிற் றும்அன்றே,
விலங்கல்த்திண் தோள்க்

கைவீரக் களி(று) அனைய
காளை இவன் தன்னோடும்
கலந்து,நீ விர்

ஐவீரும் ஒருவீராய்,
அகலிடத்தை நெடுங்காலம்
அளித்திர்' என் றாள். சஅக

37. கோசலை வாழ்த்தினவுடன், எல்லோருக்கும் ஒரு அமைதி பிறந்தது. அவள் பக்கத்தில் அன்புருவமாய் நின்ற சுமித்திரையைப் பார்த்து, 'இந்த

---

36. நைவீர் அலீர் இனித் துயரால் - துயரத்தினாலே நீங்கள் வருந்தவேண்டாம். மைந்தீர் - என் பிள்ளைகளே. நாடு இறந்து - நாட்டைக் கடந்து. மெய்வீரர் பெயர்ந்ததுவும் - ராம லக்ஷ்மணர் வனம் போனதும். நலமாயிற் றும் அன்றே - லாபகரமாகவே முடிந்தது. விலங்கல் திண்தோள் - மலைபோன்ற வலிய தோள்கொண்ட. கைவீரக் களிறு அனைய - துதிக்கையைக்கொண்ட யானையை ஒத்த. காளை இவன் - இந்தக் குகன். அகலிடத்தை - இந்தப் பரந்த ராஜ்யத்தை. அளித்திர் - ஆள்வீர்களாக.

அம்மாள் யார் தெரியவில்லை, சொல்ல வேண்டும்"
என்று குகன் வினவுகிறான்.

அறந்தானே என்கின்ற
அயல்நின்றாள் தனைநோக்கி,
'ஐய ! அன் பின்

நிறைந்தானை உரை' என்ன,
'நெறிதிறம்பாத் தன்மெய்யை
நிற்பதாக் கி,

இறந்தான்தன் இளந்தேவி,
யாவர்க்கும் தொழுகுலமாம்
இராமன்பின் பு

பிறந்தானும் உளன்என்னப், -
பிரியாதான் தனைப்பயந்த
பெரியாள்' என் றான். ௩௮௨

37. அறந்தானே என்கின்ற - தர்ம தேவதையே என்று சொல்லத்தக்க. நெறி திறம்பாத் தன் மெய்யை நிற்பதாக்கி இறந்தான் : தர்ம நெறியை விட்டு விலகாது தன் பிறவியோடே ஒட்டியுள்ள சத்தியத்தை இந்த உலகத்தில் நிற்கச் செய்துவிட்டுத் தான் இறந்து போனான் ; இப்படி இறந்த தசரத சக்கரவர்த்தியின். தொழுகுலமாம் - தொழுதற்குரிய தெய்வம் ஆகும் ராமன். லக்ஷ்மணன் இல்லையென்றால் ராமனுக்குத் தம்பியாக யாரும் பிறக்கவில்லை என்றுதான் சொல்லத் தோன்றும். பிரியாதான் தனைப் பயந்த - லக்ஷ்மணனைப் பெற்ற. குறிப்பு: செய்யுளில் உணர்ச்சிகளைக் காட்டக்கூடிய அழுத்தங்கள் அபூர்வமாய் அமைந்திருக்கின்றன. எதுகைகள் மோனைகள் வந்து ஒலிக்கும்போது, பாவத்துக்கு வேகம் அபாரமாய் உண்டாய்விடுகிறது.

38. சுமித்திரையைப்பற்றிச் சொன்னபிறகு, கம்பருக்கே ஒரு திகைப்பு வருகிறது. 'அடடா, பாவி கைகேசியையும், குகன், யார் என்கிற கேள்வி கேட்டு விடுவானே' என்று கவிஞரது இதயத்தில் உண்டான உணர்ச்சிகள் அப்படியே வெளிவருகின்றன.

சுடுமயா னத்திடை,தன்
துணை ஏகத், தோன்றல்துயர்க்
கடலின்ஏ கக்,

கடுமையார் கானகத்துக்
கருணை ஆர் கலிஏகக்; -
கழல்க்கால்மா யன்

நெடுமையால் அன்றளந்த
உலகெல்லாம், தன்மனத்தே
நினைந்துசெய் யும்

கொடுமையால் அளந்தாளை,
'யார்இவர்என்(று) உரை'என்னக்,
குரிசில்கூ றும். ௭அ௩

38. தன் துணை - கணவனான தசரதன். தோன்றல் - மகன் பரதன். கடுமையார் கானகத்து - கொடிய காட்டுக்கு. கருணை ஆர்கலி - கருணைக்கடலான ராமன். கழற்கால் மாயன் - விஷ்ணுபகவான். நெடுமையால் அன்று அளந்த : வாமனாவதாரத்தில் நீண்டு வளர்ந்து மூன்று அடி மண்ணுக்காக உலகத்தையெல்லாம் திருவடிகளால் அளந்த கதையைக் குறிக்கும். கொடுமையால் அளந்தாளை - கொடுமைக்கு உட்படுத்திய. குரிசில் கூறும் - பரதன் சொல்லுகிறான்.

39. பரதனுடைய துயரத்தையும் உள்ளக் கொதிப்பையும் பாருங்கள்!

‘ படர்எலாம் படைத்தாளைப்,
பழிவளர்க்கும் செவிலியைத்,தன்
பாழ்த்தபா விக்
குடரிலே நெடுங்காலம்
கிடந்தேற்கும் உயிர்ப்பாரம்
குறைந்துதே ய,-
உடரெலாம் உயிரிலா
எனத்தோன்றும் உலகத்தே
ஒருத்திஅன் றே
இடரிலா முகத்தாளை
அறிந்திலேயேல், இந்நின்றாள்
என்னைஈன் றாள்.’ சஅச

40. பரதன், முதலில் கோசலையையும் சுமித்திரையையும்பற்றி இதயபூரிப்போடு பாராட்டி விரிவாய்ப் பேசுகிறான். அதை எல்லோரும் அனுபவித்தார்கள்.

---

39. படர் எல்லாம் படைத்தாளை - துன்பத்தையெல்லாம் பெற்றவளை. பாழ்த்த பாவி - இரக்கமற்ற பாவியாகிய இவளது. குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும் - வயிற்றிலே பத்து மாசம் கிடந்த எனக்கு. உயிர்ப் பாரம் - உயிரைத் தாங்கிநிற்கும் தேகம். உடர் எல்லாம் உயிரிலா எனத் தோன்றும் : ராமனது பிரிவினால் சகல ஜனங்களுடைய உடலிலும் உயிரில்லையே என்று தோன்றுகிறது. ஜனங்கள் எல்லோரும் இடரில் மூழ்கியிருக்கக் கைகேசியின் முகம்மாத்திரம் துயரமற்று இருப்பதனாலே, அவளைக் குகன் தானாகவே அறிந்து கொள்ளலாம் என்பது குறிப்பு.

பிறகு கைகேசியைப் பற்றிப் பேச வந்தபோது அவளு டைய கொடுமையை அப்படியே விரிவாய் எடுத்துச் சொல்லிவிட்டான். கேட்டுக் கொண்டிருந்தவர்களுக் கெல்லாம் ரொம்பவும் சங்கடமாய்ப் போய்விட்டது. ஒருவருக்கும் ஒன்றும் சொல்ல இயலவில்லை. இந்த அசந்தர்ப்பத்தைக் கவிஞர் எப்படி விடுவிக்கிறார் என் பதைப் பார்க்கலாம்.

சந்தம்

தான தன்னன
தன்னன தன்னன

என்னக் கேட்(டு)அவ்
இரக்கமி லாளையும்,
தன்நல்க் கையின்
வணங்கினன் தாய்என ;-
அன்னப் பேடை
சிறையில தாய்க்கரை
துன்னிற்(று) என்னவும்,
வந்தது தோணியே. ௪அ௫

---

40. அவ் இரக்கமிலாளையும் - அந்தக் கைகேசியை யும். வணங்கினன் தாய் என - தாய் என்று வணங் கினான். அந்த க்ஷணத்திலேயே கரைவந்து சேர்ந்தது (துன்னிற்று) தோணி. குறிப்பு: ஒரு சங்கடமான சந் தர்ப்பத்தை நீக்குவதற்குக் குகன் கைகேசியைக் கும்பிட் டான் என்றும், தோணி, கரையைச் சேர்ந்து விட்டது என்றும் திடீரென்று முடிக்கிற சாதுரியம் அபூர்வமான நாடக இயலைக் காட்டுகிறது. இந்த பாவத்தைத் துள்ள லோடு கூடிய, அளவுபட்ட சந்தம் நன்றாய் எடுத்துக் காட்டுகிறது.

41. படகை விட்டு இறங்கிய தாய்மார் பல்லக்கில் ஏறிச் சென்றார்கள். தானும் மற்ற எல்லோருடனும் காத தூரத்தைக் கடந்துவிட்டான் பரதன். எப்படி?

இழிந்த தாயர்
    சிவிகையில் ஏறத்,தான், -
பொழிந்த கண்ணில்ப்
    புதுப்புனல் போகிடல்
ஒழிந்தி லான்குக -
    னும்உடன் ஏகிடக்,
கழிந்த னன்பல
    காவதம், காலினே. சஅசா

---

41. சிவிகை - பல்லக்கு. பொழிந்த கண்ணில் புதுப்புனல் போகிடல் ஒழிந்திலான் : கண்ணீர் விடாது வழிந்துகொண்டிருந்த கண்ணில், அடுத்து அடுத்துக் கண்ணீர் பெருகுதல் ஒழியவில்லை குகனுக்கு. அந்தக் குகனும் பரதனுடன் நடந்து செல்லுகிறான். குறிப்பு : பரதன் காலினாலேயே நடக்கிறான் என்கிற விஷயம் கவிஞர் இதயத்தை ரொம்பவும் தைக்கிறது. அந்த உணர்ச்சியைக் காட்டுவதற்காகக் 'காலினே' என்ற வார்த்தையைத் தனியாகப் பிரித்துக் கடைசியில் வைக்கிறார். பரதனுடைய பாதங்களைக் கையினால் பிடித்துத் தூக்கிக் காட்டுகிற பாவனையை செய்யுளில் காணலாம்.

# 12. கிளைகண்டு நீங்கு படலம்

1. பலகாத தூரம் நடந்து, கடைசியாக பரத்து வாஜமுனியிருந்த ஆசிரமத்தைப் பரதன் அடைகிறான்.

பரத்தின் ஓங்கும்
பரத்துவன் என்னும்அவ்
வரத்தின் மிக்(கு)உயர்
மாதவன் வைகிடம்
அருத்தி கூர
அணுகினன் ; - ஆண்(டு)அவன்
விருத்தி வேதிய -
ரோ(டு)எதிர் மேவினான். சஅஎ

---

1. பரத்தின் ஓங்கும் - இந்த இக தத்துவத்தை விட்டுப் பரதத்துவமாகிய உயர்ந்த பதவியிலேயே நிற்கும். பரத்துவன் - பரத்துவாஜ முனி. வரத்தின் மிக்கு உயர் மாதவன் - சகல சக்திகளும் அடைந்து யாவராலும் போற்றப்பட்ட யோகி. வைகிடம் - தங்கும் ஆசிரமம். அருத்திகூர அணுகினன்-மிக்க ஆசையோடு ஆசிரமத்தை வந்து அடைந்தான். ஆண்டு - அப்படி அடைந்ததைத் தெரிந்தவுடன். அவன் - பரத்துவாஜ முனி. விருத்தி - யோகசாதனத்திலுள்ள. வேதியர் - மற்றைய முனிவர்.

2. எதிர்கொண்டு அழைக்கவந்த பரத்துவாஜ முனிவரை பரதன் வணங்கினான்.

வந்த மாதவத் -
தோனைஅம் மைந்தனும்,
தந்தை யாமெனத்
தாழ்ந்து வணங்கினான் ;
இந்து மௌலிஅன் -
னானும் இரங்கினான்,
அந்த மில்நலத்(து)
ஆசிகள் கூறினான். சஅஅ

3. ஆசிவார்த்தைகள் எல்லாம் சொல்லிவிட்டு, பரதனைப் பார்த்து, 'ஏன் அப்பா உனக்குக்கொடுத்த ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணாமல் இந்தக் கோலத்தோடு இங்கே வருகிறாய்?' என்று முனிவர் கேட்கிறார்.

' எடுத்த மாமுடி
சூடி, நின் பால்இயைந்(து)
அடுத்த பேர்அர(சு)
ஆண்டிலை ஐய, நீ

2. அம்மைந்தனும் - பரதனும். இந்துமௌலி அன்னானும் : சந்திரனைச் சூடிய சிவபிரானையொத்த முனிவர். இரங்கினான் - பரதனைப் பார்த்து வருந்தினார். அந்தமில் நலத்து ஆசிகள் கூறினான் - முடிவில்லாத நன்மையைத் தரக்கூடிய ஆசிமொழிகளைச் சொன்னார்.

3. எடுத்த மாமுடி - அழகாய் உயர்ந்துள்ள முடி. நின்பால் இயைந்து அடுத்த பேர் அரசு - நீ விரும்பவில்லை, ஆனால் தாய் தந்தையர் விருப்பத்தின்படி உன்னிடம் வந்த ராஜ்யத்தை.

முடித்த வார்சடை
யோடும்மு னிவர்தூ(சு)
உடுத்து நண்ணுதற்(கு)
உற்றுள(து) யா(து)?' என்றான். ௪அ௯

4. ஏன் ராஜ்யத்தை ஆளவில்லை, உடம்பை ஏன் பாதுகாக்கவில்லை, என்று மிக்க பரிவுடன் முனிவர் கேட்டார். அவ்வளவுதான், பரதனுக்கு, இல்லாத கோபம் வந்துவிட்டது.

சினக்கொ டுந்திறல்ச்
சீற்றவெம் தீயினான்,
மனக்க டுப்பினன்,
மாதவத்(து) ஓங்கலை,
'எனக்(கு)அ டுத்த(து)
இயம்பிலை நீ' எனா ;-
'உனக்(கு)அ டுத்ததும்
அன்(று),உர வோய்!' என்றான். ௪௯

---

3. முடித்த வார்சடையோடும்-தலையெல்லாம் சடை விழுந்த வண்ணமாய். முனிவர் தூசு - சாமானிய முனிவர் உடுத்தும் மரவுரி. உற்றுளது யாது - என்ன நேர்ந்து விட்டது.

4. சினம் - உள்ளத்தில் கோபம். கொடும் திறல் சீற்ற வெம் தீயினான் - எந்தக் கொடுமையும் செய்யக் கூடியதான திறம்படைத்த கோபத் தீ முகத்தில் வெளியாக. மனக் கடுப்பினன் : என்னடா, இந்த ரிஷி கூட அக்கிரமக்காரராக இருக்கிறாரே என்ற எரிச்சலோடு கூடிய பரதன். மாதவத்து ஓங்கலை - தவக்குன்றை ; முனிவரைப் பார்த்து. எனா - என்று. உரவோய் - அறிவில் சிறந்தவனே. குறிப்பு : பரதனுடைய மனசில்

5. மனசிலுண்டான ஆங்காரத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, முனிவரிடம் தன்னுடைய உறுதி யான எண்ணத்தைச் சொல்லுகிறான்.

மறையின் கேள்வற்கு
மன் இளந் தோன்றல்,பின்,
'முறையின் நீங்கி
முதுநிலம் கொள்கிலேன்:
இறைவன் காக்கில -
னும்எனில், - ஆண்(டு)எலாம்
உறைவென் கானத்(து)
ஒருங்குட னே'என்றான். சகக

6. துறவிகளிலெல்லாம் துறவி பரதன் என் பதை அங்குள்ள முனிவர்கள் எல்லோரும் கண்டு கொண்டார்கள் ; அதிசயித்தார்கள். அவர்களுடைய

---

உண்டான கோபம் அபூர்வமாய் செய்யுளில் உருவம் பெற்றிருக்கிறது. 'நீர் சொன்னது எனக்கு ஒவ்வாதது. அது போகட்டும், ரிஷியாகிய உமக்கு ரொம்பவும் அடுக்காத காரியம்' என்பதில் கோப பாவம் அருமை யாய் வந்திருக்கிறது.

5. மறையின் கேள்வற்கு : முனிவருக்கு. மன் இளந் தோன்றல் : பரதன். இறைவன் காக்கிலனும் எனில் - ராமன் வந்து ராஜ்யத்தைப் பாதுகாக்காவிட்டால். ஆண்டு எலாம் - வருஷ வருஷமாகத்தானே. குறிப்பு : இந்தச் செய்யுளில் பரதன் மனசிலுள்ள உறுதிப்பாடு அழுத்த மாக ஒலிக்கிறது. எதுகையின் அழுத்த பாவத்தைப் பார்க்கவேண்டும்.

உள்ளத்தில் ஆனந்தக்கடல் ஒன்று பொங்கி அலை அடிக்க ஆரம்பித்துவிட்டது.

உரைத்த வாசகம்
கேட்டலும், உள்ளெழுந்(து)
இரைத்த காதல்
இரும்தவத் தோர்க்(கு)எலாம்,
குரைத்த மேனியொ(டு)
உள்ளம் குளிர்ந்ததால், -
அரைத்த சாந்துகொண்(டு)
அப்பிய(து) என்னவே. சகூஉ

7. மேலே குறித்த ஆனந்தத்தோடு, முனிவர் பரதனைத் தம்முடைய பர்ணசாலைக்குக் கூட்டிக் கொண்டு போனார்.

ஆய காதலோ(டு)
ஐயனைக் கொண்டு,தன்
தூய சாலை
உறைவிடம் துன்னினான் :

---

6. உள் எழுந்து இரைத்த காதல் இரும் தவர் - உள்ளத்தில் பொங்கிவந்த ஆனந்தத்தின் வசத்தரான தவ சிரேஷ்டர். குரைத்த மேனியொடு உள்ளம் குளிர்ந்ததால் - விரதங்களினால் வறண்டு திரைத்துப்போன மேனியும் உள்ளமுமே குளிர்ந்துவிட்டன. ஏதோ நன்றாய்ப் பன்னீர்விட்டு அரைத்த குளிர்ந்த சந்தனத்தை, மேனியில் மாத்திரம் அல்ல, உள்ளத்திலும் அப்படியே அப்பிய மாதிரி. குறிப்பு : அப்பியதென்னவே : இதிலுள்ள ஓசை, எதிர்பாராத தன்மையைக் காட்டுகிறது.

7. ஆய காதலோடு - மேலே சொன்ன ஆனந்தத்தோடு. ஐயனை - பரதனை. உறைவிடம் துன்னினான் - இருப்பிடத்தை அடைந்தான்.

'மேய சேனைக்(கு)
அமைப்பென் விருந்(து).' எனத்,
தீயின் ஆவுதிச்
செங்கையன் சிந்தித்தான். ௪௬௩

8. பரத்துவாஜ முனிவர் விருந்து அமைக்கவேண்டும் என்று நினைத்தார். அவ்வளவுதான், சுவர்க்கமே மேலேயிருந்து இறங்கி அங்குவந்து தங்கிவிட்டது.

துறந்த செல்வன்
நினையத், துறக்கந்தான்
பறந்து வந்து
படிந்தது : வந்தவர்
பிறந்து வேறூர்
உலகுபெற் றூர்என,
மறந்து வைகினர்
முன்னைத்தம் வாழ்(வு)எலாம். ௪௬௪

9. பரதனையும் அவனது பரிவாரம், படைகள் எல்லாவற்றையும் பரத்துவாஜமுனிவர் ஆசிரமத்தில்

---

7. மேய சேனைக்கு - வந்த பெரும் படைக்கெல்லாமே. அமைப்பென் விருந்து என - விருந்து செய்வேன் என்று. தீயின் ஆகுதிச் செங்கையன் - சதா ஓமகுண்டத்தில் நெய்யைச் சொரிந்து கொண்டிருக்கும் சாதனத்தில் இருப்பவர்.

8. துறந்த செல்வன் - யாதொரு செல்வமுமில்லாத பரத்துவாஜ முனிவர். நினைய - நினைத்தமாத்திரத்தில். துறக்கந்தான் - சுவர்க்கலோகமே. முன்னைத் தம் வாழ்வெலாம் மறந்து வைகினர் - தங்களுக்கு ஏற்பட்ட சாமான்ய வாழ்க்கையை மறந்தவராய் அங்குள்ள காரியங்களை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

தங்கச் செய்துவிட்டு, சித்திரகூட பர்வதத்திற்குப் போகிறோம் நாம்.

அங்கே ராமன், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் சௌகரியமாக வசித்துவருகிறார்கள். ஒருநாள், லக்ஷ்மணன், தான் கட்டிய பர்ணசாலையின் முற்றத்தில் உட்கார்ந்துகொண்டு, வடக்குமுகமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். இப்படிப் பார்த்துக்கொண்டிருந்தவன் பரபரப்போடு பக்கத்திலிருந்த குன்றின் கூர்மையான உச்சியின்மேல் ஏறி நின்றான். அதிலிருந்து எதைப் பார்த்தான்?

சந்தம்

தானன தானன
தான தன்னன

எழுந்தனன் இளையவன்,
ஏறி னான் நிலம்
கொழுந்துவிட் டனையதோர்
நெடிய குன்றின்மேல்,-
செழுந்திரைப் பரவையைச்
சிறுமை பேசிய
கழுந்துடை வரிசிலைக்
கடலை நோக்கினான். சகரு

---

9. இளையவன் - லக்ஷ்மணன். நிலம் கொழுந்து விட்டு அனையதோர் நெடிய குன்றின்மேல் : குன்றின் கூர்மையான உச்சியானது ஏதோ பூமியே அக்கினிச் சுவாலைபோல் ஒரு இடத்தில் கிளம்பிக் கொழுந்துவிட்டு அப்படியே உறைந்துபோன மாதிரி இருந்தது. செழுந் திரைப் பரவையைச் சிறுமை பேசிய கழுந்துடை வரி

10. சேனையோடு பரதன் வருவதைப் பார்த்தானோ இல்லையோ, குன்றின் உச்சியிலிருந்து முற்றத்தில் குதித்தான். கோபவெறியில் நிலத்தை அப்படியும் இப்படியுமாக மிதித்தான். ஒரே ஓட்டமாக ராமனிடம் சென்றான்.

குதித்தனன் பாரிடைக்,
குவடு நீ(று)எழ
மிதித்தனன், இராமனை
விரைவின் எய்தினான் ;
'மதித்திலன் பரதன்நின்
மேல்வந் தான், மதில்ப்
பதிப்பெருஞ் சேனையின்
பரப்பி னான் 'என்றான். ௪௧௬

11. பரதன் படையெடுத்து வருகிறான் என்று சொல்லிக்கொண்டே யுத்த சன்னத்தனாகிறான்.

---

சிலைக்கடல்: வில்லாலாகிய கடல் ஒன்று தூரத்தில் வந்துகொண்டிருந்தது. வைரம் ஏறிய தண்டோடு கூடிய வில்லுகளைக் கையிலேந்திய அந்தச் சேனை சமுத்திரம் கடலையே இகழ்ந்து பேசுவது மாதிரி யிருந்தது. கழுந்துடை - வைரம் பாய்ந்த வில்லின் தண்டு. வரி சிலை - தண்டு நெரியாதபடி நரம்பினால் கட்டப்பட்ட வில்.

10. பாரிடை - முற்றத்தில். குவடு நீறு எழ - பக்கத்திலிருந்த பாறைகளிலெல்லாம் தூசு கிளம்பும்படி. மதில்ப் பதி - அயோத்தியின். சேனையின் பரப்பினான் - பரந்த சேனையை உடையவனாகிய பரதன். குறிப்பு : செய்யுளின் உருவத்தில், அதாவது ஓசையிலேயே, லக்ஷ்மணனது கால்மிதி கேட்கிறது.

கட்டினன் சுரிகையும்
கழலும், பல்கணைப்
புட்டிலும் பொறுத்தனன்,
கவசம் பூட்(டு)அமைத்(து) -
இட்டனன், எடுத்தனன்
வரிவில், ஏந்தலைத்
தொட்(டு)அடி வணங்கிநின்(று)
இனைய சொல்லினன். ௪௬௭

12. கோபாவேசத்தோடு லக்ஷ்மணன் சொல்லு கிருன்.

'இருமையும் இழந்தஅப்
பரதன் ஏந்துதோள்ப்
பருமையும், மன்னவன்
படைத்த சேனையின்
பெருமையும், நின்ெனாடு
பின்பு வந்தஎன்
ஒருமையும், கண்(டு)இனி
உவத்தி உள்ளம்நீ.' ௪௬௮

---

11. சுரிகை - வாள். பல்கணைப் புட்டிலும் - எண்ணிறந்த அம்புகளை வைத்துள்ள அம்பறுத்தூணி. பூட்டு அமைத்திட்டனன் - கவசத்தை மாட்டிக்கொண்டான். ஏந்தலைத் தொட்டு அடிவணங்கி - ராமனை அடி தொட்டு வணங்கி.

12. இருமையும் இழந்த : இந்த உலகத்திலேயும் நல்லபேரில்லை ; மறுமையிலும் நல்லபேர் கிடையாதவனை. ஏந்துதோள் பருமையும் - உயர்ந்த தோளின் பருமன் இன்னதுதான் என்றும். என் ஒருமையும் - நான் தன்னந்தனியாக இருந்தாலும், ஒருவனாகிய எனக்கு அந்தப் பரந்த சேனை ஈடாகாது என்பதையும்.

13. லக்ஷ்மணன் மேலும் பேசுகிறான் : நமக்கும் மற்றும் பலருக்கும் எத்தனையோ துன்பங்கள் ஏற்பட்டு விட்டன. அந்தத் துன்பங்கள் எப்படி அழியப் போகின்றன என்பதை இதோ பார், அண்ணா ரத்த ஆறுகள் எத்தனையோ பாய்கின்றன பார்.

'படர்எலாம் அழிபடப், -
பருமயானையின்
திடர்எலாம் உருட்டின,
தேரும் ஈர்த்தன,
குடர்எலாம் திரைத்தன,
குருதி ஆறுகள்,
கடர்எலாம் மடுப்பன
பலவும் காண்டியால்!' ௪௯௯

14. பெருகிய ரத்த வெள்ளத்தில் பெரிய பேய் களும் சிறிய பேய்களும் கூடித் தலையற்ற உடல்களும் குதித்துக் குதித்து ஆடுகின்றன.

---

13. படர்எலாம் அழிபட - துன்பமெல்லாம் ஒழிய. பருமயானையின் திடர் - முகபடாம் அணிந்த யானையின் உடல்கள் தீவு தீவாகத்தானே. தேரும் ஈர்த்தன - தேர் களையும் இழுத்துக்கொண்டு. குடரெலாம் திரைத்தன : இறந்தொழிந்த குதிரைப் படைகள் ; இவைகளின் குடல் களைத் திரைத்து உருட்டிக்கொண்டு. கடர்எலாம் மடுப் பன - கடல் எங்கும் போய்ப் பாய்வதை.

'நிவந்தவான் குருதியின்
நீத்தம் நீந்தி,மெய்
சிவந்தசா தகரொடு
சிறுகண் கூளியும்
கவந்தமும், உலகம்நின்
கைய(து) ஆய(து)!என்(று)
உவந்தன குளிப்பன
காண்டி, உம்பர்போல்.' ௫00

15. கைகேசி என்ற ஒருத்திமேல் இல்லாத ஆசை உண்டாகி, தசரதன் சொல்லி, பரதன் இந்த உலகை ஆளுகிறான். தசரதன் சொன்னபடி கேட்டவன், நான் சொல்லுகிறபடியும் கேட்கப்போகிறான் பார்.

'ஒருமகள் காதலின்
உலகை நோய்செய்த
பெருமகன் ஏவலில்,
பரதன் தான்பெறும்

---

14. நிவந்த வான் குருதியின் நீத்தம் - உயர்ந்து பெருகிவரும் ரத்தப் பெருக்கு. சாதகர்-பெரும்பேய்கள். கூளி - குள்ளப் பேய்கள். கவந்தம் - தலையற்ற உடல். உலகம் நின் கையது ஆயது என்று உவந்தன - ராஜ்யம் உன் கைக்கே வந்துவிட்டது என்ற சந்தோஷத்தினால். உம்பர்போல்-சந்தோஷத்தினால் தேவர்களும் குதிக்கிறார்கள்; அவர்களைப்போலவே.

15. ஒருமகள் - தனிப்பட்ட கைகேசி. உலகை நோய் செய்த பெருமகன் - உலகத்திலுள்ளவர்களுக்கு என்றுமில்லாத துன்பத்தைச் செய்த அந்த மகான் தசரதனது.

இருநிலம் ஆள்கைவிட்(டு),-
இன்(று),என் ஏவலால்

அருநர(கு) ஆள்வது
காண்டி, ஆழியாய்!' ௫0௧

16. கடைசியாக, மனம்பொறுக்காமல் ஒரே ஆங்கார மயமாய்ச் சொல்லுகிறான் லக்ஷ்மணன்: ராஜ்யத்தைத் துறந்து காட்டை அடையும்படி உனக்கு ஏற்பட்டுவிட்டதே என்று உன்னைப் பெற்ற தாய் கோசலை எவ்வளவோ வருந்தினாள். உனக்கு ஞாபகமிருக்கிறதல்லவா?

'வையகம் துறந்துவந்(து),
அடவி வைகுதல்

எய்திய(து) உனக்(கு)என,
நின்னை ஈன்றவள்

நைதல்கண்(டு), - உவந்தவள்
நவையில் ஓங்கிய

கைகயன் மகள்,விழுந்(து)
அரற்றக் காண்டியால்.' ௫0௨

---

15. இருநிலம் - விசாலமான இந்த ராஜ்யத்தை.

16. வையகம் - ராஜ்யம். அடவி வைகுதல்: காட்டில் வசிக்கும் அவசியம். நைதல் கண்டு - வருந்துவதைப் பார்த்து. உவந்தவள் - சந்தோஷப்பட்டவளான. நவையின் ஓங்கிய கைகயன் மகள் - அக்கிரமத்தில் யாரும் சமானமில்லை என்று சொல்லும்படியான அந்தக் கைகேசி.

17. கடுங் கோபத்தினால், பரதனைக் கொல்லு வேன், அதுகாரணமாகக் கைகேசி விழுந்து விழுந்து அரற்றப் போகிறாள், என்று லக்ஷ்மணன் சொன்னான். ராமனுக்கு இந்த வார்த்தைகளைச் சகிக்கமுடியவில்லை. ஆனாலும்,லக்ஷ்மணனுடைய கோபத்தை எப்படி ஆற்று வது என்று தெரியவில்லை. கொஞ்சம் யோசனை செய்து, பக்குவமாகப் பேச ஆரம்பிக்கிறான் : தம்பி லக்ஷ்மணா, உன்னுடைய வீரம் இன்னது என்று எனக்குத் தெரியாதா! பதினாலு உலகங்களையுமே இதோ கலக்குவேன், என்று நீ எண்ணிவிட்டால், யார்தான் உன்னைத் தடுக்கமுடியும் ? ஆனாலும் :

‘ இலக்குவ ! உலகம்ஓர்
ஏழும் ஏழும்,நீ

கலக்குவை என்பது
கருதி னால்,அது

விலக்குவ(து) அரி(து),அது
விளம்பல் வேண்டுமோ ?

புலக்குரித்(து) ஒருபொருள்
புகலக் கேட்டியால்.’ ருoங

18. ராமன் சொல்லுகிறான் : நம்முடைய முன் னோர்கள் எல்லோரும் எந்த விதமான குற்றமும்

---

17. புலக்குரித்து ஒரு பொருள் - யோசனைக்கு உரியதான ஒரு விஷயத்தை. புகலக் கேட்டியால் - நான் சொல்லுகிறேன் கேள்.

இல்லாதவர்கள். அவர்களுடைய தொகையை எண்ணிப் பார்த்தால் முடிவே கிடையாது.

' நம்குலத்(து) உதித்தவர்
நவையின் நீங்கினர்

எங்குலப்(பு) உறுவர்கள் ;—
எண்ணில், யாவரே

தம்குலத்(து) ஒருவரும்
தருமம் நீங்கினர் ?

பொங்(கு)உலத் திரளொடும்
பொருத தோளினாய் ! ' ருoச

19. ஏதோ வேதங்கள் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அவை அரிய நீதிகளை எடுத்துச் சொல்லுகின்றன என்று சொல்லுவார்கள். அந்த வேதங்களையெல்லாம் படிக்கவேண்டியது அவசியம்அல்ல. பரதன் செய்கையைப் பார்த்தால் போதும். அவன் செய்கைக்கு முரண்பட்டன வேதம் சொல்லக்கூடியவைகளல்ல.

---

18. நவையில் நீங்கினர் - குற்றங்களை விட்டு நீங்கிப் புனிதமாயுள்ளவர். எங்கு உலப்பு உறுவர்கள் - அவர்கள் தொகை எங்கே முடிந்து நிற்கும். எண்ணில் - யோசனை பண்ணினால். ஒருவரும் தருமம் - நீங்கமுடியாத தரும நெறியைவிட்டு. பொங்கு உலத் திரளொடும் - உள்ளிருந்து தடித்துவரும் தூணோடு ; உலத்திரள் - உலக்கையின் திரட்சி. பொருத தோளினாய் - போட்டிபோடும் தோளையுடையவனே.

'எனைத்துள மறைஅவை
இயம்பல் பாலன :

பனைத்திரள் கரக்கரிப்
பரதன் செய்கையே

அனைத்திறம் : அல்லன
அல்ல ; அன்னது

நினைத்திலை, என்வயின்
ஏய நெஞ்சினால்.' ௫௦௫

20. அப்பேர்ப்பட்ட உயர்ந்த செயலுள்ள பரதனை நீ இப்படி மாறாக நினைக்கலாமா ?

'சேண்உயர் தருமத்தின்
தேவைச், செம்மையின்

ஆணியை, அன்னது
நினைக்க லாகுமோ ?

---

19. எனைத்துள மறை அவை - என்ன என்ன வேத நூல்களுண்டோ அவைகளையெல்லாம். பனைத்திரள் கரக்கரி-பனைபோல் திரண்ட துதிக்கையையுடைய யானையை ஒத்த. பரதன் செய்கையே அனைத்திறம் - பரதன் செயல்களே அந்த மறைகள் கூறத்தக்கன. அல்லன அல்ல - பரதன் செயல்களுக்கு முரண்பட்டவை மறை கூறத் தக்கன அல்ல. அன்னது - இந்த விஷயத்தை. என்வயின் ஏய நெஞ்சினால் - என்னோடு சதா ஒட்டியுள்ள இதயப் பான்மையால்.

20. சேண் உயர் - மிக்க உயர்ந்த லட்சியமான. செம்மையின் ஆணியை - நீதிக்கு அச்சாயிருப்பவனை.

பூணியல் மொய்ம்பினாய் !
போந்த(து) ஈண்(டு)எனைக்
காணிய, நீ இது
பின்னும் காண்டியால்.' ருoசு

21. நான் சொல்லுகிற உண்மையை நீ காணப் போகிறாய் என்று, லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்லி விட்டு, ராமன் அப்படியே நின்றான்.

என்றனன் இளவலை
நோக்கி ஏந்தலும்
நின்றனன், - பரதனும்,
நிமிர்ந்த சேனையைப்
'பின்தரு(க)' என்று,தன்
பிரிவில்க் காதலில்,
தன்துணைத் தம்பியும்
தானும் முந்தினான். ருoஎ

22. பரதனும் சத்துருக்கனும் ராமனை நோக்கி வருகிறார்கள். பரதன் என்ன விதமாய் வருகிறான், பாருங்கள்.

---

20. பூணியல் மொய்ம்பினாய் - தோள்வளை அணிந்த வலிமை மிக்கோய். போந்தது ஈண்டு - பரதன் இங்கே வந்தது. எனைக் காணிய - என்னைக் காணும்பொருட்டே.

21. ஏந்தலும் நின்றனன் - ராமனும் நின்றான். நிமிர்ந்த சேனையைப் பின்தருக என்று - பெருத்த சேனையைப் பின்னாலே நிற்கட்டும் என்று சொல்லிவிட்டு. தன் பிரிவில்க் காதலில் - ராமனைவிட்டுப் பிரிந்த காரணத்தினால் ஏற்பட்ட ஏக்கத்தோடு. தன்துணைத் தம்பியும் - சத்துருக்கனும்.

தொழு(து)உயர் கையினன்,
துவண்ட மேனியன்,
அழு(து) அழி கண்ணினன்,
அவலம் ஈ(து)என
எழுதிய படிவம் ஒத்(து)
எய்து வான்தனை,
முழு(து)உணர் சிந்தையான்
முடிய நோக்கினான். ரு0அ

23. துயரத்தின் உருவமாய் வந்துகொண்டிருந்த பரதனை, ராமன் லக்ஷ்மணனுக்குக் காட்டுகிறான்.

கார்ப்பொரு மேனிஅக்
கண்ணன் காட்டினான் :
' ஆர்ப்புறு வரிசிலை
இளைய ஐய ! நீ,
தேர்ப்பெரும் தானையால்
பரதன் சீறிய
போர்ப்பெரும் கோலத்தைப்
பொருந்த நோக்(கு)' என. ரு0௬

22. அவலம் ஈது என எழுதிய படிவம் ஒத்து-துயரத்தை ஒரு ஓவிய ரூபமாகச் செய்ததுபோல். முழுதுணர் சிந்தையான்-பரதனது கருத்தையும் துயரையும் நன்றாய் அறிந்த ராமன். முடிய நோக்கினான் - நன்றாய் உற்றுப் பார்த்துக்கொண்டான்.

23. கார்ப்பொரு மேனி அக்கண்ணன் - நீலமேக மேனியனான ராமன். ஆர்ப்புறு வரிசிலை - கோபாவேசத்தில் நாணைத்தொடுத்து நாதம் செய்துகொண்டிருக்கிறான் லக்ஷ்மணன். குறிப்பு : போர்க்கோலத்தோடு வருகிற பரதனை நன்றாய்ப் பார் அப்பா ! என்று சொல்லுகிறதில் சோகம், அன்பு, ஹாஸ்யம் எல்லாம் கலந்த அருமையான பாவம். மனசை இது உருக்காமல் இருக்கமுடியாது.

24. லக்ஷ்மணன் பார்த்தானோ இல்லையோ, அவ்வளவுதான் : 'அடடா, என்ன பாதகம் செய்துவிட்டேன். இப்படி அன்புருவமாய் வருகிற பரதனை எப்படி எல்லாமோ திட்டிவிட்டேனே' என்கிற வருத்தம் இதயத்தைக் குத்துகிறது. முகத்திலிருந்த வீரப் பிரகாசம் எல்லாம் மழுங்கிவிட்டது. அப்படியே நின்றுவிட்டான்.

எல்ஒடுங் கியமுகத்(து)
இளவல் நின்றனன் :

மல்ஒடுங் கியபுயத்(து)
அவனை வை(து)எழும்

சொல்லொடும், சினத்தொடும்,
உணர்வு சோர்தர, -

வில்லொடும் கண்ணநீர்
நிலத்து வீழவே. ருகO

24. எல் - பிரகாசம். இளவல் - லக்ஷ்மணன். மல்ஒடுங்கிய புயத்து அவனை : மல்யுத்தம் எல்லாம் பயின்று பருத்திருந்த பரதனது தோள்கள் துயரத்தாலும் பட்டினியாலும் மெலிந்து ஒடுங்கியிருக்கின்றன. மெலிந்துள்ள தன்மையைப் பார்த்த மாத்திரத்தில், வைதசொல் போன இடம் தெரியவில்லை. அப்படியே கோபம் போன இடமும் தெரியவில்லை. உணர்ச்சியும் போய்விட்டது. உணர்ச்சி போகவும், கையிலுள்ள வில்லும் தானாகக் கைநழுவிப் பூமியில் விழுந்துவிட்டது. கண்ணீரும் உடன் விழுந்தது. குறிப்பு : லக்ஷ்மணன் மனநிலையையும் உடல் நிலையையும் செய்யுள் உருவம் அபூர்வமாகக் காட்டுகிறது.

25. எவ்வளவோ தவம் செய்தாள் பூமாதேவி. ராமனை நாதனாகவும் அனேகமாய்ப் பெற்றுவிட்டாள்; ஆயினும், நாதனைவிட்டுப் பிரிந்திருக்க நேர்ந்து கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறாள்.

கோ(து)அறத் தவம்செய்து
குறிப்பின் எய்திய

நாதனைப் பிரிந்தனள்,
நலத்தின் நீங்கினாள்,

வேதனைத் திருமகள்
மெலிகின் றாள்,விடு

தூ(து)எனப், - பரதனும்
தொழுது தோன்றினான். ருகக

26. இப்படி மெலிந்துவந்த பரதன், ராமனைப் பார்த்து அலறுகிறான்:

---

25. குறிப்பின் எய்திய: கண்ணுக்கே எதிர்ப்பட்டு விட்டான்; பட்டாபிஷேகம் அடுத்த நாழிகையில் நடக்க இருந்ததல்லவா? நாதனைப் பிரிந்து - ஆளுதற்கு உரிய ராமனை நீங்கி. நலத்தின் நீங்கினாள்: அழகெல்லாம் இழந்து; அதாவது, ஜனங்கள் துன்பத்துக்கு உள்ளாகி. வேதனைத் திருமகள் - வேதனைப்பட்டிருக்கும் பூமாதேவி. மெலிகின்றாள்: தானும் தனக்குவேண்டிய எல்லோருமே, தூதுமே, மெலிந்துபோய்விட்டார்கள். பரதன் மெலிவுற்றிருப்பதற்குக் காரணம் அப்படிக் கற்பிக்கத் தோன்றுகிறது.

'அறந்தனை நினைந்திலை,
அருளை நீத்தனை,
துறந்தனை முறைமையை!'
என்னும் சொல்லினன்,
மறந்தனன், மலரடி
வந்து வீழ்ந்தனன், -
இறந்தனன் தாதையை
எதிர்கண் டென்னவே. ருகஉ

27. உணர்ச்சி மேலீட்டினால், மூர்ச்சைபோன நிலையில் பரதன் ராமனது பாதத்தில்க் கிடக்கிறான். ராமன் அப்படியே நிற்கிறான்.

உண்டுகொல் உயிர், என
ஒடுங்கி னான் உருக்
கண்டனன், நின்றனன்
கண்ணன்; - கண் எனும்

26. துறந்தனை முறைமையை - கடமையை விட்டு விட்டாய். என்னும் சொல்லினன் - என்று சொல்லிக் கொண்டே. மறந்தனன் - உணர்ச்சி யற்றவனாய். ராமனைக் கண்டது, இறந்துபோன தந்தையைக் கண்டது போலவே பட்டது பரதனுக்கு; அவ்வளவு அன்புதான், அவ்வளவு ஆறுதல்தான், அவ்வளவு துயரமுந்தான். இறந்தனன் தாதையை - இறந்துபோன தாதையை.

27. ஒடுங்கினான் உரு - மெலிந்து போனவனை பரதனது மேனியை. கண்ணன் - ராமன்.

புண்டரீ கம்பொழி
புனல்,அ வன்சடா
மண்டிலம் நிறைந்துபோய்
வழிந்து சிந்தவே. ருகஙு

28. ராமன் அறிவு தளர்ந்து, பெருமூச்செறிந்த வண்ணமாய் நின்றுகொண்டிருக்கிறான். கண்ணீர் மார்பின்மேல் விழுந்து தயங்குகிறது; அந்த மார்பில் அணைத்துக்கொள்ளுகிறான் பரதனை.

அயாஉயிர்த்(து) அழுகணீர்
அருவி மார்பிடை
உயாஉறத், திருவுளம்
உருகப் புல்லினான்; -
நியாயம்அத் தனைக்கும்ஓர்
நிலையம் ஆம்அதை,
தயாமுதல் அறம்அது
தழுவிற்(று) என்னவே. ருகச

29. பரதனைத் தழுவிக்கொண்டே, அவனது தவக்கோலத்தை மறுபடியும் மறுபடியும் பார்த்த

27. புண்டரீகம் - தாமரை. சடா மண்டிலம் - சுற்றிக் கட்டிய சடை.

28. அயா உயிர்த்து - அயர்ந்துபோய்ப் பெருமூச்சு விட்டு. உயா உற - வந்து சோர்ந்து நிற்க. திருஉளம் உருகப் புல்லினான்: மார்போடு அணைக்கும்போது ராமனுக்கு உணர்ச்சி அற்றுவிட்டது. நிலையமாம் அதை - இருப்பிடமான அதிதேவதையை (பரதனை). தயாமுதல் அறம் அது - கருணையில் விளைந்த தர்ம தேவதையானது (ராமன்).

வண்ணமாய் நிற்கிறான் ராமன். என்னவெல்லாமோ எண்ணுகிறான். பிறகு, தளர்ச்சியெல்லாம் ஒருவாறு நீங்கி, பரதனை பார்த்துக் கேட்கிறான் :

புல்லினன், நின்றவன்
புனைந்த வேடத்தைப்
பல்முறை நோக்கினான்,
பலவும் உன்னினான்,
'அல்லலின் அழுங்கினை,
ஐய! வாளுடை
மல்உயர் தோளினான்
வலியனோ?' என்றான். ௫௧௫

30. தந்தை சௌக்கியந்தானே என்று ஆசையோடு கேட்கிறான் ராமன்; பரதன் பதில்ச் சொல்லுகிறான் :

அரியவன் உரைசெயப்,
பரதன், 'ஐய! நின்
பிரிவெனும் பிணியினால்,
என்னைப் பெற்றஅக்

29. புல்லினன் நின்றனன்-புல்லிக்கொண்டு நின்ற ராமன். பலவும் உன்னினான் - பல காரியங்களை எண்ணிக்கொண்டே இருந்தான். அல்லலின் அழுங்கினை : துயரத்தில், அடடா, எவ்வளவு வாடிவிட்டாய்! வாளுடை மல் உயர் தோளினான் : வாள் ஏந்திய கையும் மல்யுத்தப் பயிற்சியால் பருத்த தோள்களையும் நம் தந்தையிடம் பார்த்துக்கொண்டே இருக்கலாமே, தந்தை சௌக்கியந் தானே (வலியனோ) என்றான்.

30. அரியவன் - அற்புதமான உள்ளம் படைத்த ராமன்.

கரியவள் வரம்என னும்
காலனால், தனக்(கு)
உரியமெய் நிறுவிப்போய், -
உம்ப ரான் 'என்றான். ருகசு

31. தந்தை உயிர்துறந்தான் என்ற செய்தி காதில் விழுந்ததும், ராமனுக்குக் கண்ணும் மனமும் அப்படியே கலங்கிவிட்டன.

விண்ணிடை அடைந்தனன்
என்ற வெய்யசொல்
புண் இடை அயில்எனச்
செவிபு காமுனம்,
கண்ணொடு மனம், சுழல்
கறங்கு போலவாய்,
மண்ணிடை விழுந்தனன்,
வானின் உம்பரான். ருகஎ

---

30. கரியவள் - கேடான கைகேசி. தனககு உரிய மெய் நிறுவி : சத்தியம் ஒன்றே தனக்கு லட்சியமான பொருள் என்று நினைத்து அதை உலகத்தில் நிலைநிற்கச் செய்துவிட்டு. உம்பரான் - வானுலகத்தவன் ஆய்விட்டான்.

31. புண் இடை அயில் என - புண்ணில் வேலை இட்டுக் குத்தினால் போல. சுழல் கறங்கு - சுற்றுகின்ற காற்றாடி. வானின் உம்பரான் -வானவர் தங்கும் உயர்ந்த நிலைக்கும் உயர்ந்த நிலையில் உள்ளவன் ; யோக சாதனத்தால் மிக்க உயர்ந்த பதவி அடைந்தவன் ராமன் ; ஆயினும் துயரம் வந்து அவனை மண்ணில் தள்ளி விட்டது !

32. கீழே விழுந்தான். சுவாசம் நின்றுவிட்டது. உணர்ச்சியோ இல்லவே இல்லை.

இருநிலம் சேர்ந்தனன்,
இறைஉ யிர்த்திலன்,

உரும்எறி அர(வு)என
உணர்வு நீங்கினுன் ;-

அருமையின் உயிர்வர,
அயாஉ யிர்த்(து),அகம்

பொருமினன் பன்முறை ;-
புலம்பி னுன்அரோ. ருகஅ

33. ராமன் புலம்புகிறுன்: நாட்டுக்கு எத்தனையோ கஷ்டங்கள், போரினுலும் இதர காரணங்களாலும் ஏற்படலாம். ஜனங்கள் இருளுக்குள்

---

32. இறை உயிர்த்திலன்-சிறிதும் சுவாசம் இல்லை. உரும் எறி அரவு என - இடி விழுந்த சர்ப்பம் போல. அருமையின் உயிர்வர : பக்கத்தில் நின்றவர்கள் எவ்வளவோ ஆறுதலான காரியங்களைச் செய்து அதன்பேரில் பிரக்ஞை வர ஆரம்பித்தது. அயா உயிர்த்து - மிக்க ஆயாசத்துடன் பெருமூச்செறிந்து. அகம் பொருமினன்- நெஞ்சு விம்மிக்கொண்டிருந்தது. இப்படி நெடுநேரம் விம்மிக்கொண்டிருந்தான், கடைசியாகப் புலம்ப ஆரம்பித்தான். குறிப்பு: கீழே விழுந்ததிலிருந்து புலம்ப ஆரம்பிக்கும் வரை எவ்வளவோ நேரம் ஆகிவிட்டது என்பது தயங்கித் தயங்கி நடக்கும் செய்யுளின் உருவமே காட்டுகிறது. ஆங்காங்கு நிறுத்திப் பாடவேண்டும் செய்யுளை.

இருந்தவாறுகத் திண்டாடலாம். ஆனால் உன் ஆட்சியினால் அவர்களுக்கு யாதொரு கஷ்டமும் இல்லாமல் அல்லவா இருந்தது!

சந்தம்

தானன தன்னன
தன்னன தன்னன

நந்தாவி ளக்கனைய
நாயகனே, நானிலத்தோர்

தந்தாய்,த னியறத்தின்
தாயே,த யாநிலையே!

எந்தாய்,இ கல்வேந்தர்
ஏறே,இ றந்தனையே! -

அந்தோ!இ னிவாய்மைக்(கு)
ஆருளரே மற்(று)'என்றான். ருகக

33. நந்தா - என்றும் குறையாத ஒளி உடைய; அதாவது, என்றும் குறையாத பாதுகாப்புள்ள. தந்தாய்- தந்தையே. தயாநிலையே - கருணைக்கு நிலையமான கடலே. எந்தாய் - எந்தையே. இகல் வேந்தர் ஏறே - போரில்வல்ல அரசர்களில் சிறந்த வீரனே. ஏறே - சிங்கமே. இறந்தனையே-இறந்தனையோ; உனக்குச் சாவு என்பதும் உண்டா? கிடையாதே. அப்படியிருந்தும் இறந்துவிட்டாயே. ஆருளரே - ஆர் உண்டு? குறிப்பு: குடிகளுக்குத் தந்தை என்று சொல்லுகிறான்; தனக்கு என்ன என்று சொல்லுகிறது? எந்தையே! என்னப்பா என்று சொல்லும்போது, சோகம் அதிகரித்துவிடுகிறது. இது விசேஷ பாவம்.

34. உலகமெல்லாம் பாராட்டி வந்த கலைக் கோட்டு முனிவரது அருளை அரிதாகப் பெற்று, அவரைக்கொண்டு அரிய யாகம் நடத்தி, கடைசியில் இதெல்லாம் காரணமாக என்னைப் பெற்ருய். பெற்ற தன் பயனை என்ன என்று சொல்ல !

'சொல்பெற்ற நோன்பின்
துறையோன்அ ருள்வேண்டி
நல்பெற்ற வேள்வி,
நவைநீங்க நீஇயற்றி
எற்பெற்று நீபெற்ற(து)
இன்னுயிர்போய் நீங்கலோ !
கொல்பெற்ற வெற்றிக்
கொலைபெற்ற கூர்வேலோய் !' ருஉ0

35. நான் ஏதோ காட்டுக்குத்தானே போனேன். அது என்ன, அவ்வளவு துக்கத்தை உண்டாக்கக் கூடியதா ? அல்ல.

---

34. சொல்பெற்ற-பாராட்டப்பெற்ற. நோன்பின் துறையோன்-அரிய தவஒழுக்கத்தில் நின்ற கலைக்கோட்டு மாமுனிவர். நல்பெற்ற வேள்வி - நலத்தை, அதாவது பயனைத் தரக்கூடிய யாகம். நவை நீங்க - மிக்க சிரத்தை யோடு யாதொரு குறையுமில்லாமல். இயற்றி - யாகம் செய்து அதன் காரணமாக. என் பெற்று - என்னைப் பெற்று. நீ பெற்றது - உனக்குக் கிடைத்த காரியம். கொல்பெற்ற - கொல்லனுடைய வேலை அழகாய் அமைந்த. வெற்றிக் கொலை பெற்ற : பகைவர்களைக் கொன்று அதன் காரணமாக வெற்றியானது வேலில் நின்று பிரகாசிக்கிறது ; வேலின் பிரகாசம், வெற்றியை அப்படி நினைவூட்டுகிறது.

' தேன்அடைந்த சோலைத்
திருநாடு கைவிட்டுக்
கான்அடைந்தேன் என்னத் -
தரியாது, காவல ! நீ
வான்அடைந்தாய் ! இன்னம்
இருந்தேன்நான் வாழ்வுகந்தே ; -
ஊன்அடைந்த தெவ்வர்
உயிர்அடைந்த ஒள்வேலோய் !' ௩௨க

36. அடடா, நீ மாத்திரமா போய்விட்டாய்? என்னவெல்லாமோ உன்னுடன் போய்விட்டதே!

' வண்மைஇயும், மானமும்,மேல்
வானவர்க்கும் பேர்க்கிலாத்
திண்மைஇயும், செங்கோல்
நெறியும்,தி றம்பாத

35. தேன் அடைந்த சோலை - வண்டுகள் ரீங்காரம் செய்யும் பூஞ்சோலைகளுடைய. தரியாது - சகிக்க முடியாமல். காவல - சக்கரவர்த்தியே. வான் அடைந்தாய் - உயிர் துறந்தாய். ஆனால் நானோ, இன்னும் உயிரோடிருக்கிறேன். வாழ்வு உகந்தேன் : வாழ்க்கையில் எனக்கு அவ்வளவு ஆசை. ஊன் அடைந்த தெவ்வர் - தேக பலம் நிறைந்த பகைவர்களது. உயிர் அடைந்த : உயிரை மாத்திரம் வாங்கிய ; உடலை அப்படியே விட்டுவிட்டது என்பது கருத்து. ஒள் வேலோய் - ஒளி வீசும் வேலை ஏந்தியவனே.

36. வண்மையும் - ஈகைத் தன்மையும். மேல் வானவர்க்கும் பேர்க்கிலாத் திண்மையும் - அபார சக்தியுள்ள தேவர்களாலும் தடுக்கமுடியாத வீரம்.

உண்மைஇயும், எல்லாம்
உடனேகொண்(டு) ஏகினையே! -
தண்மைத கைமதிக்கும்
ஈந்தத னிக்குடையோய்!' ருஉஉ

37. இப்படியெல்லாம் புலம்பிக் கொண்டு, ராமன் கீழே விழுந்து புரளுகிறான்.

என்றெடுத்துப் பற்பலவும்
பன்னி,இ டர்உழக்கும்
குன்றெடுத்த ஒக்கும்
குவவுத்தோள்க் கோளரியை,
வன்தடக்கைத் தம்பியரும்
மற்றுள்ள மன்னவரும்
சென்(று)எடுத்துத் தாங்கினர்,
மாவதிட்டன் தேற்றினன். ருஉ௩

---

36. உடனே கொண்டு - உன்னுடன் கொண்டு. தண்மை தகை மதிக்கும் ஈந்த தனிக் குடையோய்: சந்திரன் ரொம்பவும் இதம் செய்கிறது. ஆனால், அந்த இதமெல்லாம் உன்னுடைய குடையிலிருந்து வந்தது தானே? குடையின் இதம் என்றால், ஆட்சியினால் குடிகளுக்கு ஏற்படுகிற சௌகரியம்.

37. பன்னி - புலம்பி. குன்று எடுத்த ஒக்கும் குவவுத்தோள் - குன்று எடுத்து வைத்ததை ஒத்த பெரிய தோள்களையுடைய. இடர் உழக்கும் கோளரியை - துயரத்தால் கஷ்டப்பட்ட சிம்மத்தை. சென்று எடுத்துத் தாங்கினர்: எல்லோருமாகப் போய், கீழே விழுந்து விடாமல் ராமனைத் தாங்கிக்கொண்டார்கள். வசிஷ்ட முனியும், ராமனைப் பார்த்து ஆறுதல் வார்த்தை

38. ராமனைப் பலரும் தாங்கி உட்கார்த்துகிறார்கள்; வசிஷ்டர் அவனைப் பார்த்துப் பேசுகிறார் : ஏதோ மக்களாய்ப் பிறந்துவிட்ட நமக்குத் துணை என்று கருத இரண்டே விஷயங்கள்தான் இருக்கின்றன. நமக்கு வேண்டியவர்களிடத்தில் பற்றில்லாத வண்ணமாய் நடந்துகொள்ளவேண்டும்; இதுதான் துறத்தல் என்பது. இரண்டாவது : நல்ல நெறியில் நின்று எல்லோருக்கும் நன்மை புரியவேண்டும். இவைகளைத் தவிர்த்து வேறு துணை இல்லை. இறத்தல் என்பது இயற்கையோடு ஒட்டிய சாமான்ய காரியம். பிறத்தல் எப்படிச் சாமான்யமாய் இயற்கையோடு ஒட்டியதோ, அப்படித் தான் இறத்தலும்.

சந்தம்

தானன தானன
தான தன்னன

துறத்தலும் நல்லறத்
துறையும் அல்லது,
புறத்தொரு துணையிலை,
பொருந்து மன்னுயிர்க்(கு); -
இறத்தலும், பிறத்தல்போல்,
இயற்கை என்பதை
மறத்தியோ! மறைகளின்
வரம்பு கண்டநீ!' ௫௨௯

---

சொல்லுகிறார். குறிப்பு : 'போர் வீரரது கண்ணீர்த் துளிகளைப் பார்க்கும்வரை துயரத்தைப்பற்றிப் பேசவேண்டாம்' என்று ஒரு மேல்நாட்டு ஆசிரியமாது சொன்ன உண்மை இங்கே நோக்கத்தக்கது.

38. மறைகளின் வரம்பு - அரிய தத்துவ நூல்களின் முடிவை யெல்லாம். குறிப்பு : 'நீ' என்று

39. உயிருள்ளனவாய்ப் பிறக்கும் பிராணிகள் எத்தனை எத்தனையோ - அந்தத் தோற்றங்களுக்கு அடிப்படையான ஆதாரம் ஒன்றுமில்லை. அவை வெறும் தோற்றங்கள்தான். பரம்பொருளின் மனசில் எழும் தோற்றங்கள்தான். இந்தப் பொக்கான தோற்றங்கள், யாதொரு காரணமுமின்றி, இன்பம் என்றும் துன்பம் என்றும் சொல்லுகிற உணர்ச்சிகளுக்கு உள்ளாகி உழன்றுகொண்டிருக்கின்றன. இந்தப் பொம்மலாட்டத்தையெல்லாம் சதா பார்த்துக் கொண்டிருப்பதனால், கூற்றுவனுடைய மனம் இரக்கம் என்பது சற்றும் இல்லாமல் வறண்டுபோய்விட்டது. இத்தகைய கூற்றுவனிடத்தில் தாட்சண்யம் ஒன்று இருப்பதாகக் கருதலாமா ? கருதவே கூடாது.

'உண்மைஇல் பிறவிகள்
உலப்பில் கோடிகள்,

தண்மையில் வெம்மையில்த்
தழுவிப் போந்துழல்

---

கடைசியில் நிற்பது, 'நான் எதிர்பார்த்ததற்கு மாருக அல்லவா உன்னிடம் இந்தச் சோர்வைக் காண்கிறேன்' என்ற பாவத்தை அருமையாய்க் காட்டுகிறது.

39. உண்மை இல் பிறவிகள் : பிறந்த உயிர்களின் தோற்றம் உண்மையல்லாத போலித் தோற்றங்கள் தான். உலப்பில் கோடிகள் - எண்ணிறந்த கோடிகள். தண்மையில் வெம்மையில் - இன்பம் என்ற நினைவிலும், துன்பம் என்ற நினைவிலும். தழுவிப் போந்து உழல் வண்மையை-ஒட்டி ஒட்டிச் சங்கடங்களுக்கு உள்ளாகிற அளவற்ற காட்சிகளை.

வண்மையை நோக்கிய,
வறிய கூற்றின்பால்க்
கண்மையும் உள(து)எனக்
கருத லாகுமோ?' ருஉரு

40. மேலும் சொல்லுகிறார் வசிஷ்டர்: பிறப்பதற்கு முன்பே, கருவிலேயே எத்தனையோ உயிர்கள் இறந்துபோவதை நாம் காணத்தானே செய்கிறோம். இது உனக்குத் தெரிந்த காரியம்தானே?

'பெறுவதன் முன்உயிர்
பிரிதல் காண்டியால்;
மறுவறு கற்பினில்
வையம் யாவையும்
அறுபதி னாயிரம்
ஆண்டும், ஆண்டவன்
இறுவது கண்(டு)அவற்(கு)
இரங்கல் வேண்டுமோ?' ருஉசு

---

39. நோக்கிய - உயிர்கள் தோறும் நின்றுநின்று சதா பார்த்துக் கொண்டிருக்கின்ற. வறிய கூற்றின் பால் - இரக்கம் என்பது இல்லாமல் வறண்டுபோன இதயத்தைக் கொண்ட எமனிடத்தில். கண்மையும் - தாட்சண்யம் என்னும் ஒரு காரியம்; கண்மை - கண்ணோட்டம்.

40. பெறுவதன்முன் - தாயின் கர்ப்பத்தைவிட்டுப் பிறப்பதற்குமுன். மறுவறு கற்பினில் வையம் யாவையும் ஆண்டவன்: தந்தை உலகத்தையெல்லாம் காத்தான்.

41. நீ ரொம்ப வருத்தப்பட வேண்டாம். உன் தந்தை பிறந்தான், வளர்ந்தான், எத்தனையோ வருஷங்கள் புகழ்பெற அரசாண்டான்; எல்லாம் இப்போது முடிந்தது. இது அவனுடைய பாக்கியமல்லவா? இதைவிட மேலான கதி உண்டா?

'ஐய! நீ யாதொன்றும்
அவலிப் பாய்அலை;
உய்திறம் அவற்(கு)இனி
இதனின் ஊங்குண்டோ?
செய்வன வரன்முறை
திருத்திச், சேந்தநின்
கையினால் ஒழுக்குதி
கடன்எ லாம் 'என்றான். ருஉஎ

---

எப்படி: பெண்கள் கற்பைக் காத்தமாதிரி. அறுபதினாயிர வருஷம் அரசாண்டவன் இறந்தான் என்றால், அவனுக்காக வருந்துவது பொருத்தமா? அவற்கு - அவனுக்கு.

41. அவலிப்பாய் அலை - மனசைத் துன்புறுத்திக் கொள்ளவேண்டாம். உய்திறம் - ஜன்மம் ஈடேறும்வகை. இதனின் ஊங்கு உண்டோ - இதைப்போல் சிறந்தது உண்டோ. செய்வன வரன்முறை திருத்தி - செய்ய வேண்டிய அபரக் கிரியைகளைச் சிரத்தையோடு செய்து. சேந்த நின் கையினால் - அழகிய உன் கையினால். ஒழுக்குதி கடன் எல்லாம் - நீர்க்கடன் எல்லாம் செய்ய வேண்டும்.

42. அபரக் கிரியைகளைச் செய்யவேண்டும் என்று வசிஷ்டர் சொன்னவுடன், ராமன் ஆற்றுக்குள் இறங்கினான். குளித்துவிட்டுக் கரை ஏறினதும், வசிஷ்டர் நடத்தியபடி மூன்று தடவை நீர்க்கடன் தந்தைக்கு வார்த்தான்.

புக்கனன் புனலினில்,
முழுகிப் போந்தனன்,
தக்கநன் மறையவன்
சடங்கு காட்டத்,தான்
முக்கையின் நீர்விதி
முறையின் ஈந்தனன், -
ஒக்கநின்(று) உயிர்தொறும்
உணர்வு நல்குவான். ருஉஅ

43. நீர்க்கடன்களையும் மற்றக் கிரியைகளையும் முடித்துக்கொண்டு, ராமன், பலரும் தன்னைச் சுற்றி

---

42. புக்கனன் புனலில் - ஆற்றுக்குள் போனான். முழுகிப் போந்தனன் - முழுகிவிட்டுக் கரை ஏறினான். தக்கவன் மறையவன் - கிரியைகளை நன்கு தெரிந்த வசிஷ்டர். முக்கையின் நீர் - மூன்றுதரம் கையினால் நீர்க்கடனை. ஈந்தனன்: தந்தையின் ஆன்மப் பிரீதிக்காக. ஒக்கநின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான் : ராமன் ; ஜீவப்பிராணிகளுக்குள்ளே உயிர்த் தத்துவமோ, உணர்ச்சிதத்துவமோ எல்லாவற்றையும் கொடுக்கிறவன் கடவுள்தான் ; அந்தக் கடவுளின் அவதாரமான ராமன் தந்தைக்குமே, நீர்க்கடன் மூலமாகப் புத்துயிர் கொடுக்கிறான் என்பது பொருள்.

வர், ஆற்றங் கரையிலிருந்து மலைச்சரிவில் ஏறித் தன் ஆசிரமத்தை அடைந்தான்.

ஆனவன் பிறவுள
யாவும் ஆற்றிப்,பின்
மானமந் திரத்தவர்
மன்னர் மாதவர்
ஏனையர் பிறர்களும்
சுற்ற ஏகினன், -
சானகி இருந்தஅச்
சாலை எய்தினான். ருஉகூ

44. தனியாய் எதிர்வந்த ஆசிரமத்தை நெருங்கவும், பரதன் அங்கிருந்துவந்த சீதையைப் பார்த்தான். அவள் தங்கியிருந்த குடிசையையும் நோக்கினான். அவ்வளவுதான் :

எய்திய வேலையில்,
தமியள் எய்திய
தையலை நோக்கினன்,
சாலை நோக்கினன்,

---

43. ஆனவன் - அந்த ராமன். மான மந்திரத்து அவர் - உயர்ந்த பதவியிலுள்ள மந்திரிமார்கள்.

44. எய்திய வேலையில் - ராமனும் மற்றவர்களும் ஆசிரமத்தை அடைந்த சமயத்தில். தமியள் எய்திய தையலை - தன்னந் தனியளாய்க் குடிசையிலிருந்து எதிர் வந்த சீதையை.

கைகளில்க் கண்மலர்
புடைத்துக், கால்மிசை
ஐயன்அப் பரதன்வீழ்ந்(து)
அரற்றி னன்அரோ. ருஉ0

45. சீதையின் கால்களில் விழுந்து அரற்றிய பரதனை, ராமன் கைகளால் தூக்கி நிறுத்தினன். பிறகு, அவளைப் பார்த்து, தந்தை இறந்துபோன விஷயத்தைச் சொல்லுகிறான்.

அந்நெடும் துயர்உறும்
அரிய வீரனைத்
தன்நெடும் தடக்கையால்
இராமன் தாங்கினன் ;
நல்நெடும் கூந்தலை
நோக்கி, - ' நாயகன்
என்நெடும் பிரிவினில்
இறந்திட் டான்' என்றான். ருஉக

---

44. கைகளில் கண்மலர் புடைத்து - கைகளினால் கண்ணில் மோதிக்கொண்டு. கால்மிசை - சீதையின் பாதத்தில். ஐயன் - மகானான அந்தப் பரதன்.

45. வீரனை - பரதனை. நல்நெடும் கூந்தலை - சீதையை. நாயகன் - சக்கரவர்த்தியாகிய தந்தை. என் நெடும் பிரிவினில் - என்னை விட்டு நெடுங்காலம் பிரிந்திருக்கவேண்டுமே என்ற காரணத்தினால்.

46. அந்தத் துயரச் செய்தியைக் கேட்டவுடன் சீதை நடுங்கிவிட்டாள். இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகிக் கீழே ஓடிற்று. அப்படியே நிலத்தில் விழுந்து கையை ஊன்றிக்கொண்டாள்.

> துண்எனும் நெஞ்சினள்
> துளங்கி னள், துணைக்
>
> கண்எனும் நெடுங்கடல்
> கலுழி கான்றிட,
>
> மண்எனும் செவிலிமேல்
> வைத்த கையினள்,
>
> பண்எனும் கிளவியால்
> பன்னி ஏங்கினள். ருகஉ

47. கணவன்பின் செல்லக் கிடைத்த காரணத்தால், நடந்துவந்த காடு எல்லாம் அயோத்தியாகவே இருந்தது சீதைக்கு ; யாதொரு வருத்தமும் ஏற்படவில்லை. ஆனால் :

---

46. துண் எனும் நெஞ்சினள் - திடுக்கிட்ட நெஞ்சினள். துளங்கினள் - நடுங்கினள். துணைக்கண் எனும் நெடுங்கடல் - கடல் போன்ற இரண்டு பெரிய கண்களும். கலுழி கான்றிட - கலங்கிய கண்ணீரைக் கொட்ட. மண் எனும் செவிலிமேல் - தன்னை வளர்த்த செவிலித் தாய் என்று சொல்லும்படியான பூமியின்மேல். வைத்த கையினள் - கையை வைத்துத் தாங்கிக்கொண்டவளாய். பண் எனும் கிளவியால் - சங்கீதமே என்று சொல்லக் கூடிய அவ்வளவு இனிமையான துயர வார்த்தைகளால். பன்னி ஏங்கினள் - புலம்பி அழுதாள்.

கல்நகு திரள்புயக்
 கணவன் பின்செல,
நல்நகர் ஒத்தது
 நடந்த கானமும் ;
மன்னவன் துஞ்சினன்
 என்ற மாற்றத்தால்,
அன்னமும் துயர்க்கடல்
 அடிவைத் தாள்அரோ. ருகூகூ

48. அப்படிப் புலம்பி நைந்துகொண்டிருந்த சீதையை, அங்குள்ள முனிவர்களின் மனைவியர் வந்து தாங்கி, ஆற்றுக்கு அழைத்துப்போய்க் குளிக்கச் செய்தார்கள்.

ஆயவள் தன்னைநேர்ந்(து)
 அங்கை ஏந்தினர்,
தாயரின் முனிவர்தம்
 தருமப் பன்னியர் ;
தூயநீர் ஆட்டினர்,
 துயரம் நீக்கினர்,
நாயகற் சேர்த்தினர்
 நடுக்கம் நீங்கவே. ருகூச

---

47. கல்நகு திரள் புயம் - கல்லை ஏளனம் செய்யும் படியான திரண்ட புயம். மன்னவன் - தசரதன். அன்னமும் - சீதையும்.

48. ஆயவள் தன்னை நேர்ந்து - சீதையிடம் வந்து. அங்கை ஏந்தினர்-கைகளினால் தாங்கி. தாயரின்-பெற்ற தாயாரைப்போல. பன்னியர் - மனைவியர். நாயகற் சேர்த்தினர்-ராமனிடம் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். நடுக்கம் நீங்கவே : ஒருவகையாய் அழுகிற காரியம் நீங்கினாலும், நடுக்கம் நீங்கவில்லை ; அது நீங்க.

49. அந்தச் சமயத்தில் சுமந்திரன் வருகிறான். கோசலை, சுமித்திரை, கைகேசி ஆகிய மூன்று தாயரையும் முனிவர்குழாத்தையும் அழைத்துக்கொண்டு ராமனிடம் வருகிறான்.

தேன்தரும் தெரியல்அச்
செம்மல் நால்வரை
ஈன்றவர் மூவரோ(டு),
இருமை நோக்குறும்
சான்றவர் குழாத்தொடும்,
தருமம் நோக்குறும்
தோன்றல்பால்ச் சுமந்திரன்
தொழுது தோன்றினான். ருகரு

50. துயரம் ஒருவாறு அடங்கியிருந்த ராமனுக்கு, தாயரின் கோலத்தைக் கண்ட மாத்திரத்தில், இதயத்தை வெடித்துக்கொண்டு வந்துவிட்டது துயரம். துயர வெறிகொண்டு புலம்புகிறான்.

---

49. தேன் தரு தெரியல் - தேன் கசியும் மாலையைச் சூடிய. செம்மல் நால்வரை ஈன்றவர் மூவர் - ராமன் முதலான நாலு பிள்ளைகளையும் பெற்ற மூன்று தாய்மார். இருமை நோக்குறும் சான்றவர் : இகலோக வாழ்வில் மாத்திரம் கருத்து வைக்காமல், பரலோக வாழ்விலும் கருத்து வைத்த முனிவர். தருமம் நோக்குறும் தோன்றல் பால் - தருமத்தையே லட்சியமாகவுள்ள ராமன் முன்னிலையில். குறிப்பு : 'நால்வரை ஈன்றவர் மூவர்' என்றதனால், ஒவ்வொரு பிள்ளைக்கும், பெற்றெடுத்த தாய் ஒன்றல்ல, மூன்று பேர் என்னும் ஆர்வ பாவம் தொனிக்கிறது.

சந்தம்

தான தன்னன
தான தன்னன

' எந்தை யாண்டையான்
இயம்பு வீர் ! ' என்று
வந்த தாயர்தம்
வயங்கு சேவடிச்
சிந்தி நின்றனன்
சேந்த கண்ணநீர்,
முந்தை நான்முகத்(து)
அவற்கும் முந்தையான். ருஉ

51. தாயர்களும், ராமனைத் தழுவிக்கொண்டு, ஒரேபடியாய் அலற ஆரம்பித்தார்கள். இதைப் பார்த்துக் கொண்டிருந்த சேனை என்ன, பெண்கள் என்ன, அவர்களுக்குச் சகிக்கமுடியவில்லை.

---

50. எந்தை யாண்டையான் இயம்புவீர் : என் தந்தை எங்கே இருக்கிறான் சொல்லுங்கள் ; இது சோக வெறியின் சிகரத்திலிருந்து வந்தது. வயங்கு சேவடி - புனிதமாய் விளங்கும் திருவடிகளில். சேந்த கண்ணநீர் - அழுது சிவந்த கண்களிலிருந்து வடிந்த கண்ணீர். முந்தை நான்முகத்து அவற்கும் முந்தையான் : பிரமனுக்கும் சிருஷ்டி தத்துவத்துக்கும் முன்னுள்ள தத்துவமாகிய பரம்பொருளின் அம்சமாகிய ராமன் ; அதாவது, பர தத்துவத்தோடு ஒன்றியுள்ள ஞானி ராமன் என்பது கருத்து.

தாய ரும்தலைப்
பெய்து தாம்தழீஇ,

ஓய்வில் அன்பினால்
உரறல் ஓங்கினார்; -

ஆய சேனையும்
அணங்க னார்களும்

தீயில் வீழ்ந்துதீ
மெழுகில்த் தேம்பினார். ருடுஎ

52. பிறகு, அந்தத் தாய்மார் சீதையிடம் போனார்கள்.

பின்அவ் வீரரைப்
பெற்ற பெற்றிஅப்

பொன்ன னார்களும்,
சனகன் பூவையைத்

---

51. தலைப்பெய்து - ஒன்றாய் ராமன்மேல் விழுந்து. தழீஇ - தழுவிக் கொண்டு. ஓய்வில் அன்பினால் - ராமன் மேல் வைத்த அளவற்ற அன்பினால். உரறல் ஓங்கினார் - கேட்கச் சகிக்காதபடி அவ்வளவு உரத்த சத்தத்தில் அலறினார். ஆய - அங்கு பக்கத்திலிருந்த. அணங்கனார் களும் - பெண்களும். தீ மெழுகில் - தீய்ந்து கரிகின்ற மெழுகைப்போல்ச் சோர்ந்து. தேம்பினார் - ஏங்கினார்.

52. அவ்வீரரைப் பெற்ற பெற்றி - ராமன் முத லான நான்கு வீரரையும் பெற்றதனால் ஆய பெருமை வாய்ந்த. அப்பொன்னனார்கள் - அந்த தாய்மார்களும். சனகன் பூவையைத் துன்னி - சீதையை அடைந்து.

துன்னி, மார்புறத்
தொடர்ந்து புல்லினர், -
இன்னல் வேலைபுக்(கு)
இழிந்(து)அ ழுந்துவார். ருஉஅ

53. தாய்மார் அகன்ற பிறகு, சேனை வீரர், நகரத்துப் பிரதானிகள் எல்லோருமாக ராமனை வந்து பார்க்கிறார்கள்.

சேனை வீரரும்,
திருநன் மாநகர்
மான மாந்தரும்,
மற்று ளோர்களும்,
ஏனை வேந்தரும்,
பிறரும் யாவரும்
கோனை எய்தினர்,
குறையும் சிந்தையார். ருஉகூ

54. ராமனுடைய குலத்துக்கு ஆதிமூர்த்தி சூரியன் என்பது நமக்குத் தெரியும்.

---

52. தொடர்ந்து - மூன்று தாய்மார்களுடைய கைகளும் கோத்த வண்ணமாய். இன்னல் வேலை புக்கு- துயரமாகிய சமுத்திரத்தில் புகுந்து.

53. மான மாந்தரும் - உயர்ந்த பதவியிலுள்ளவர்களும். குறையும் சிந்தையார் - தளர்ந்த சிந்தையராய். கோனை எய்தினர் - ராமனை வந்து பார்த்தார்கள்.

படஞ்செய் நாகணைப்
பள்ளி நீங்கினான்

இடஞ்செய் தொல்குலத்(து)
இறைவன் ஆதலால்,

தடஞ்செய் தேரினான்
தானும், - நீரினால்க்

கடன்செய் வான்எனக்
கடலின் மூழ்கினான். ருசo

55. சூரியன் கடலில் மூழ்கியதோடு துக்க கோலமெல்லாம் ஒருவாறு நீங்கியது. இரவு கழிந்தது. மறு நாள் காரியாம்சமான பேச்சுக்கு எல்லோரும் தயாராகிறார்கள்.

---

54. படம்செய் நாகணைப் பள்ளி நீங்கினான் - ஆதி சேஷ சயனத்தை விட்டுவந்த விஷ்ணுமூர்த்தியான ராமனது. இடம்செய் தொல்குலத்து - நீண்ட பரம்பரையோடு கூடிய குலத்துக்கு. இறைவன் ஆதலால் - ஆதி மூர்த்தியான காரணத்தால். தடம்செய் தேரினான் - பெரிய தேரையுடைய சூரியன். நீரினால் கடன்செய்வான் என - நீர்க்கடன் செய்தான் என்று சொல்லும்படி. துக்க சமாசாரத்தைக் கேட்டவுடன், தாயாதிகள் எல்லாம் குளித்துவிடவேண்டும் என்பது மரபு. குறிப்பு : துக்கமும் அதனால் ஏற்படும் சஞ்சலமும் நீராடுவதால் நீங்கும் என்பது அனுபவம். நீராடி எல்லோருக்கும் சஞ்சலம் நீங்கியது என்பதை, சூரியன் கடலில் மூழ்கினான் என்ற நிகழ்ச்சி வலியுறுத்துகிறது.

அன்று தீர்ந்தபின்,
அரச வேலேயும்
துன்று செஞ்சடைத்
தவரும் சுற்றமும்
தன்து ணேத்திருத்
தம்பி மார்களும்
சென்று சூழ,ஆண்(டு)
இருந்த செம்மல்தான். ருசக

56. ராமன் பரதனேப் பார்த்துச் சொல்லுகிருன் : தந்தையோ காலஞ்சென்றுவிட்டான். அவனுடைய ஆணையால் ராஜ்யம் உன் பொறுப்பிலிருக்கிறது. இப்படி இருக்க :

‘வரதன் துஞ்சினுன் :
வையம் ஆணையால்
சரதம் நின்னதே ;
மகுடம் தாங்கலாய்,
விரத வேடம்நீ
என்கொல் வேண்டினுய் ?
பரத ! கூ(று)’எனுப்
பரிந்து கூறினுன். ருசஉ

---

55. அன்று தீர்ந்தபின் - அன்றையதினம் கழிந்த பிறகு ; அதாவது மறுநாள். அரச வேலே - அரசர்களுடைய பெருத்த குழாம். வேலே - சமுத்திரம். தவரும்-முனிவர்களும். செம்மல் - வீரனுன ராமன்.

56. வரதன் துஞ்சினுன் - அருளோடு கூடிய தந்தை இறந்துவிட்டான். வையம் ஆணையால் சரதம் நின்னதே - ராஜ்யம், தந்தையின் ஆணையால், உறுதியாக உன்னுடைய பொறுப்பிலிருக்கிறது.

57. ராமன் எவ்வளவோ பரிவுடன்தான் பரதனைப் பார்த்து, ஏன் இந்த வேண்டாத நோன்பும் வேடமும் என்று கேட்டான். பரதன் அப்படியே பதைத்து எழுந்தான்.

என்ற லும்பதைத்(து) -
எழுந்து கைதொழா
நின்று, தோன்றலை
நெடிது நோக்கி,'நீ
அன்றி யாவரே
அறத்து ளோர்? அதில்ப்
பின்று வாய்கொலாம்!'
என்னப் பேசுவான். ௫௪௩

58. என்னுடைய தந்தையாலும் எவ்வளவோ கேடு நேர்ந்துவிட்டது. என்னுடைய தாய் காரணமாகவும், எவ்வளவோ தீமை நேர்ந்துவிட்டது. இந்தத் தீமையெல்லாம் தீர்ந்து ஒழியவேண்டாமா?

'உந்தை தீமையும்,
உலகு றுதநோய்
தந்த தீவினைத்
தாய்செய் தீமையும்,

---

57. நீ அன்றி யாவரே அறத்துளார் - தர்மத்தில் உறுதியாய் நிற்பவர் உன்னை அன்றி யார் இருக்கிறார்கள். அதில் பின்றுவாய் கொலாம் - அதை விட்டு நீ விலகலாமா.

58. உலகு உறுத நோய் தந்த - உலகத்தாருக்கு இதுவரை ஏற்படாத துன்பத்தைச் செய்த. தீவினைத் தாய் - கைகேசி.

எந்தை! தீர,மீண்(டு)
அரசு செய்(க)!'எனச்

சிந்தை யாவதும்
தெரியக் கூறினன். ருசச

59. பரதன் சொன்ன வார்த்தையின் உறுதியைப் பார்த்தான் ராமன்: ஓகோ, இப்படியா இருக்கிறது இவன் மனம், என்று எண்ணுகிறான்.

சொற்ற வாசகத்
துணி(வு)உ ணர்ந்தபின்,

'இற்ற தோஇவன்
மனம்!' என்(று)எண் ணுவான்;

'வெற்றி வீர!யான்
விளம்பக் கேள்'என,

முற்ற நோக்கினன்
மொழிதல் மேயினன். ருசரு

60. பரதனைப் பார்த்து ராமன் ஒரு உறுதியான நீதியைச் சொல்லுகிறான்:

---

58. எந்தை - என் அப்பனே (ராமனே).

59. சொற்ற வாசகத் துணிவு - பரதன் சொன்ன வார்த்தையில் கிடந்த உறுதிப்பாட்டை. இற்றதோ இவன் மனம் - இந்த விதமாகவா இருக்கிறது. வெற்றி வீர - பரதனே. முற்ற நோக்கினன் - எல்லா விஷயங்களையும் கவனித்தவனாய். மொழிதல் மேயினன் - ராமன் சொல்லலுற்றான்.

' தனைய ராயினர்,
தந்தை தாயரை
வினையின் நல்லதோர்
இசைய வேய்தலோ ?
நினையல் ஓவிடா
நெடிய வன்பழிப்
புனைத லோ ? ஐய !
புகல்வை செய்கடன்.' ருசகூ

61. முடிவான வார்த்தையாக, ராமன் தன் அபிப்பிராயத்தைச் சொல்லுகிருன்.

' எந்தை ஏவ, ஆண்(டு)
ஏழொ(டு) ஏழ்என
வந்த காலம், நான்
வனத்துள் வைக, - நீ,

---

60. தனையராயினர் - புதல்வர் என்பவர்கள். வினையில் நல்லதோர் இசையை வேய்தலோ : தாய் தந்தையர் காரியங்களில் அவர்களுக்குப் புகழைச் சூட்டுகிறதோ. நெடிய வன் பழி புனைதலோ - நெடுங்காலம் நிற்கக் கூடியதான பழியைச் சூட்டுகிறதோ. நினையல் ஓவிடா - ஜனங்கள் என்றென்றும் சிந்தித்துக் கொண்டிருக்கும் படியாக. வேய்தல், புனைதல் - சூட்டுதல்.

61. எந்தை ஏவ - நம் தந்தை கட்டளையிட. ஆண்டு ஏழொடு ஏழு - பதினாலு வருஷம். என வந்த காலம் - என்று ஏற்பட்ட காலம்.

தந்த பாரகம்
　　தன்னை, மெய்ம்மையால்
அந்த நாள்எலாம்
　　ஆள்,என் ஆணையால்.' ருசஎ

62. பரதனும் ஒப்புக்கொண்டு சொல்லுகிறான்: பதினான்கு வருஷத்தில் நீ கட்டாயம் அயோத்தி வந்து அரசு புரியவேண்டும்.

சந்தம்

தானன தானன
　　தான தன்னன

'ஆமெனில் ஏழிரண்(டு)
　　ஆண்டில், ஐய! நீ,
நாமநீர் நெடுநகர்
　　நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை
　　என்னில், - கூர்எரிச்
சாம்அது சரதம்: நின்
　　ஆணை சாற்றினேன்.' ருசஅ

---

61. தந்த பாரகம் தன்னை - இதோ நான் தருகிற ராஜ்யத்தை. மெய்ம்மையால் ஆள் என் ஆணையால் - உண்மையாகவே என்னுடைய பிரதானியாக ஆள வேண்டும்.

62. நாமநீர் நெடுநகர் - நீர்வளம் பொருந்திய அயோத்தி; நாமம் - மிகுதி. நானிலம் - நாட்டை. கோமுறை புரிகிலை என்னில் - ராஜாங்க முறையில் அரசு புரியவில்லை என்றால். கூர் எரிச் சாம் அது சரதம் -

63. இப்படிச் சொல்லிய பரதனைப் பார்த்தான் ராமன் : அவனிடத்திலிருந்த துன்பம் நீங்கியது என்பதையும், அவனது உறுதியையும் கண்டுகொண்டான்.

என்பது சொல்லிய
பரதன், யாதும்ஓர்
துன்பிலன் அவனது
துணிவை நோக்கினன் :
அன்பினன் உருகினன்,
' அன்ன(து) ஆ(க) ' என்றான், -
தன்புகழ் தன்னினும்
பெரிய தன்மையான். ருசங

பெரிய அக்கினி வளர்த்து, அதில் நான் விழுந்து சாவது நிச்சயம். நின் ஆணை சாற்றினேன் - உன்னுடைய ஆணை இது என்று கருதியே சொல்லுகிறேன். குறிப்பு : ராமனது மனப்பாங்கைப் பரதனும் நன்றாய் உணருகிறான். ராமனது நிலையில், தான் இருக்க நேர்ந்திருந்தால், வனவாசத்தை விட்டுவிட்டு அயோத்திக்குத் திரும்பச் சம்மதிக்க மாட்டேன்தானே என்று எண்ணுகிறான். அதனாலேயே, ராமன் சொன்ன வார்த்தைக்கு இணங்குகிறான் பரதன்.

63. யாதும் ஓர் துன்பிலன் அவனது - துன்பமெல்லாம் நீங்கிய அந்தப் பரதனது. அன்பினன் - அன்புமயமானவன் ராமன். அன்னதாக என்றான் - பேச இயலாதவனாய், ' அப்படியே ஆகட்டும் ' என்று சொன்னான். தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான் : ராமனுடைய புகழ் எங்கும் பரவி நம்மால் கணிக்கக்கூடாததாய் இருக்கிறது ; அவனுடைய உண்மையான தன்மையோ, அதைவிடக் கணிக்கக்கூடாத விஷயம். குறிப்பு : ராமனது இதயம் உருகியது என்றால், அவன் தன்மை எவ்வளவு உயர்ந்தது ! இந்த வியப்பு பாவம், கடைசி அடியில் அருமையாய் அமைந்துவிட்டது.

64. ராமன் பதினாலு வருஷம் கழித்து வருவதாக ஒப்புக்கொண்டான் - பதினாலு வருஷம் என்று நினைத்த மாத்திரத்தில் பரதனுக்கு மறுபடியும் தாங்க முடியாத துயரம் வந்துவிட்டது.

விம்மினன் பரதனும்,
வேறு செய்வ(து)ஒன்(று)
இன்மையின் ; அரிதென
எண்ணி ஏங்குவான் ;
' செம்மையின் திருவடித்
தலம்தந்(து) ஈ(க)'என, -
எம்மையும் தருவன
இரண்டும் நல்கினான். ருரு0

---

64. விம்மினன் பரதனும் வேறு செய்வது ஒன்று இன்மையின் - போக்கு வேறு இல்லாமல், பரதன் மறுபடியும் துயரத்துக்குள்ளானான். அரிது என எண்ணி ஏங்குவான் : அடடா, இந்தப் பதினாலுவருஷக் கெடுவை ஒழிப்பதற்கு வழியில்லையே என்று ஏங்குகிறான். செம்மையின் திருவடித்தலம் தந்து ஈக என - ராமனைப் பார்த்து, உன்னுடைய அழகிய பாதுகைகளை எனக்கு அருள வேண்டும் என்று சொல்லுகிறான். எம்மையும் தருவன இரண்டும் நல்கினான் : மோட்ச பதவி மாத்திரமல்ல, அதற்கு மேலாக என்ன பதவியிருந்தாலும், அதையும் தரக்கூடிய தன் இரண்டு பாதுகைகளையும் ராமன் கொடுத்தான். குறிப்பு : ராமனது பாதுகை என்றால் கடவுளின் அருள்த்தத்துவம் ; அதாவது, எல்லாவற்றையும் இயக்கும் நியதி தத்துவம். இந்த நியதி தத்துவத்தை உணர்ந்துவிட்டால், ஆணவமானது இல்லாமல் கழன்று

65. இரண்டு பாதுகைகளையும் தலையில் ஏந்திக் கொண்டு, தரையில் விழுந்து ராமனை வணங்குகிறான் பரதன்.

அடித்தலம் இரண்டையும்,
அழுத கண்ணினன்,
முடித்தலம் இவைஎன
முறையில்ச் சூடினன்,
படித்தலத்(து) இறைஞ்சினன்,
பரிவில்ப் போயினன்; -
பொடித்தலம் இலங்குறு
பொலங்கொள் மேனியான். ருருக

---

போம். இறைவனது, அபேதமாய் எங்கும் நிறைந்த தத்துவத்தோடு கலந்து ஒரே ஆனந்தமாய் ஆகிவிடுகிறோம் என்ற கொள்கையைக் கடைசி அடி அருமையாய் விளக்குகிறது.

65. அடித்தலம் - பாதுகை. முடித்தலம் - கிரீடம். முறையில்ச் சூடினன் - நன்றாய் அமையக் கட்டிக் கொண்டான். படித்தலத்து - தரையில். இறைஞ்சினன் - விழுந்து வணங்கிவிட்டு. பரிவில் - மிக்க துயரோடு. பொடித்தலம் இலங்குறு பொடிகொள் மேனியான்: போகும்போது, பரதனது மேனியும், மேனியில் படிந்துள்ள தூசியும், அழகாய் விளங்கின; எல்லாம் இதயத்தின் பிரகாசந்தான்.

66. பரதனுக்குப் பின்பாக, தாய்மார், சுற்றத்தார், பெரியோர், முனிவர்கள் எல்லோருமே போகிறார்கள்.

ஈன்றவர் முதலிய
எண் இல் சுற்றமும்,
சான்றவர் குழுவொடும்,
தவத்து ளோர்களும்,
வான்தரு சேனையும்,
மற்றும் சுற்றுற,
மூன்றுநூல் கிடந்ததோள்
முனியும் போயினான். ருருஉ

67. ராஜாங்கம் சம்பந்தமான எல்லோரும்போய் விட்டார்கள். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த மற்றவர்கள், நம்மை ராமன் எப்படி இருக்கச்

---

66. ஈன்றவர் முதலிய - தாய்மார்களான. எண் இல் சுற்றமும் - எண் இறந்த பந்துக்களும். சான்றவர் - மதிக்கக் கூடிய பெரியோர். தவத்துளோர்கள் - முனிவர்களும். வான்தரு சேனையும் மற்றும் - விரிவான படையும் மற்றப் பரிவாரங்களும். முனியும் - வசிஷ்டரும். குறிப்பு : ஒரு படத்தைப் பார்க்கிறோம். தூரத்தில் கீழே, பாதுகையைச் சுமந்த வண்ணமாகப் பரதன் நடந்து போகக் காண்கிறோம். அடுத்தாற்போல் முனிவர்களும் சேனையும், நடந்து போகிறார்கள். கடைசியாக, வசிஷ்டருடைய முதுகையும், தோளையும், பூணூலையும் பார்க்கிறோம். இந்தக் காட்சியைச் செய்யுளின் உருவத்திலேயே பொறித்து வைத்திருக்கிறது : 'மூன்று நூல் கிடந்த தோள் முனியும் போயினான்.'

சம்மதிப்பான் என்று எண்ணிப் புறப்பட்டுவிடுகிறார்கள். பழமையான உயர்ந்த இலக்கியங்களைத் தெரிந்து, ராமனுடன் இருந்து அனுபவித்த புலவர் பலர். அவர்களுமே போய்விட்டார்கள். மற்ற அயோத்தி நகரத்து மக்களைப்பற்றிச் சொல்லவா வேண்டும் ? எல்லோரும் போய்விட்டார்கள். தேவர்கள் வானத்திலிருந்து வந்திருந்தால், ' நமக்கு ஏது இடம் ' என்று அவர்களும் போய்விட்டார்கள் என்றுதான் சொல்லவேண்டி வரும்.

பண்டைநூல் தெரிந்துணர்
 பலரும் போயினர்,

மண்டுநீர் நெடுநகர்
 மாந்தர் போயினர் ; -

விண்டுறை தேவரும்
 விலகிப் போயினர் ; -

கொண்டல்தன் ஆணையால்க்
 குகனும் போயினன். ருருஎ

---

67. பண்டை நூல் தெரிந்துணர் பலரும் : நல்ல புலவர் குழாம் என்றால் ராமனுக்கு அபாரப் பிரீதி ; காலத்தையெல்லாம் அவர்களுடனேயே போக்குவான் என்பது குறிப்பு. தேவர்களுமே தங்கமுடியாது என்று சொல்லுவதால், யாருக்குமே இடம் இல்லை என்பதுதான் பொருள். ஆனாலும், ஒருவன் மிஞ்சிநிற்கிறான் - நண்பன் என்னும் உறவுபற்றி. அவனையும், போய்விடு அப்பா, என்கிறான் ராமன்.

# அனுபந்தம் - 1. சீரும் சந்தமும்

கம்ப ராமாயணப் பாடல்கள் எல்லாம் நான்கு அடிகளால் ஆகிய செய்யுள்களே. ஒரு செய்யுளை எடுத்துக் கொள்ளுவோம்: நகரப் படலத்தின் முதல்ச் செய்யுள் (பக்கம் 13).

திங்களும் கரிதென
 வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத்
 தவள மாளிகை,
வெங்கடுங் கால்பொர
 மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடல்த்
 தரங்கம் போலுமே.

இந்தச் செய்யுள் நாலு அடிகளால் அமைந்திருக்கிறது.

திங்களும் கரிதென
 வெண்மை தீற்றிய :

இது முதல் அடி. இப்படியே - சங்கவெண், வெங் கடுங் - பொங்கிரும் - என்ற சப்தங்களோடு ஆரம்பிக்கின்றன மற்ற மூன்று அடிகளும். ஒவ்வொரு

அடியிலும் முதலில் ஒலிக்கும் சப்தங்களுக்கு, 'எதுகை' என்று பெயர்.

* * *

முதலடியில் நான்கு சீர்கள் இருக்கின்றன. 'திங்களும்' - முதல்ச் சீர்; 'கரிதென' - இரண்டாவது சீர்; 'வெண்மை' - மூன்றாவது சீர்; 'தீற்றிய' - நான்காவது சீர். முதலடியிலுள்ள சீர்களுக்கு இசைந்தே மற்ற மூன்று அடிகளிலுள்ள சீர்களும் ஒலிக்கும்.

* * *

இந்தச் செய்யுளின் அடிகள், சீர்களோடு எப்படி ஒலிக்கின்றன என்பதைக் காட்டுவதற்காக, சந்தத்தைத் தலைப்பில் எடுத்துக்காட்டியிருக்கிறது. முதல்ச் சீரை, 'தானன' என்று குறித்திருக்கிறது. இதில் 'தா' என்ற நெடில் ஒரு எழுத்தாய் நின்று நீண்டு ஒலிக்கலாம்; அல்லது 'தன' என்று இரண்டு எழுத்தாக நின்றும் ஒலிக்கலாம். ஒரு 'தா' அளவுக்குள் அந்தச் சீர் ஒலிக்கவேண்டியது என்பதுதான் விஷயம். 'தா'வும் 'தன'வும் ஒரு அளவுக்கு உட்பட்டன. தா = தன.

இனி, சந்தத்தை எடுத்துக் கொள்ளுவோம்.

தானன தானன
தான

என்பதற்குப் பதிலாக,

தனனன தனனன
தனன

என்றும் வரலாம். 'திங்களும்' என்ற சீரில் முதலில் 'தா' வந்திருக்கிறது. 'கரிதென' என்பதில் முதலில்

'தன' வந்திருக்கிறது. மூன்ருவது சீர் 'தான' என்றும் வரலாம், 'தனன' என்றும் வரலாம். செய்யுளில் 'வெண்மை' என்றும் 'தவள' என்றும் வந்திருக்கின்றன. நான்காவது சீர் மாறுதல் இல்லாமல் 'தன்னன' என்றே நாலு அடிகளிலும் வரும். சீரைப் பிரித்துப் பார்க்கும்போது இந்த அம்சங்கள் தெரியவருகின்றன. ஆனால், இவைகளை மனசில் வைத்துக்கொண்டிருப்பது அவசியமல்ல. சந்தத்தைக் கொஞ்சம் சாவகாசமாக நாலுதடவை பாடிவிட்டுச் செய்யுளைப் பாட ஆரம்பித்துவிட்டால், செய்யுளின் தாளம் தானுக வந்துவிடும். செய்யுளை இப்போது மறுபடியும் பாடிப் பார்க்கவேண்டும்.

* * *

மேலேயுள்ள சந்தத்தில் 'தா' என்பதும், 'தன' என்பதும் ஒன்று என்று சொன்னேம். வேறு சில சந்தங்களில், 'ன' என்ற குறிப்பு வரும். அந்த 'ன'வும் 'னன' என்பதும் ஒரே அளவு உள்ளன என்று கொள்ளவேண்டும். ன = னன.

ஆகவே, சந்தங்கள், அதாவது சீர்களின் அமைப்புச் சம்பந்தப்பட்ட மட்டில், இந்த வேறுபாடுகளை மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால், எந்தப் பாடலையும் வாசித்துவிடலாம். கஷ்டமே இராது.

இந்தச் செய்யுளைப் பாடுவதில் ஒன்றிரண்டு விஷயம் கவனித்துக் கொண்டால் நல்லது.

முதல் சீருக்கும் இரண்டாம் சீருக்குமிடையே கொஞ்சம் நிறுத்த வேண்டும். அப்படியே, மூன்ரும் சீருக்கும் நான்காம் சீருக்குமிடையே கொஞ்சம்

நிறுத்த வேண்டும். ஆனால், இரண்டாஞ் சீருக்குப் பிறகு முன்னிலும் அதிகமாக நிறுத்தி, மடக்கி, கீழே வைத்துள்ள மூன்றும் சீரைச் சாவகாசமாய்ப் பிடிக்க வேண்டும். இது ஒரு விஷயம்.

முதல்ச் சீரையும் மூன்றுஞ் சீரையும் பாட ஆரம்பிக்கும்போது, முதல் எழுத்துக்களுக்கு அதிக அழுத்தம் கொடுக்கவேண்டும்.

* * *

இனி வேறு சில சந்தங்களைப் பார்க்கலாம்.

பக்கம் 40, 'மாலும் அக்கணம்' என்ற ருரு-வது செய்யுள் : அது ரு0-வது செய்யுளுக்குக் கொடுத்த,

தான தன்னன
தன்னன தன்னன

என்ற சந்தத்தின்படி; முதல்சீர் மாத்திரம் 'தா' என்றாவது 'தன' என்றாவது ஆரம்பிக்கலாம். பொதுவாக எல்லா விருத்தங்களிலும், அடிகளுக்கு முதல்ச் சீர் 'தா' என்று ஆரம்பிக்கும். மற்றச் சீர்கள் எல்லாம் 'தன்னன தன்னன தன்னன' என்று ஒரே அளவு பட்டதா யிருக்கும்.

மாலும் அக்கணம்
வாளியைத் தொட்டதும்,
கோல விற்கால்
குனித்ததும், கண்டிலர் :

இந்த இரண்டு அடிகளில், முதல் அடி முழுதும் சந்தத்தை ஒட்டியே வந்துவிட்டது. ஆனால், இரண்டாவது

அடியில் இரண்டாவது சீர், 'தன்னன' என்பதற்குப் பதிலாக, 'தன்ன' என்றுதான் நிற்கிறது; ஏதோ எழுத்துக் குறைந்ததாகத் தோன்றலாம். அந்தக் குறைந்த எழுத்தை, அடுத்துவரும் சீரிலுள்ள 'கு' வந்து நிரப்பிக்கொள்ளுகிறது. பொருள் வசதிக்காகத் தான் 'கு'வை அந்த அடியின் மூன்றுவது சீரில் ஒட்டியிருக்கிறது. இரண்டாவது அடியை சவுக்கமாகப் பின்வருமாறு பாடினல், சந்தத்தோடு ஒட்டிவிடும்.

தான தன்னன
  தன்னன தன்னன

கோல விற்கால்கு -
  ணித்தநதும், கண்டிலர்.

இதுமாதிரியே, அளவுபட்ட சந்தங்களில், குறைவான எழுத்தை, அடுத்த சீரிலிருந்து சேர்த்துப் பாடிவிட்டால், தாளம் சரியாய்ப் போய்விடும்.

* * *

பக்கம் 20, பாட்டு ௨௬ :

தான னன தன்ன னன
  தன்ன னன தன் ன

வந்து முனி எய்து தனும்
  மார்பில் அணி ஆ ரம்
அந்த ரத லத்(து)இ ரவி
  அஞ்ச ஒளி விஞ் ச :

இந்தச் சந்தத்தை ரொம்பவும் சவுக்கம் கொடுத்துப் பாடவேண்டும். 'வந்து - முனி' என்று பாடி

விட்டு, 'எய்து - தலும்' என்று பாடவேண்டும். அப்படியே, 'மார்பில் - அணி' என்று இரண்டாகப் பிரித்துப் பாடவேண்டும். 'மார்பில் அணி' எவ்வளவு அளவுபட்டுப் பிரிந்து ஒலிக்கிறதோ அவ்வளவு அளவுபட்டுப் பிரிந்து ஒலிக்க வேண்டும், 'ஆ - ரம்' என்பதும்.

வந்து முனி
எய்து தலும்
மார்பில் அணி
ஆ ரம் :

இந்த முறையில் பாடினால் சந்தத்தோடு பொருந்தி விடும்.

இந்தச் செய்யுளில் நாலாவது அடியை,

இந்தி ரன்எ
னக்க டி(து)எ
ழுந்த டிப
ணிந் தான்.

ஒதுக்கிய எழுத்தை ('எழுந்தடி' என்பதிலுள்ள 'எ'யை) முந்தின சீரோடு சேர்த்துச் சந்தத்துக்கு இசையப் பாடவேண்டும்.

* * * *

பக்கம் 41, பாட்டு ருஎ :

தானன தானன தன்
தானன தானன தன்

சொல்ஒக்கும் கடியவேக கச்
சுடுசரம் ஒன்றைச்செம் மல் :

இந்தச் செய்யுளைப் பாடும்போது, 'சொல்லுக்கும்' என்றவுடன் நிறுத்திவிடவேண்டியது. நிறுத்தலுக்குப்பின்புதான், அடுத்த சீரைச் சாவகாசமாய்ச் சொல்லவேண்டும். அப்படிச் சொல்லும்போது, 'கடியவே' என்று சேர்ந்து ஒரு சீராக ஒலிக்கும். 'க' என்கிற எழுத்து, துண்டாய்த் தனித்துப் போய், முந்தின இரண்டு சீர்களோடு ஒரு அளவுபட்டு, மூன்றுவது சீராய் ஒலிக்கும்; தாளத்துக்கும் ஏற்றவாறாக ஒலிக்கும்.

தாளத்தில், 'உசி', அதாவது அழுத்தம், முதல்ச் சீர் ஆரம்பத்திலும், மூன்றுவது தனிச்சீரிலும் விழுகிறது. கோலாட்டங்களுக்கு இந்த வகையில்த் தாளங் கொடுக்கும்போது, வெகு நயமாய்க் கோலாட்டத்தின் ஜதியும் அடியும் விழப் பார்க்கலாம்.

* * * *

மேலே பார்த்த சந்தம்,

தானன தானன தன்
தானன தானன தன்

என்பது. இது போன்று வேறொரு சந்தம்; ஆறுல் அளவு பட்டது. கடைசி இரண்டு அடி:

பக்கம் 278, பாட்டு உ०உ:

தானன்ன தன்னன தன்
தன்னன தன்னன தன்

தீட்டாத வேற்கண்ச்சி று
தாய்என, யாவரா லும்
மூட்டாத காலக்க டைத்
தீயென மூண்டெழுந்தான்.

இது அளவுபட்ட சந்தமா யிருப்பதால், அதிக சவுக்கம் கொடுத்தே பாடவேண்டும். 'தீட்டாத' என்றதும் நிறுத்த வேண்டும். 'வேற்கண்ச் சிறு' என்பதை 'வேற்கண்ச்சி' என்று இரண்டாவது சீராகவும், 'று' என்பது மூன்ருவது, தனிச் சீராகவும் நின்று ஒலிக்கும்.

* * * *

பக்கம் 22, பாட்டு உகூ :

தானன தானன
தானன தானன
தானன தன்

என்அனைய முனிவரும்
இமையவரும் இடையூ(று)ஒன்(று)
உடையரானல் :

இந்த அடி ஆறு சீர்களால் ஆகியது. முதல் ஐந்தும் 'தானன' என்று வரும்; கடைசிச் சீர் 'தன்' என்று முடியும். பாடும்போது, இரண்டாவது சீருக்குப்பின், நிறுத்த வேண்டும். நாலாவது சீருக்குப் பின்னே, அதிகமாக நிறுத்த வேண்டும். அப்போது, ஐந்தாவது சீர் 'தானன' என்று நிற்கும். ஆருவது சீரும், பிரிந்து தனிச் சீராய் ஒலிக்கும்.

* * * *

ஆறு சீர் விருத்தம் இன்னென்றைப் பார்க்கலாம்.

பக்கம் 149, பாட்டு உஉ :

தான தன்னன
தானன தானன
தா தன்

இருந்த மந்திரக்
கிழவர(து) எண்ணமும்,
மகன் பால் :

இதில், முதல்ச் சீர், 'தான' என்றும், மூன்று நாலாஞ் சீர்கள் 'தானன' என்றும் வரும். இரண் டாஞ் சீர் 'தன்னன' என்றே வரும். ஐந்தாஞ் சீர் 'தா' என்றும், ஆறுவது சீர் துண்டாகப் பிரிந்து 'தன்' என்றும் ஒலிக்கும். இரண்டாவது சீர் 'தன்னன' என்று வருவதன் காரணம், அதில் அழுத்தம் விழுந்து, பின்வரும் நாலாவது, ஆறுவது சீர்கள் தாளத்தில் எப்படி விலகி நிற்கவேண்டும் என்பதைக் காட்டுவ தற்கே. 'மகன்பால்' என்று படிக்கக்கூடாது. 'மகன்-பால்' என்று தாளத்துக்கு இடங்கொடுத்துப் படிக்க வேண்டும்.

* * * *

பக்கம் 206, பாட்டு கoo :

தானன தன்னன தன் ன
தன்னன தன்

நாழிகை கங்குலின் நள் அ
டைந்தபின் றை,
யாழிசை அஞ்சிய அஞ் சொல்
ஏழைகோ யில் :

இந்தச் செய்யுளில் வரும் கதி, நாட்டியத்தைச் சேர்ந்தது என்பது தெளிவாக இருக்கிறது. முதல் இரண்டு சீர்களும், எவ்வளவு தாளம் இடைவிட்டு ஒலிக்குமோ, அவ்வளவு தாளம் இடைவிட்டு ஒலிக்க வேண்டும், மூன்ருவது நான்காவது சீர்களும், அவைக ளோடு ஐந்தாவது ஆருவது சீர்களும். இந்த விதமாக இரண்டாவது அடி:

யாழிசை அஞ்சிய
அஞ் சொல்
ஏழைகோ யில்

என்று ஒலிக்கும்.

* * *

இதை ஒட்டி, பக்கம் 218, பாட்டு கககூ :

தான தன்ன
தன்னன தன்ன
தனன தன்

கோல்மேல்க் கொண்டு
குற்றம்அ கற்றக்
குறிகொண் டால் :

சீர்கள் ஒன்று, மூன்று, ஐந்து - இவைகளை நீட்டி வைத்திருக்கிறது. அது காரணமாக, இரண்டு, நான்கு சீர்களில் தாளம் தயங்கி நிற்கும். தயங்கிநின்று, அடுத்துவரும் சீருக்கு, அழுத்தமும் பாவமும் கொடுத்து விடும்.

* * * *

பக்கம் 76, பாட்டு கரு :

தாஞன தாஞன
தாஞன தாஞன
[ தா = தன ; ஞ = னன ]

பிணிஅரங்க வினைஅகலப்
பெருங்காலம் தவம்பேணி,

இதிலே, நாலு சீர்களும், ' தாஞன ', ' தனஞன '
' தான னன ', ' தனனனன ' என்று நாலுவிகற்பத்தில்
வரும். சீர்களைப் பிரித்து அச்சிட்டிருப்பதால், யாரும்
எளிதில் பாடிவிடலாம்.

* * *

இந்த நாலுசீர் விருத்தம் மாதிரி, வேறொரு நாலு
சீர் விருத்தம். அது அளவுபட்ட விருத்தம்.

பக்கம் 520, பாட்டு ருகக :

தாஞன தன்ஞன
தன்ஞன தன்ஞன.
[ ஞ = னன ]

நந்தாவி ளக்கனைய
நாயகனே, நானிலத்தோர்
தந்தாய்,த னியறத்தின்
தாயே,த யாநிலையே !

இந்தச் சீர்களில் ' தாஞன ' என்பதற்குப் பதிலாக
' தாஞ ' என்பதற்குரிய எழுத்துக்களே இருக்கும் ;
' தன்ஞன ' என்பதற்குப் பதிலாக ' தன்ஞ ' என்பதற்

குரிய எழுத்துக்களே இருக்கும். அப்படிவரும் இடத்தி லெல்லாம், அடுத்த சீரிலுள்ள முதல் எழுத்தைச் சேர்த் துக்கொண்டு பாடிவிட்டால்,தாளம் சரியாய்ப்போகும்.

உதாரணம்: 'நந்தா விளக்கனைய' என்பதை 'நந்தாவி - ளக்கனைய' என்று பாடவேண்டும். ஆனால், சவுக்கமாகப் பாடவேண்டும்.

* * *

மேலே சொன்ன குறிப்புகளின் உதவியில்லாமலே பாடல்களைச் சவுக்கம் கொடுத்துப் பாடிவிடலாம். அப் படிப் பாடிவிட்டால், நல்ல முறையில் வந்துவிடும். சந்தங்களைக் கொடுத்திருப்பதனாலும், சீர்களை அள வுக்கு ஒத்தவாறாகப் பிரித்திருப்பதாலும், எல்லாப் பாடல்களையும் யாரும் பாடிவிடலாம். சீர்களைப் பிரித்து மேலே காட்டியிருக்கிற முறையைப் பார்த் தால், செய்யுளின் அமைப்பு இன்னதென்று தெளி வாய்த் தெரிந்துகொள்ளலாம்.

## 2

மேலே சொன்ன சீர் சம்பந்தமான குறிப்புகள் போக, பொருளை விளக்கும் அடையாளங்கள் பல வற்றைக் கையாண்டிருக்கிறோம்.

பாற்கடல் உற்றொரு

என்று எழுதுவதை,

பாற்கடல் உற்(று)ஒரு

என்று எழுதியிருக்கிறது (பக்கம் 4, பாட்டு உ).

இந்த இடத்தில் பாடும்போது,

பாற்கடல் - உற் - ஒரு

என்று பாடவேண்டும். அதே பக்கம், பாட்டு ௩:

மா(சு) எனக்(கு)

என்பதை

மாஸ் - எனக்

என்றும்,

இயம்புவ(து) யாதெனில்

என்பதை

இயம்புவ th யாதெனில்

என்றும் பாடவேண்டும். இதிலுள்ள 'th' என்ற ஒலி ஆங்கிலத்தில் 'with' என்ற வார்த்தையிலுள்ள th ன் ஒலி. 'யாதெனில்' என்பதை 'யா(து) எனில்' என்று எழுதி, 'யாth எனில்' என்று வாசிக்கலாம்.

தருக என்றனன்

என்பதை

தருகென்றனன்

என்று சொல்லவேண்டிவரும். செய்யுளில் பிரித்து வாசிக்கும்போது,

தருஹ்என்றனன்

என்று பாடவேண்டும்.

வினைத் தொடர்பென

என்பதை

வினைத் தொடர்(பு)என

என்று எழுதி, பாடும்போது,

வினைத் தொடர்ப் என

என்று பாடவேண்டும். இந்த 'ப்' என்ற ஒலி, உயிர்ப்போடு மிருதுவாய் ஒலிக்கிற ஒலி.

* * *

பக்கம் 7, பாட்டு கூ :

அறையும் ஆடரங் -
கும்பட ......... :

பாடும்போது, 'ஆடரங்கும்' என்று பாட முடியாது. அதனால், 'ஆடரங்கும்' என்ற வார்த்தையைப் பிரித்திருப்பதாக '-' இந்தச் சிறுகோடு காட்டுகிறது.

செய்யுளில், ஒரு விஷயத்தை நிறுத்திக்கொண்டு, அடுத்து வருகிற செய்யுள்ப் பாகத்தில், பாவ உணர்ச்சியை அழுத்தும்படி நேரும். அந்தச் சந்தர்ப்பங்களில், நிறுத்த வேண்டிய இடத்தில் ', -' அல்லது ';—' இந்தக் குறிகள் கையாளப்பட்டிருக்கும்.

மற்றப் புள்ளிகளும், குறிகளும், தமிழ் வசனப் புஸ்தகங்களில் சாதாரணமாகக் கையாளப்படுவன தான்.

# அனுபந்தம் - 2. திருத்தங்கள்

கம்ப ராமாயணப் பாடல்களில் பிழைபட்ட பாடங்கள் எத்தனையோ. மற்ற நூல்களை வாசித்தவர்களும் பதிப்பித்தவர்களும், பிழைபட்ட பாடங்களையெல்லாம் திருத்திவைத்தார்கள். கம்ப ராமாயணத்துக்கு அத்தகைய திருத்தம் ஏற்படவில்லை.

பாடல்களுக்குப் பொருள்கொள்ளுவது, பிழைகள் காரணமாக, கஷ்டமா யிருந்ததால், வாசிக்கும்போது காண நேர்ந்த பிழைகளையெல்லாம் சென்ற முப்பது வருஷமாக நானே திருத்தி வந்திருக்கிறேன். இதற்கிடையில் சிலர், ஓலைச்சுவடிகளை ஒத்துப் பார்த்து, சில பாட பேதங்களையும் கொடுத்திருக்கிறார்கள். ராவ்சாகிப் - எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள், பி. ஏ., பி. எல். (சென்னை யுனிவெர்ஸிடி ரீடர்) இந்த விஷயத்தில் அரிய தொண்டு இயற்றி இருக்கிறார்கள். பிள்ளை அவர்கள் கொடுத்த பாடபேதங்களையும், ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் தம்முடைய பதிப்பில் தம்முடைய சொந்த பாடபேதங்களோடு சேர்த்துக் கொடுத்திருக்கிறார்கள். இப்பதிப்பை (புதுமைப் பதிப்பகம்) வெளியிடுவதையொட்டி, மேலே சொன்ன இருவர் பாடபேதங்களையும் ஒப்பிட்டுப் பார்க்க நேர்ந்தது. சில பாடங்கள் என்னுடைய திருத்தங்களை ஆமோதித்து நின்றன அவைகளை உடுக்குறி (*) மூலமாகக் கீழே காட்டி

யிருக்கிறது. என்னுடைய திருத்தமல்லாமல், வெளியே யிருந்து கைக்கொண்ட பாடங்களை ஈட்டிக் குறியால் (†) காட்டியிருக்கிறது.

பாடம் சம்பந்தமாக ஒப்பிட்டுப் பார்க்க நேர்ந்த புத்தகங்கள் : கனகசுந்தரம் பிள்ளை பதிப்பு : பால காண்டம் ; கவர்ன்மெண்ட் பிரஸ் பதிப்பு : அயோத்தியா காண்டம் (1883) ; க. ராமரத்நம் ஐயர் பதிப்பு (பி. நா. சிதம்பர முதலியார் வெளியீடு):அயோத்தியா காண்டம் (1926); ராவ்சாகிப் - வெ. ப. சுப்பிரமணிய முதலியார் வெளியீடு : கம்பராமாயண சாரம், பால காண்டம், அயோத்தியா காண்டம் ; வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு : பால காண்டம் (1927), அயோத்தியா காண்டம் (1935). நண்பர் வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கும் மற்றப் பதிப்பாசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஏடுகளும் புத்தகங்களும் தங்களுக்குள் ஒருவகையாய்ப் பாடம் சம்பந்தமாக வேறுபட்டபோதிலும், பிழைகளை நீக்குவதற்கு அவை போதிய கருவிகளாய் இல்லை என்பதைப் பார்க்கிறோம். யோசனைசெய்து கஷ்டப்பட்டுத் திருத்தித்தான் ஆகவேண்டியிருந்தது; செருகு கவிகளை நீக்கவேண்டியிருக்கிறது ; அடிகளை மாற்றவேண்டியிருந்தது. ரொம்ப சிரமப்பட்டுச் செய்ததுதான் இதெல்லாம். பாடல்களையும் கீழே கொடுத்திருக்கிற திருத்தங்களையும், வழக்கத்திலுள்ள பதிப்பு ஏதாவது ஒன்றோடு ஒத்துப்பார்த்தால் இது தெரியவரும்.

ஆயிரம் வருஷத்துக்கு முன் எழுதி வைத்துள்ள நூலில், அதுவும் கவிகளாலாகிய நூலில்,

பிழைகள் எவ்வளவோ இருக்கவேண்டுமே ; இவ்வளவு தானு பிழைகள் ! என்றுகூட ஆச்சரியப்படவேண்டி யிருக்கிறது. உபயோகிக்கவே முடியாதபடி அவ்வளவு பிழைபட்டுப்போன நூல்களும் தமிழில் வேறு இருக்கின்றன. அவைகளைக் கவனிக்கும்போது, கம்பர் புண்ணியசாலி என்றே சொல்லவேண்டும்.

கட்டம், பொருள், ஓசை, பாவம் இவைகளுக்கு முரணுயிருக்கிற பிழைகளை ஒதுக்கி, பொருந்தும் வகையில், அகப்பட்ட செய்யுளோ, பாடமோ அல்லது திருத்தமோ உதவினுல், நன்றியுடன் அடுத்த பதிப்பில்ச் சேர்த்துக்கொள்ளத் தயாராய் இருக்கிறோம்.

## பாலகாண்டம்

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| எ | 2 | ஒழுங்கின்படி |
| | 3 | சரயுவாம் நதி ; அன்னதால் |
| அ | 3 | வண்முலை |
| கக | 3 | அரிய தாய் |
| கஎ | 4 | ஒண்மை* |
| | | ஓங்கலால்† |
| உ0 | 3 | குடையது |
| உக | 1 | வயிரவாள் |
| | 4 | உயிரும் |
| உரு | 1 | வானவர் |
| உஅ | 2 | இங்ஙகரேயான் |
| ௩0 | 3 | கொன்றுபோரில் |
| ௩அ | 1 | வாய்ந்திட |
| | 2 | சூழ்தரு புலங்கள் |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| ௩அ | 3 | நின்று நின்று |
| ௪௧ | 1-2 | இரண்டாவது அடியை முதலடியாகவும் முதலடியை இரண்டாவது அடியாகவும் மாற்றியிருக்கிறது. |
| | 1 | கழலின் காவினள் |
| ௪௨ | 2 | உணவெனக் கருது தன்மையவள் † |
| ௪௭ | 3 | விதியது |
| ௪அ | 4 | ஆகமிடை |
| ௫௪ | 3 | வாம்பொரி |
| ௫௫ | 4 | அற்றுவீழ் |
| ௫௬ | 1 | ஆயது |
| ௫௭ | 1 | சரம் ஒன்றை |
| ௫அ | 1 | கான்று எரிதலையள் ஆய அரக்கிதன் |
| | 3 | பரந்ததால் |
| ௫௯ | 3 | கூவிலா அரக்கர் ; குடிக்க எண்ணி |
| ௬0 | 1 | இன்றுல் |
| | 2 | இனிநீ |
| ௭௫ | 2 | ஏனையது அன்பன் மேயதால் |
| ௭அ | 3 | ஓய்ந்திட |
| அ0 | 1-2 | நங்கைக்கும் வசையில் ஐயற்கும் ஒருமகுறும இரண்டு உடல் உயிர் ஒன்று ஆயதே. |
| அ௧ | 1 | அடைகிலாமையால் |
| அ௫ | 1 | எழில் பரப்ப ; இருளை எல்லாம் |
| | 2 | உதித்து எழுந்த |
| அ௭ | 3 | மெல்லியல் |
| அ௯ | 3 | ஒன்றறியேன் |
| ௯0 | 2 | கதிமுலை* |
| ௯௧ | 3 | உள்ளே உள்ள |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| கூரு | 1 | சொல்லாழிப் பரவையிடை வெம்மைபோய்த் தண்மைபெறத் தோய்ந்து எழுந்த |
| | 4 | துயில்வான் தானே |
| கூச | 1 | முகந்து அழகு* |
| | 2 | யார் இவர் என்று |
| கூ௫ | 2 | மணிஅரங்கு |
| க0க | 3 | வேதம் என்ற உருவுடையாய் மிதிலையர்தம் உயிர் அனையாய் |
| க0ரு | 1 | அங்குதன் |
| கக௫ | 3-4 | கைந்நாகமும் நாணிட அண்ணல் |
| ககசு | 2-3 | எனும் பூந் தோடலர் கொம்பினைச் |
| ககக | 1 | வில்லினோடு பூணுலாவு |
| க௨0 | 2-3 | வந்த தண் கொண்டல் |
| | 4 | நெஞ்சில் இன்னும்உண்டதுண்டதுண்டரோ |
| க௨ரு | 3 | செய்தியும் |
| க௨சு | 4 | ஏற்றுவான் நண்ணினன் அதுண்டரோ |
| க௨அ | 4 | மடிவளர்ந்ததே |
| கரு௨ | 1 | காலின் ஓடிச்சென்று |
| கருசு | 2 | தரித்த கண்ணுதல் |
| கருஅ | 1-2 | வரத்தில் வந்த கார்மேனியன் |
| கச௨ | 1 | குவடு இரண்டென |
| கசஎ | 1 | மின்துவண்டால் |
| க௫௨ | 2 | நிலம் எங்கும் |
| க௫ரு | 1 | மங்கையர்கட்கெல்லாம் |
| க௫௫ | | இப்பாடலை க௫க - ன் பின்னிருந்து இங்கே மாற்றிப் பதிப்பித்திருக்கிறது. |
| க௫அ | 1 | எனத்தகையன் |
| | 3 | கருத்துளன |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
| --- | --- | --- |
| கசா௦ | 1 | உரைக்க |
| | 2 | உறும் ஐயம் |
| கசாக | 1 | கருங்கடலின் வண்ணன் ஒளி |
| கசாஉ | 4 | ஆசியொடு |
| கசாங | 4 | ஒத்தே |
| கசாசா | 3 | வெண்மலர் |
| கசாஅ | 1 | ஆசிறுவன்றூர் |
| கசாகூ | 1 | கோனாகிய மணவாளனும் |
| | 4 | புகுவான். |

## அயோத்தியா காண்டம்

| | | |
| --- | --- | --- |
| ரு | 3 | தேர்வரும் முனிவரர் |
| | 4 | மூவரும் |
| எ | 2 | மருத்துவத்து |
| கஉ | 2 | தன்னைவைத்தளித்திட |
| உஉ | 1 | மகன்பால்* |
| உஅ | 3 | செய்குவம் |
| ஙக | 4 | கொண்டலே என |
| ஙங | 2-3 | ஆளகத்திடை ; அளந்தவாள் |
| ஙச | 3 | சுமந்திரன் சொல்ல |
| சச | 1 | அமர்ந்தனன் |
| | 4 | திருவும் பூமியும் சேர்தலில் |
| சசா | 2 | பூட்டவிழ் கச்சினர் |
| ருஉ | 2 | தேவரொடு யாவர்க்கும் |
| | 3 | எலாம் ஆயவன் |
| சாக | 1 | பொரிமழை |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| ௬௬ | 1 | மணிபடு |
| | 2 | வல்லியாய் |
| | 3 | சேற்கடை; தேங்க |
| ௭௫ | 2 | அன்பும் |
| | 3 | வீரர் வீரன்* |
| ௭௭ | 3 | சுழித்தனள்; சுடர்செய் மாலையால் |
| ௮௧ | 1 | வதைந்து |
| ௮௪ | 1 | நல்லை நீ அல்லை மற்று |
| | 2 | நல்லை நீ அல்லை வெந்தண்டனை |
| | 3 | நல்லை நீ அல்லை |
| ௮௭ | 3 | நலிகிலராயினும் மனந்தான் |
| ௯௦ | 2-3 | சூழ்ச்சியின் அரக்கர் மாய வானவர் |
| ௧௦௧ | 4 | அடைந்தான் |
| ௧௦௫ | 3 | உண்மைதானேல் |
| ௧௦௬ | 1 | உணர்ந்திலாதான் |
| ௧௦௭ | 3 | தரற்கு |
| ௧௦௮ | 2 | இரங்கிடல் யாதுகொல் ஈண்டே ஈவன் |
| ௧௧௩ | 1 | தன் நிலை |
| ௧௧௪ | 2 | அவ்வரங்கள் |
| | 3 | தரின் நன்று |
| ௧௧௬ | 2 | முற்றும் |
| ௧௧௯ | 1-2 | கொண்டு குற்றம் அகற்றக் குறிகொண்டால்ப் போன்மே உற்றக்கால் இரப்பு என்னாப் பொறியற்றாள். |
| ௧௨௫ | 3 | வெம் கொடியாள் |
| ௧௨௬ | 1 | உயிர்க் கேள்வர்* |
| ௧௨௯ | 3 | ஊழில்ப் பெற்றால் ஆகுக அன்றேல் |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| கஙச | 1 | போல் இருள் |
| | 4 | சிவந்து உதித்திட்டனன் |
| கஙரு | 1 | வயதின் மிக்கார் |
| | 4 | சாதன மாந்தர் |
| கஙஅ | | இப்பாடலை கஙஎ-ன் முன்னிருந்து இங்கே மாற்றிப் பதிப்பித்திருக்கிறது. |
| கருசா | 2 | பெயரின்றி* |
| | 3-4 | மூன்றாம் அடியை நான்காம் அடியாகவும் நான்காம் அடியை மூன்றாம் அடியாகவும் மாற்றியிருக்கிறது. |
| | 3 | உரைப்பதாம் உரையுண்டு அன்னது |
| | 4 | உனக்கு உணர்த்தலாவது ஈண்டு எனக்கு இயைந்தது என்றாள். |
| கருஅ | 1 | ஆழியான் உலகம் உம்பி |
| | 2 | அமைவரும் தவம் |
| | 3 | வாழ்வுறும் முனிவரோடு வாழ்ந்து நல்நதிகள் |
| கருகூ | 2 | நோக்கி |
| | 3 | மற்றுஅவ் வாசகம் உணர்ந்த பின்னர் |
| கசா0 | 4 | இன்னினியே யான்கானம் ஏகின்றேன் |
| கசாக | 2 | பாதத்து |
| கஎஉ | 4 | போதுஉறல் உற்றது |
| கஎங | 4 | பொதிர்ந்தனர் |
| கஎசா | 3 | காணும் |
| | 4 | பேறு பிறிதுண்டோ |
| கஎஎ | 1 | அவ்வேலையும் * |
| கஅசா | 1 | உயர்தவத்தின் |
| | 4 | நல்லவையன் |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| கஅஎ | 4 | இங்கு என்று |
| ககூக | 1 | புண்ணுற்றுத் தீயில் |
| | 3 | கலுழ்வுற்றது |
| ககூரு | 2 | என்று |
| உ௦௦ | | இப்பாடலை ககூக - ன் முன்னிருந்து இங்கே மாற்றிப் பதிப்பித்திருக்கிறது. |
| உ௦உ | 2 | ஈட்டாள்; இராமனுக்கே |
| உ௦ங | 1 | மணியின்பிடி |
| | 4 | போர்த்தான் |
| உ௦ரு | 2 | சூழ்தர |
| உ௦சா | 3 | வில்லினின்று அண்டகோளம் |
| உ௦கூ | 4 | கனல்போல் |
| உக௦ | 2 | நின்நெறியாகும் * |
| | 4 | புலத்தனக்கு |
| உகஉ | 4 | யான்கொல் |
| உகரு | 1 | அவ்வுரை கேட்டலும் |
| | 3 | நெறியின்கண் நில்லாதோர் |
| உகசா | 4 | அனையானை முன்னென் |
| உகஎ | 3 | கண்டோ |
| உகஅ | 1 | தெவ்வர் தூற்றும் |
| உஉங | 1 | மாறிநின்று |
| உஙச | 3 | சிந்தை மாழ்கினர் |
| உஙசா | 1 | போதும் * |
| உஙஅ | 3 | கொல்லும் |
| உஙகூ | 2 | ஏகல் * |
| உசஉ | 2 | ஏங்கினர் * |
| உசங | 3 | மகளிர்கை |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| உசச | 4 | ஒலியலது * |
| உசஅ | 3 | சிந்தையின் |
| உ௫௦ | 1 | புரப்பான் ஈன்ற |
| உ௫ச | 2 | அருக்கன் அங்கு |
| உ௫௫ | 3 | கடல்க்கைவிட |
| உகூக | 2 | வீழ்ந்தழும் |
| உகூ௫ | 3 | எறு |
| உகூஎ | 1 | ஏகிய |
| | 3 | செல்வமாநகர் |
| உகூஅ | 3 | கல்லிடைத்† |
| உகூகூ | 1 | அந்தியின் மயங்கொளி அகல வையகம் |
| உஎக | 3 | போர்த்தன * |
| உஎச | 2 | கொம்பழகு * |
| | 4 | செம்பவள ; அயர்ந்தார் * |
| உஎ௫ | 1 | உறங்கினர் |
| உஎகூ | 3 | மீள்கஆண்டு |
| உஎஅ | 2 | மயிலொடு |
| உஅக | 1 | மொழிந்து * |
| | 3 | என்ன இன்னலின் |
| உஅச | 3 | இயைவதாய் இடை |
| உஅகூ | 1 | உண்மையில் |
| உகூக | 4 | அறிகிலா* ; சோரவே |
| உகூஉ | 1 | ஆவழி |
| | 2 | வேறிலான் * |
| உகூ௫ | 2 | தவிர்த்து |
| உகூஎ | 1 | கோள்முறை* |
| உகூஅ | 3 | செய்யகை * |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| ௩௦௧ | 4 | ஆரகமான் * |
| ௩௦௪ | 4 | கண்டார் |
| ௩௦௬ | 1-2 | பொன்தேர் வல்லவன் |
| | 2 | வந்திலன் * |
| ௩௦௭ | 2 | சேய |
| ௩௦௮ | 4 | வெந்தாள் |
| ௩௧௧ | 1 | துணையின்பச் |
| | 3 | துய்த்திகொல்மன் |
| ௩௧௨ | | இப்பாடலை ௩௧௦-ன் முன்னிருந்து இங்கே மாற்றிப் பதிப்பித்திருக்கிறது. |
| | 1 | வடித்தாய்; மகிழ்வோடே |
| | 2 | என்னே |
| ௩௧௩ | 1 | இன்ன |
| ௩௧௬ | 1 | கடைபோக |
| | 2 | பிரியா அரற்றி |
| ௩௧௯ | 1 | மீளுர் * |
| ௩௨௦ | | இரண்டாவது மூன்ருவது அடிகளை முதல் இரண்டு அடிகளாகவும், முதலடியை மூன்ருவது அடியாகவும் மாற்றியிருக்கிறது. |
| | 1 | அங்கு வள்ளல் என இருந்தார் எல்லாம் எழுந்தார், தம் |
| | 2 | யாண்டும் காணுர் |
| | 3 | தம்மை வல்வினையால் |
| ௩௨௩ | 3 | கடந்து போயது மீண்டு |
| ௩௨௫ | 3 | வயங்கு இரவின் |
| ௩௨௬ | 1 | அளகந்தர * |
| | 3 | எனத் தகைசால் |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| ௫௨௧ | 1 | பிறர்தமக்கு * |
| ௫௩௩ | 4 | காதல் அமை |
| ௫௪௪ | 1 | அமைதர வந்த காதல் |
| | 3 | எம்முனோர்க்கும் |
| ௫௪௫ | 3 | நின்அயல் இருக்கை நீங்கி |
| ௫௪௮ | 2 | தாங்கரும் பையுள் |
| ௫௪௯ | 3-4 | அறத்தின் வீந்த செருவிடை |
| ௫௫௦ | 1 | செய்யும் |
| ௫௫௨ | 4 | வஞ்சியாள் |
| ௫௫௪ | 2 | அடியிணை நிலையில்லான் |
| ௫௫௮ | 1 | விடுகுதி |
| | 3-4 | நின்ற இடருறும் |
| ௫௫௯ | 2 | சித்திர கூடத்துச் |
| ௫௬௦ | 1 | நெறியிலா நெறியெல்லாம் நேடுவன் |
| ௫௬௨ | 1 | அது ஒன்றுப் |
| | 3 | எனஉண்டோ |
| ௫௬௬ | 1 | மாலவன் |
| ௫௬௭ | 1 | தலையில்த்தாக்குற |
| ௫௭௧ | 4 | விரித்து * |
| ௫௭௮ | 2 | நண்பகலும் |
| ௫௭௯ | 2 | உந்திக் |
| ௫௮௦ | 2 | எம்பிரான் அவன் |
| ௫௮௪ | 3 | தாள்நினைந்து அலர் |
| ௫௮௮ | 2 | நீங்கி |
| ௫௯௦ | 2 | அரங்கம் அகன்புனம் |
| ௪௦௯ | 4 | மன்னவன்* |
| ௪௧௦ | 3 | அன்னது * |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| ௪௧௬ | 2 | கீண்டு * |
| ௪௧௯ | 4 | முடிகிலென் |
| ௪௨௨ | 3 | தன்முன் போந்துளான் என |
| | 4 | காதலாள் |
| ௪௨௬ | 1 | மரபை ஓதிய |
| ௪௩௦ | 3 | திறுவல், நீ |
| ௪௩௧ | 3 | தேர்வரும் |
| ௪௩௯ | 1 | நன்னெறி அழகிது |
| | 2 | மன்னுயிர் |
| ௪௪௩ | 3 | யாக்கைஅச் |
| | 4 | துளிர்த்தது * |
| ௪௪௪ | 2 | பேருவகைதான் |
| ௪௫௪ | 2 | பேணுனேல் |
| | 3 | எல்லைகடந்து இங்கே |
| ௪௫௫ | 2 | கிடக்கிட |
| | 3 | சேனைபடத் தனி யானைபட |
| | 4 | தானைபடக் குடர் சூறைபட |
| ௪௫௬ | | முன்னிரு அடிகளைப் பின் இரண்டு அடிகளாகவும், பின்னிரு அடிகளை முன் இரண்டு அடிகளாகவும் மாற்றியிருக்கிறது. |
| ௪௫௭ | 3 | ஏறு அன்னன் * |
| ௪௬௧ | 1 | என்றெழுந்து* |
| ௪௭௨ | 4 | கொள்வான் யானே |
| ௪௭௬ | 3 | மறுகுறு |
| ௪௭௭ | 3 | அழித்து மற்று |
| ௪௮௬ | 2-3 | போகிடல் ஒழிந்திலான் |
| | 3 | ஏகிட |
| ௪௮௭ | 1 | ஓங்கும்; என்னும் அவ் |
| ௪௮௮ | 4 | அந்தமில் நலத்து |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
| --- | --- | --- |
| ௪௮௯ | 3 | சடையோடும் முனிவர் தூசு ! |
| ௪௯௦ | 3 | நீ எனு |
| ௪௯௩ | 4 | செங்கையன் சிந்தித்தான் |
| ௪௯௪ | 2 | வந்தவர் |
| ௪௯௫ | 2 | விட்டனையதோர் |
| ௪௯௮ | 3 | நின்றொடு |
| ௪௯௯ | 1 | அழிபடப் |
| ௫௦௩ | 2 | கலக்குவை |
| ௫௦௪ | 1 | நவையின் |
| ௫௦௫ | 4 | என்வயின் ஏய |
| ௫௦௭ | 3 | பிரிவில்க் காதலில் |
| ௫௧௧ | 2 | நலத்தின் |
| ௫௧௪ | 3 | நிலையமாம் அதை |
| | 4 | அறம்அது தழுவிற்று |
| ௫௧௮ | 2 | உரும் எறி* |
| ௫௨௨ | 4 | தண்மை தகைமதி |
| ௫௨௪ | 3 | பிறத்தல் போல் |
| ௫௨௫ | 2 | தழுவிப் போந்துழல் |
| ௫௩௨ | 2 | நெடுங்கடல்* |
| ௫௩௪ | 4 | நடுக்கம் நீங்கவே |
| ௫௪௨ | 3 | வேண்டினாய்* |
| ௫௪௪ | 3 | தீர மீண்டு† |
| ௫௪௬ | 4 | புகல்வை செய்கடன் |
| ௫௪௮ | 4 | சாம்அது |
| ௫௫௧ | 3 | பரிவில்ப் போயினன் |
| ௫௫௩ | 1 | தெரிந்துணர் பலரும் |

